No. 1979.

RM. MUTHIAH
ARTIST
KOTTAIYUR
(RAMNAD DIST.)

# முருகன்

## ஓர் உழவன்

(ஸ்ரீமான் K. S. வெங்கிடரமணி, M.A., B.L.
(ஆங்கிலத்தில் இயற்றியதின் மொழிபெயர்ப்பு)



கிருஷ்ண குமாரி
(தமிழில் மொழிபெயர்த்தது)



இரண்டாம் பதிப்பு.



மைலாப்பூர், சென்னை:
மதராஸ் லா ஜர்னல் பிரேஸ்ஸில்
பதிப்பிக்கப்பட்டது.
1931
[விலை ரூ. 1-8-0]

[illegible] புத்தகசாலை, இரங்கூன்.

இப்புஸ்தகத்தை
என் தந்தையின் ஞாபகார்த்தம்
அர்ப்பணம் செய்கின்றேன்

RM. MUTHIAH
ARTIST
KOTTAIYUR
(RAMNAD DIST.)

# முன்னுரை

## I

உலகிலுள்ள சீவர்களனைவரும் துன்ப மொழிந்து இன்பமெய்தியிருப்பதே, தமது வாழ்க்கையின் பயனெனக் கருதிய வான்ற பெரியார், துயரங்களுக்கெல்லாம் மூல மாகிய காமாதிகளை யகற்றுவதற்கும், அழியாத வின்பமடை வதற்கும் சாதனமாகிய தர்மானுஷ்டானங்களையும், அவை களைக் கைப்பற்றி நடந்தவர்கள் அடைந்த மேன்மையையும் நன்கு விளக்கும்பொருட்டு இவ்விந்து தேசத்தில், புராண விதிகாஸங்களை யியற்றியுள்ளார். அதுபோலவே மேல் நாட்டில் சீவகாருண்யம் பொருந்திய அறிஞர்களனைவரும் மாந்தர்களது இன்பத்திற்கேற்பட்டுள்ள விடையூறுகளை நன்காராய்ந்து, அவைகளை விலக்குவதற்கேற்ற மார்க்கங்க ளெனத் தமக்குத் தோற்றிய வாசனைகளை எடுத்துக்காட்டு வதற்காக புதுமைக் கதைகளியற்றுகின்றனர். அவ்வாறியற் றும் மேல்நாட்டு ஆசிரியர்களில் சிறப்பு வாய்ந்த சிலர், தற்கா லத்தில், செல்வமானது சிலரிடத்திலேயே தேக்கமடைந்து சீவர்களின் பொதுநலத்திற்குப் பயன்படாமலிருப்பதுவே உலகிலுள்ள வறுமைக்குக் காரணமென்றெண்ணி, அவ்வாறு தேங்கவிடாமல் நாட்டிலுள்ள பொருளனைத்தும் தேசத்தா ரனைவருக்கும் பொதுவாகச் சொந்தமெனக் கருதி விவகரிப் பதினால் வறுமை யென்பது உலகினின் றகன்றுவிடுமென் னும் கொள்கையை மேற்கொண்டு, அதற்கேற்பக் கதைகளி யற்றி யிருக்கின்றனர். இவ்வாறான வபிப்பிராயங்களைக் கைக்கொண்டு, ஸ்ரீமான் K. S. வெங்கிடரமணி யென்பவர், ஆங்கிலபாஷையில், முருகன் என்னும் உழவனது கதை

யைக் கூறுவபர்போல், பயிருடுவேருக்கு குடியினுலும், கெட்ட சேர்க்கையினுலும் வரும் கேடுகளேயும், மிராசுதாரர்கள் தங்கள் சொந்த நிலத்தில் பாடுபட்டுப் பலனடைந்து சுகத்திலிராமல், நிலத்தை விற்றுப் படித்து அற்ப சம்பளத்திற்கு வேலேசெய்து பிழைப்பதனுல் அடையும் துன்பங்களேயும், பொருளீட்டுவதே புருஷார்த்தமெனக்கருதி, வஞ்சமும் பொய்யுமே சாதனங்களாக வொழுகுபவர்கள் இழிவடைவதையும், வீண் விவகாரங்களில் பிரவேசித்தவரழிந்துவிடுவதையும், அரசாங்கத்தவர் தேசத்திலுள்ள கொடுந்தொழில்களுக்கு மூல காரணமாகிய செல்வத்தேக்கத்தால் வரும் செருக்கை நீக்க முயலாததினுல் அவைகள் விருத்தியடைவதையும், அத்தேக்கத்தை யொழிப்பதனுல் கொடுமை நீங்கி சீவர்கள் சாந்தமும் களிப்பு மடைந்திருப்பார்களென்பதையும், முக்கியமாய் விளக்கியிருக்கின்றனர். ஆங்கிலபாஷாபிமானிகள் பலரும் கொண்டாடும்படி சொல் நயம் பொருள் நயம் வாய்ப்ப வியற்றிய விக்கதையைத் தமிழ் மக்களும் படித்தானந்திக்குமாறு ஸ்ரீமதி. கிருஷ்ணகுமாரி யென்னும் சீமாட்டி தமிழில் மொழிபெயர்த்தது பேருபகாரமாகும்.

ஆசிரியரது அபிப்பிராயங்களும் நயங்களும் மொழிபெயர்ப்பில் மாறுபடாம லிருப்பதையும், கதையினுல் விளங்கும் பல நீதிகளேயும், இதைப் படிப்போர் எளிதில் காணலாகும். இம்மொழிபெயர்ப்பை நான் படித்தபொழுது இச்சீமாட்டி சுயமாகவே கதையெழுத வல்லவரென்பது நன்கு விளங்கிற்று. ஆகவே, தமிழ் மக்கள் படித்துப் பயனடையும்வண்ணம் நூல்கள் பல வியற்றி மேன்மையும் புகழு மிவரடைவா ரென்பதி லேயமில்லே.

21-9-1928.
ஸமஸ்கிருத காலேஜ் தெரு, மைலாப்பூர்.

T. S. ராமசந்திர அய்யர்.

## முகவுரை

---

### II

சென்ற வருஷம் இம்மாதங்களில் முருகன் என்னும் புஸ்தகம் ஆங்கிலத்தில் வெளிவந்தபொழுது, அதைப் படித்துப்பார்த்துக் கொண்டாடாதவர்கள் மிகச் சிலரே. அதிற் செறிந்தடர்ந்திருக்கும் உயர்ந்த பாவங்களும், நடையின் திறமும் யாவர் மனதையும் கவர்ந்தன. ஆங்கில பாஷையிலுள்ள தேர்ச்சியின் மிகுதியால் நூலாசிரியர், அதைத் தாய்மொழியாகிய தமிழை விட்டு ஆங்கிலத்திலேயே எழுத நேர்ந்திருந்தாலும், நம்மவர்களுடைய மனப்போக்கையும், பழக்க வழக்கங்களையும் சிறிதும் மீறாமல், முற்றிலும் நமது மனோபாவங்களையே போற்றி அவர் எடுத்துக் காட்டியிருப்பது மேன்மேலும் வியப்பை யளிப்பதாயிருக்கிறது. கிராம வாழ்க்கையும், விவசாயத் தொழிலபிவிருத்தியுமே நமது தேசத்தின் வறுமையை நீக்கி, அதற்கு எவ்விதத்திலும் சௌக்கியத்தையும் ஹிதத்தையும் அளிக்க வல்லவையென இவ்வாசிரியர் தனது சிறந்த அறிவால் உணர்ந்து இப்புஸ்தக மூலமாய் வெளியிடுகின்றார். தற்கால நாகரீகத்தைப் பாராட்டும்நமக்குமேன்மேலும் தேவைகள் அதிகமாகின்றனவே யொழிய, அதனால் நமக்கு முன்பிருந்த திருப்தியும், சுகமும் வரவரக் குறைந்துவருகின்றனவென்றே அவருடைய துணிபு. அவரது அபிப்பிராயங்கள் அவர் மொழிகளிலேயே மிகவும் சிறந்து விளங்குகின்றன வாதலின், அவைகளை இங்கு விவரிக்கவேண்டியதில்லை.

இவ்வரிய புஸ்தகத்தைப் படித்து ஆநந்தித்தோர் ஒவ்வொருவர் மனதிலும், தமிழில் இது இன்னும் எவ்வளவு பொருத்தமாய் விளங்கும் என்ற எண்ணம் உதித்திருக்கக் கூடும். அவ்வாறான நினைவும், அவலுமே இப்பொழுது இக்கதையைத் தமிழில் மொழிபெயர்க்கத் தூண்டின. ஆங்கிலபாஷையில் பயிற்சியில்லாதவர்கள் பொருட்டென்னும் காரணம் பொருந்தாது. ஏனெனில், இந்நாளில் ஆங்கிலப் பயிற்சிபெற்றவர்கள் அருமையோ? ஆசிரியருடைய கருத்துக்களையும், மனோபாவங்களையும தமிழில் தெளிவாயும், அழகாயும் மொழிபெயர்க்கக்கூடுமென்ற நம்பிக்கையுடன் இக்கடினமான வேலையை மேற்கொள்ளவில்லை. பொருட்சுவையும், அதற்கேற்ற சொல்நயமும் அமைந்துள்ள நூல்களை மொழிபெயர்ப்பது எளிதென்று யாரேனும் கூறமுடியுமா? ஆகவே, இத்தமிழ் மொழிபெயர்ப்பைப் பற்றி யொன்றும் சொல்லுவதற்கில்லை. இப்புஸ்தகத்திற்குத் தாமாயமைந்த குணவிசேஷங்களே இதைத் தாங்கி நிற்கவேண்டும்.

இதை அச்சிடுமுன், ஆதரவுடன் பார்வையிட்டு உதவிய ஸ்ரீமான். டி. எஸ். ராமசந்திர அய்யர் அவர்களுக்கு என் மனப்பூர்வமான நன்றியும், வந்தனமு மளிக்கின்றேன்.

28-9-1928
மைலாப்பூர்.

கிருஷ்ண குமாரி.

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்—
மற்றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்"
—குறள்.

# பொருளடக்கம்.

# அத்தியாயம் 1.

## பாக்கியக்குறைவு.

அலவந்தி கிராமத்திற்கருகில் காவேரி நதி அகன்று கம்பீரமாய்ச் செல்லுகின்றது. அதற்கு இக் கரையில் ஊருக்குச் சமீபத்திலேயே ராமசந்திரனுடைய சிறுதென்னந்தோப்பு அழகாய் நெருங்கி யடர்ந்து காணப்பட்டது. அத்தோப்பில்தான் ஏழுதலைமுறைகளாய்ச் சுகமாயிருந்து வாழ்ந்து வந்த முருகனுடைய குடிசையும் விளங்கிற்று. அத்தென்னந்தோப்பின் வளத்தை வியந்து அதை யடைய அவ்வூரில் ஆசைப்படாதாரிலர். பரம்பரையாய்ப் பயிர் செய்து வரும் குடியானவருள் முருகனை வேண்டாதவர்களு மில்லை.

ஆனிமாதம்; பொழுது இப்பொழுதுதான் விடிந்திருக்கிறதென்றாலும், மேகமற்ற ஆகாயத்தில் சூரியன் தன் செங்கதிர்களைத் தாராளமாய் வீசிக்கொண்டு கிளம்பிவிட்டான். முருகன் பரபரப்புடன் எழுந்தான். வெகுநேரம் தூங்கிப் போய்விட்டதை எண்ணி வருந்திக்கொண்டு, வயல்களுக்கு எருவடிக்க அவசர அவசரமாய் மாடுகளை வண்டியிற் கட்டத் தொடங்கினன். அதனோடுகூட அன்று செய்யவேண்டிய வேலைகள் இன்னவையெனத் தனக்குள்ளேயே அவன் சிரத்தையுடன் சொல்லிக்கொள்ளும்பொழுது, பின்னால் காலடிச் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்க்க, காற்றில் மெதுவாய் அசைந்தாடும் தென்னஞ் சோலையினின்றும் தன் பக்கமாய்

வரும் தன் எஜமானனின் கவலை தேங்கிய குரல் அவன் காது களில் விழுந்தது.

"முருகா, 'கஷ்டங்கள் ஒருபொழுதும் தனியாகவருவ தில்லை' யென்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி யுண்டு," என, "நம்மவங்களும் ஒண்ணு சொல்லுவாங்க, சாமி; "பட்டகாலிலே படும் கெட்ட குடியே கெடும் இன்னு," என்றான் முருகன். தாய் பாஷையாகிய தமிழின் பெருமை யைக் குறைக்க முருகனுக்கு ஒருபொழுதும் சம்மதமில்லை. அத்துடன் அன்னிய பாஷையில் அவனுக்கிருந்த அலக்ஷிய மும் பலகாரணங்களால் அதிகம்.

"இருக்கலாம், முருகா; அது என் விஷயத்தில் மிகவும் உண்மையா யிருக்கிறது. தமிழ்ப்பழமொழி இன்னும் நன் றாய்ப் பொருந்துகிறது. எனக்கு பீ. ஏ. பரீக்ஷை தவறிப் போய்விட்டது," என்று ராமசந்திரன் அதே விசனகர மான குரலிற் கூற,

"போய்விட்டதா!" என்று திகைத்தவண்ணம் முருகன் அவ்வார்த்தையைத் திருப்பிக் கூறும்பொழுது அவன் பிடிப்பினின்றும் கயிறு தளர, உடனே மாடுகளும் அவிழ்த் துக்கொண்டு தங்கள் எஜமானனுக்கு நேர்ந்ததொன்றை யும் அறியாதவைகளாய், என்றும் வாராதவர் வந்ததற்கு அன்று விடுமுறையாக விருக்கலாகாதா வென்று எண்ணிய வைபோலும் மேய வாரம்பித்தன.

"இரண்டு வருஷம் கஷ்டப்பட்டுப் படித்ததுடன் விரு தாவாக மிகுந்த பணச் செலவுமாயிற்று. அது போனாற் போகட்டும். நான் அதைக்குறித்து வருந்தவில்லை. இந்த பீ. ஏ. பட்டப் பெருமையில் நான் கொண்டிருந்த பேராவல் தாய் சொற்கடந்து என் நலத்தைக் கருதி அவள் கொண்

டிருந்த ஆசைகளுக் கெல்லாம் முற்றும் மாருக என்னை நடக்கும்படி செய்ததன்ருே!"

"ஆமாங்க," என்று முருகன் இதுதான் சமயமென்று, தன் மனதையும் சிறிது வெளியிடக் கருதி, கூறத் தொடங்கினன். "அம்மா இறக்கும்பொழுதுகூட ரொம்ப விசனப் பட்டாங்க. ஆனு, நீங்க இவ்வளவு பிடிவாதம் பிடித்ததற்குக் கடுகத்தனை கோபப்படவில்லை. அம்மா அவங்க இறக்கு முன்னே, உங்களுக்குக் கலியாணம் பண்ணிப் பார்க்க வேணு மின்னிருந்தாங்க. அதிலும் தங்க இனத்திலேயே பெண் கொள்ள வேணுமின்னு ஆசை. ஐயா இறந்த பிற்பாடு அம்மாவுக்கு லோகத்திலே வேறே ஒண்ணிலும் ஆசையில்லை. இத்தென்னம் பிள்ளையை, அது பூம்பாளை தள்ளிக் காப்புக்கு வருந்தனையும் நான் தண்ணியூத்திப் பாதுகாத்து வளப்பதுபோல, அம்மாவும் உங்களை நிதமும் மெத்த ஆசையுடன் பார்த்து வந்தாங்க. சாகும்போது கூட அவங்களுக்கு வேறே எண்ணமில்லை. நம்ப ஊரிலே வழக்கமில்லாதபடி நீங்க என்னென்னமோ பேசுவதைக் கேட்டு அவங்களுக்கு நீங்க எங்கேயாவது ஓருநா ஓடிவிடுவீங்களோ இன்னு ரொம்ப பயமாப் போச்சு."

"முருகா, உனது ஆழ்ந்த, வெண்கலமணி போன்ற குரலுடன் நீ இவ்வாறு அம்மா சொல்லியவைகளை யெடுத்துக் கூறி என் மனதை துக்கத்தை அதிகப்படுத்தாதே. நீ பாடுபட்டு உழைப்பதினின்றும் சேர்ந்த சொத்து இது. அதைக் கொள்ளை கொள்ளும் இவ்வாங்கிலப் படிப்பை நீ முற்றிலும் வெறுப்பது எனக்கு நன்ருய்த்தெரியும். பழைய ஆசாரத்திற்கு விரோதமான என் புதுக் கொள்கைகளையும், நான் கண்டபடி நடப்பதையும் பார்த்து அம்மா பயந்தது

உண்மைதான். அந்தோ! அவள் வியாதியினால் மெலிந்த தேகஸ்திதியையும், கள்ளம் கபடற்ற மனதையும் சிறிது முணராமல், நமது தன்மைக்கு முற்றிலும் விரோதமான புதிய எண்ணங்களை யெல்லாம் கூறி நான் எவ்வாறு வருத் தினேன்! அவளைப்போன்ற தாயை இனிக்காண்பதெளிதோ? கேவலம் கல்வி யறிவு அற்றவளுமல்ல. எவ்வளவோ உதார குணமும், பகுத்தறிவும், மேம்பட்ட புத்தி நுட்பமும் பெற்றவளாயிருந்தும், ஸ்திரமான வியவஸ்தைகளற்ற இக்காலத்திற் கேற்றவாறு விஷயங்களை முற்றிலும் அறியக் கூடாதவளாயும், தன் இயற்கைக் குணங்களுக்கு நேர் விரோதமாக நடப்பவளாயும் தோன்றிற்று. எப்படி யிருந்தபோதிலும் தாயல்லவா? ஆம்; நானும் சிறு பிள்ளைத் தனமாய் அவளிஷ்டத்திற்கு மாறாக நடந்துவிட்டேன்.'' இவ்வண்ணம் மேன்மேலும் பழைய ஞாபகங்கள் அதிகரிக்க, அவைகளை யொருவாறு தள்ளிவிட்டு மீண்டும் ராமசந்திரன், "அதிருக்கட்டும், முருகா. நம் குடும்ப ஆசாரத்திற்கும் வழக்கத்திற்கும் விரோதமாக என்னை ஆங்கிலம் கற்க வைத் தது யார்? ராஜபாஷையில் தேர்ந்து நான் இட்டது சட்ட மாக இவ்வூரில் விளங்க வேண்டுமென்பதற்கா?'' என்று கேட்டான்.

"நம்ம ஒரே குழந்தை இந்த நீச பாஷையைப் படிச்சு அந்தப் பெருமையிலே சந்தியாவந்தனங்கூட நேரே தெரி யாமே போவதோடு, இந்த தர்ப்பணம், இதெல்லாம் எதற் கென்று ரொம்ப உதாசினமும், சாத்திரத்திலே அவநம் பிக்கையுமுண்டாய் விடுமின்னு பயந்து பெரிய ஐயா ரொம் பத்தான் தடுத்தாங்க. அவங்க எண்ணம் நீங்க சம்க்கிருதம் படிக்க வேணுமின்னு. ஆனா, அம்மா குழந்தைப் பிராயம் முதல் உங்களை துரைவீட்டுப் பிள்ளைக்குச் சரியா யுடுத்தி,

கலெக்டர் துரைபோலே தெருவில் உலாவ, பார்க்கவேணு மின்னு ஆசைப்பட்டாங்க."

"அவள் ஆசைக்குத் தக்க தண்டனைதான்," என்று ராமசந்திரன் தனக்குள்ளேயே கூறிக்கொண்டான். "அந்தோ, தெய்வமே! நான் கற்ற கல்வி யெல்லாம் எனக்கு எதற்கு? இறந்த அன்னையை மட்டும் ஒரு நாளைக்காயினும் எனக்கு மீண்டும் அளிப்பாய். அவள் காலடியில் விழுந்து மன்னிப்புக்கேட்டுக் கொள்ளுகிறேன். செய்தவையும் செய்யாதவையுமான எவ்வளவோ அபராதங்களுக்காக இந்நிலையில் நான் வருந்துவதைக் கண்டு, என்னை மீளவும் அவள் தன் மடிமீது சிறு குழந்தையைப்போல் ஏற்றுக் கொள்ளட்டும். இவ்வகன்ற உலகில், முருகா, உன்னை விட்டால் எனக்கு வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் ஒருவரும் கிடையாது. என்னைத் தேற்றுவாரும் இல்லை. ஆயினும், நீயும் ஒரு வேலைக்காரனே. உன்னிடமேதான் என் எல்லாக்குறைகளையும் நான் எவ்வாறு கூறியழுவேன்?" என்று சொல்லி ராமசந்திரன் ஒரு குழந்தையைப் போல் விம்மியழ,

"இப்பொழுதென்ன கெட்டுப்போச்சு, சாமி. சும்மா விசனப்படுவதைக் காட்டிலும், அம்மா இறக்கும்போது என்ன ஆசைப்பட்டுச் சொல்லிக் கொண்டிருந்தாங்களோ, அம்மாதிரி செய்யுங்க. எல்லாம் சரியாய்விடும்," என்று முருகன் படிப்பற்றவனாயினும் மனப்பூர்வமான வார்த்தைகளினால் தன் எசமானனைத் தேற்ற முயன்றான்.

"பீ. ஏ. பரீக்ஷை கொடுக்காமலிருக்க மாட்டேனென நான் அவளுடன் எவ்வளவு வாதாடினேன்! சம்பாதிக்கத் தொடங்கிய பிறகே கலியாணம் செய்து கொள்ளவேணு மென்று நான் படித்த படிப்பை யெல்லாம் அவளிடம்

காட்டி, அவள் கொண்டிருந்த எல்லையற்ற அன்பிற்குக் கைம் மாருக, தான் இறக்கு முன் எனக்குத் தகுந்த இடத்தில் விவாஹமாகிப் பார்க்க வேண்டுமென்ற அவளது விருப் பத்தைக் கெடுத்தேன். மனைவி அகத்திற்கு வருவதற்குள், நான் பீ. ஏ. பட்டமாவது பெற்றிருக்கவேண்டுமெனப் பிர சங்கம் செய்ததற்குத் தக்க வெகுமானம்தான், என்னை பரீக்ஷையில் "பொருள் நூலி" லேயே மூக்குடைத்து விட் டது. இவ்வாறு அயல் நாட்டெண்ணங்களைக் கைக் கொண்டு நான் பேசியது அவளுக்குச் சற்றும் விளங்கவில்லை. பழம் புட்டிகளில் புதுத் திராக்ஷ ரசத்தை விட்டால் என்னவாகும் தெரியுமா? முருகா, உனக்கு இந்த உபமா னத்தின் கருத்து தெரியுமோ?"

"சாமி, போனதைப்பற்றி யாரேனும் வருத்தப்படு வாங்களா ? என்ன உபயோகம்? அம்மா இப்பவும் சொர்க் கத்திலிருந்து உங்களைப் பாத்துக் கொண்டுதான் இருக் காங்க. உங்களைப் பாத்துக் கொள்ளும்படி அவங்க எங் கிட்டதான் சொல்லிருக்காங்க. என்ன பிரமாதம்? இப் போது—" என்று, இவ்வண்ணம், முருகன், "காற்றுள்ள போதே தூற்றிக்கொள்," என்பதற்கிணங்க, பலவாருகச் சமாதானம் செய்து எசமானனைத் தன் வழிக்குக் கொண்டு வர முயன்ருன்.

"முருகா, என் மனதில் எவ்வளவு விசனம் குடி கொண்டிருக்கிற தென்பது உனக்குத் தெரியாது. இந்த பீ. ஏ. பரீக்ஷ போனுற் போகட்டும். அதொன்றும் பெரி தல்ல. ஆனல் அது என்சுபாவத்தை எனக்கு முற்றிலும் வெட்ட வெளிச்ச மாக்கிவிட்டது. என் தாயின் விஷயத் தில் சிறிதேனும் நன்றியில்லாமல் நான் நடந்தது கொஞ் சமோ ? ஒரு ராஜ குமாரன்போல் பணத்தை எழுதி

வரவழைத்து காபிங்கிளப்பிற்கும் கண்ட அயோக்கியப் பயல்களுக்கும் கொடுத்து அழித்தேன். அதுவும் அவள் தன் நகைகளை விற்று, கேட்டவுடனெல்லாம் தாமதமன்னியில் அனுப்பிய பணம். இத்தவிக்கும் இருதயமும், பெருகும் கண்ணீரும் முன்பு சிறிதும் கவனியாதிருந்த தீவினையைப் போக்கடிக்கக் கூடுமென்றால்—நான் ஒரு எட்டிரண்டும் அறியாத சிறுவன். காலேஜில் எல்லாப் பையன்களும் ஒரு வழியிற் செல்ல, நான் மட்டும் வேறுவிதமாயிருக்க முடியுமா? கும்பலில் கோவிந்தம் போடாதவர் யார்? முருகா, நான் கூறுவதெல்லாம் உனக்கு அர்த்தமாகாது.''—என்று ராமசந்திரன் கண்ணீர்விட்டழுது தன்னைத்தேற்றிக்கொண்டான்.

"சாமி, எனக்கு எல்லாம் தெரியுதுங்க. படிப்பில்லாமப்போனாலும் முருகன் புத்திக்கொண்ணும் குறைவில்லே. போன விஷயத்தை நினைச்சு வருத்தப்பட்டு வேதாந்தம் பேசறதிலே லாபமென்ன? காலம் தப்பி விதை தெளிப்பது போலேதான். ஏழை முருகன் வார்த்தையைக் கேட்டா, எசமானுக்கு ஒரு குறைவுமில்லே. பட்டணம் படிப்பை நிறுத்திவிடுங்க. உங்க முன்னவங்கமாதிரி கிராமத்திலே யிருந்து நிலத்தைப் பார்த்துவாங்க. இந்த ஒருவேலியை வைத்துக்கொண்டுதான் உங்க ஐயா, அவங்களுக்கு ஐயா, எல்லாரும் எவ்வளவோ பணக்காரங்களாயும் அதிகாரம் செலுத்திட்டும் இருந்தாங்க. பெரிய எசமானுக்குப் பிற்பாடு, இந்தப் பன்னிரண்டு வருசமா இந்த வயல்கள் எசமானைக் கண்டிருக்குமா? ஏதோ ஏழை முருகன் பார்வையிலே தாயில்லாப்பிள்ளைபோல, அதுகளும் பயிராயிண்டு வருதுங்க.'' இவ்வளவு மட்டும் முருகன் கூறி நிறுத்தி, மீண்டும் ஞாபகப்படுத்திக் கொண்டு சொல்லத் தொடங்கினன். "அம்மா பாத்து வைச்ச கொளந்தையையே

கலியாணம் பண்ணிக்கொள்ளுங்க. அது நல்ல இடம். அவங்களுக்குத் திருப்தியா யிருக்கும். ஏழு தலைமுறையா உண்ட அன்னத்திற்கு முருகன் ஒருகாலும் இரண்டு நினைக்கமாட்டான். எசமான் இருந்தா இந்த ஒரு வேலி ஒண்ணுக்கு இரண்டு பங்கா விளையாதா? சொகமாயிருக்க அது ஏராளமாச்சே. ஒவ்வொரு வருசமும் கொஞ்சம் பணம் மீத்தி, பட்டணம் படிப்பினுல் நேர்ந்த கடனையும் எசமான் கொஞ்சம் கொஞ்சமாய் அடைச்சு விடலாம். முருகன் மூச்சுள்ள வரையிலே எசமானுக்கு ஒரு கவலையு மில்லை.''

“முருகா, நீ கூறுவ தவ்வளவும் சரி. ஒரு பழகிய அனுபோகமுள்ள ஆளுக்குத் தக்கவாறு பேசுகிறாய். சித்திரை மாதத்து ஊற்றுப் பெருக்கைப்போல் நீ கூறும் மொழிகள் உள்ளும் புறமும் ஒன்றாய், களங்கமற்றவைகளா யிருக்கின்றன. தன்னிரு கரைகளையுமே உடைத்துச் செல்லும் நதியின் பெருவெள்ளம் போன்றதன்றோ பேராசை! பட்டணவாசம் சாமான்ய மானதல்ல. எப்படிப்பட்டவர்களையும் தன்வசப்படுத்திவிடும். அதற்குள்ளகப்பட்ட ஒரு பொம்மையாய் நாமிருக்க வேண்டுமே யன்றி, ஒரு நாளும் அதை யடக்கி ஆளக்கூடு மென்பது கூடாத காரியம்.'' நெற்றியிலரும்பிய வியர்வையைத் துடைத்துக் கொண்டு ராமசந்திரன் ஒரு நிமிஷம் பொறுத்து மறுபடியும் கூறத் தொடங்கினன். “முருகா, எனது முன்னோர்களில் ஒருவர் ஒரு நாயக்க மன்னனிடமிருந்து இச்சிறு கிராமத்தைச் சர்வமான்யமாகப் பெற்றது எதற்காக வென்று உனக்குத் தெரியுமோ? வீணுடம்பர மின்றி இல்லறம் நடத்தி, உயர்ந்த விஷயங்களிற் புத்தியைச் செலுத்தி வந்ததற்கேயாம். பீ.ஏ. பட்டமொன்றும் அவர் பெற்றவரல்லர். சாதாரண வைதிக

நிலைமையிலிருந்த ஒரு எளிய பண்டிதர்தான். அக்குடும்பத்தில் எட்டாவது தலைமுறையில் நான் பிறந்தவன். பரம்பரையாய் இரத்தத்தில் ஊறிய அவ்வாசனைதான் இப்பொழுது என்னிடம் தலைக் கிளப்புகின்றது. நானும் அவர் வழியைப் பின்தொடர விரும்புகிறேன்.''

''காவேரிப் புதுவெள்ளம்போலே எசமான் வார்த்தைகளைக் கேக்கும்போது, முருகனுக்கு வரும் ஆநந்தமும், பெருமையும் வாயாலே சொல்லத் தரமில்லை.''

''அம்மா இறந்துபோய் நாளாகவில்லை. முருகா, அதற்குள் நான் இவ்வருஷம் கலியாணம் செய்துகொள்வது நன்றாயிருக்குமா? காலேஜ் சிநேகிதர்கள், புஸ்தகங்கள், உபாத்தியாயர்கள், காபிகிளப்பு, தனியறைகள் ஒன்றையும் இனித் தேடாமல், உன்னோடு சாகுபடி செய்துகொண்டு நான் இங்கு சுகமாயிருந்து விடுகிறேன். கலியாணத்தை அடுத்த வருஷம் பார்த்துக் கொள்ளுவோம். முருகா, உன் புத்திமதியைக் கேட்டு நடப்பதென்று நான் தீர்மானித்து விட்டேன். மிகவும் எளிய ஜனங்களிடம்தான் நற்குணம் மேல் நோக்கி விளங்குகின்றதென்பது எனக்கு இவ்வளவு காலத்திற்குப் பிறகு இப்பொழுதுதான் தெளிவாய்த் தெரிகின்றது.''

---

## அத்தியாயம் 2.

### போராட்டம்.

முருகன் உள்ளன்போடு கூறிய வார்த்தைகளினின்றும் உண்டாகிய ஆறுதல் அன்று மட்டோடுதான் நின்றது. முடிவில் தனது தீர்மானத்திலேயே நம்பிக்கை வைத்த ராமசந்திரனுக்கு முருகனுடைய வார்த்தைகள் செவிடன் காதில் சங்கூதியது போலாயின. பரீக்ஷை தவறிப்போனதைப்பற்றி அவன் அதிக வருத்தப்படவில்லை. தன் தாயின் விருப்பத்திற்கு மாறாக நடந்தவற்றையெல்லாம் இனி எவ்விதம் மாற்றுவதென்றெண்ணியே அடங்காத்துயரமுற்றான். நடுக்கடலில் உடைந்து தத்தளிக்கும் மரக்கலத்தைக் கரையில் நின்று பார்த்துத் தவிக்கும் கப்பற்றலைவன்போல், தாயை நினைத்து நினைத்து உள்ள முருகலானான்.

தன்னாலியன்றமட்டும் முருகன் தன் எசமானனைத் தேற்றியும், அருங்கோடையில் எவ்வளவு தான் கவலையுடன் ஜலம் ஊற்றி வந்தபோதிலும், மேன்மேலும் வாடிவதங்கும் மெல்லிய கொடிகளுக் கொப்ப, ராமசந்திரன் முகமும் நாளுக்கு நாள் ஒளி மழுங்கியது. மழை முகங்காணாது காய்ந்து கிடக்குங் கொடிகளை அடியோடு எரிந்து போகாவண்ணம் பாதுகாப்பது மட்டுமே யன்றி, முருகன் வேறென்ன செய்வான்! ஆனால், ஆகாயத்திற் சூழ்ந்த கரிய மேகங்களை ஒவ்வொரு சமயமும் கோடைக்காற்றுக் கிளம்பி கலைத்து விடுவதுபோல, பரீக்ஷை தவறியதானது ராமசந்திரனை எளிதில் ஆறுதலடைய வொட்டாமற் செய்தது. ஆயினும் குடியானவனுக்கு இன்றியமையாத உழைப்பும்,

பொறுமையும் நன்குவாய்ந்த முருகன் இதனுலொன்றும் மனம் தளரவேயில்லை.

இதன் நடுவில், தன் நண்பன் மூன்று மாதகாலமாய்த் தனக்குக் கடித மெழுதாததைப்பற்றி நினைத்து ராமசந்திரன் சிறிது வியப்புற்ருன். பரீக்ஷை தேறிய பெருமையோ வென்று அவன் சந்தேகித்துக் கொண்டிருக்கும் பொழுது, அது தவறென, நாலைந்து நாட்களுக்கெல்லாம் அவனுக்கு ஒரு கடிதம் வந்தது. தன் நண்பன் நேதாரியின் அழுத்தமான பெருங்கையெழுத்துக் கண்களிற் பட்டதும், கொஞ்சம் சந்தோஷத்துடன் பிரித்துப் பார்த்தான்.

பூந்தமல்லி ஹை ரோட்,
சென்னை.
ஜூலை, 3.

பிரியமுள்ள ராமு,

உடனே எழுதத் தவறிய போதிலும் நான் உன் அன்னை இறந்த செய்தி கேட்டு எவ்வளவு வருத்தமுற்றேனென்பதை உனக்கு அறிவிக்காம லிருக்க முடியவில்லை. இப்படிப்பட்ட தாயை நீ இழந்தது ஒரு பெரிய குறைவு தான். குழந்தைப்பருவம் முதல் தாயினருமையே அறியாத நான் அக்குறைவை முற்றிலு முணர்ந்தவனல்லவா? ஆனுல், அதற்காக நீ துயரத்திலேயே முழுகி, எதையுத்தேசித்து அவள் உனக்காகவும் உன் படிப்பின்பொருட்டும் பாடுபட்டாளோ, அதை மறந்து விடாதே. நமது பரீக்ஷைகளும், யோஜிக்கும்பொழுது, "லாட்டரி" சீட்டைப்போல் அதிருஷ்டத்தைப் பொறுத்ததாகவே யிருக்கின்றன. பரீக்ஷையில், அதுவும் "பொருள் நூலி"ல், நீ எப்படித் தவறக் கூடுமென்பது எனக்கு இன்னும் விளங்கவில்லை. நீ எழுதி

யது பரீக்ஷகர்களின் மூளைக்கே எட்டவில்லையோ. போனற் போகட்டும். எல்லாம் நமது நலத்திற்கென்றே வைத்துக் கொள்ளுவோம். அங்கேயே யிருந்து படித்து மறுபடியும் பரீக்ஷைக்குச் செல்லுவதி லொன்றும் பயனில்லை. அதனல் உன் கல்விப் பயிற்சியே கெட்டுவிடு மென்பது நிச்சயம். கிராம வாசமும் உனக்குப் பிடிக்குமென்று தோன்றவில்லை. உடனே புறப்பட்டு வந்து, தவறிப்போன பரீக்ஷையில் இந்த வருஷம் முதல் வகுப்பில் தேறுவதற்கு நீ முயல வேண்டும்.

நான் லா காலேஜில் சேர்ந்து விட்டேன். சிறு வயது முதல் என் காரியங்கள் ஒவ்வொன்றும் எதிர்பாரா வண்ணம் நடந்து வந்திருப்பதற்கேற்றவாறு இதுவும் நேர்ந்தது. எவ்வளவோ சமயங்களில் எனக்கும் உற்சாகம் குன்றிவிடு கிறதென்றாலும், என்னை அறியாமல் முற்றிலும் அவ்வித மாகாதபடி பார்த்துக் கொள்ளுகிறேன். புகையின்றி நெருப்பு இராதாயினும், கொழுந்துவிட் டெரியும்பொழுது புகை கிளம்ப முடியாதல்லவா? உடனே புறப்படு. இல்லா விடில், நிவர்த்தித்துக் கொள்ளமுடியாத ஓர் தீமையை விலைக்கு வாங்கி அனுபவிப்பவனவாய்.

நான் உன்னை இங்குக் கூப்பிடுவதில் ஸ்வயநலமும் சேர்ந் துள்ள தென்பதை ஒத்துக் கொள்ளுகிறேன். இந்த நான்கு வருஷங்களாக நாமிருவரும் பிரியாது சேர்ந்திருந்தோ மாகையால், இப்பொழுது உன்னைவிட்டுத் தனித்திருப்பது எனக்குப் பிரியமாகவே யில்லை. உண்மையில், நம்மிரு வருக்குமாக நான் ஒரு பெரிய அறை அமர்த்திவிட்டேன். தாமதியாமல் புறப்படுவாயென்று எதிர் பார்க்கும்

உன் அன்புள்ள
கேதாரி.

P. S. "ஹிஸ்டரி" மெடல் எனக்குத்தானும். அதில் அதிசயமொன்றுமில்லை. நான் யாருடைய குறிப்புக்களை நன்றாய் மனப்பாடம் பண்ணி ஒப்பித்திருந்தேனே, அவரே இவ்வருஷம் பரீக்ஷகரா யிருந்திருக்கிறார். கேட்க வேண்டுமா ? ஆனால் நமது கலாசாலைகளில் இதற்குத் தான் கௌரவம் அதிகமாயிருக்கிறது. "பொருள் நூலி"ல் உன் சொந்த புத்தியைக்கொண்டு நீ எழுதியதொன்றும் பயன் படவில்லை. தைரியமாய் அடிப்பவர்களுக்குத்தான் இது காலம்; அடக்கமுள்ளவர்களுக்கன்று. இருந்தாலும் நீ இவ்வளவு ஆடம்பர மற்றவனாயிருக்கலாகாது.

கேதாரி.

கேதாரி அபிமானத்துடன் அழைத்தபடியே, இனி நாமும் ராமசந்திரனை ராமுவென்றே அழைப்போம். இக் கடிதத்தை ராமு பன்முறை படித்தான். அவன் எதிர் பார்த்துக்கொண்டிருந்த அனுதாபம் ஒரு வரியிலேனும் காணப்படவில்லை. பரீக்ஷை தவறிப்போனதைப்பற்றி யொன் றும் விசாரிக்காமல், மேற்செய்ய வேண்டியவைகளை மட்டும் வெகு கண்டிப்பாய் எடுத்துக்கூறியது அவன் மனதைச் சிறிது வருத்தியது.

ஆயினும் இவ்வளவு சீக்கிரத்தில் கேதாரி தனது பெருமையையே பாராட்டிப் பேசக் கூடியவனாக மாறி யிருக்கமாட்டான். அவன் எழுதியதும் கூடியவரையில் உசிதமாகவே தோன்றிற்று. மேலும், இங்கிலையில் அவனைப் போல் ஒரு நண்பன் பக்கத்துணையாக இருக்கவேண்டிய தும் முக்கியமாயிருந்தது.—இவ்வாறு ராமு சிந்தித்துக் கொண்டிருக்கும்பொழுது, முருகன் உள்ளே நுழைந்தான்.

"சாமி, இப்படி வருத்தப்பட்டு உக்கார்ந்திருந்தா, உங்களுக்குத்தான் கஷ்டம். வயல்களை வந்து பாருங்க.

நேற்றிரவு பெருகிய காவேரி புதுவெள்ளத்தை நம்ம தோப்பு நாத்தங்காலுக்குப் பாய்ச்சினேன். இன்னிக் காலமே பார்த்தா, ஒரு விரல் கனம் வண்டல் மண் படிஞ்சிருக்கு. அதனாலேயே இந்த வருசம் நன்னா விளையும். சரியான சமயத்தில் என் கைவேலையைப் பார்த்து ஊரிலே வயிற்றெரிச்சப்படாதவங்க இல்லே. இராமுழுதிலும் நான் கண் கொட்டவேயில்லே. மம்மட்டியும் கையுமா நின்னு, ஜலத்தையெல்லாம்—''

"ரொம்ப ஸந்தோஷம், முருகா. ஆனால் பட்டண வாஸம் செய்தவர்களுக்கு இவ்விஷயங்களைப்பற்றி யென்ன தெரியும்?'' என்றான் ராமு, ஒன்றும் சொல்லத் தோன்றாதவனாய்.

முருகன் விடாமல், "சாமி, நான் வாங்கின மாடுங்க கொஞ்சங்கூடச் சேற்றைப் பாராமே, எப்படி வயலை உழுதூன்னு வந்து பாருங்க. நான் கொடுத்த பணம் வீணில்லே. அம்மா போட்டிருந்த கறி காயி இப்போ தோட்டத்திலே ஏராளமா காச்சிருக்கு. எசமானே கையாலே பறிச்சு வீட்டுக்குக் கொண்டுவந்தா, எவ்வளவோ நன்னாயிருக்கும். பொழுதும் போகும். நம்மதோட்டத்திலே நம்ம கையாலே போட்ட கறிகாய்களைப்போல வேறெதுவும் ருசியாவாது,'' என,

"நீ பேசுவதெல்லாம் நன்றாய்த்தானிருக்கிறது, முருகா. ஆனால் என் மனம் வேறுவிதமான எண்ணங்களாற் குழம்பியிருக்கிறது. ஸாமான்ய வாழ்க்கையின் உயர்வை நீ யெனக்கெடுத்துக் கூறவேண்டுமோ? நானே அதைக் கோருபவன். ஏழு தலைமுறையாய் என் இரத்தத்தில் அது ஊறிவந்ததன்றோ! ஆனால் ஏதோ இப்பொழுது காலம் சற்று மாறுதலடைந்திருக்கிறது. போனது போகட்டுமென்று ஒரே

நாளில் ஒழித்துவிடுவது சுலபமன்று. முறுக்குவதற்கு எவ்வளவு நேரமாகுமோ, அவ்வளவு நேரம் பிரிப்பதற்கும் ஆகும்;—உனக்குத் தெரியாதா, முருகா? நான் பீ. ஏ. பரீக்ஷைக்கு மறுபடியும் வாசித்துப் பாஸ்பண்ணத்தான் வேண்டுமென்று என் தோழன் ஒருவன் இதோ எனக்குக் கண்டிப்பாய்க் கடிதம் எழுதியிருக்கிறுன். அவ்விதமே காலேஜ் உபாத்தியாயர் ஒருவரிடமிருந்தும் கடிதம் வந்திருக்கிறது. இப்பொழுது படிப்பை நிறுத்திவிட்டால், இவ்வளவு நாட் படித்ததும் வீண்தான். காவேரியில் நீர் வற்றியிருக்கும் பொழுது, நீ எப்பாடு பட்டாயினும் இரைத்து, வயல்கள் பாழாய்ப் போகாவண்ணம், ஜலம் பாய்ச்சுவதில்லையா? முருகா, நான் ஆங்கிலம் கற்கத் தொடங்கியதற்கு அம்மாவே காரணமென்று நீதானே சொன்னுய்! அவள் விரும்பியது தான் நிறைவேறட்டுமே! முருகா, நிலத்தை நீ பார்த்துக் கொள்ளும் வரையிலும், அதைப்பற்றிக் எனக்குக் கவலையில்லை. அதன்றியும், விவசாயத்தைப்பற்றி எனக்கென்ன தெரியும்? பரீக்ஷைக்கு மீண்டும் படிப்பதென்றே நான் தீர்மானித்துவிட்டேன். அதற்கு வேண்டிய பணமும் நீதான் சேகரிக்கவேண்டும். இப்பொழுது நூறு ரூபாய் இருந்தாலும் போதும். பீ. ஏ. பாஸ்செய்த பிறகு, என் ஜன்ம முழுவதையும் உன்னுடன் உத்தமமான உழவுத் தொழிலிற் கழித்து, என் போன்றவர்களுக்கு அதன் பெருமையை நிதர்சனமாகக் காட்டுவேன். முருகா, கதிர்முற்றுந் தருணத்தில் மழையற்றுக் காய்ந்து கிடக்கும் முதிர்ந்த நெற்பயிர் போலல்லவா இப்பொழுது என் நிலைமை இருக்கின்றது! பரீக்ஷை தவறியது என்னைப் பிறர் நகைப்புக்கும், அனுதாபத்திற்கும் ஆளாக்கியதுடன், என்மனதிற்கும் அடங்காத் துயரத்தை உண்டாக்கிவிட்டது.''

இவ்வாறு ராமு பேசுவதை முருகன் கடைசிமட்டும் பொறுமையாய்க் கேட்டிருந்து, பிறகு சிறிது தயங்கிய வண்ணம் துக்கத்தோடு, "எசமான் அப்படித் தீர்மானித்து விட்டா, முருகன் வேறென்ன பதில் சொல்வான்?" என்றான்.

"முருகா, நாளை நான் இவ்விடம் விட்டுப் புறப்பட வெண்ணியிருக்கிறேன்."

"எசமான் இஷ்டம். ஆனால் போவதற்கு முன்னே, நிலத்தைப் பார்த்து விட்டுப் போகவேணும்."

"பார்ப்பதற்கு என்ன இருக்கிறது, முருகா? ஐந்து தலைமுறையாவதற்குள், எழுநூறு ஏகர் ஏழு ஏகருக்கு வந்துவிட்டது. அந்த ஏழும் கடனில் அகப்பட்டு, மிஞ்சுவது சந்தேகந்தான். இவ்வாடம்பரச் செலவும், அளவுக்கு மிஞ்சிய சௌக்கியமும் தற்கால நாகரிக வாழ்க்கையில் ஏற்பட்டுள்ளன. முருகா, படிப்பென்றாலும், அதன் அபிவிருத்தியின்பொருட்டு நேரும் பொருட் செலவும், வருஷந்தோறும் கட்டவேண்டிய கிஸ்திப் பணமும் உண்டு. வயிற்றுக் கஞ்சியில்லாமலடிக்கும் இந்நாகரிகத்தைப் பாராட்டுவதனால் ஏற்படும் தண்டனை இது. முருகா, உனது திருப்திக்காகவாயினும் நான் போவதற்கு முன் நிலத்தைப்பார்த்து விட்டுப் போகிறேன்."

முருகன் சென்றதும், ராமு தனக்குள்ளேயே ஆலோசிக்கலானான். "ஆஹா, நேதாரி! நீ இல்லாவிட்டால் இந்த பீ. ஏ. பரீக்ஷையைப்பற்றி நான் சிறிதாயினும் கவலைகொள்வேனா? உன்னோடு சேர்ந்திருக்கும் நினைவே என்னை இப்பொழுது பட்டணம் இழுக்கின்றது. கப்பலுக்குக் கடல் போலும், பாய் மரத்திற்குக் காற்றுப்போலும் நீயும் எனக்கு

இன்றியமையாதவனு யிருக்கிருய். நானே பெண் தன்மை யன். பிறருதவியின்றித் தானே நடந்துகொள்ளுந் திறமை யற்றவன். இவ்வகன்ற வுலகில், ஒருவருடைய உதவியையும் நாடாமல், ஸ்வய நினைவும், ஸ்வய எண்ணங்களுமே பிரதான மாய்க் கொண்டு வாழ என்னுல் முடியாது. உண்மையான நண்பன் ஒருவன் மட்டும் கிடைத்தால், ஒரு பெரிய அரசு பெற்றதற் கொப்ப, என் இருதயம் களிப்பெய்திவிடும். கேதாரி! நீ என்னைப் போல் அடக்க முடையவனல்லன். மேன்மேலும் உத்ஸாகம் கொள்ளுங் குணமுடையவன். சிறிது செம்பு கலக்கப் பெற்ற தங்க நாணயம் போன்ற உனது பிரகிருதியே வேறு. உலகில் மகா நற்குணம் படைத் தவன், பரம அயோக்யன், இவ்விருவரும் உனக்கு ஒன்று தான். எதுவரினுங் கலங்காமல், தன் நலத்தையே கருதுபவ னுய், நீ இவ்விருவரையுங் கொண்டு உன் காரியத்தைச்சா தித் துத், தன்வழியே சென்றுவிடுவாய். நீ பெரிய பதவிக்கு வரக்கூடியவன் என்பதில் தடையில்லை. அதற்கு நான் உன் னுடன் இருப்பதும் சிறிது உதவியாகலாம். தோழா! நீ முன்னுக்கு வருவதைப் பார்க்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்கட்டும்.''

---

## அத்தியாயம் 3.

### பல யோசனைகள்.

ஒருவருடைய சகாயமு மின்றித் தானே முன்னுக்கு வந்த கேதாரி, ஐந்து வயதிலேயே பெற்றோர்கள் இறந்தமையால், அவ்வருமை பெருமைகளை யிழந்ததுடன், அதனாலேற்படும் நன்மைகளும் அற்றவனானான். சிறுவர்கள், மனம் போனபடி திரியாமல், நேர்வழியில் நடப்பதற்குத் தாய் தந்தையர்களுடைய அன்பும் கவனிப்புமே காரணமல்லவா? பட்டுக்கோட்டைத் தாலூக்காவில் நீர்வறண்ட ஒரு கிராமத்தில் அவன் ஒரு எளிய குடும்பத்திற் பிறந்தவன். ஆனால் அவன் நிலைமையானது வெகு சீக்கிரம் அவனைப் பட்டணவாசத்தில் கொண்டுவந்து சேர்த்துவிட்டது. சென்னையில் பீ. ஏ. வகுப்பில் தான் எவ்வாறுவந்து புகுந்து கொண்டோமென்பதை நினைக்க அவனே வியப்புற்றான். ஆனால், சாவதானமாய் யோசித்துப் பார்க்கும் பொழுது, தைரியமாய்த் துணிந்து நிற்பவனை ஒருவரும் ஆதரிக்காமல் கைவிடார் என்பதுடன், அவனிடம் யாவரும் விரும்பக் கூடிய சில குணங்களும் விளங்கக்கூடுமென்று அவனுக்குப் புலப்பட்டது. ஒரு மரக்கட்டையைச் சிறு படகு போல் குடைந்து ஆற்றில் விட்டால், அது எவ்வளவு இலேசாய் மிதந்து செல்லுமோ, அவ்வண்ணமே தன் நிலைமைக்குத் தக்கவாறு, உற்சாகத்தோடு மனம் தளராத சுபாவத்தையுடைய வாலிபனுக்கு இவ்வுலகில் எதுவும் தடையாக முடியாதன்றோ?

கேதாரியினது சுபாவம் எதற்கும் அஞ்சாத தன்மையாயிருந்தது போலவே, அவன் முகமும் பார்வைக்கு நல்ல

கம்பீரக் களையுடன் விளங்கிற்று. எந்த வேலையிலும் அவனுக்கு உற்சாகமும் சுறுசுறுப்பும் அதிகம். பெரும்பாலும், நினைத்த காரியத்தைச் செய்து முடிக்கும் இயல்புடையவனுயினும், காலத்திற்கேற்ற மேலான மனோபாவங்களையுமுடையவனுயிருந்தான். இவ்வாறு எல்லா குணங்களும் அவனிடம் அழகாய் ஒன்று சேர்ந்திருக்க, கேதாரி சீக்கிரத்திலேயே பீ. ஏ. பரீக்ஷையில் மூன்று பாகங்களிலும் முதல்வனுக எளிதிற் றேறியதொன்றும் வியக்கத்தக்க தல்லதன்றே! இதுவரையில் அவனும் தற்பெருமைக்கு வசமாகாது, தான் முன்பிருந்த நிலைமையை அடிக்கடி நினைத்துக்கொண்டு, அதனல் அடக்கமும் வாய்ந்தே விளங்கலானுன். பீ. ஏ. பரீக்ஷையில் மூன்று பாகங்களிலும் முதல்வனுகத் தேறியதுடன், சொல்வன்மை, புத்தி நுட்பம், வணக்கம் ஆகிய இவைகளிற் சிலாகிக்கத் தகுந்தவனுயு மிருக்கவே, கேதாரி லா காலேஜில் சேருவதைத் தவிர்த்து வேறென்ன செய்வான்? உபாத்தியாயர்கள், பையன்கள் அனைவருக்கும் அவன் வேண்டியவனுயிருந்தான். உண்மையில், புத்திசாலியென அவன் தன் காலேஜில் மட்டும் பெயர் பெறவில்லை; சென்னை முழுதுமே அவனை அவ்வாறு கொண்டாடினுர்கள். இக்கேதாரியைத் தான் ராமு தன் அந்தரங்க நண்பனுய் மிகவும் பாராட்டி வந்தான்.

ஒருநாள், அலவந்தியிலிருக்கும் தன் நண்பனுக்கெழுதிய கடிதத்தை, சென்னை ஹைகோர்ட் கட்டடத்தைச் சார்ந்த தபாற் பெட்டியிற் போடத் தானே எடுத்துச்சென்ற கேதாரி, கடிதம் பெட்டியினடியிற் போய் விழும் சப்தம் கேட்குமளவும் நின்று பார்த்திருந்து விட்டுப், பிறகு, தான் எழுதியது வீண் போகாதென்ற திருப்தியுடன் அவ்விடம் விட்டுக் கிளம்பினுன். அவன் ஒவ்வொரு சமயமும் இவ்

வாறு தான் செய்வது வழக்கமென்றாலும், இப்பொழுது, தான் எழுதியதைப்பற்றி இன்னும் அதிக திருப்தியும் நம்பிக்கையுங்கொண்டான். ஏனெனில், அதை யவன் உண்மையான உற்சாகத்தோ டெழுதியிருந்தான்.

என்றும் போலல்லாமல், அன்று கேதாரி அதிக நல்லுடை யுடுத்தியிருந்தான். லா காலேஜிற் சேர்ந்ததும், அவன் ஆடையணிகளும் மாறிவிட்டதென, தன் நண்பர்கள் வேடிக்கையாகப் பேசிக்கொண்டதும் அவனுக்குத் திருப்திதான். ஏனெனில், அழகிய உடைக ளணிவதனல் நம்மனதிற் பெருமை தோன்றுவதுடன், பார்ப்பவர்களுக்கும் நம்மிடம் மதிப்பு ஏற்படுகிறதென்னும் விஷயம் அவனுக்குப்புலப்படத் தொடங்கிவிட்டது. ஆடையாலடையும் பயன்களைப்பற்றிய வியாசம் தங்களில் யாரேனும் எழுதுவது எவ்வளவு நன்றாயிருக்கும் என்றுகூட எண்ணலானன். வாழ்வில் மேன்மையடைவதற்கு ஒருவர் அணியும் ஆடைகளும் ஓர் விசேஷ காரணமாக விருக்கின்றதென்பதைக் கேதாரி சிறிதும் சந்தேகிக்கவில்லை. மூளைக்கும் துணிமணிகளுக்கும் இவ்வளவு நெருங்கிய சம்பந்தமிருப்பதை இன்னும் முன்பே அறியாமற் போனதைப்பற்றிச் சிறிது வருத்தமுங்கொண்டு, அவன் இவ்வாறெல்லாம் தனக்குள்ளேயே யோசித்துச் செல்லும் பொழுது, ஒரு "போர்டு பஸ்" டிராம் கார் ஸ்தம்பமொன்றில் மோதி, அவன் ஆலோசனையைக் கலைத்தது. மோதுண்டதனல் பஸ் முன்சக்கிரத்தின் மேற்பலகை நன்றாய்முறிந்து போனபோதிலும், உள்ளே உட்கார்ந்திருந்தவர்களுக்கு பெருங் கம்பமுண்டாக்கியதைத் தவிர வேறுவிதமான அபாயம் நேரிடவில்லை. ஆனல் மோடாரைப்பற்றி யறிந்தவர்களோ, இவ்வாறு குலுங்குவதையும் தளர்ந்தசரீரத்திற்கு ஓர் மருந்தாகவே எண்ணுவார்கள். இவ்வபாயம் நடந்த இடத்

திற்குச் சமீபத்திற்றான் கேதாரியும் வந்துகொண்டிருந்தா னாதலால், எவ்வளவுதான் முக்கிய விஷயங்களாயிருப்பினும், நடுவீதியில் அவைகளைப்பற்றி ஆழ்ந்து யோசிப்பது மிகுந்த ஆபத்திற்கிடமாகு மென்பதை யச்சமயத்தில் இக்காட்சிஅவ னுக்கு உணர்த்தியதுபோலிருந்தது. உடைந்த கண்ணாடித் துண்டுகளும், இரும்பாணிகளும் இறைந்துகிடந்த சாலை யோரத்தில் ஒதுங்கியவனாய், கைகால் முறிந்து பிராண னுக்கே ஹானிநேரிடும் அபாயங்களுக் குள்ளாவதைக்காட்டி லும், கற்கள்மேலும் ஆணிகள்மேலும் நடப்பது பாதகமன் றென்று தீர்மானித்தான்.

பலஜனங்கள் நடுவில் அவனும் நடையிற் சிறந்தவன் போலுல்லாசமாய்நடந்து "ப்ராட்வே" (Broadway) நோக் கிச் செல்லுகையில், எந்திரங்களால் மனிதனுடைய சக்தி வெகுவாய்ப் பிரயாணத்திற்குப் பயன்படாதிருப்பதை யெண்ணி வருத்தமுற்று, ஒரு ஓரத்தில் ஏறுவாரில்லாமல் காத்துக்கொண்டிருந்த சில ரிக்ஷா வண்டிக்காரர்கள், அவன் நடந்து போவதைப்பார்த்து, "சாமீ! ஏறிக்கொள்ளுகிறீங் களா"? என்று கத்திக்கொண்டே, ஒருவரை யொருவர் தள் ளிக்கொண்டு முன்னால் ஓடிவந்தார்கள். தன் போன்ற ஒரு மனிதன் இழுத்துச்செல்ல, தான் உட்கார்ந்து போவதில் கேதாரி என்றுமே சிறிது அருவருப்புடையவன். ஒரு ரிக்ஷா வண்டிக்காரன், இன்னும் அதிகமாய் வயிறு காய்ந் திருந்ததனாலேயோ என்னவோ, கூப்பிட்டதுடன் நில்லாமல், "இப்படி மகாராசருங்கல்லாம் நடந்துபோனா, ஏழைங்க எப் படிப் பிழைப்பாங்க?" என்று உரத்தகுரலில் முறையிட் டான்.

துணிமணிகளில் எல்லையற்ற மயக்கமும் மதிப்பும் மேலிட்டிருந்த கேதாரி, வீட்டைவிட்டுக் கிளம்பும்பொழுது

இருந்த பரபரப்பிற் புதிதாய்த் தைத்த சட்டை எப்படி யிருக்கிறதென்பதைக் கண்ணுடியிற் பார்க்கத்தவறிவிட்டான். ஆயினும் அதன் அழகை, இப்பொழுது, அந்த ரிக்ஷா வண்டிக்காரன் உயர்த்திப்பேசியது, அவ்வழுக்குப் படிந்த சிறிய கண்ணுடியைவிட மேலான அத்தாட்சியாகத்தோன்ற, செல்வத்தின் களை தன்முகத்தில் நிச்சயமாய் விளங்குகிற தென்றே மனதிற்குள் சந்தோஷமடைந்தான். உள்ளங் கையை ஒரு நிமிஷம் உற்றுப்பார்த்து திருப்தியும் கொண் டான். அவன் நடை தளர்ந்ததைக் கவனித்த ரிக்ஷாவண் டிக்காரன் தைரியங்கொண்டு மறுபடியும் கூக்குரலிட, தன் கண்ணியமான தோற்றத்தைக் கெடுத்துக்கொள்ள விரும் பாத கேதாரியும், கால்நடையாகச் செல்வது அவன் போகு மிடத்தில் மதிப்பிற்குக் குறைவாயிருக்கு மென்பதையு முணர்ந்து, "கெட்டிக்காரன்! உனக்கு இரண்டணு கூடவே கொடுக்கலாம்," என்று அவனை மெச்சி, அவன் ரிக்ஷாவில் ஏறிக்கொண்டான்.

கால்மேல் காலிட்டு உட்கார்ந்து, பாதிமூடிய கண்களு டன், பல இனிய நினைவுகளில் முழுகியவனுய், வண்டிகளும் ஜனங்களும் நிறைந்த, அக்குறுகிய வீதியில் செல்லும் பொழுது, அவனறியாமலே கைதாளம் போட, வாயும் மெதுவாய்ச் சிட்டியடிக்கத் தொடங்கிற்று. கடைத்தெரு வில், புதிதாய்ப்பறித்த மல்லிகை மலர்கள் வெள்ளிக்கூடை யில் நிறப்பப்பட்டு எவ்வாறு விளங்குமோ, அவ்வண்ணமே அவன் முகத்தில் யௌவனத்தின் வனப்பும் அதிருஷ்டக் களையும் மேலிட்டுப் பிரகாசித்தன.

ஆனல், இவ்வினிய எண்ணங்களெல்லாம் ரிக்ஷா வண் டிக்காரன் புத்திக்கெட்டக்கூடுமா? தங்கள் பெருத்த சரீரத்

தின் மேல் மூட்டை துணியை வாரிப்போட்டுக்கொண்டு, வழக்கமாய் உட்காரும் வியாபாரிகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, கேதாரி ஒரு பாரமாகவே அவனுக்குத் தோன்றவில்லை. ஆயினும், அவனை ஒரு நல்ல சுமையாகவே ரிக்ஷாக்காரன் மதித்ததற்குக் காரணம் வேறு. "தயாள ப்ரபுங்க ஏறியுட்கார்ந்தால், நான் பம்பாய் மெயிலுக்குச் சரியாய் ஓடமாட்டேனா?" என்று, ஓடும் வேகத்தில் பெருமையடித்துக்கொண்டே, அவன் ஓர் பந்தயக்குதிரைபோல் ரிக்ஷாவை அதிவேகமாய் இழுத்துக்கொண்டு ஓடினன். தன் நல்லதிருஷ்டத்தினுல் வழக்கத்தைவிட அன்று அதிகமாய்க்கிடைக்கப்போகும் கூலியை நினைத்து, ஒவ்வொரு சமயம் பல்லையிளித்துத் தனக்குள்ளேயே முணுமுணுத்துக் கொண்டதைத் தவிர, மற்றபடி பேசினற்கூட எங்குவேகம் குறைந்துவிடுமோ வென்று பயந்து, அவன் வழிமுழுவதும் வாய் திறக்கவில்லை. அவன் அவ்வாறு கூறும்பொழுதெல்லாம், கேதாரியும் ஆக்ஷேபிக்காமல் மௌனமாயிருந்தது, அங்கீகாரம்செய்ததாக ஏற்பட, இந்நியாயம், எங்கும் படிக்காமல், இயற்கையாகவே ரிக்ஷாக்காரனுக்கு நன்கு புலப்பட்டிருந்தது. அவனுடன் அதிகமாய் வாதாடுவதற்குக் கேதாரியின் சொந்த நினைவுகள் இடம் தராமற்போனதுடன், அற்பத்தனத்தைக்காட்டிச் சச்சரவு புரிந்து, தன்னைப்பெரிய மனிதனுக மதித்ததைக் கெடுத்துக்கொள்ள அவனுக்கு இஷ்டமில்லை. மேலும், தன் சௌகரியத்தின் பொருட்டுப் பிறரை அவன் அதிகமாய் வேலையிடுவதில்லை யாகையால், அவ்வாறு நேரும்பொழுது தாராளமாய்ப் பணத்தைக் கொடுத்து விடுவது வழக்கம். அதுவும் ஜானகியின் வீட்டிற்கெதிரில் சில்லரைக் கணக்குப்பார்த்துக்கொண்டு நிற்பது அவனுக்கு மிக்க அகௌரவமாகத் தோன்றிற்று.

ஜார்ஜ்டவுனில் அநேகம் சந்துபொந்துகளில் நுழைந்து கடைசியில் முத்து முதலித் தெரு 15-வது நம்பர் வீட்டின் முன் ரிக்ஷா வந்து நின்றது. ஜானகி வாயிற்படியில் நின்று கொண்டிருந்தாள். மாலைப்பொழுதின் மஞ்சள் வெய்யில் அவள்மேற் படிந்திருக்கும் அழகைப்பார்த்துக் கேதாரி ஒரு நிமிஷம் திகைத்திருக்கையில், அதற்குள் ரிக்ஷா வேகமாய் நகரவும், உடனே நிறுத்தென்று கூறி, தான் பேசியதற்கு இரட்டிப்பாக, ஒரு ரூபாயை அவனிடம் வீசி யெறிந்தான். முதலில் அவ்வளவு கொடுக்க உத்தேசமில்லையாயினும், ஜானகியினெதிரில் ரூபாய்க்குச் சில்லரை கேட்க அவன் விரும்பவில்லை. வேகத்தில் பம்பாய் மெயிலுக்குத் தன்னை ஒப்பிட்டுப் பெருமை யடித்துக்கொண்டபொழுதுகூட, முழு ரூபாய் ஒன்று கிடைக்குமென்று ரிக்ஷாவண்டிக்காரன் நம்பியவனல்ல. ஆயினும், தொழிலுக்கேற்ற அனுபவம், புத்திநுட்பம் இவைகளினால் ஒரு நிமிஷத்தில் விஷயத்தை யுள்ளபடி அறிந்து, கொடுத்த மகராசனையும் தெய்வத்தை யும் வாய்கொண்டமட்டும் வாழ்த்தி, வேலையின்றி உட்கார்ந் திருக்கும் மற்ற ரிக்ஷாக்காரர்கள்மேல், தன் போன்ற அதி ருஷ்ட மில்லாமைக்காக, அனுதாபமுங் காட்டிக்கொண்டு, தான் வழக்கமாய்ச் செல்லும் கள்ளுக்கடைக்குச் சென்று விட்டான். எங்கும் தைரியமே ஜயத்திற்காதாரமல்லவா!

நிற்க, ஜானகி கேதாரியின் வரவைத் தன் தாய்க்குத் தெரிவிக்க உள்ளே சென்றாள். அவன் அவர்களுக்குத் தூரத்து பந்துவாயினும், தற்செயலாய்க்காண நேர்ந்திரா விடில், ஜனப்பெருக்கமுள்ள பட்டணமாகிய சென்னையில், ஒருவரிருந்தது மற்றவருக்குத் தெரியாமலே போயிருக்க லாம். ஜானகியின் தாயாகிய மீனாக்ஷி உபசாரவார்த்தை களுடன் அவனை உள்ளே அழைத்து ஒரு பலகையில் உட்

காரச் செய்தாள். இரவிற் படுக்கையறையும், பகலில் உட்கார்ந்து சம்பாஷிக்கக்கூடிய கூடமாகவுமிருந்த அவ்விடத்தில், அப்பலகை ஒன்றுதான் நாற்காலிக்குப் பதிலாயிருந்தது. ஆனால் கேதாரிக்கிருந்த களிப்பில், அவன் இதையெல்லாம் ஒன்றும் கவனிக்கவே யில்லை. ஜானகியின் சௌந்தரியத்தினால் அச்சிறு வீடுமுழுவதும் விளக்கேற்றியதுபோல் பிரகாசமாக அச்சிறுமியும், சற்று நாணத்துடன் சமையலறைவாயிற்படியில், அடுப்பில் வைக்கப்பட்டிருந்த ஈர விறகினின்றும் கிளம்பும் புகையை வெளியே வரவொட்டாமற் றடுத்துக்கொண்டு நிற்கலானாள்.

வீட்டிற்கு வந்தவர்களை மீனாக்ஷி, எப்பொழுதும், தன் பேச்சினால் வேறு விஷயங்களில் மனஞ்செல்ல விடாமல் தடுத்து விடுவது வழக்கம்.

"கேதாரி! இவ்வதிருஷ்டமற்ற குடும்பத்தின்மேல் நீ அளவுக்கு மிஞ்சியே அன்பு பாராட்டுகிறாய். என்ன விதமாய் எங்கள் நன்றியை வெளியிடுவதென்று எனக்குத் தெரியவில்லை. நீ வந்துவிட்டுப்போவதே பெரிய பாக்கியமாய்த் தோன்றுகிறது. ஆயினும் நீ அபிமானமுள்ளவனாயிருக்கிறா யென்பதற்காக நாங்கள் அடிக்கடி உனக்குத்தொந்திரவு கொடுக்கலாமா? அவர்—ஜானகியின் தந்தை உயிருடனிருந்தால்—" என்று மீனாக்ஷி தொடங்க,

"என்போன்ற வாலிபர்களுக்கு, பிறருக்கு உபகாரமாயிருப்பதிலேயே ஊக்கமும் களிப்புமுண்டு," என்று கேதாரி முகமலர்ச்சியுடன் பதில் கூறும்பொழுது, அவனது மனப்பூர்வமான களிப்பும், உள்ளன்பும் அச்சொற்களில் நன்றாய் விளங்கின. "திரவியசகாயம் செய்யக்கூடாதவனாயிருந்தாலும், வாக்குச்சகாயம் செய்வதில் எனக்கு ஒரு செலவு

மில்லையே. அவைகளினால் உங்களுக்கு ஏதாவது உபகார மிருந்தாலுமிருக்கலாம். திவிலை ஜலத்திற்கும் விலைகூறும் இப்பட்டணத்தில், தெய்வாதீனம்! வாய்மொழிகள் விலை யில்லாமலிருக்கின்றன!''

"ஆயினும், வக்கீல்கள் தங்கள் பேச்சைக்கூட ஏழைக ளிடம் விற்று, ஒரு வார்த்தைக்கு எவ்வளவோ காசுவீதம் பணம் பறித்து விடுகிறார்களென்று சொல்லுகிறார்களே!'' என்று ஜானகி சிறிது புன்சிரிப்புடன் சொல்ல,

"இருந்தாலும், நான் இன்னும் ஒரு வக்கீலாக வில்லையே. அப்படி ஆனாலும், ஜானகி! உன்னைப்பற்றிப் பேசுவதற்குப் பணங்கேட்கமாட்டேன், தெரியுமா?—ஆனால் யார்தான் கேட்பார்கள்?—அதுமட்டுமல்ல, உன்னை எவ் வாறு சிலாகித்துப் பேசவேண்டுமோ அவ்விதமாகவும் நன் ராய்ப் பேசப் பழக்கிக் கொள்வேன்,'' என்றான் கேதாரி.

இப்படி அவர்கள் ஒருவருக்கொருவர் வேடிக்கையாகப் பேசிக்கொண்டது மீனாக்ஷிக்குத் திருப்தியாகவே யிருந்தது. "ஜானகிக்கு நிரம்ப வயதாய்விட்டது. இந்த வருஷம் கல்யாணம் பண்ணமல் முடியுமென்று தோன்றவில்லை,'' என்று மீனாக்ஷி பெண்ணைப் பார்த்துக்கொண்டே சொல்ல, சம்பாஷணை தன்விவாஹ விஷயமாய்த் திரும்புவதைக்கண்டு, ஜானகியும் அவ்விடம் விட்டு மெதுவாய் நழுவலானாள். போகும்பொழுது அவள் தன்னை ஜாடையாகப்பார்த்துச் சென்றதை யறிந்து, கேதாரியின் மனம் அளவற்ற மகிழ்ச்சி யடைந்தது.

ஒரு நிமிஷம் பொறுத்து மீனாக்ஷி, கவலையோடு கூடிய குரலில் சொல்லத் தொடங்கினாள். "கேதாரி! ஜானகியின் கலியாண விஷயமாய் ஆயிரம் ரூபாய்க்குமேல் என்னாற்செல

வழிக்க முடியாதென்பது உனக்குத் தெரியும். ஜானகியின் தகப்பனார் இறந்து, நாங்கள் கஷ்டப்படும் வேளைக்குச்சரி யாய், தெய்வம் உன்னை அனுப்பாவிடின், எங்களுக்குச் சகா யம் வேறு ஏது? அவர் உயிருடனிருக்கும்பொழுது அவள் கலியாணத்தைப்பற்றி நான் எவ்வளவோதான் எண்ணி யிருந்தேன். நாம் எப்படித்தரித்திரப்பட்டாலும், பெண்ணை நல்ல இடத்திற் கொடுத்து அவள் சந்தோஷமாயிருப்பதைப் பார்க்கவேண்டுமென்ற பேரவா எனக்குப் பூர்ணமாயிருந்தது. எல்லாம் நமது குழந்தையின் பொருட்டென்று நான் சொன்னதின்பேரில்தான் அவள் தந்தை, பிறந்த கிராமம், சொந்த வீடு இவைகளை விட்டு, இவ்வியாதி குடிகொண்ட பட்டணத்தில் சம்பாதிக்க வந்துசேர்ந்தார். நன்றாய் வேலை யுயரும் சமயத்தில்—இருந்தால், இப்பொழுது நூறுரூபாய் சம்பளத்தில் ஹெட் கிளார்க் உத்தியோகமாயிருக்குமன்றோ! அந்த ஸ்திதியில் மூவாயிரம் ரூபாய் கடனாகக்கேட்டாலும், எவரும் அட்டியில்லாமல் கொடுப்பார்கள். அதைக்கொண்டு சட்டபரீக்ஷைக்குப் படித்துக்கொண்டிருக்கும் பையன்க ளுள், நல்ல புத்திசாலியாயும், பணக்காரனாயுமுள்ள ஒரு பையனைப்பார்த்துப் பிடித்துவிடலாமென்று எண்ணியிருந்த தெல்லாம் இப்பொழுது ஒரு கனவாய் விட்டது.'' இவ் வாறு வருத்தப்பட்டுப்பேசும் மீனாக்ஷியைக் கவலைப்பட வேண்டாமென்று தைரியப்படுத்த கேதாரி வாய்திறக்கு முன், அவள் மீண்டும், "எந்தப்பையனும் உன்னை அறியாத வனில்லை. உனக்கும் பல பெயர்கள் நன்கு தெரிந்திருப் பார்கள். கேதாரி! நீ பார்க்கக் கூடாதா? தந்தையை யிழந்து ஏழ்மை ஸ்திதியிலிருப்பினும், ஜானகியின் நற்குணத்தையும் அழகையுங் கண்டு, அவைகளுக்காகவாயினும் இரங்கி விவா ஹம் செய்துகொள்ள மனமிசையும் நல்ல பையனொருவனும்

கிடைக்கமாட்டானு? சென்ற வருஷம் தான் உனக்கும் கலியாணமாயிருக்கிறது. ஜானகியை உன் மைத்துனியாக—ஏன்?—உன் உடன் பிறந்தவளாகத்தான் ஏற்றுக்கொள்ளலாகாதா?'' என்ருள்.

"அத்தை! நான் இப்பொழுது வாக்களிக்கின்றேன். ஜானகியின் விவாஹம் நடந்தேறும் வரையில் நான் வேறு காரியமொன்றையும் கவனிப்பதில்லை. அவள்மேல் எனக்குச் சகோதர வாஞ்சையே மேலிட்டிருக்கிறது. தெய்வ சம்மதமும், மனிதனுடைய முயற்சியும் மட்டும் பூர்ணமாகவிருந்தால், அவளுக்குச்சரியான கணவன் வாராமற்போக மாட்டான். நான் ஏற்கெனவே இதைப்பற்றி யோசித்துச் சில காரியங்கள் செய்திருக்கிறேன். ஈசுவரனிருக்கிருர்; பார்த்துக் கொள்ளுவோம். அடுத்த சனிக்கிழமை மறுபடியும் இங்கு வருகிறேன்,'' என்று கேதாரி தைரியங்கூறி, மீனுக்ஷியிடம் விடைபெற்றுச் சென்ருன்.

---

## அத்தியாயம் 4.

### நண்பர்கள் சந்தித்தல்.

எதிர்பார்த்தபடி, புறப்பட்டுவந்து சேர்ந்த ராமுவை கேதாரி வெகு சந்தோஷத்துடன் தன்னிருப்பிடத்திற்கு அழைத்துச்சென்றான். தான் நினைத்தது கைகூடாமற் போமாயின், அப்பொழுதுண்டாகும் மனோவேதனை கேதாரிக்கு வேறு ஒன்றிலும் தோன்றுவதில்லை. புருஷனுக்குரிய தன்மை வாய்ந்தவனாயினும், பெண்களுக்கு இயற்கையான குணமும் ஒன்று அவனிடம் விளங்கிற்று. அஃதாவது, எடுத்த காரியம் வீண்போவதைப் பொறுக்காது மனங் கூசுவதே. ராமு சாதாரணமானவன் அல்லன்; அப்படிப்பட்டவனைக்கூடத் தானெழுதிய கடிதம் சும்மாவிடாமல் இங்கு கொண்டுவந்து சேர்க்கும் சக்தி பெற்றதை யெண்ணி, அவனுள்ளம் பெருமையுற்றது. முதன் முதலில், ஒரு நிமிஷம், அவ்விருவரும் ஒருவரையொருவர் கண்ட ஆனந்தத்தில் ஈடுபட்டிருந்தனர். ஆயினும் அது வெகுநாள் பிரியநேருவதற்கு முன், கடைசியாய் ஏற்படும் ஒரு சேர்க்கை போல் தோன்றிற்று. சில நிமிஷங்கள் இருவரும் பேசவில்லை.

"கேதாரி, நேரில் விசாலமான மைதானத்தையுடைய இவ்வறை நன்றாயிருக்கிறது. அவ்வெளியின் நடுவில் ரயில் தண்டவாளம் செல்வதும் ஒரு அழகாகவே தோன்றுகிறது. ஆயினும், மாதம் இருபது ரூபாய் வாடகை நம் அந்தஸ்திற்குச் சற்று அதிகமென்று நினைக்கிறேன்," என்று ராமு தொடங்க,

" அப்பா! தம்பு செட்டித் தெருவில் இவ்வளவு காலம் ஒரு மூக்கோட்டையில் வசித்தது போதாதா? இடம்

மாற்றித்தான் பார்ப்போமே என்று நினைத்தேன். ஆனால் ஏதோ எனக்குப் பணம் அதிகமாய் வந்துவிட்டதென் றெண்ண வேண்டாம். நானிப்பொழுது என் அபிப்பிராயங் களை யெல்லாம் மாற்றி, லௌகிக முறையில் யோசிக்க ஆரம் பித்திருக்கிறேன்,'' என்றான் கேதாரி.

அதற்கொன்றும் ராமு பதிற் கூறாமல் மௌனமா யிருக்கவே, அவன் மறுபடியும், "நாளுக்கு நாள் உலக வாழ்க்கையின் சிரமங்கள் வெளிப்பட, என்மனதில் சில விஷயங்கள் தோன்றுகின்றன. ராமு! ஏழைகள் ஏழை களாகவே ஏனிருக்கிறார்கள்? தனவான்களைப் போலிருக்க முயலாததினாலே யல்லவா? ஒருவன் தன்னைத் தானே உயர்த்திக்கொள்ளாவிட்டால், அவரவர்கள் காரியத்திற்கே ஓய்வொழிவு இல்லாதிருக்கும் இவ்வுலகில், பிறரைப் பற்றி யார் கவலை யெடுத்துக்கொள்வார்கள்? பணக்காரர்களைப் போல முதலிலேயே இருக்கத்தொடங்கிவிட்டால், நாளடை வில் நாமும் செல்வவந்தர்களாகி விடுவோம். நம்மை நாமே தான் பார்த்துக்கொள்ள வேண்டும். இக்கொள்கையை எல்லா விஷயங்களிலும் உபயோகப்படுத்தவேண்டு மென்பது என் எண்ணம்,'' என்றான்.

இப்பொழுதுதான் ராமுவுக்குக் கேதாரி மாதம் இரு பது ரூபாய் குடிக்கூலியுள்ள வீட்டிற்கு மாற்றியதின் உண்மை நன்கு புலப்பட்டது.

"இருந்தாலும்,'' — என்று அவன் ஆக்ஷேபிக்கத் தொடங்குமுன்,

"நீ ஒத்துக் கொள்ள மாட்டாயென்று எனக்குத் தெரியும்,'' என்றான் கேதாரி. "உன்னைப்போல் மனோபாவங் களுடையவர்களாலேயும், அறிவிலிகளான பொதுஜனங்க

ளாலேயும்தான், பணக்காரர்கள் எப்பொழுதும் பணக்காரர் களாகவே யிருக்கிறார்கள். லோகத்தின் இயல்பை யுணர்ந்த வர்கள் சகல சௌக்கியங்களேயும் தாங்களே அடைந்து அனுபவிக்க, அவ்வாறுணராத சாத்துவிகமான மனத்தேர்ச்சி யுடையவர்கள் தாழ்மையையும் அடக்க முடைமையையும் பற்றி உபதேசம் செய்து, உலர்ந்த நெஞ்சையும் நாவையும் நனைப்பதற்குக் கூடச் சிறிது நன்னீர் அகப்படாதவர்களா கிறார்கள். உலகம் எப்படியென்பது எனக்கிப்பொழுது தான்—''

"எப்படி, லா காலேஜிற் சேர்ந்த பிறகா? கேதாரி, நீ நியாயவாதிகளின் தத்துவ ரஹஸ்யத்தை யெடுத்துரைத்து விட்டாய். மற்றும், அங்கு நித்தியம் நடப்பவைகளேப் பற்றிச் சொல்லவில்லேயே!'' என்று ராமு கேட்க,

"அதுவா!'' என்றான் கேதாரி. "லா காலேஜை ஒரு தனி ஸ்வர்க்கமென்றே கூறவேண்டும். துருக்கர்கள் அரண் மனே போன்ற அதன் அமைப்பையும், விசாலமான உள் முற்றத்தையும் நோக்குமிடத்து, ஒரு நவாபினுடைய சிருங் காரத்தோட்டம் போலவே தோன்றுகிறது. அதில் படிக் கும் பையன்களோ, கோலி விளேயாடும் சிறுவர்களுக்குமேல் உற்சாக முள்ளவர்களா யிருக்கின்றனர். எப்பொழுதும் விளேயாட்டே தவிர, படிப்பென்பது ஒரு பொழுதும் கிடையாது. சாஸ்திரிகள் அபிசிரவணம் சொல்வது போல், உபன்யாசகர்களும் தங்கள் பிழைப்பிற்காகப் பிறருக்கு விளங்காமல் தங்களுக்குள்ளேயே எல்லாவற்றையும் சொல் லிக்கொள்ளுகின்றனர். அப்படிக் காது கேட்டாலும், நீ தூங்குவதற்கு அது தாலாட்டுவது போலவே யிருக்கும். கேட்க வேண்டாமென்று தோன்றினல், உன் மனம் போன

படி யிருக்கலாம். அல்லது விஷமத்திற்காகவே பக்கத்திலிருப்பவர்களைக் கிள்ளிக் கொண்டாவது இருப்பதற்குத் தடையொன்றுமில்லை. லா காலேஜில் படிப்பதைக் கல்யாண உற்சவமென்றே சொல்லலாம். ஸ்வாரஸ்யமற்ற நமது காலேஜ் வாழ்க்கையின் இடையில், இந்த இரண்டு வருஷம் சற்றுச்சந்தோஷகரமானதாய் வாய்ப்பது நியாயந்தானே!''

இவ்வேடிக்கையான வர்ணனை ராமுவின் மனதில் சிறிது தைத்தது. ''என்னைப் பற்றி யொரு வார்த்தைகூட இல்லை! எல்லாம் அவனைப்பற்றியே! என் பரீக்ஷை தவறியது, அம்மா இறந்துபோனது, ஊர், ரயிற் பிரயாணம், ஒன்றைப் பற்றியும் உபசாரமான ஒரு கேள்விகூடக் காணோம். தன்னுடன் நானும் லா காலேஜிற் சேர்ந்து படிக்கவில்லையே யென்று வருந்தியதாக வாயாற் சொல்லுவதும் அருமையாய் விட்டதல்லவா? உண்மையாய், கேதாரி முன்போல் இல்லை; சற்று மாறிவிட்டான். இவ்வளவு நாட்களாக இருவரும் கொண்டிருந்த நட்பையும் நானவனுக்காகப் பட்ட கஷ்டங்களையும் அதிருஷ்டமானது மறக்கடித்து விட்டதென்றே நினைக்கிறேன்,'' என்று ராமு தனக்குள்ளேயே கருதலானான். ஆயினும், அவனுடைய பெருந்தன்மை மேலிட, மீளவும், ''ஒருவேளை நான்தான் பொறுமையினால் வேறு விதமாக நினைக்கிறேனோ! கேதாரி எப்பொழுதுமே தன்னைப் பற்றிச் சொல்லிக்கொள்ளும் இயல்புடையவன். பரீக்ஷை தவறியதைக் கேட்டு என்னை வருத்தத்திற்கு உள்ளாக்க ஒருவேளை மனமில்லாதவனாயுமிருக்கலாம். துக்கம் கேட்பதினால், மனதில் அத்துக்கத்தை வற்புறுத்துவதாகின்றதே ஒழிய, அனுதாபம் எங்கே வெளியாகின்றது? இப்படி அவசரப்பட்டு நான் என் நண்பனைத்

தவருக நினைப்பது சரியல்ல,'' என்று மற்றோர்விதமாகச் சிந்திக்கலானான்.

ஆனால், ராமுவின் இருதயத்திலெழுந்த எண்ணங்களை யொன்றும் கேதாரி கவனிக்கவில்லை. அவன் வழக்கம்போல் எதிரில் நிற்பவரை நோக்காது, வெளியே தோன்றும் மைதானத்தையும், ராமேசுவரம் வரையும் விடாது ஓடும் ரயில் தண்டவாளத்தையும் பார்த்துக்கொண்டே பேசலானான். கரிவண்டி, பிரயாணி வண்டிகள் இவை யொன்று மில்லாது, வெகு லகுவாய்ச் செல்லும் ஒரு புகைவண்டியைப்போல, கேதாரியின் மனமும் தனக்குரிய நெறியிலேயே சென்று கொண்டிருந்தது.

"ராமு! உலக வாழ்க்கையில் மேன்மை யடைவதற் கிடையூறாக அவிழ்க்க முடியாத பந்தங்களுண்டு. எண்ணிய கருமத்தைச் செய்துமுடிக்கவல்ல மேலோர்கள் தெரியாமலா அவைகளைக்கூசாமல் அறுத்தெறியும் வழியைக் கைக்கொண்டார்கள்? உலகத்தை யடக்குவதில் கத்தியும் புத்தியும் சமானமானவையே. இக்கருவிகளை மாத்திரம் நல்ல தீர்மானத்துடனும் குன்றாத வலிமையுடனும் பிரயோகிக்கவேண்டும். உதாரணம் வேண்டுமா? ப்ரெஸிடென்ஸி காலேஜ் பாலசுந்தரத்தை உனக்குத்தெரியுமே! உயர்பிறப்பினனென்றும், மேதாவியென்றும், இறுமாப்புடையவனென்றும் அவனை யார்தான் அறியார்? அப்படிப்பட்டவன் இப்பொழுது எனக்கு அடங்கி, என்றும் மாறா விசுவாசமுள்ள ஒரு தோழனாய்விட்டான். ஒருநாள், எதிர்பாராத விதமாய் நான் பிடித்து மாட்டிக்கொண்டதில், அவன் வசியமாகி, இப்பொழுது தானாகவே என்னுடன் கைகோத்துக்கொண்டு பேசக்கிளம்புகிறான். ஒருநாள் உன்னையும் அவனுக்கு இன்னாரெனக்கூறி அறிமுகமாக்கி வைக்கின்றேன்."

"என்ன! லீவுக்குக் கொஞ்சநாள் முன்புதானே ஸ்வய யோக்கியதையற்ற முட்டாளென்று நீ அவனை யிகழ்ந்துகொண்டிருந்தாய்! கேதாரி, நீ மாறியது அதிசயம்தான்."

"அதனலென்ன, ராமு? அப்பொழுது எனக்கவனைத் தெரியாது. அவனுமென்னைத் தெரிந்துகொள்ளவில்லை. ஒருவரையொருவர் அறிந்து கொண்டபின்பும் அவ்வாறிருக்குமா? அப்பொழுது நினைப்பது வேறு விதமாய்த் தானிருக்கும். பழக்கமானது தப்பபிப்பிராயங்கள், அறியாமை இவைகளை நீக்கிவிடுமென்ருே?" என்று கேதாரி சொல்ல,

"எல்லாவற்றிற்கும் அதிருஷ்டம் காரணம்," என்று ராமு தனக்குள்ளேயே முணுமுணுத்துக்கொண்டான். கேட்டுக்கொண்டிருப்பதற்கு அடையாளமாக "உம்" என்று கூடச் சொல்லாமல் அவன் மௌனமாயிருக்க, கேதாரியும் முகத்தை யொரு பக்கமாய்த் திருப்பி வெளியே பார்த்துக் கொண்டு மேன்மேலும் பிரஸங்கம் செய்யலானன். அவ்வாறு நின்ருல்தான் சரியானபடி நன்ருய் யோசிக்கமுடியுமென்று அவன் எண்ணினன் போலும்.

பளபளவென்று தேய்த்த ஒரு பித்தளை ஆணியில் தொங்கிக்கொண்டிருந்த ஒரு விலையுயர்ந்த பட்டு ஷர்ட், கம்பளிச் சட்டை, இவைகளின் மீதே கவனமாக ராமு மௌனமாயிருக்கையில், கேதாரி சிறிது ஆச்சரியமுற்றுத் திரும்பிப் பார்த்தான். உடனே அவனுக்கு யாவும் விளங்கி விட்டது.

"ராமு, நான் இம்மாதிரி பேசுவது உனக்குப் பிடிக்கவில்லையென்று தோன்றுகிறது. நானும் சிறிதுகூட யோசனையில்லாமல் வேடிக்கையாய் என்னென்னவோ பேசத்

தொடங்கிவிட்டேன். இப்பேச்சு உன் மனதை மாற்று மென்று நான் நினைத்தது சரியல்ல. என்னை மன்னிப்பாய். நீ வரும்பொழுது எனக்கும் மனம் ஒருவாறு தளர்ச்சியாயிருந்தது. இருவருக்கும் நல்லதென்றே யெண்ணி, நான் வாய்க்கு வந்தவாறு பிதற்றினேன். சில சமயங்களில் அதிகமாகப் பேசுவதினால், நாம் நெறிதப்பி நண்பர்களுடையவும் அல்லாதவர்களுடையவும் மனஸ்தாபத்திற்குக் காரணமாகிறோம். வா, ஸ்நாநம் செய்யப் போவோம். குழாயில் இங்கு நிறைய ஜலம் வருகிறது. அதனடியி லுட்கார்ந்தால் ஒரு சிறு அருவி கொட்டுவது போலவே தோன்றும். ஸ்நானம் செய்தால் நமக்கும் முன்போல் மனது சரியாகிக் குதூஹல முண்டாகும்.''

---

RM. MUTHIAH
ARTIST
KOTTAIYUR
RAMNAD DIST.

## அத்தியாயம் 5.

### வற்புறுத்தல்.

மறுநாளே ராமு சென்னை கிரிஸ்டியன் காலேஜில் சேர்ந்தான். கேதாரி சஞ்சரிக்கும் உலகமே வேறென்பது அவனுக்கு நன்ருய் விளங்கிவிட்டது. ஆனல் கேதாரியோ, தன் நண்பனுக்குச் சரியாய் தான் எவ்விதம் நடக்க முயன்றும், ராமு அதை அவ்வாறு அங்கீகரிக்க இசையவில்லையென்று கண்டுகொண்டான். அதனல் இருவருக்கும் மனச் சமாதானமற்றுப் போனதுடன், பழையநிலைமையின் நினைவு பின்னுமதிகமாகவே வருத்தத்திற்கு இடமுண்டாக்கிற்று. அவர்கள் ஒரே அறையில் இருந்தது அம்மனஸ்தாபத்தை நன்கு வெளியாகும்படி செய்ய, உலகிலுள்ள எல்லாபாசங்களிலும் மிக்க வுயர்ந்ததான நட்பையும், அதிலுண்டான ஓர் பெரிய மாறுதலையும்பற்றி ராமு தனக்குள்ளேயே சிந்திக்கலானன். பால்யம் தொடங்கி வளர்ந்து வந்த சிநேகத்தை, பரீக்ஷை தேறுவதும் தவறுவதுமாகிய வோர் அற்ப விஷயம் பாதிப்பதா?

ஆயினும் தெய்வமே அந்நட்பைத் துண்டித்தது போல் தோன்ற, கேதாரியும் ராமுவும் அதை முன்போல் ஒற்றுமைப்படுத்த மனப்பூர்வமாய் முயன்றதில் குறைவில்லை. ஆனல் ஈசுவர சம்மதமவ்வாறு இருந்தால் அவர்கள் என்ன செய்வார்கள்? அவர்கள் உள்ளம் மட்டும் தவித்துருகிக் கொண்டிருந்தது. ராமுவுக்கு இனிப் பொறுக்க முடியாது போல் தோன்றிற்று. ஒருநாள் கேதாரி வெளியே போய் வெகுநேரங்கழித்து, வழக்கத்தைவிடப் பின்னும் உத்ஸாகம்

குன்றியவனாய் வீடு திரும்ப, "ஏதோ முன்போல் ஒன்றும் சரியாயில்லை. கேதாரி, நான்கு வருஷகாலமாக ஒரு வேளை கூடப் பிரியாமல் நாமிருவரும் சேர்ந்தே வெளியே போய்க் கொண்டிருந்தோம். இப்பொழுதோ நானிங்கு வந்து இரண்டு வாரமாகியும், உனக்கு ஒரு நாள்கூட என்னோடு வர ஒழியவில்லை. நீ உற்சாகம் குன்றியும் தோன்றுகிறாய். நான் உன்னுடனிருப்பது கஷ்டமாயிருக்கின்றதா? தாராள மாய் வெளியிட்டுச் சொல். என் மனம் சரியாயில்லை," யென்று ராமு உள்ளது உள்ளபடி கேட்டான்.

"எனக்குமப்படித்தா னிருக்கின்றது. ராமு, நீ யென் னைக்கேட்டது எனக்குப் பெரியசந்தோஷம்," என்று கேதாரி வழக்கம்போல், தன் முகத்தை நேரே காட்டாது, ஒரு பக்க மாய்த் திரும்பி வெளியே பார்த்துக்கொண்டு சொல்ல வாரம்பித்தான். "முதல் விஷயம், பல காரணங்களுக்காக நான் உன்னைத் துக்கம் விசாரிக்கவில்லை. உலகில் துக்கங் களும், காரிய நாசமும் நம்மை மேன்மேலும் உயர்த்துவதற் குரிய சாதனங்களென்று, ஆழ்ந்து யோசிக்கும் பொழுது, எனக்கும் புலப்படுகின்றது. என்னதிருஷ்ட மெல்லாம் கட்டாந்தரையில் மண்டிவளரும் புற்பூண்டைப் போன்றதே யொழிய, வேறு அல்ல. இன்று பிரமாதமாயிருந்தாலும், நாளையொன்று மிராது. சுபாவத்திலுள்ள குற்றம் குறைவு களைக் களையாது வளரவிட்டுவிடும். இவ்வரைகுறை யதிருஷ் டம், பரிபக்குவமடையாது தற்பெருமை கொண்ட என் போன்ற இயல்பினருக்கு ஒருக்கால் திருப்தியை யளிக்கலாம். ஆனால், மிகுந்த அடக்கமும், மனவொழுக்கமும் வாய்ந்த உன்னைக்கடவுள் எவ்வுயர்ந்தகாரியத்தின்பொருட்டுப் பிறப் பித்திருக்கின்றாரோ! இவ்வளவு பொறுமை, தயை, பெருந் தன்மை ஆகிய இவைகள் குடிகொண்டவனான நீ, உலகோர்

கொண்டாடும் ஓர் உயர்வைப் பெறுவிட்டால், அவ்வுயர் வெல்லாம் வாஸ்தவமான யோக்கியதைக்கு ஏற்றதல்ல வென்றுதான் கூறவேண்டும். உன்னை யெப்பொழுதாவது நான் குறைவாக மதித்துப் பரிஹஸிக்கக் கூடுமோ? அல்லது ஒரு மூத்த சகோதரனுக பாவிப்பதைத்தான் ஒழித்துவிட முடியுமோ? நான் எவ்வளவு யோசனையற்று விளையாட்டா யிருந்த போதிலும், ஒருகாலும் நீ யென்னை வேறுக நினைக்கவேண்டாமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். நண் பர்களுக்குள்ள அபிமானத்தை எடுத்துரைத்தல் முடியாது. இருந்தாலும் நீ சந்தேகப்படுவதினுல், மறுபடியும் நான் எனது உண்மையான விசுவாசத்தையும் அன்பையும் வற்புறுத்துகிறேன். நீ யெனக் கெவ்வளவோ சிரமப்பட் டிருக்கிருய். ராமு, நீ யாவரையும் போலல்லன். மேலானவர் களினத்திற் சேர்ந்தவன். நண்பர்கள் உண்மையாயிராமற் போனுலும், உலகம் உன்னை கௌரவப்படுத்தா விட்டாலும் நீ ஏன் அதனைப் பெரிதாய் நினைக்க வேண்டும்?''

கேதாரியின் கண்களில் நீர் ததும்பிற்று. ஆயினும் முகத்தைத் திருப்பாமலே, அவன் இருப்புப்பாதை வழியே, ஒரு மினுமினுப்பூச்சியைப்போல், ராமேசுவரத்தை நோக்கி அதிவேகமாய்ச் செல்லும் ஸிலோன் போட் மெயிலைப் பார்த்தவண்ணமாய் நின்றுன்.

தன் நண்பன் இவ்வளவு தூரம் பேசவே, ராமுவுக்கும் மிகுந்த வருத்த முண்டாய்விட்டது. "கேதாரி, நான் மன வுறுதி யற்றவன். உன்னைப் பார்த்துப் பொறுமையுற்றிருந் தேன். என்மேலிரங்கி, என் சந்தேகங்களை மன்னித்து விடு,'' என, கேதாரி காதிற் படாதவன் போல், ரயில் கண் ணுக்கு மறையுமளவும் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு,

பிறகு தலையை யசைத்துக் கொண்டே, "மாலை நேரங்களில் நான் உன்னையும் என்னுடன் ஏனழைத்துப் போவதில்லையென்று கேட்டாயல்லவா? நாளை என்னுடன் வா. யாவும் தெரிந்து கொள்வாய்," என்றான்.

---

## அத்தியாயம் 6.

### விவாகம் தேய்வ சங்கல்பம்.

முத்து முதலித் தெரு 15-வது நம்பர் வீட்டில், ஜானகி பனிக்காலத்தில் விடியற்காலை மலரும்ரோஜா புஷ்பம் போன்று விளங்கினுள். எதையும் பார்ப்பதிலும் கவனிப் பதிலும் இயற்கையாகவே குதூஹல முள்ளவளாதலால், உள்ளே யிருப்பதைக்காட்டிலும் வாயிற்பக்கம் வந்து நிற்ப திற்ருன் அவளுக்கு அதிக விருப்ப மிருந்தது. எப்பொழு தும் திண்ணைத் தூண்மீது சுகமாய்ச் சாய்ந்து, தாமரை யிதழ் போன்ற விழிகளுடன் அங்குமிங்கும் நோக்கிக் கொண்டே நின்று கொண்டிருப்பாள். அவளுக்கு வயது பதினுன்கு நிறைந்து பதினைந்தாவது நடந்து கொண்டிருந் தது. இக்காலம்தான் பிராம்மணப் பெண்ணுக்கு மாசற்ற இளமையும் அழகும் பொருந்திய பருவமாயுள்ளது. ஆனுல், நாளுக்குநாள் வளர்ந்து பருவமடைந்து வரும் ஜானகி, அத் தாழ்மையான விடத்தில் குப்பையில் ஒளிரும் மாணிக்கம் போல் தான் அதிசௌந்தரியத்துடன் சோபிப்பதைச் சற்றும் உணர்ந்திலள். எளியவர்களும் பணக்காரர்களுமா கிய பல ஜனங்கள் கடைவீதிக்குப் போவதும் வருவதுமா யிருப்பதை ஒவ்வொருநாளும் நின்று பார்த்துக்கொண் டிருப்பதில் அவளுக்கு மிகுந்த பிரியம். ஒவ்வொரு ஸமயம் தந்தையைப் பற்றி நினைப்பதுண்டாயினும், இப்பொழுது சில நாட்களாக அகத்திற்கு வந்து போய்க்கொண்டி ருந்த கேதாரியைப் பற்றி யதிகம் நினைக்கலானுள். விவாக மென்ருல் என்னவென்பதை அவளின்னும் தெளிவாய்

அறிந்து கொள்ளவில்லை. ஆயினும் ஐந்து வயதான ஒரு பெண்குழந்தைக்குப் புதிதாய்த் தைத்த பாவாடை அவசிய மாயிருப்பதுடன், அதை அக்குழந்தை கண்டு எவ்வாறு ஆசை கொள்ளுமோ, அவ்வண்ணமே தனக்கு மிவ்வருஷம் கல்யாணம் நிச்சயமாய் நடந்தே தீருமென்பதை நினைக்கும் பொழுது அவளுக்கு மிகவும் சந்தோஷமாகவே யிருந்தது.

ஒருநாள் சாயங்காலம்,——அன்று வழக்கத்தைவிட அதிக தாபமாயிருந்தது. ஜானகி யெப்பொழுதும் போல் திண்ணைத் தூணிற் சாய்ந்து போவோர் வருவோரைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தாள். கேதாரி யங்கு முந்திய நாள்தான் வந்திருந்தான். போகும்பொழுது அடுத்தவாரம் வருவதாய்ச் சொல்லிச் சென்றதால், அவன் அன்று வரு வானென்று அவளெதிர் பார்க்கவில்லை. அப்படியிருக்க, இப்பொழுது அவன் ஏதோ புன்சிரிப்புக்குறியுடன், அவளை நோக்கிக்கொண்டே உள்ளேவர, அவனைப் பின்பற்றி மற்றொரு சிநேகிதனும் வருவதைக் கண்டாள். ஒரு க்ஷணம் அவ்விருவர் கண்களும் சந்தித்தன.

நாணத்தால் ஜானகி தயங்கி நிற்க, அது ராமுவைக் கண்டதனாலென்று கேதாரி நினைத்தான். ஆனால் தாயார் அகத்திலில்லாததினாலும், அவளில்லா திருக்கும்பொழுது இப்போதுதான் முதன் முதல் கேதாரி யங்கு வர நேரிட்ட தாலும், ஜானகி யொன்றும் செய்யத் தெரியாமல் விழித் தாள். மேலும், கூடவந்த ராமு மற்றெவரையும் போலல் லாமலிருந்ததுடன், அவனைப் பார்க்க அவள் மனதில் பல எண்ணங்கள் தோன்ற வாரம்பித்தன. இவ்வளவு வருஷங் களாக வாயிலில் நின்று, போகும் நானாவித ஜனங்களை எவ் வளவோ ஆவலுடன் அவள் கவனித்து வந்திருந்த போதி

லும், அபூர்வமான தெய்வத்தன்மை பொலியும் அம்முகத்தைப் போல், வேறெங்கும் அவள் கண்டதில்லை.

அவள் மனக்கலக்கத்தை மாற்ற விரும்பாத கேதாரி, "ஜானகி, நான் உங்களிடம் பல வேளைகளில் என் நண்பன் ராமு வென்பவனைப் பற்றிப் பேசியிருக்கிறே னல்லவா? அவன் இவன்தான். இச்சென்னையில் இவனைப்போல் அரிய குணமுடையவர் ஒருவருமில்லை," யென, ஜானகி ராமு இருவரும் வெட்கத்தினால் முகம் சிவந்தார்கள். அவர்களைப் பார்க்கக் கேதாரிக்கு ஆனந்தம் பொங்கியது. ஜானகி தயங்கிப் பேசாமலே யிருப்பதின் காரணத்தை யறிந்து, "ஜானகி, அத்தை யெங்கே,—உள்ளே யில்லையா?" யென்று கேட்க,

"நேற்றுத்தான் நீங்களிங்கு வந்து போனதால், இன்றும் வருவீர்களென்று நாங்கள் எண்ணவில்லை. அம்மா அடுத்த தெருவில் ஒரு வீட்டிற்குப் போயிருக்கிறாள். வருவதற்கு எட்டுமணி யானாலுமாகலாம்," என்றாள் ஜானகி மெதுவாய்.

"எங்கே, சுப்பு வகத்திற்கா?"

"ஆம். நீங்கள் சற்று நேரம் தாமதிப்பதா யிருந்தால், நான் போய் ஒரு நிமிஷத்தில் அவளை யழைத்துக்கொண்டு வந்து விடுகிறேன்," என்று ஜானகி ராமுவை நோக்கிக்கூற,—நினைத்ததை உடனே செய்பவனன்றோ கேதாரி!—"இல்லை, ஜானகி, அது சரியல்ல. நீ யிங்குதானே சற்று இரு. ராமு, ஜானகி உனக்கு காபி போட்டுக் கொண்டுவந்து கொடுத்துப் பேசிக்கொண்டிருப்பாள். உனக்குச் சரியாய்ப் பேசக் கூடியவள்தான். எனக்குச் சுப்புவின் வீடு தெரியும். ஒருவாய்க்காபி சாப்பிடுவதற்கு முன், இதோ ஒருநிமிஷத்தில் மீனாக்ஷியம்மாளை யழைத்துக் கொண்டு வந்துவிடுகிறேன்,"

என்று மானைப் போல் துள்ளிக் குதித்தெழுந்து வெளிச் சென்றான். கனவு காண்பவன் போலுட்கார்ந்திருக்கும் ராமுவையும், தனக்கிருந்த கலவரத்தில் ஒன்றும் தோன்றா மல் நிற்கும் ஜானகியையும் பார்க்க அவனுக்கடங்காத குதூ ஹல முண்டாயிற்று.

ஆயினும், தான் கூறியது போல், கேதாரி ஒரு நிமிஷத் தில் மீனாக்ஷியுடன் திரும்பவில்லை. கடைத்தெருவில் சர்க் கரை யென்ன விலையென்றும், மூட்டையாய் வாங்கினால் கற்கண்டு விலை யென்னவென்றும் கேட்டுக்கொண்டு, அவன் வேண்டுமென்றே அரைமணி நேரமாக்கினான். எதிலும் எளிதில் மயங்காத அவன் மனதும் அக்காதலர்களைக் காணச் சிறிது இளகிற்று. இம்மாதிரியான அரிய சமயங் களில், தனது நிதான குணத்தைக் கொஞ்சம் மாற்றி, இயற் கையான மன வெழுச்சிகளுக்கு இடங்கொடுப்பது பிசகல்ல வென்று கேதாரி கருதலானான்.

ஆனால் அவ்வரைமணி நேரமும் ஜானகியும் ராமுவும் வாய்திறக்கவே யில்லை. இருவரும் பேச எவ்வளவு முயன் றும் ஒரு வார்த்தையேனும் வெளிக்கிளம்பாமற் போய் விட்டது. கேதாரி ஜாடையாய் உணர்த்தியபடி கொஞ்சம் தீர்த்தமாயினும் கேட்கலாமென ராமு நினைத்தானாயி னும், கடைசியில் அவன் வாய்திறந்து கேட்கவே யில்லை. ஜானகியும் காபி கொண்டுவந்து கொடுத்து வந்தவரை யுபசரிக்க வேண்டுமென்று விரும்பியதுண்மையே; ஆயினும் அவளுமப்படிச் செய்யவில்லை. இருவரும் ஒருவரையொரு வர் மனமாறப் பார்த்தும் பாராதவர்களாய், கண்ணாறக் கண்டு களித்தும் களிப்பெய்தாதவர்களாய், தந்நிலை விட்டுப் பெயர்ந்தவர்களாயினர். ராமுவின் தேக முழுவதும் ஏதோ ஓர் உணர்ச்சி பரவி அவனைப் பரவச மாக்க, அவனுள்

ளுணர்வினுல் ஐம்புலன்களும் முன்னிலும் கூர்மையாயிருப் பதுபோல் தோன்றின. ஜானகியின் சுவாசமானது புஷ்பப் பந்தலினின்றும் வாசனை வீசிக்கொண்டு வரும் மெல்லிய காற்றுப் போல் தன் மேற் படுவதாகத்தோன்ற, அவன் இருதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. அவ ளது ஆடை அவள் சரீரத்தினழகையும் அமைப்பையும் இன்னும் நன்ருயெடுத்துக் காட்டும் ஒரு வியாஜமாகவே விளங்கவும், எங்கும் மணம் கமழும் நறுபுகை சூழ்ந்தது போல் தோன்றலாயிற்று. சூரியன் நன்ரு யுதிப்பதற்கு முன், மலர்ந்தும் மலராததுமான தாமரையைப் போல், ஜானகியின் கண்கள் இமைதாழ்ந்திருப்பினும், அவள் நாவு உலர்ந்து பேச எழாம லிருந்தும், அச்சமயம் ஒவ்வொன் றும் வாய்திறந்து கூறியது போலவே அவள் மனே நிலை மையை நன்குணர்த்தியது.

இப்புதிய அனுபவமும் அறிவும் நிறைந்த, ஒரு சந் தோஷப் பெருக்கினுல் இருவருக்கும் தேகம் வியர்த்தது. தான் நெடுநாளாய்க் கனவிற் கண்ட ஜோதி வடிவமானது, இருட்டறையில் பளீரென்று பிரகாசிக்கும் விளக்குப்போல், தன்முன் தோன்றுவதாக ராமு நினைக்கலானுன். கல்வி யறிவு, நற்பிறப்பு, மேன்மை யிவைகள் உருக்கொண்டாற் போலும், தன்னுடைய இயற்கை குணங்களே வெளியில் ஆண் வடிவமாகித் தோன்றுகின்றனவோ வென ஜானகியின் சிறு வுள்ளமும் மயங்கிற்று. பனி மூடிய ஒரே மலையுச்சியி னின்றும் உற்பத்தியாகும் கங்கை, யமுனை இவ்விரு நதி களோ, அல்லது, சந்தனம், தேவதாரு முதலிய விருக்ஷங்க ளடர்ந்த மலைத் தொடர்களினின்றும் ஒன்ருய்ப் பெருகும் காவேரி, பவானி நதிகளோ,—இவை மலையுச்சியிலும், தாழ் வரைகளிலும் தாம் விளையாடிய பால பருவம் நீங்கி, கீழே

வந்து மீண்டும் தவருமல் ஒன்றுசேர்வது போல், ஒன்ருே டொன்று இசைந்து, வற்ருத பெருகிய அவ்விருவருடைய ஆனந்த வெள்ளமும் மறுபடியும் தாமே ஒன்றை யொன்று கூடியது போலிருந்தது. இவர்தான் எனது தலைவரோ, இவள்தான் எனது துணைவியோ, யென்று பலவாறு சந் தேகங்கள் தோன்ற, அவ்விருவரும் தங்களுக்குள்ளேயே சிந்தையி லாழ்ந்தார்கள். அவர்கள் கண்டு கொண்டிருந்த இவ்வினிய கனவை மீனாக்ஷி வேகமாய் வந்து கலைப்பதற் குள், இறக்கும் பொழுது தாயார் விரும்பியதை யெடுத்துக் கூறி முருகன் கேட்டுக் கொண்டதற்கெல்லாம் மாருக, அவ் விருவருக்கும் கடவுள் கட்டளைப்படி விவாகம் நிச்சயமாய் விட்டது.

---

## அத்தியாயம் 7.

### கனவு நிலே.

"அன்புள்ள கேதாரி, எனக் கிசைந்த பெண்மணியை யளித்தாயே. இதிலும் சிறந்த தானம் உலகிலுண்டோ?" என்று ராமு பிரியத்துடன் மனப்பூர்வமாய்க் கூற,

"அன்பார்ந்த ராமு, நீ யெனக்குச் செய்திருக்கும் அனேக உபகாரங்களில் ஒன்றிற்குத்தான் நான் பிரதி செய்ததாகுமே யொழிய, வேறல்ல. ஜானகியை நானுனக்கு அளித்தது போல், நீயும் எனக்கு கோகிலத்தை யளித்திருக்கிருயன்ருே? நீ உன் முழுமனதுடன், அவ்வாறு விடாமல் வற்புறுத்திக், கட்டளை யிடுவது போல் கூருவிடில், சென்ற வருஷம் ஒருகாலும் நான் கோகிலத்தை விவாகம் செய்து கொண்டிருக்க மாட்டேன்," என்ருன் கேதாரி.

"உண்மையே. அவர்களிருவரையும் ஒப்பிட்டுப் பேச எனக்குச் சம்மதமில்லே. இருவரும் இரண்டு அழகிய மலர்கள் போன்று விளங்குகின்ருர்கள். வீணுடம்பரச் செலவு களொன்று மில்லாமல், கல்யாணம் வெகு சாதாரணமாய் நடந்தேறியதைப்பற்றி எனக்குத் திருப்திதான்."

"மேலும், திருப்பதியில் ஏழு மலேப் பெருமாள் சந்நிதியில், நியமம் குறையாது உண்மையான மணம் நடந்திருக்கிறது. கடவுள் எல்லோரையு மாசீர்வதிக்க வேண்டும்," என்ருன் கேதாரி.

"ஜானகியைத் தன் மருமகளாக வீட்டிலழைத்துப் பார்க்க அம்மா இப்பொழுதில்லேயே! இருந்தால் அவளாக்ஷேபிக்க முடியாதபடி நான் சமாதானங்கள் கூறியிருப்

பேன்,'' என்று ராமு வருத்தத்தோடு உரைத்தான். "ஆயி னும் அவ்வளவு அரியதான பாக்கியத்தை யடைவதற்குத் தகுந்த பரிசுத்த நிலையை நாம் பெற்றிருக்க வேண்டாமா? பரிபூர்ணமான ஆனந்தத்தைக் கொடுக்கும் அருளுக்கு உல கில் எவனும் அருகனல்லன். ஆஹா, இப்பொழுது என் அன்னை உயிருடனிருந்தால், எனது ஆனந்தமும் எவ்வளவு பூர்ணமாயிருக்கும்!''

"இப்பொழுதும் அவள் உன்னை மனதார ஆசீர்வதிப் பதிலொன்றும் குறைவிருக்காது. மகன் மணந்த மனைவியை வீட்டில் சந்தோஷமாய் வரவேற்காத தாய் நமது தேசத் தில் எப்போது மிருந்ததில்லை. தெய்வானுக்கிரகத்தாலன்றி உனது விவாகமும் நடக்கவில்லை. ஆயினும் ஜானகியைப் பற்றி யார் ஆக்ஷேபிக்க முடியும்?''

இதற்கொன்றும் பதிலுரைக்காமல் ஏதோ யோசனையி லாழ்ந்திருந்த ராமு, ஒரு நிமிஷம் பொறுத்துத் தன் நெற்றி யில் தோன்றிய வியர்வையைத் துடைத்துக் கொண்டே, "கேதாரி, நமது ஜீவனோபாயத்தை நாமே தேடிக்கொள்வ தற்குரிய வயது வந்தவர்களாகியும் நம்மிருவர் கையிலும் பணமில்லை. அந்தோ, மனதிற்குத் தோன்றிய வாறெல்லாம் அசட்டெண்ணங்களைக் கொண்டு நிலத்து வரும்படியை நான் எவ்வளவு அழித்தேன்! சிறிது சேர்த்து வைத்திருந் தால் நாமிருவரும் சௌகரியமாய் நம் கலாசாலைப் படிப்பு முழுமையும் தடங்கலன்றியில் முடிக்கலாமன்றோ? ஆனால் தெய்வாதீனம்! என் கல்யாணத்திற்குக் கொடுத்த பணம் ஆயிரமும் அப்படியே யிருக்கிறது. அதைக் கொண்டு இவ் வருஷப் படிப்பைத் தள்ளிவிடலாம்,'' என்றான். சற்றுப் பொறுத்து, மறுபடியும், "அடுத்த வருஷம் ஜானகி யும் கோகிலமும் நம்முடன் இங்கு வந்திருப்பார்கள்.

நாமெல்லோரும் ஒன்றாயிருந்து, துக்கம் மிகுந்த இவ்வுலகி லும், இல்லறத்தால் வரு மின்பமிப்படி யென்பதைக் காட்டு வோம். இப்போதிய நமது கொள்கைகளையும் எண்ணங் களையும் இல்லற வாழ்க்கையானது இன்னும் நன்றாய் விளக் கிக் காட்டுவதல்லாமல், நம் பழைய நட்பினின்றும் நம்மைப் பெயர்க்காது, அதை மேன்மேலும் சிறப்புற்றோங்குமாறு செய்யட்டும். அவ்வண்ணமே, என்றும் பசுமையாய், வாசனை பொருந்திய இரு ஸம்பங்கிக் கொடிகளென, ஜானகியும் கோகிலமும் ஒன்றாய் வளர்ந்து, ஒரே கொத்திற் பூத்துப் பொன்னிறமாய் விளங்கும் சம்பக மலர்களோவென ஐயுறும் படியாய் இருக்கட்டும்,'' என்று உரைத்து மீண்டும் கீழ் நோக்கிய பார்வையுடன்,

"அன்பார்ந்த கேதாரி, அந்த ஆயிரம் ரூபாயில், இதோ ஒரு ஐந்நூறு ரூபாயிருக்கிறது. அதை வருஷம் முழுவதும் உன் செலவிற்காக, அப்படியே யெடுத்துக்கொள். சில்லரைச் செலவிற்கெல்லாம் இனி என் அபிப்பிராயத்தை யும் அனுமதியையும் நீ யெதிர்பார்க்க வேண்டியதில்லை,'' யென, அவன் கூறிய ஒவ்வொருவார்த்தைக்கும் பூர்ணநன்றி யுடன் மேன்மேலும் உள்ளங் கனிய, கேதாரி தன் நண்பனை நோக்கி நின்றான். ஒரு வலைப்பை நிறைய ரூபாய்களைத் தன் முன் காண அவனுக்குத் தன் கண்களையே நம்பமுடியவில்லை.

"கேதாரி, அடுத்த வருஷத்திற்குள் நீ சம்பாதிக்கத் தொடங்கி விடுவாய். அது வரையும் முருகன் நம்மிருவரை யும் பார்த்துக் கொள்வான்.''

"பிறகு என் உயிருள்ள மட்டும் உனக்கும் சேர்த்து நான் சம்பாதிப்பேன். அன்பார்ந்த ராமு, என் மனோ நிலையை யெடுத்துக் கூறுவது ஸமுத்திர ஜலத்தைக் கரண்டியா

லளப்பதுபோலவேயாகும். இவ்வுலகில் ஒருவரும்—ஏன்?—என் தந்தையை யெனக்கு ஞாபகமில்லாமற் போனாலும், அவர்கூட உன்னைப்போல் எனக்கிவ்வளவு செய்வாரென்று தோன்றவில்லை,'' யென்று கேதாரி சொல்லவும், இவ்வளவு, நாட்களாய்த் தான் செய்யவேண்டுமென்று எண்ணியிருந்த ஓர் எச்சரிக்கைக்கு இதுதான் தகுந்த சமயமென நினைத்து, ராமு, "கேதாரி, எப்படியும் வயதில் நானுனக்கு மூத்தவன். உன் நிலைமையை மீறிச் செலவிடுவது ஸரியல்லவென்று உன் தமயனைப் போல் நானெடுத்துக் கூறுவதைப் பொறுத்துக் கொள். அதிருஷ்டத்தைக் கண்டு இறுமாப்புற்று நீ நிலை தவறலாகாது. அதிருஷ்டமும் மதுவைப் போல் மயக்கத்தையே தரும். நான் பொறாமையினாற் கூறவில்லை. ஆயினும் எவ்வளவு நிதானமுள்ளவர்களும் அம்மோகத்தினின்றும் மீளுவது அசாத்தியம். அன்புள்ள தோழா, தைரியம், உத்ஸாஹம், புத்தி, சாதுர்யம் இவைகள் மட்டுமன்றி, அதிக வினயமும் குடிகொண்டு நீ விளங்கி, உலகிற்கோர் உதாரணமாக இருக்கவேண்டும். புருஷனாகப் பிறந்தால் எவ்வாறு சிறந்து விளங்கவேண்டு மென்பதை நீதான் விளக்கிக்காட்டக் கூடியவனாகத் தோன்றுகிறாய்,'' என்றான்.

"ராமு, நீ சொல்வது யாவும் உண்மையே. ஒவ்வொரு சமயம் எனக்கும் இவ்வாறெல்லாம் தோன்றாமலிருக்கவில்லை. நீ எச்சரித்தது, வாஸ்தவமாய், எனக்கு ஸந்தோஷம் தான். ஆயினும் நீ வர்ணிக்கும் குணங்கள் ஒன்றுக்கொன்று பொருந்தாமலல்லவோ இருக்கின்றன!''

"அப்படி ஒரு நாளுமில்லை, கேதாரி. மேலாக பார்ப்பவர்களுக்கு அப்படித்தான் தோன்றுமாயினும், நிசமான வீரமும் வினயமும் சேர்ந்தே பிரகாசிக்கும். பெருந்தன்மையும் வணக்கமும் ஒன்றை விட்டொன்று எந்நாளும்

பிரியாதவை. இவைகள் பரஸ்பரம் எடுத்துக்காட்டக் கூடியவேயாம்.''

"அன்புள்ள ராமு, லா காலேஜைப் பற்றிச் சிறிதும் அறியாததால் நீ இவ்வாறு பேசுகிறாய். ஒரு மகாநதியை நோக்கிச் செல்லும் சிறு உபநதியோடன்றோ அதை ஒப்பிடு கின்றார்கள்! நீ கூறுவது போல், பீ. ஏ. படிப்பே, நம் தேசத்திலென்றுங் கொண்டாடப்பட்டுவரும் மேன்மை யான பாவனைகளுக்கு முற்றும் விரோதமாய், குற்றங்களையே வளரச் செய்கின்றதென்றால், நம் சட்டப் படிப்பானது இவ்வுலகிற் பெரும் பொய்களை இன்னும் மேன்மேலும் செழிக்கச் செய்கிறதென்றே கூறவேண்டும். நீயு மதிற் சேர் ந்து படிக்கவில்லையே யென்று எனக்கு எவ்வளவோ வருத்த மாயிருக்கின்றது. ஏனெனில் அதன் வெளிவேஷத்திலும் படாடோபத்திலும் நீயும் அகப்படாமலிருக்க முடியாது. வியாபார முறையிலேயே அங்குள்ள வியவகாரங்கள் நடை பெறுகின்றன. அங்கு சென்றதும் உனது அபிப்பிராயங் களே மாறிவிடும். கல்விப்பயிற்சி அறிவின் பொருட்டில் லாமல், செல்வம் அடைவதற் கொருவழி யெனவே அங்கு கருதப்படுகின்றது. வியாபாரத்திற்கும் வித்தைக்கும் நெடுந் தூரமன்றோ! ஆயினும் நீ யெச்சரித்தது எனக்கு மிகவும் நன்மையே. உன் ஒத்தாசையால் எவ்வித சபலத்திற்கும் இடங் கொடாமலிருக்க முயலுவேன்.'' இவ்வாறு சொல்லி, மிகவும் அன்புடனும் ஆர்வத்துடனும் கேதாரி ராமுவின் கையைப் பற்றிய விதமானது அவ்விருவர் நட்பிற்கும் சந் தோஷத்திற்கும் இனி யொருநாளும் குறைவில்லை யென் பதை அறிவிப்பதாயிருந்தது. அவர்கள் மீண்டும் முன் போல் இணைபிரியாத நண்பர்களாயினர். ஆயினும் இவ் வாறு வெகு நேரம் பேசியிருந்து, அவர்கள் படுக்கச் சென்ற

No. 1979.



பொழுது, தானும் கேதாரியுடன் எப். எல். வகுப்பிற் சேர்ந்து படித்துக்கொண்டிருந்தால் எவ்வளவு சந்தோஷமாயிருக்குமென்று நினைத்து, ராமு வருந்தாமலிருக்க முடியவில்லை. அவன் இருதயத்தினுள் இத்துயரம் உறுத்திக் கொண்டிருந்தது. "புத்தியும், உற்சாஹமும் வாய்ந்த, கள்ளம் கபடற்ற சிறுவர்களுள் தேறியவனென்றும், தேருதவனென்றும் ஓர் நுட்பமான ஜாதி வித்தியாசம் தோன்றச் செய்வதற்கு இப்பாழும் ஸர்வகலாசாலையன்ரே காரணம்?" என்று அரைத்தூக்கத்திலிருந்தவாறே அவன் வாய் விட்டுக் கூறியதும், திடுக்கிட்டு எழுந்து நன்ருய் விழித்துக் கொண்டு, பொருமையினு லுண்டான இந்நினைவுகளை மனதை விட்டு அறவே ஒழிக்கலானுன். பிறகு நன்ருய்த் தூங்கிக்கொண்டிருந்த கேதாரியைப் பார்த்து, யோசிப்பதை விட்டுத், தானும் தூங்க முயன்ருன்.

---

## அத்தியாயம் 8.

### மாசுற்ற வாழ்வு

தன் எஜமானனுக்கு விவாகமானதைப் பற்றி யொன்று மறியாது, அலவந்தியில் நெற்றிவியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டுழைத்துக்கொண்டிருந்த முருகன், நெல் விற்றதும் தவறாமல் பணத்தையனுப்பிவந்தான். பரீக்ஷை முடிந்து ராமு எப்பொழுது வருவானென்று எதிர்பார்த்து அலுத்துப் போயிருந்தும், எசமான் வந்ததும் கலியாணம் நடக்குமென்பதை நினைத்து அடங்காக் களிப்படைந்தான். சற்றேறக்குறைய ஐம்பது வருஷகாலமாய் அக்குடும்பத்தில் இம்மாதிரி விசேஷ மொன்றும் நடக்கவில்லை யாதலால், முருகன் தனக்கிருந்த சந்தோஷத்தில், அனாவசியமாய் விவாக முகூர்த்தம் தள்ளிப்போக வேண்டாமென்று, ராமுவின் தாய் பார்த்து வைத்திருந்த பெண்ணின் பெற்றோரிடம் தானே சென்று பேசி ஏற்பாடு செய்யலானான்.

சொந்த ஊர் வேறொன்று மில்லாமையால், ஜானகியும் மீனாக்ஷியும் சென்னையிலேயே வசித்து வந்தார்கள். கேதாரியின் மனைவி கோகிலமோ, மதுரை ஜில்லாவில் போக்கு வரவிற்கு வசதியற்ற ஓர் சிற்றூரில் தன் பிறந்தகத்தி லிருந்து கொண்டிருந்தாள். அங்கு அவள் தந்தை ஜோதிஷத்தில் நன்கு தேர்ச்சிபெற்ற ஒரு ஸம்ஸ்கிருத பண்டிதர்.

சனிக்கிழமை தோறும் மாலையில் ராமுவும் கேதாரியும் மீனாக்ஷியினிருப்பிடத்திற்குச் செல்வார்கள். கேதாரியின் புத்திசாதுர்யத்தின் முன்பு ராமுவின் உயர்குணமும் அடக்கமும் நன்கு எடுபடவில்லை. அநேகமாய் அவன் மற்றவர்கள்

பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டுக்கொண்டிருப்பானே யொழிய, தான் அதிகமாய்ப் பேசமாட்டான். ஆனால் கேதாரியோ இதற்கு நேர் விரோதமாக எப்பொழுதும் தானே பேசத்தொடங்கி விடுவான். ஆகவே ஏதாவது வாக்குவாதம் நேரும்பொழுது, அவனே அவர்கள் மத்தியிற் சிறந்து விளங்கினனென்பதை நாம் கூறவேண்டுமோ? மீனாக்ஷிக்கு அவனிடத்தில் மதிப்பு அதிகமாயிருந்தது. ராமு நல்ல பையன்; ஆனால் அவனை விட கேதாரிதான் நன்றாய் முன்னுக்கு வரக் கூடியவனென்று அவள் தீர்மானமாய்க் கருதினாள். உயர்பதவியிற் பேராசையும் தளரா ஊக்கமும் துணிவும் கேதாரியிடம் அமைந்திருக்க, ராமுவோ இனிய நன்னடக்கை, மன ஒழிவு, நற்குடிப்பிறப்பு முதலியன மேலிட்டு விளங்கினான். மாமியான மீனாக்ஷிக்கு மருமகன் மேலந்தஸ்திற்கு வரவேண்டு மென்ற பேரவாவும், ஸ்திரீ ஸ்வபாவத்திற் குரிய நுண்ணறிவும் பூர்ணமாயிருந்தன. ஆகவே, பரம ஸாத்விகனாய் இருப்பதுதான் புருஷார்த்த மென்று நினைத்தா லொழிய, நான், நீ யென்று மேல் விழும் இவ்வுலகில் காலக்கிரமத்தில் யார் முன்னுக்கு வருவார்க ளென்பதை அவள் நன்றாய்க் கண்டுகொண்டாள்.

ஜானகியோவெனில், தன் கணவனுடைய ஸ்வபாவமும், தன் ஸ்வபாவமும் ஒன்றென்பதை யறிந்தவளாய், அவன் குணங்களை வியந்து அவைகளுக்காகவே அவனை இன்னுமதிகமாய் நேசித்தன ளெனினும், ஒரு ராஜபுத்திர வீரன் தன் குதிரையை யடக்கியாண்டு செல்லும் விதம், தன் சொல்வன்மையை இஷ்டம் போற் செலுத்தி, தைரியமாய் எவ்விஷயத்தையும் பற்றி உத்தண்டமாய்ப் பேசும் திறமைவாய்ந்த கேதாரியைக் கண்டு அவளும் அதிசயிக்காமலிருக்க முடியவில்லை. அனைவரும் அவன் முகத்தையே

நோக்க, கேதாரியே சம்பாஷணையில் முதல்வனாயிருந்தான். கணவனிடத்திலுள்ள நிஜபக்தியையும் மீறி அவன்மேல் ஜானகிக்கும் மிகுந்த பிரிய மேற்பட்டது.

ரோஷ முள்ளவனென்றாலும் ராமு நியாயம் உணர்ந்தவன். ஜானகி, மீனாக்ஷி இவர்களுக்குச் சரியாய் அவனும் தன் நண்பனை வியந்து கொண்டாடுபவன்தான். அதை அவனே வாய் விட்டுக் கூறி, கேதாரியைப் புகழ்வது கூடவுண்டு. ஆயினும், எவ்விதமாகவோ மீனாக்ஷி, ஜானகி யிவர்களெதிரில் கேதாரி தன் குணங்களை வெளியிட்டுப் பெருமையடைவதைக் காண அருவருப்புற்று, அவன் மனவமைதி சிறிது கலைந்தது. சனிக்கிழமை மாலைதோறும் ஜானகியினகத்தில், அவள் எதிரேயிருக்கும் பொழுதாவது, அவன் திறமை இவ்வளவு பிரகாசியாமலிருந்தால் நலமென்று விரும்பலானான். ஆனால் கேதாரியினுடைய சாதுர்யமோ மீனாக்ஷியையும் ஜானகியையும் காணும் பொழுதுதான் வழக்கத்தை விட அதிகமாய்ச் சோபிப்பதாயிருந்தது. அப்பொழுது ஒரு புதிய உணர்ச்சி தன் தேகமுழுவதும் பரவுவதுபோல் தோன்ற, அவன் ஆவேசம் கொண்டவன் போல் பேசக்கிளம்புவான். ராமு என்ன செய்வான்? தன் நண்பன் விஷயத்தில் தான் சங்கைப்படுவது சரியல்லவென்று பட்டாலும், அவ்வெண்ணத்தை ஒதுக்கிவிட்டு, ஏதாவது முகாந்தரங்கள் கூறி, ஜானகியின் அகத்திற்குத் தான் மட்டும் தனியாகப் போவதற்கு ஆரம்பித்தான். இச்சாடையை கேதாரியு மறிந்துகொள்ளாமற் போகவில்லை.

கேதாரி எதற்கும் தளராத இயல்புள்ளவன். நட்பையே பெரிதாயெண்ணி பாராட்டக்கூடியவன் என்றாலும், வேண்டும் பொழுது அதை ஒரு பிரயோஜனத்தின் பொருட்டாகக் கொள்ளவும் உடன்படுபவனே. சென்னை

யில் அவன் பெயர் முன்னிலும் பிரபலமாகிக்கொண்டு வந்தது. எழுந்து நின்று பேசுந் திறமை நன்கு வாய்ந்தவ னென்பதைச் சீக்கிரத்தில் யாவரு மறிந்துகொண்டார்கள். கேதாரி மாதாந்தப் பத்திரிகைகளுக் கெழுதி, அதிலிருந்து வரும் தொகை அற்பமாயினும், அதுவுமோர் லாபமாகவே யிருப்பதைக் கண்டுகொண்டான். லா காலேஜில் ஏற் கனவே கிடைத்து வந்த பரிசுப் பணத்தைக்கொண்டு கலா சாலைச் சம்பளத்தையுங் கொடுத்து வந்தான். மேலும் கையில் ராமு கொடுத்த ரூபாய் ஐந்நூறு மிருக்கவே, அவனுக்குத் தன் கௌரவத்தை யதிகமாய்ப் பாராட்டி யதற் கேற்றபடி நடந்துகொள்ளத் தைரியம் பிறந்தது. இருபது வருஷகாலமாய்ப் பிறரைத் தழுவியிருந்ததற்கு முடிவு நெருங்கவும், கையிலிருந்த சொற்பத் தொகையினு லேற்பட்ட துணிவினால் அவன் பலவிதமாய் நினைக்கலானான். ராமு உள்பட, உலகில் யாவும் அவனுக் கிப்பொழுது வேறு விதமாய்த் தோன்றலாயின.

இதன் நடுவில், பரீக்ஷைக்கு ஒரு மாதத்திற்கு முன்பு, முக்கியமான விசேஷமொன்று நேர்ந்தது. மாதம் பதி னாயிரம் சம்பாதித்துக் கணக்கற்ற சிறு வக்கீல்களைத் தன் குடை நிழலில் தாங்கி வந்த வக்கீல்களுள் முதன்மையான, மார்க்கண்டமய்யரென்பவரைக் கேதாரி தங்கள் காலேஜ் மாணவர் சங்கத்தில் அக்கிராசனம் வகிக்க வேண்டுமென்று அழைத்தான். அதுவரையும் அக்கௌரவம் ஹைகோர்ட் ஜட்ஜகளுக்கே உரியதாயிருந்தது. ஆயினும் கேதாரி, இயல்பாயுள்ள தைரியத்தோடு, அவ்வழக்கத்தைப் புறக் கணித்து, ஆயிரக்கணக்காய்ச் சம்பாதித்துப் பிரசித்திபெற் றிருந்த மார்க்கண்டமய்யரைத் தேர்ந்தெடுக்க, அப்பெரிய மனிதரும் அம்மரியாதையில் மிக்க திருப்தியடைந்து,

அதிருஷ்டமானது இதனாலேயே தனக்குப் பின்னால் ஹைகோர்ட் ஜட்ஜாகப் போவதை விளக்கியதாக எண்ணங் கொண்டார். சங்கத்தில் கேதாரி பேசுவதைக் கேட்டு, சீக்கிரத்தில் வெகு உன்னத பதவிக்கு வரப்பட்டவனென் பதையும் தெரிந்துகொண்டார். அன்று முதல் மார்க்கண் டமய்யர் அவனை ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருந்தது டன், கடற்கரையில் உலாவும்பொழுது காண நேர்ந்தால் புன்சிரிப்போடு தலையசைத்து நோக்குவார். ஒரு சமயம் அவனைத்தன் மோட்டாரில் அவர் தானாகவே ஏற்றிக்கொண் டதுமுண்டு. ஒருநாள் அவர் கேதாரியை தன் வீட்டிற்குச் சாப்பிடவும் அழைத்துச் சென்றார். தன் பழைய ஏழ்மை ஸ்திதியையும், இவ்வளவு தூரம் படித்து முன்னுக்கு வந்த விதத்தையும் அவன் கூறும்பொழுது, அவர் அதிகம் கவனம் செலுத்தாது கேட்டபோதிலும், தானும் இளமை யில் அவ்வாறு கஷ்டப்பட்டிருந்தது நினைவிற்குவர, சிறிது அனுதாபங் கொண்டார். இதையெல்லாம் கவனித்த கேதாரி அவரிடத்திலேயே தானும் வேலைகற்றுக் கொள்ளலாமென்று திடங்கொண்டு, அவரிடம் மிகவும் கௌரவம் பாராட்ட லானான். மார்க்கண்டமய்யருக்கு உதவி வக்கீலாய் இருக்கும் பாக்கியம் அவனுக்குத்தான் என்று மற்றபையன்களனை வரும் புள்ளி போடவும், இனித் தனக்குக் கவலையில்லை யென்று அவன் உறுதி கொண்டான். இவ்வாறு தன் பெருமைகளிலும், பிற்காலத்தைப் பற்றிய மனோராஜ்யங் களிலும் அவன் ஊக்கம் முழுவதும் செல்லவே, ராமு தன் னுடன் ஒரே அறையிலிருக்கும் பொழுதே, கேதாரிக்கு அவன் ஞாபகம் குறையத்தொடங்கி விட்டது.

அவன் அவ்வண்ணம் நடப்பதற்கு ராமுவும் காரணமா யிராமற் போகவில்லை. ஒவ்வொரு சமயம், யோசித்துப்

பார்க்கும் பொழுது, தான் நன்றியில்லாமல் நடப்பதாகப் புலப்பட்டுக் கேதாரி அதை மாற்றிக் கொள்ள முயன்றுனு யினும், அவர்களுள் ஒரு பேதம் ஏற்பட்டுத்தான் தீரும் போலிருந்தது. ஆனல் கேதாரி தனக்குள்ளேயே யுக்தி வாதங்கள் புரிந்து கொண்டதாவது:—"கொஞ்ச தூரத்திற் கப்பால், வழி பிரியவேண்டி யிருக்கும்பொழுது எவ்வளவு காலம்தான் இருவரும் சேர்ந்து செல்லமுடியும்?" நடக்க வேண்டியது நடந்துதான் தீரும்;அதை யார் தடுக்க வல்லார்? முதன் முதலில், தன் பந்துக்களான மீனுக்ஷி, ஜானகி யிவர் களை விட்டுப் பிரியும்படிச் செய்தது ராமுவே யல்லவா? அவன் அவர்களைப் பார்த்து ஆறு மாதத்திற்குமேலாயிற்று. தனக்குற்ற பெருமைகளை யெல்லாம் மீனுக்ஷி கேட்டு ஆர்வத் துடன் கொண்டாட, அவ்வானந்தத்தை யனுபவியாம லிருப்பது அவனுக்குக் குறைவாகத் தோன்றிற்று. அவள் கொண்டாடுவது அற்பமன்று.—"ராமுவுக்கு அப்பிரியமா யிருந்தாலு மிருக்கட்டும். ஒரு நாள் அங்கு போய்விட்டே வருவதெ"ன்று கேதாரி நிச்சயித்துக் கொண்டான். மேலும் ஜானகியின் அழகிய வடிவம் மனக்கண்முன் தோன்றியதும் அவன் தீர்மானம் பின்னும் உறுதியாயிற்று. தங்கள் ஞாபகத்தை ஒழித்து விடலாகாதென்று மீனுக்ஷி கேட்டுக் கொண்டாளாதலால், கேதாரி வழக்கம் போல் அவர்கள் வீட்டிற்குப் போய்வரத் தொடங்கினன்.

இச்சமாசாரம் ராமுவுக்குத் தெரிய வந்ததும், உறவின ளான மீனுக்ஷியை கேதாரி போய்ப் பார்ப்பது பிசகல்ல வெனினும், அவன் மனதிற்கு அது ஏதோ சம்மதமாயிருக்க வில்லை. ஆயினும் அவ்வாறு விரும்பாமைக்குத தன் அற்ப நெஞ்சும், பொருமையும்தான் காரணமென்று அவனறிந்து

கொண்டான். பதட்டமற்ற வெகு சாந்தமான அவன் ஸ்வபாவமும் தன்னிலே தடுமாறிற்று.

அவனுக் கப்பொழுதுதான் பரீக்ஷையாயிற்று. கேதாரிக்கு அடுத்தவாரம் ஆரம்பம். மீனாக்ஷியுடன் நேர்ந்த ஏதோ மனஸ்தாபத்தின் பேரில், பரீக்ஷை முடிந்த தினமே ராமு திடீரென்று ஊருக்குப் போய்விட்டான். அவன் ரயிலுக்குக் கிளம்பிக்கொண்டிருக்கும் பொழுது, கேதாரி, காலேஜ் பையன்கள் சிலருக்கு நட்பைப் பற்றி ஓர் உபந்நியாஸம் செய்து கொண்டிருந்தான். ஆகவே, அவன் வீட்டிற்குவரும் பொழுது வெகு நேரமாய் விட்டது. உள்ளே நுழைந்ததும் ராமு புறப்பட்டுப்போய் விட்டதை யறிந்துகொண்டான். ஆனால் அதற்காக அவன் வருந்தவுமில்லை; சந்தோஷப்படவு மில்லை. ரயில் கிளம்புவதற்கு இன்னும் நேரமிருந்ததால், ஸ்டேஷனுக் கோடிச் சென்று பார்க்கலாமென்று முதலில் நினைத்தானாயினும், பின்பு வேறு எண்ணம் தோன்ற, அவன் மனம் மாறிற்று. உடனே அவன் நாற்காலியி லமர்ந்து வெளியே நோக்கும்பொழுது, ரயில் ஸ்டேஷனை விட்டு மெதுவாய்ச் சென்று கொண்டிருப்பதைக் கண்டான். மற்ற இடங்களிற்செல்லும் ரயிலினுடைய வேகம் இத்தென்னிந்தியா ரயிலுக்குக் கிடையாது. உஷ்ணப் பிரதேசங்களில் உழைப்பவர்களுடைய தேகச்சோர்வு அதற்கு முண்டு. ராமு ஜன்னலுக்கு வெளியே எட்டிப்பார்த்துக் கொண்டிருந்ததைக் கண்டது போல் கேதாரி நினைத்துக்கொண்டான். ஆனால் ஜானகியும் அவனருகில் வண்டிக்குள்ளிருந்தது கேதாரிக்குத் தெரியாது.

---

## அத்தியாயம் 9.

### ஆற்றங்கரை.

சித்திரை போய் வைகாசி பிறந்துவிட்டது. மேற்கு மலைத்தொடரில் இன்னும் மழை பெய்யத் தொடங்கவில்லை யாதலால், இஷ்டம் போல் விளையாடி ஸ்நானம் செய்ய முடியாதபடி, காவேரியும் பூர்ணப் பெருக்குடன் கரை புரண்டோட வில்லை; முத்துப்போல் தெளிந்த ஜலத்துடன் இடுப்பளவு ஆழந்தான் ஓடிக்கொண்டிருந்தது. ஸ்திரீகள், அதிலும் இளம் பெண்கள், ஸ்நானம் செய்யும் பொழுது பலவிதமான வம்பு பேசிக்கொண்டு, விரைவிற் கரையேறி வீடு சேர மனமில்லாமலிருந்தனர். அவர்களிவ்வாறு ஊர் வம்பு அளந்துகொண்டிருக்கும்பொழுது, ஓடும் ஜலமானது அவிழ்ந்து புரளும் அவர்களது நீண்ட ஆடையை விலக்குவதும் இழுத்துச் செல்வதுமாய் ஸரஸம் செய்யா நிற்க, அப்பெண்மணிகளும் வெகு சாமர்த்தியமாய் அச் சரசத்திற்கு இடங் கொடுத்துங் கொடாமலும், எல்லை மீறிச் செல்லாதபடி பார்த்துக்கொண்டனர்.

ஒருநாள் அவ்வாறு ஸ்நானம் செய்பவர்கள் பத்து, பன்னிரண்டு பெயர்களிருக்கலாம். சிறு பெண்களைத் தவிர, கிழவிகளும் நடுவயதினர்களும் அச்சிறு கூட்டத்திற் காணப்பட்டார்கள்.

“ராமுவின் அகமுடையாள் என்ன கோஷாவா? அல வந்திக்கு அவள் வந்து ஏறக்குறைய ஒரு மாதமாகியும், ஒரு நாள் கூட காவேரிக்கு வரவில்லையே! அகத்தில் கிணற்றடியிலாவது ஸ்நானம் செய்கிறாளோ, அல்லது, வியாதிக்காரிக்

கிழவிபோல், வெந்நீரில் தான் குளிக்கின்றாளோ?'' என்றாள் ஒருத்தி.

"துரைமகள் மாதிரி தொட்டியில் ஜலம் நிரப்பி, அதில் ஒருவேளை குளித்துக் கொண்டிருப்பாள்!'' என்றாள் மற்றொருத்தி.

"இல்லை! இல்லை! ஊருக்குப் புதிதாகையால் சற்று அச்சப்படுகிறாள். மேலும் அகத்தில் அவளைத் தவிர வேறு ஒருவருமில்லை,'' யென்று யாவரிலும் இளையவளாயும் லக்ஷணமுள்ளவளாயும் தோன்றிய ஒரு பெண்மணி உரைத்தாள்.

"புதிதா ? பயமா ? தெருவில் பெரியவர்கள் நடமாடிக் கொண்டிருக்கும்பொழுது, காலை மாலை இரு வேளையும் வாயிற்படியில் நின்று பார்த்துக்கொண்டிருக்கப் புதியவளாயும் பயந்தவளாயும் தோற்றவில்லையே !'' என்றாள் வேறொருத்தி.

" அது மட்டுமா ? அசையாமல் நின்று கொண்டு, காற்றிலொதுங்கின மேற்புடவையைக்கூட நேரே போட்டுக் கொள்கிறதில்லை !'' என்றாள் நடுவயதினளான மற்றொருத்தி. பால்யத்தில் இவளுக்குக் கொஞ்சம் பெயருண்டென்று ஊரில் சொல்லிக் கொண்டார்கள் ; இப்பொழுதும் விஷயங்களில் முற்றிலும் சபலமொழிந்தவளல்ல:—"மாமியார் உயிருடனிருந்தால், இப்படி வெட்கம் தெரியாம லிருப்பதற்கு, நன்றாய்த் தோலை யுரிப்பாள். பாபம் ! ராமுதான் பயந்தவன் ! பட்டணவாசத்திலிருந்ததனால் மனைவியை யடக்கிக் கொண்டு போகத் தெரியவில்லை.''

"மணிக்கட்டு வரையில் கையுடன், இடுப்பு மட்டும் தொங்கும் சட்டையன்றோ வெள்ளைக்காரச்சி மாதிரி

போட்டுக்கொண்டிருக்கிருள்!'' என்று வெகு ஆசாரக் காரியான கிழவி ஒருத்தி பிரலாபித்தாள். ஒரு காலத்தில் வெகு பொல்லாதவளென்று இவளுக்கு அவ்வூரார் பெயர் கட்டியிருந்தபோதிலும், இவள் சீலத்தைப்பற்றி யொரு வருங் குற்றம் கூறியதில்லை.—"வீட்டில் அவள் சமைப் பதில்லையாம்! காவேரிக்கும் குளிக்க வருகிறதில்லை! கோவி லுக்கும் கூடப் போகாமல், இப்படி யெதற்கு நீசஸ்திரீயைப் போலிருக்கிருள்? கலியுகம் முற்றிவிட்டதென்று நன்ருய்த் தெரிகிறது! ஜானகியைப் பார்த்து ஊரில் எல்லாச் சிறு பெண்களும் கெட்டுப்போய் விடுவார்களே யென்று பயப் படுகிறேன்.''

"இருந்தாலும் எனக்கு அவளைக் கண்டால் பிடிக்கின் றது,'' என்று முதலிலேயே ஜானகிக்காகப் பரிந்து பேசிய, அழகிய பெண் கூறினுள். "எல்லோரையும் போல் இல்லா மலிருப்பதோடு, புத்திசாலியாயு மிருக்கிருள். யாரைக் கண்டாலும் இனிய புன்சிரிப்புடனல்லாமல் கடுகடுத்த முக மேயில்லை. ராமுவுக்கு இப்படிப்பட்ட மனைவி வாய்த்தது அதிருஷ்டந்தான். நம்ம ஊரில் அற்பத்தனமும் பொருமை யுமே குடிகொண்டிருக்கின்றன. இங்கு ஆற்றங்கரையில் வம்பளப்பது போதாதென்று, கோவிலுக்குச் சென்று அங்கேயும் பிறரைப் பற்றி அவதூறு சொல்லியும், பொய்க் கதைகள் கட்டியும் வீண்பொழுது போக்குகிரேம். நாள் முழுவதும் சமைப்பது, இல்லாவிட்டால் சாணிதட்டுவது, இவ்வாறு காலம் போக்கும் நமக்கும் பொதிசுமக்கும் கழுதைகளுக்கும் என்ன பேதம்? ஒருவர் நம்மைப் போல இல்லாவிட்டால், அதற்காக நாம் பழிப்பதா? எனக்கு ஜானகி உயர்ந்தவளாய்த்தான் தோன்றுகிருள்,'' என்று அவள் ஜானகியின் கக்ஷியைத் தைரியமாயெடுத்துப் பேசி

ளுள். முதலில் அவளையும் பட்டணவாஸத்தவள் என்றும், பட்டணம் வேஷக் கொண்டாடுகின்றவளென்றும் ஊரில் வைதுகொண்டுதானிருந்தார்களாயினும், அவளுக்கு மேல் நாகரிகம் பாராட்டும் ஜானகி வந்த பிறகு அவளுக்கு அப் பெயர் மறைந்து விட்டது.

ஆசாரக்காரியான கிழவி, "சீதா, நீ ஜானகிக்காகப் பரிந்து பேசுவது நியாயந்தான்! வேண்டுமானல் நீங்களிரு வரும் தோழிகளாய், ஊரில் எல்லோரையுமே தலைகால் தெரியாமலிருக்கும்படிச் செய்து விடுங்கள். ஆனல், தெய்வமே! அதற்குள் நான் கண்மூடி விடவேண்டும்!" என்ருள்.

இதற்குப் பிறகு அப்பேச்சுக் கொஞ்சம் ஓய்ந்தது. ஆனல் அச்சமயத்தில் முருகன் தான் புதிதாய் வாங்கின பசுவைக் குளிப்பாட்ட ஓட்டிவந்து, அம்மூலமாய் ஊரார் யாவருக்கும் தன் பெருமையைத் தெரிவிப்பதற்கு அங்கு வந்து சேர்ந்தான்.

"புதிதாய் வாங்கின பசுமாட்டை ஓட்டிக்கொண்டு இதோ முருகன் வருகிருன். ஜானகியின் நடை அழகை ராமு எப்பொழுதும் பார்த்து மகிழ்வது போலவே, அவனும் தன் பசு நடப்பதைப் பார்த்துக்கொண்டே வருகிருன். அவனைக்கேட்டால் தெரியும்," என்று இதுவரையும் மௌனமாயிருந்த ஒரு பெண் சொன்ளுள்.

"ஆம், அவ்வதந்தியைப் பற்றிக்கூட மெதுவாய் விசாரி. ஜானகி ராமுவின் ஜாதியில்லையாம்; அநாதைக் குழந்தைகளுக்கென்று ஏற்படுத்தியிருக்கும் தர்மசாலையில் வளர்ந்த ஒரு மாத்வப்பெண் என்று சிலர் சொல்லுகிருர் கள்!"

"ஆசார சீர்திருத்த முறைப்படி, அவள் பெரியவளான பிறகுதான் கலியாணமும் ஆயிற்ருே வென்பதைக்

கூடக் கேளு. கலியாணமும் சாந்தியும் ஒன்றாயாவது செள கரியம் தான்,'' என்றாள், யாவரிலும் மிக்க இளையவளான ஒரு சிறுமி. இவளுக்கு சாந்தியாவதற்கு நான்கு வருஷங் கள் காத்திருக்கும்படியாயிற்று.

"எல்லாம் வாஸ்தவமென்றே வைத்துக்கொண்டா லும், முருகனுக் கென்னமாய்த் தெரிந்திருக்கும்?'' என்று சீதை சிறிது ஆக்ஷேபித்தாள். "பாவம்! இவ்வூரிலிருப்பது ஜானகிக்குக் கஷ்டந்தான்!''

இதற்குள் முருகன், அவர்கள் இவ்வண்ணம் வம்புவீணுடன் குளித்துக்கொண்டிருந்த இடத்தை யணுகினான். கள்ளச் சிரிப்பு சிரித்துக்கொண்டு அவர்கள் அவனை நோக்கி யதிலிருந்தே, சமாசாரம் முழுவதையும் ஊகித்து முருகன் முன் ஜாக்கிரதை கொண்டான்.

"என்ன, முருகா! புது எசமானி எப்படி இருக்கி றாள்?'' என்று ஒருத்தி கேட்க, மற்றொருத்தி, "புதிதாய் வாங்கின பசுவைக் கூட நீ ஆற்றங்கரைக்கு ஓட்டிக் கொண்டு வந்துவிட்டாய். அதுவும் பயந்து மிரளாமலிருக் கிறது. ஆனால் இன்னும் உன் எசமானியை அழைத்துவர வில்லையே!'' என்று பிரித்துச் சொன்னாள். அச்சொற் களிலுள்ள பரிஹாஸக் குறிப்பை கவனிக்காதது போல் முருகன், சாதாரணமாய், "எனக்கும் முதலிலே விசனமா யிருந்தது. உங்களைப் போலே அம்மாவை நானும் தப்பாய்த் தான் நினைச்சேன். ஆனா, அப்படியெல்லாம் ஒண்ணுமில்லை. ரொம்ப சாது; புத்திசாலி; பக்ஷமுள்ளவங்கதான். கிராமாந்தர வழக்கங்களுக்குப் புதிதல்லவா? இப்பொ கூட, உங்க எல்லாரோடும் சேர்ந்து காவேரியிலே குளிக்க வரவேணுமின்னுதான் அவங்களுக்கு எண்ணம். ஆனா, பயம் ஜாஸ்தி,'' யென்றான்.

இன்னும் அவர்கள் கேட்ட பலகேள்விகளுக்கு முன்பே தயாராயில்லாமலிருந்தனுல் அவனுல் சரியான பதிற் கூற முடியவில்லை. மேலும் புதுப்பசு சலசல வென்றோடும் ஜலத்தையும் அந்த ஸ்திரீகளேயும் பார்த்து மிரண்டு, தண்ணீர் குடிக்காமலிருக்கவே, அவனதை ஓட்டிகொண்டு உடனே போய்விட்டான்.

"நான் நாளே போய் ஜானகியை ஆற்றங்கரைக்கு அழைத்து வந்து விடுகிறேன். பாவம்! அவளும் தனியாயிருக்கிருள். எனக்கு அவளே நிரம்பப் பிடிக்கின்றது," என்று சீதை தானே கூறிக்கொண்டாள்.

ஆனுல் அவ்வார்த்தைகள், பாலியத்தில் கொஞ்சம் பெயருண்டென்று நாம் கூறிய, நடுத்தர வயது ஸ்திரீயின் காதுகளில் விழ, "சீதைக்குப் பட்டணத்தவர் களென்ருல் எப்பொழுதும் பிரியம். அவளகமுடையான் தேவடியாக் கள்ளனுய்த் திரிந்து கொண்டு கொஞ்ச நாட்களாய் வீட்டை எட்டிப் பார்க்கவேயில்லை. பாவம்! இரண்டு வருஷங்களுக்கு முன்புதான் அன்றலர்ந்த புஷ்பம் போல் வாடாத மேனியுடன் இவ்வூருக்கு வந்தாள். இப்பொழுது அகமுடையான் கவனிக்காமல், ஒளி மழுங்கி இளைத்துப் போய்விட்டாள். புழுவரித்த புஷ்பம்போல், துக்கமும் அவளே உள்ளுக்குள்ளேயே வாட்டிக்கொண்டிருக்கிறது. கணவன் இவ்வாறு இருந்தால், மனைவிக்கும் பெரும் சபலத்திற்கிடந்தான். ராமுவோ சாது; தங்கமான பையன். அவனைச் சீதைக்குப் பிடித்தால் அதில் ஒரு ஆச்சரியமுமில்லை. யாருக்குத்தான் அவனைக் கண்டால் பிடிக்காது? அதற்காகத்தான் அவன் அகமுடையாளின் மேல், முதலில், ஆசை கொள்ளுகிருள்," என்ருள்.

"ராமு நடத்தை பிசகாதவன்; மேலும் நிரம்ப மனே திட முள்ளவன். அவன் ஒரு நாளும் மயங்க மாட்டான்." என்று அவள் பக்கத்திலிருந்தவள் சொல்ல,

"சீதையின் சாமர்த்தியம் உனக்கென்ன தெரியும்?" என்று ஒரேவார்த்தையில் அவளை அடித்துக் கூறிவிட்டாள். சீதைக்கு இச்சம்பாஷணை முழுவதும் காதிற் படவில்லை. ஆயினும் கேட்ட மட்டில் தன்னைப்பற்றித்தான் ஏதோ வம்பு என்று கண்டு கொண்டு, வெகு அருவருப்புடன் வீட்டிற்குப் புறப்பட்டாள்.

நிற்க, மற்றொரு துறையில் சில ஸ்திரீகள் ஸ்நானம் செய்துகொண்டிருந்தனர். அவர்களுள் ஒருத்தி முன்பு பணக்காரியாயிருந்து இப்பொழுது ஏழ்மைஸ்திதிக்கு வந்தவள். அவளுக்கிருந்த எரிச்சலில், யாராவது கஷ்டப்படுகிறார்களென்று கேட்டால் வெகு சந்தோஷமாயிருந்தது.—"ராமுவுக்கு ஏகக் கடனாய் விட்டதாமே! பெரியசாமி ஐயருக்கு அவன் நிலத்தில்—முக்கியமாய் முருகனுடைய தென்னந் தோப்பில், ஒரு கண்ணுண்டென்று கூடக் கேள்வி," என, அதற்கு மற்றொருத்தி, "அவன் பீ. ஏ. பரீக்ஷை கொடுத்திருக்கிறானே! ஒருவேளை சம்பாதித்துக் கடனை யடைத்து விடலாம்," என்றாள்.

"ராமு தங்கமான பையன்," என்று எல்லா வயதான பெண்டுகளும் ஒரே குரலில் ஆமோதித்தார்கள்.

"ஜானகிக்கு நல்ல அதிருஷ்டம்," என்று சமீபத்தில் விவாகமாகிய சிறுபெண்க ளனைவரும் சேர்ந்து சொல்ல, இவற்றை யெல்லாம் சீதை நின்று கேட்காமல் கிளம்பிப் போய் விட்டாள்.

ஆற்றங்கரைப் பேச்சு இப்படித்தான். அவரவர்கள் மனம் போனவாறு, ஊர்வம்பைக் கொட்டியளப்பதாயிருக்

கும். அவ்வாழமற்ற தெளிந்த ஜலத்தில் தங்கள் ஒவ்வோர் அங்கமும் கண்ணுடியிற்போற் பிரதிபலிக்க, நீரிலமிழ்ந்த படியே அவர்கள் உற்சாகமாய்ப் பேசியும் விளையாடியும் பொழுது போக்குவார்கள். புடவையின் ஒரு தலைப்பு மட்டும் உடம்பிற் சுற்றியிருக்க, மற்றைய பாகமெல்லாம் ஜலத்தில் மிதப்பதை நோக்கும் பொழுது, சந்தோஷ மென்னும் பறவையின் விரித்த சிறகுகளோ வெனத் தோன்றும். ஸ்நானம் செய்பவர்களின் மேல் மெதுவாய் மோதி மடிந்து செல்லும், ஸ்படிகம் போன்ற நீரானது அவர்கள் சரீரத்திற்கே ஒரு மிருதுத்தன்மையையும் மேனியையுமளிப்பதாயிருந்தது. வரவர அவர்கள் சம்பாஷணை சிருங்கார ரஸத்திற் பாய, கல கல வென்ற சிரிப்பும், பேச்சும், நீரைக் கைகளால் அளைந்து கொண்டே, மணற் பரப்பான பூமி கால்களில் தட்டுப்படும் வரையும், மேன் மேலும் ஆழத்திற் சென்று இவர்கள் அமிழும் சப்தமும் எங்கும் பரவத் தொடங்கும். மேல் நாட்டு ஸ்திரீகளது சம்பாஷணை யாவும் அவர்கள் தேத்தண்ணீர் அருந்தும் பொழுது நடப்பது போல, தாங்கள் நித்தியமாய் ஸ்நானம் செய்யும் நதிக்கரையை ஊர் வம்பிற்கும், ராமுவின் நூதனமான விவாஹத்தைப் பற்றிய பேச்சிற்கும் உரிய விடமாய் நமது பெண்டுகளும் ஏற்படுத்திக்கொண்டிருப்பதில் ஒன்றும் ஆச்சரிய மில்லையன்றோ ?

இடிந்து பழைமையாயிருந்த அவ்வூர்க் கோவிலில் சாயந்திரம் ஸ்வாமி தர்சனத்திற்குச் செல்லும் வயதான பெரியவர்களுக்கும் ராமுவைப் பற்றிய வம்பானது வெகு ஸ்வாரஸ்யமாய்த் தோன்றிற்று.

இதன் நடுவில் ராமுவும் ஜானகியும் சும்மா விருக்கவில்லை. அவர்கள் செவிகளிலும் யாவும் விழுந்தன. "ஜானகி, ஊர் முழுவதும் நம்மைப் பற்றியே பேச்சாக

விருக்கிறதென்று முருகன் சொல்லுகிருன். நாம் வந்து ஒரு மாதமாகி விட்டதே. அப்படியும் அவர்கள் வம்பும் சந்தேகமும் தீரவில்லைபோலிருக்கிறது,'' என்று ராமு சொல்ல,

"நான் சாதாரணமாய்ப் பேசிப் பழகத் தொடங்கி விட்டால், பிறகு அவர்கள் சந்தேகங்கள் ஒழிந்து விடும்,'' என்ருள் ஜானகி. "கிராமாந்தர வழக்கங்களை நான் அவர் களிடமிருந்து கற்றுக்கொள்ளவும் அப்பொழுது முடியும். பிறகு கவலையற்று நாமிங்கு திருப்தியாக விருக்கலாம். நாளைக்காலை காவேரிக்குக் குளிக்கச் சென்று வரட்டுமா?''

"உனக்கு விருப்பமிருந்து, தைரியமு முண்டானல் போய் வா. அவர்கள் கேவலம் வெட்டிப் பேச்சுப் பேசி, பிறரை வாயில் போட்டு அரைத்துக் கொண்டிருப்பார்கள். யார் எப்படிப் போனல் அவர்களுக்கென்ன? வம்புதான் முக்கியம். கிராம வாழ்க்கையே கெட்டுக் கிடக்கின்றது. அற்பத்தனமும் அறியாமையுமே குடிகொண்டிருக்கின்றன. சரியான வழியில் நடந்து காண்பித்து யார் இதைச் சீர் திருத்தம் செய்யப் போகிருர்களோ தெரியவில்லை!''

"நீங்களும் நானும் தான். இல்லாவிட்டால் பின் வேறு யார்?'' என்று ஜானகி தயங்காமற் கூறினள்.

---

## அத்தியாயம் 10.

### பின்னும் துரதிருஷ்டம்.

தான் கூறியபடியே ஜானகி மறுநாட்காலை காவேரிக்கு ஸ்நானம் செய்யச் சென்றாள். அங்கு அவள் வெகு சாதாரணமாய் எல்லாருடனும் பேசிப் பழகவே, ஒருவருக்கும் அவளைக் குறித்து வம்பு பேசுவதற்கிடமில்லாமற் போய் விட்டது. மேலும் சீதையுடன் பேசியதில், அவளும் தன் போன்ற ஸ்வபாவ முடையவளென்று தெரிந்ததும், வெகு சீக்கிரம் அவளுடன் சிநேகமாய் விட்டாள். ஏனெனில் அவள் வந்ததும் சீதை தானாகவே அவளுக்கு நதியில் குளிக்கும் விதத்தையும், பொதுவான சில கிராம வழக்கங்களையுங் காட்டிக் கொடுக்க இனிமையாய் ஏற்றுக் கொண்டதனால், இச்சிநேகம் வெகு சுலபமாக ஆயிற்று. அன்று சாயந்திரம் தங்களகத்திற்கு வரும்படி ஜானகி சீதையையழைத்தாள். முகத்தில் சந்தோஷக்களை குறைவாய், எப்பொழுதும் சற்று விசனகரமான பார்வையுடனேயே அவள் காணப்படுவதின் காரணத்தை யறிய ஜானகிக்கு நிரம்ப ஆவலாயிருந்தது.

மாலைப்பொழுது நெருங்கிற்று. ஊர் அக்கிரகாரத்தில் வெய்யிலும் புழுக்கமும் அதிகமாயிருந்த போதிலும் முருகனுடைய தென்னந்தோப்பில் ஜில்லென்று குளிர்ச்சியாய்க் காற்று வீசிக்கொண்டிருந்தது. முருகனும், மத்தியானம் முழுவதும் வெய்யிலில் வேலை செய்த சிரமத்தைத் தீர்க்க, தென்னைமரத்து இருண்ட நிழலில் உட்கார்ந்து இளைப்பாறிக்கொண்டிருந்தான். ஆனால் அப்பொழுதும் அவன் கைகள் சும்மாவிருக்கவில்லை. தன் குடிசை மேற்க்கூரை

கென்று பழுத்த தென்னை மட்டைகளைக் கிழித்துக் கீற்று முடைந்து கொண்டிருந்தான். அச்சமயம் ராமு அங்குவர, அபூர்வமாய் வந்த எசமானனை வரவேற்க முருகன் சந்தோஷத்துட னெழுந்தான். ஊருக்கு வந்த பிறகு ராமு அங்கு வந்தது அப்பொழுதுதான் இரண்டாந்தடவை.

"முருகா, உன்னைப்போலவே இனி நானும் மண் வெட்டியும் கலப்பையுங் கொண்டு நிலத்தை யுழுது பயிரிட்டுக் காலம் தள்ளலாமென நினைக்கிறேன். எங்கே,— இப்பொழுதே ஆரம்பி,—இத்தென்னம் ஓலைகளை அழகிய விரிப்புப் பாயாகவும், திரைத் தட்டிகளாகவும் எப்படிப் பின்னுவதென்பதை எனக்குக் காட்டிக்கொடு, பார்ப்போம்!" என்று ராமு உண்மையாய்ச் சொன்னது முருகன் மனதிற்குத் திருப்தியாக விருந்தது.

"எசமானைக் கண்டால் எனக்கு வேலை ஓடும். நீங்க எதிரில் இருந்தாலே என் வேலை ஆனாப்போலேதான். ஆனா கீத்து முடைவது, மம்மட்டியெடுத்து வெட்டுவது இது போன்ற வேலையெல்லாம் உங்க சாதிக்கு ஏற்றதல்ல. உங்க மெதுவான கைகளுக்குத்தான் தகுதியாமா? நாங்க இதற்கென்றே பிறந்திருப்பதனால் சந்தோஷமாய்ச் செய்யறோம். ஆனா எசமான் மட்டும் இவ்விடத்தை விட்டு எங்கேயும் போகக்கூடாது."

"இருந்தாலும் மண் வெட்டியும் கலப்பையு மெடுத்து நான் உழுதாகவேண்டும். இல்லாவிட்டால் இந்த அன்னத்தைச் சாப்பிட எனக்கு என்ன பாத்தியம், முருகா?"

"அதெல்லாம் உதவாது, சாமி. ஊரெல்லாம் கை கொட்டிச் சிரிக்கத் தொடங்குவாங்க. முருகன் மனசுக்கு ரொம்ப வருத்தமாயிடும். உங்களுக்காக உழைக்க வேணு

யின்னு நாங்க ஏற்பட்டிருக்கோம். ஒவ்வொரு சாதிக்கும் ஒவ்வொரு தொழில் திட்டமாயிருக்கு.''

"முருகா, எனக்கேற்பட்ட வேலையை நான் சரியாய்ச் செய்யவில்லை. எனக்கு பீ. ஏ. பரீக்ஷை மீண்டும் தவறிப் போய் விட்டது. ஒன்றா, விவசாயத் தொழிலை நான் மேற் கொள்ளவேண்டும்; அல்லது பட்டினியாய்க் கிடந்து உயிர் துறக்க வேண்டும்.''

"தவறியா போச்சு, சாமி! ஆனா முருகன் மூச்சுள்ள வரையிலே எசமானுக்கு ஒண்ணும் கெட்டுப் போகவில்லை. உண்மையாக உங்களுக்குப் பரீக்ஷை போனதைப் பற்றி எனக்கு சந்தோஷந்தான். இங்கேயே யிருந்துவிடுங்க, சாமி. பீ. ஏ. பரீக்ஷை போயிட்டா லென்ன? மழை பெய்யாமலா போயிடும்! அதுவும் சுவாமி நமக்கு நல்லது தான் செய்திருக்காரு.''

"நீ கூறுவது உண்மை, முருகா. ஈசுவரேச்சை அவ் வாறுதா னிருக்கின்றது. இனி யிங்கிருந்து உன்னுடன் நிலத்தைப் பார்த்துக் கொண்டு நான் காலம் கழித்து விடு கிறேன். புதிதாய் நீ வாங்கின பசு எப்படி யிருக்கிறது? நல்ல ஜாதிதானா? அதோ இருக்கின்றதே, அதுவா? ஏன் மடி யிப்படி ஒட்டி யிருக்கிறது? முருகா, கன்றுக்குட்டியும் மிகவும் இளைத்துத் தெரிகின்றதே. பசு இப்பொழுது கறக் கின்றதோ? தகுந்த ஜோடி பார்த்து நாம் சினைக்கு விடுவ தில்லை. மாடுகளை விருத்திக்குக் கொண்டு வருவதில் இங்கு ஒருவருக்கும் சரியான அறிவில்லை. பசுக்களையும் காளைக் கன்றையும் தேற்றிவளர்க்கும் விதமறிந்த பின்பல்லவா நமது விவசாயமும் விருத்தியடையும்?''

இவ்வண்ணம் ராமு தான் புஸ்தகங்களிலும் பத்திரிகை களிலும் படித்தவைகளை யெல்லாம் எடுத்துக் கூற, ஒன்றும்

விளங்காதவனாய் முருகன், "எசமான் ஊரிலேயே யிருந்து காலாகாலத்திலே வாய்க்கால் வெட்டுவது, வயல்களுக்கு எரு வடிப்பது, குழி வெட்டுவது, முதலிய சில்லரை வேலைகளைக் கவனிச்சா, தானே பயிர்த்தொழில் விருத்தியாகும்," என்றான்.

இப்பொழுது சத்தியாக முருகன் கூறுவதை அங்கீகரித்து மௌனமாயிருப்பதே சரியென்று ராமு நினைத்துக் கொண்டான். ஏனெனில் விவசாயத்தைப் பற்றித் தனக்குத் தெரிந்தவைகளை யெல்லாம் சொன்னால், அவனுக்குக் கலவர முண்டாய்விடும். அவனுக்கு விளங்கும்படியா யுரைப்பதும் கஷ்டந்தா னல்லவா?

நிற்க, ராமு தெருவழியாய்த் தோப்பிற்குப் போவதைப் பார்த்து சீதை, இதுதான் சமய மென்றெண்ணி, ஜானகியி னகத்திற்குச் செல்ல,

"சீதா, வா. இப்பொழுதுதான் நான் உன்னைப்பற்றி நினைத்தேன். அவர் வெளியே போய்விட்டார். தாராளமாய் உள்ளே வரலாம். அவர் அகத்திருந்தாலுங் கூட, நீ அதிக வெட்கப்படவேண்டாம். நீ வந்தது எனக்கு எவ்வளவோ சந்தோஷமாயிருக்கிறது!" என்றாள் ஜானகி.

"ஏன், ஜானகி! உன் முகம் ஒருவாறா யிருக்கின்றது? காலையில் இருந்தது போல் மலர்ந்து தெரியவில்லையே! என்ன விசேஷம்? காவேரியில் ஸ்நானம் செய்தது ஜல தோஷம் பிடித்துவிட்டதா? உடம்பொன்று மில்லையே!" என்று சீதை பரிவாய் விசாரிக்க,

"என் உடம்பிற் கொன்றுமில்லை. அவருக்கு இம் முறையும் பரீக்ஷை தவறி விட்டது என்பது தான். ஆனால் அதை நான் ஒன்றும் பெரிதாக பாவிக்கவில்லை. அவர்தான்

சாமான்யமாக நினைக்காமல், என் பொருட்டு வருந்து வதாய்ச் சொல்லுகிறார். எனக்கு அதில் கொஞ்சங்கூட வருத்தமில்லை யென்று நான் எவ்வளவு சொன்னாலும் கேட்கவும் மாட்டே னென்கிறார்," என்றாள் ஜானகி.

"மறுபடியும் தவறிப்போய்விட்டதா! என்ன விபரீ தம்! இவ்வூரில் அவரைப்போல் புத்திமான் வேறு ஒருவரு மில்லை. தெய்வம்தான் பிரதிகூலமா யிருக்கிறதென்று கூற வேண்டும். ஆனால் இத்தடவை தவறிப் போய்விட்டதனால் என்ன? அடுத்த வருஷம் தேறி விடுகின்றார். இல்லாவிடில் மீண்டும் படிக்காமலே, காவிரி நதி பாயும் இவ்வழகிய கிரா மத்திலேயே உன்னோடு சுகமாயிருந்து விடலாமே. பீ. ஏ. பரீக்ஷை கொடுத்தவர்களுக் கெல்லாம் மாதம் முப்பது ரூபாய் சம்பளத்துக்கு மேல் கிடைப்பது அரிதாயிருக்கிறது. அதுவும் குமாஸ்தா உத்தியோகத்திற்குச் செல்வது நிரம்பக் கஷ்டம். என் தமையனுக்கு அவ்வேலைதான். உற்றார் உற வினர் யாவரையும் விட்டு எங்கேயோ வெகு தூரத்திற்கப்பா லிருக்கிறான். நான்கு வருஷகாலமாய் நான் அவனைக் கண் ணாற்கூடப் பார்க்கவில்லை. ஜானகி! உனக்கென்ன? நீ இங்கேயே இருக்கலாமே!"

"ஆனால் உன்னைப்போல் நாங்கள் அவ்வளவு செல்வ வந்தர்கள் அல்லவே, சீதா," என்று ஜானகி புன்னகை யுடன் கூற,

"என் பணத்தையெல்லாம் சமுத்திரத்திற் கொண்டு போய்ப் போடு. உன் அகத்துக்காரரைப் போல், வீண் டம்ப மில்லாமல், அன்புள்ள கணவனிருந்தால், ஏழு ஏகரும் எழுநூறு ஏகருக்கு மேற்பட்ட ஐசுவரிய மல்லவா? பணத் தினால் துன்பத்தைத் தவிர, வேறு ஒரு பிரயோஜனமுமில்லை. மேலும், கிராமத்தில் நமக்கென்ன தேவை? நாம் வேண்டு

வதற்கு மேற்பட்ட திரவிய மிருப்பதனால் கெட்ட நட வடிக்கைதான் படியத் தொடங்கும்,'' என்று சீதை, சொல்லிக்கொண்டே வரும்பொழுது, முகம் வெட்கித் திடீரென்று நிறுத்தினாள். ஓர் நிமிஷம் பொறுத்து, "நான் ஏதோ யோசனை யில்லாமல் வெகு தாராளமாய்ப் பேசுகி றேன். ஆனால் உலக மப்படித்தான் இருக்கிறது. நானும் சிறியவள்தான் என்றாலும், உன்னைவிடச் சற்று பெரியவளா கையால், இன்னுங் கொஞ்சம் அனுபவ முண்டு,'' என,

"நீ சொல்வ தெல்லாம் எனக்கு விளங்குகின்றது. சீதா, நீ காரணங் கூறவேண்டாம்,'' என்றாள் ஜானகி.

"உன் அகத்துக்காரர் படிப்பே அவருடைய பெரிய தனமென்று சொல்ல வந்தேனே ஒழிய, வேறொன்று மில்லை. உன் போன்ற ஸ்திதியி லிருப்பவர்களுக்குக் கிராமவாழ்க்கை ஸ்வர்க்க போகமென்றே கூறலாம். ஜானகி, அதன் முதலு பயோகம்,—உன் பழக்க மெனக்கு நிலைக்கும். உன் நட்பானது எனக்குப் பெரும் நிதியகப்பட்டது போலன் றோ!'' என்று சீதை மலர்ந்த முகத்தினளாய் உரைக்கத், தன்னையும் ராமுவையும் பற்றி அவள் அடிக்கடி புகழ்ந்து பேசுவதைக் கேட்க, ஜானகி சிறிது வெட்கத்தினால் தயங்கினளாயினும், சீதைக்கு அது இயற்கையான குதூ ஹலத்தை யளித்ததென்பதைக் கண்டுகொண்டாள். ஆக வே அவள் சீதையைத் தடுக்க வில்லை. பொறாமைக்கும், கள்ளம் கபடற்ற ஜானகிக்கும் வெகு தூரம். மகாபரிசுத்த ஸ்வபாவத்தையுடைய சீதையும் உபசாரத்திற்காக வீண் வார்த்தைகள் கூறுபவளல்ல. சூரியன் அஸ்தமிக்கும் வரையிலும் அவ்விருவரும் பேசிக்கொண்டிருந்தனர். அப் பொழுதும், ராமு வெளியிலிருந்து வந்து விட்டதனால் தான் அவர்கள் பேச்சு நின்றது. அவனைக் கடைக் கண்

ணல் நோக்கி, சீதை அவ்விடத்தை விட்டுக் கிளம்பினள். பல மாதங்களாய்ப் பார்க்காததனல் ராமுவுக்கும் அவளைச் சமீபத்தில் பார்க்க வேண்டுமென்ற அவா விருந்தும், ஜானகி தன்னைப் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது அவன் அவ்வாறு செய்ய முடியவில்லை. சீதையைக் கண்டதும் அவளுடைய பல துன்பங்கள் நினைவிற்கு வரவே, அவனுக்குத் தன் பரீக்ஷை தவறிய வருத்தங் குறைந்துவிட்டது.

"ஜானகி, சீதையினுடைய சிநேகத்தை எவ்வாறு சம்பாதித்தாய்?" என,

"இன்று காலை ஆற்றங்கரைக்குக் குளிக்கச் சென்றதின் லாபம். காவேரி யம்மனுடைய வரப் பிரசாதம்தான். அவளை இன்னுரென்றுகூட எனக்குச் சரியாய்த் தெரியாது," என்ருள் ஜானகி.

"அவள் ஒரு பள்ளிக்கூட உபாத்தியாயரின் பெண். படிக்கத்தொடங்குமுன் புஸ்தகத்தின் முதற் பக்கமே கிழிந்து விட்டால் எப்படியோ, அப்படியேதான் அவளுமிப்பொழுது இருக்கின்ருள். நிரம்ப குணவதி. சில விஷயங்களில் உன்னைப்போலவேதானிருப்பாள். அருமை தெரியாத ஒரு மடையனிடம் அவளைத் தள்ளி யிருக்கின்றது. அவளுடன் பிரியமாயிரு, ஜானகி. ஒருவேளை அது அவளுக்கு ஓர் ஆறுதலாக இருந்தாலு மிருக்கலாம்."

"என்ன, பரஸ்பரம் ஸ்தோத்திரமா யிருக்கின்றதே! நீங்கள் அவளைப்பற்றிக் கொண்டாடிக் கூறுகிறீர்கள்; அவளும் உங்களைச் சிலாகித்துப் பேசுகிருள்!" என்ருள் ஜானகி சிரித்துக்கொண்டே.

"அவள் கஷ்டத்தை நினைக்கும்பொழுது எனக்கு என் வருத்தம் மறந்துபோகிறது. அவள் கணவன் நேர்

வழியிலில்லை. என்னைவிடக் கொஞ்சம் வயதிற் பெரியவன். நாங்களிருவரும் பள்ளிக்கூடத்தி லொன்றாய்ப் படித்தோம். பணக்காரப்பையனாதலால் அவனை நாட் கழித்துப் பள்ளிக் கூடத்தில் சேர்த்தார்கள். ஐந்தாம் வகுப்பிலேயே அவனுக்குப் பரீக்ஷை தவறிப்போய்விட்டது. கிராமியமான கெட்ட வழக்கங்களும், பிறருடைய இச்சமுகம், பணமிருப்பதனால் சம்பாதிக்க வேண்டியதில்லை யென்ற எண்ணமும் அவனைக் கெடுத்துவிட்டன. சீதை, இங்கு, மாமியார் ஆதீனத்தின் கீழ் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறாள். அவன் அவளை விட்டு, பட்டணத்தில் தேவடியாளே கதி யென்று திரிந்து கொண்டிருக்கிறான்.''

''ஆயினும் உங்களுக்குச் சீதையினிட மிருக்கும் பக்ஷபாதத்தைக் காண எனக்குப் பொறாமையாய்த்தான் இருக்கிறது!'' என்று ஜானகி விளையாட்டாய்ப் பேசுவது போல் கூறினாள்.

''நான் சொல்வதை முழுவதும் கேள். ஒரு விதத்தில் நான் அவளுக்குக் கடமைப்பட்டவனா யிருக்கிறேன். எப்படியெனில், சீதையின் கணவன் எனதுயிரை ஒரு சமயம் காப்பாற்றியிருக்கிறான். காவேரியில் நான் முழுகிப்போகும் தருணத்தில் அவன்தான் என்னைப்பிடித்து மேலே யிழுத்துக் கரை சேர்த்தவன். அதற்கு பதில் இப்பொழுது நான் அவர்களுக்குச் செய்யவேண்டாமா? அவனைக் காணும்பொழுது சீதையைப்பற்றிப் பேசலா மென்று நினைத்துக் கொண்டிருக்கிறேன். பள்ளிக் கூடத்திற் படித்துக்கொண்டிருக்கும் பொழுது என் சொல்லைத் தட்டாது நடப்பான். அப்புறம் அவன் பள்ளிக் கூடத்தை விட்டுச் சென்றதும் நான்தான் அவனை கவனிக்காமலிருந்துவிட்டேன்.''

"ஆம் இப்பொழுது கேதாரி உங்களைக் கவனிக்காமலிருப்பது போல,—சரியான தண்டனைதான்!" என்று ஜானகி சற்று வேண்டுமென்றே கூறினாள்.

"ஆம், ஆம். உண்மையே," என்றான் ராமு, சிறிது தயக்கத்துடன்.—"கெட்ட நடவடிக்கைகளை யொழித்து, மீண்டும் சீதையுடன் வந்திருக்கும்படி நான் அவனை மன்றுமயாயினும் கேட்டுக்கொள்ளப் போகிறேன்."

"ஜலத்தில் மூழ்குபவனைக் காப்பாற்றப் போய், நீங்களும் மூழ்கிப்போகவேண்டாம். தயவு செய்யுங்கள்," என்று ஜானகி அர்த்தத்தோடு பேச,

"முதலில் அபிமானத்தை முன்னிட்ட இச்சிறு நற்காரியத்தைச் செய்து, நாம் செய்ய வேண்டுமென்று எண்ணியிருக்கும் கிராமச்சீர் திருத்தத்தைத் துவக்குவோம். கற்புள்ள ஒரு மனைவியிடம் அவள் கணவனைச் சேர்ப்பித்தால் அதற்கும் நீ பொறுமை கொள்வாயோ?"

"இல்லை, இல்லை. அக்காரியத்தில் என்னையும் சேர்த்துக்கொள்வதாயிருந்தால் நான் ஒன்றும் சொல்லமாட்டேன்."

இவ்வாறு ராமுவும் ஜானகியும் சீதையின் காரணமாய்த், தனித்தனியே, பலவாறாகிய எண்ணங்களில் முழுகியிருக்க, சற்றுப் பொறுத்து ராமு, "சரி, இனி நம் காரியங்களைக் கவனிப்போம். ஜானகி, ஈசுவர சம்மதமெப்படி யென்பது தெரிந்து விட்டது. நான் மறுபடியும் பி. ஏ.க்கு படிக்கப் போவதில்லை. இங்கேயே யிருந்து விடலாமென நினைக்கிறேன்," என,

"சீதையு மப்படித்தான் நமக்காகத் தீர்மானித்திருக்கிறாள்," என்றாள் ஜானகி.

"நான் வேடிக்கையாகப் பேசவில்லை. ஜானகி, என்னுடைய ஆஸ்தி எவ்வளவென்று கூறுகிறேன், கேள். ஆயிரம் ரூபாய்க் கடனுடன் ஏழு ஏகர் நிலம் தான்!"

"நன்றாயிருக்கிறது ; அந்நிலத்தை ஊதிபெறிய இவ்வாயிரம் ரூபாய்க் கடனைத் தவிர வேறு வெடி மருந்து அவசியமில்லை."

"ஆம். நாம் வீண் ஆடம்பரமின்றியும் சாமர்த்தியமாயுமில்லாவிட்டால், நீ அவ்வாறு கூறுவது பொருந்தும். அவ்வேழு ஏகர் நிலத்திற்கு வருஷத்தில் முன்னூறு கலம் நெல் விளையும். தென்னந் தோப்பிலும் வருஷம் முந்நூறு ரூபாய் வரும்படி வரும். நாம் செட்டாயிருந்து வந்தால், ஒவ்வொரு வருஷமும் முன்னூறு ரூபாய் மீத்து விடலாம். அவ்வாறு செய்து ஐந்து வருஷத்திற் கடன் முழுவதையும் அடைத்து விடக்கூடுமென்று நினைக்கிறேன். நாமிருப்பது இரண்டு பெயரே. நீ எனக்கு மனைவியாக வாய்த்ததும் என் பாக்கியவசமே யென்று கருதுகிறேன். ஏன் உயர்ந்த விவேகமான மார்க்கத்தில் நாம் காலங் கழிக்கலாகாது?"

"வாஸ்தவந்தான் ; ஆயினும் வம்பும் வீணும் குடி கொண்ட ஊராயிற்றே இது!" என்று ஜானகி சீதையை நினைத்துக்கொண்டே சொன்னாள்.

"நாம் இவ்வீட்டை விட்டு வேறுவீடு சென்று விடுவோம். என்னுடைய உத்தேசத்திற்கு அது பொருத்தமானதாகவே யிருக்கிறது. வேண்டுமானால் இப்பழைய வீட்டை விற்றுக்கூட நாம் கடனில் பாதியடைத்துவிட்டு, இவர்கள் கோழிக்குறும்புக்கும் உற்றுக் கேட்பதற்கும் உள்ளாகாமல் சுகமாயிருக்கலாம். புண்ணியநதியான காவிரிக்குச் சமீபமாயிருக்கும் தோப்பில் ஒரு சிறு கூரை வீடு அமைத்

துக்கொண்டு நமது நிலத்தில் நாமே, மற்ற பண்ணையாட்கள் யாவரையும் போலப், பயிரிட்டு வேலைசெய்வோம். எப்படிச் செய்ய வேண்டுமென்பதை யெல்லாம் முருகன் நமக்குக் கற்றுக் கொடுத்து விடுவான். இங்கு, சீட்டாடிக் கொண்டும், ஒழுங்கீனமாய்த் திரிந்து மனைவியர்களுக்குத் துன்ப மிழைத்துக் கொண்டுமிருக்கும் அயோக்கியப் பயல்கள், பணச் செருக்கினாற் சோம்பித் திரிபவர்கள், இவர்களுக் கெல்லாம் எப்படி நடப்பதென்பதை நாம் காட்டிக் கொடுப் பவர்களாயிருப்போம். ஏழை ஜனங்கள் பாடுபட்டுழைக்க, அப்பொருளைக்கொண்டு கவலையற்றிருப்பவர்க ளல்லவா அவர்கள்! ஜானகி, நமது சௌக்கியம், சந்தோஷம் இவை களின்பொருட்டு நம் கைகளால் நாமேதான் எல்லாப் பொருள்களையும் உண்டுபண்ணிக்கொள்ளவேண்டும். அப் படிச் செய்யாத எவனும் இவ்வுலகில் ஒன்றுக்கும் உரிய வனாகான்.''

"முத்து முதலித் தெருவிலிருந்ததை நினைத்துப்பார்க்கும்பொழுது இவ்வூர் எனக்கு ஸ்வர்க்கமாய்த்தான் தோன்றுகிறது. நீங்களிருக்குமிடமே எனக்கு அயோத்தி. ஆனால் என் தாயார் சென்னையில் தனியாய்க் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறாளே! அவளை நாம் இங்கழைத்துக் கொள் ளலாகாதா? அவள் வேறு எங்கு போயிருப்பாள்? அப் பொறுப்பு உங்களைத்தான் சேர்ந்தது. அவள் என்னோடு தான் இருக்க வேண்டுமென்பதை யறிந்தே நீங்கள் என்னை மணம் செய்து கொண்டீர்களன்றோ!''

"ஜானகி, அதற்காக நானிப்பொழுது கஷ்டப்பட வில்லை. உன்னை எனக்கு மனைவியாக அளித்தவளை நான் எவ்வாறு ஒரு பாரமாகக் கருதுவேன்? இங்கு வீட்டைப்

பார்த்துக்கொண்டு பெரியவளாய் உன்னுடனிருக்க அவள் வேண்டியதுதான்.''

"ஆயினும், நம் யோசனைகள், மனோராஜ்யங்கள் இவைகளொன்றையும் அவள் அங்கீகரிக்கமாட்டாள்.''

"நீ சொல்வது உண்மை, ஜானகி. அதுதான் என்னுடைய பயமும். அவளுக்கும் எனக்கும் வெகுதூரம். அவளுக்கு அதிகாரத்தில் ஆசை அதிகம். நம்மிருவருக்கு மோ அது கிடையாது. எப்படியாவது அதற்குச் சிரமப்பட வேண்டுமென்பது அவளுடைய கொள்கை. நானோ நிம்மதியாய்க் காலங் கழிப்பதையே மேன்மையெனக் கருதுபவன்.''

"ஆயினும்,—'' என்று ஜானகி நடுவிற் கூறத்தொடங்கு முன்,

அவன் மறுபடியும், "ஆனல், அவளை யிங்கு அழைத்து வைத்துக்கொள்ள வேண்டியது என் கடமை. தாயார் மேலுள்ள உன்னுடைய அன்பிற்கும் ஏற்றதாயிருக்கிறது. இங்கு வந்துவிடும்படி நான் நாளையே அவளுக்கு எழுதி விடுகிறேன்,'' என,

"அப்படியே கேதாரிக்கும் எழுதுங்கள்,'' என்று ஜானகி வேண்டிக்கொண்டாள்.

"இல்லை. நான் அவனுக்கு எழுதப்போகிறதில்லை. மீண்டும் ஒரு தரம் நான் புத்தி கெட்டு நடக்க வேண்டுமா? எப். எல். பரீக்ஷையில் தான் முதலாகத் தேறியிருப்பதை அவன் எனக்கு எழுதவில்லை. நான் மட்டும் எதற்கு—?''

"முதலாகவா?'' என்று ஜானகி சிறிது பெருமையுடனும் சந்தோஷத்துடனுங் கேட்டாள். ராமுவுக்கு அது அவ்வளவாக ரஸிக்கவில்லை யாதலால் பதிற் சொல்லாமல் மௌனமாயிருந்தான். அவளுக்குக் கேதாரி உறவென்பது

RM. MUTHIAH
ARTIST

அவனுக்கு ஞாபகமில்லை. ஆனால் கேதாரியினால்தான் ராமு தனக்குக் கணவனாக வாய்த்ததையும், தன் தாயார் கேதாரியைப் பிற்காலம் மோட்டார் வைத்துக்கொள்ளும் உயர்ந்த ஸ்திதிக்கு வரக்கூடிய புத்திமானென்று மதித்ததையும் ஜானகி சில வேளைகளில் நினைத்துக்கொள்ளாமலிருப்பதில்லை. கணவனை நோக்கி உள்ளுக்குள் சிறிது பெருமூச்செறிந்தாள். ஆனால் அது ஒரு க்ஷணம்தான் நின்றது. அதற்குள்ளாகவே தன் மனவமைதியை ஜானகி மீண்டும் பெற்றாள்.

---

## அத்தியாயம் 11.

### அதிருஷ்டத்திற்கே காலம்.

"கேதாரி, உன்னைப்போல் ஒரு மருமகன் எனக்குக் கிடைத்திருக்கலாகாதா? எதிலும் வெற்றியுடன், எப்பொழுதும் உற்சாகமும், தைரியமும் வாய்ந்து, அடர்ந்த புதரினூடு பாய்ந்து செல்லும் கோடரியைப் போல், எவ்விதத் தடைகள் நேரிட்ட போதிலும் அவைகளை நீக்கிக் கொண்டு மேலே செல்லும் சக்தியை நீதான் பெற்றிருக்கின்றாய்!" என்று மீனாக்ஷி தன்னைப் பார்க்க வந்த கேதாரியைப் புகழ்ந்துரைத்து உள்ளே வரவேற்கலானாள். சென்ற இரண்டு மூன்று மாத காலத்திற்குள் தான் இயற்றிய அரிய செயல்களை அவளிடம் சுருக்கமா யெடுத்துரைக்க, அவன் அங்கு வந்து சேர்ந்தான். காணும்பொழுதெல்லாம் அவள் கொண்டாடாவிடினும், அவள் புகழ்ச்சி தன்னைத் தூண்டி, உற்சாகப்படுத்தும் திறமை பெற்றிருந்ததை அவன் அறியாதவனல்ல.

"ராமுவைப்பற்றி நீங்கள் பிசகாகச் சொல்லுகிறீர்கள்," என்று கேதாரி தன் நண்பனைப் பற்றி ஆர்வத்துடன் கூறத் தொடங்கினான். "அவனைப் போல் பெருந்தன்மையான ஸ்வபாவம் படைத்தவன் இவ்வுலகில் இருப்பது அரிது. இக்கலிகாலத்தில் அவன் தப்பிப் பிறந்திருக்கிறானென்றே சொல்ல வேண்டும். அவன் தத்துவ விசாரி; ஸம்ஸாரத்தி லேற்படும் துன்பங்களை அடிக்கடி ஆழ்ந்து யோசிப்பவன். என்னைப்போல் இவ்வளவு ஆடம்பரம் அவனிடம் இல்லையே ஒழிய, புத்தியில் எனக்குச் சற்றும்

குறைந்தவ னல்ல. ஆழ்ந்து, பரந்த நோக்கங்களையுடைய ராமுவை, ஸ்வயநல முயற்சிகளில் ஓய்வொழிவற்றிருக்கும் இவ்வுலகம் எவ்வண்ணம் அறியக்கூடும்? தன் நற்குணங் களை யெல்லாம் நெற்றியிலெழுதி ஒட்டிக்கொண்டு அவன் திரிபவனல்ல. தம்மைத்தாமே விளம்பரப்படுத்திக்கொள் பவர்களுடைய காலமன்றோ இது? அது தெரிந்தே ராமு தன்னைப்பற்றிப் பேசாமலிருக்கிறான். மேலந்தஸ்திற்கு வர வேண்டுமென்ற பேராசையும், அதற்கு இடை விடாமற் செய்யும் பிரயத்தனங்களுமே வாழ்வில் பிரதான மென்று அவன் நினைக்கவில்லை. இவ்வளவு தாழ்ந்த நிலைமையில் நான் பிறந்திராவிட்டால், ஒருவேளை நானும் ராமுவைப் போல்தான் இருப்பேனோ என்னவோ? அத்தை! நான் இவ்வளவு தூரம் அவனுக்காகப் பரிந்து பேசுவது உங்க ளுக்கு வேடிக்கையாயிருக்கின்றது. ஆயினும் உங்களுக்கு வாய்த்திருக்கும் மருமகன் உயர்ந்தவ னென்பதில் எனக்கு அணுவளவும் சந்தேகமில்லை.''

"வாஸ்தவந்தான்; எதில் குறைவு? இரண்டு வருஷம் பீ. ஏ. தவறியிருக்கிறது; ஆயிரம் ரூபாய்க் கடனுடன், ஏழு ஏகர் ஆஸ்தியுமிருக்கின்றது!'' என்றாள் மீனாக்ஷி அமைதியாய். "தன் மேலிருக்கும் ரோமத்தை உதிர்த்தாற் கூட, கத்தத் தெரியாமலிருக்கும் ஆட்டுக் குட்டியைப் போல், பரம ஸாது ராமு. கம்பளி பிறருக்கு சௌக்கியமா யிருந்தாலும், பனி காலத்தில் ஆடு குளிரில் விரைத்துக் கிடக்கவேண்டியதுதா னல்லவா? உதாரகுண முள்ளவனா யிருந்தாலும், ராமுவுக்குப் புத்தி போதாது. கேதாரி, நான் வரதக்ஷிணையாகக் கொடுத்த ஆயிரம் ரூபாயையும் அவன் கண்டபடி செலவழித்தது மல்லாமல், என்னிடம் அதன் கணக்கைக் கூறவுமில்லை.''

மீனாக்ஷி தன்னையே மடக்கிப் பேசியதை யறிந்து கேதாரியின் முகம் சிறிது சுண்டிற்றெனினும், மறு நிமிஷமே தன்னைச் சரிப்படுத்திக் கொண்டு அவன் பதிலுரைக்கத் தொடங்குமுன், அவள் மீண்டும், "ராமுவால் ஜானகிக்குச் சந்தோஷ மேற்படாது. இரண்டு வேளையும் சமைத்துக் கொண்டு அடுப்பங்கரைதான் அவள் கதியென்பதிற் சந்தேக மில்லை. கேதாரி, உன்னைப் போல் ராமு பெரிய அந்தஸ் திற்கு வரக்கூடியவ னல்ல. படிப்பை நிறுத்தாமல், மறு படியும் பரீக்ஷைக்குப் படிக்கத்தான் வேண்டு மென்று அவனுக்கு எழுதினாயா? பீ. ஏ. பரீக்ஷை தவறியவன் மெட்ரிகுலேஷன் பரீக்ஷை தேரியவனைக் காட்டிலும் சிறி தும் மேலானவனல்லனென்று எழுது.—என்ன, அவனுக்கு நீ இதுவரையும் எழுதவேயில்லையா? அழகுதான்! ஆனால் நீ பீ. ஏ.யில் முதல் வகுப்பில் தேறியவன். எப். எல். பரீக்ஷையிலும் முதலாயிருப்பதுடன் மார்க்கண்டமய்ய ரோடும் சிநேகமாயிருக்கிறாய். ராமுவைப்பற்றி இப்பொ ழுது உனக்கு ஏன் ஞாபகம் வரப்போகின்றது? அவன் இன்னும் வயதில் பெரியவன்;—கட்டிக்கிழித்தக் கந்தைத் துணிக்கு சமானம்தான் அல்லவா?" என,

"அப்படிச் சொல்ல வேண்டாம். எழுதுவதற்கு முன் உங்களுடன் கலந்து பேச வேண்டு மென்று நினைத் திருந்தேனே யொழிய வேறல்ல," என்றான் கேதாரி.

"ஓகோ! நீ அதைப் பற்றிப் பேசத்தான் இப்பொழுது இங்கு வந்தாய் போலும்!" என்றாள் மீனாக்ஷி பரிஹாஸ மாய். "சாமர்த்தியமான பதிற்கூட உனக்குச் சொல்லத் தெரியவில்லையே! ஐந்து வருஷ காலமாய் இருவரும் எவ் வளவு சிநேகமாய் இருந்தீர்கள்! ஸாமான்ய நிலைமையி லிருக்கும் தங்கள்தோழர்களை அதிருஷ்டமுள்ள பையன்கள்

எங்கேயாவது பிற்பாடு நினைத்துக் கொள்வதுண்டோ? அஃது உலக வியல்புக்கு முற்றும் விரோதமன்றோ?"

"அப்படியல்ல, அத்தை! நீங்க ளிவ்வாறு என்னைப் பேசக்கூடாது. என் நிலைமையை நீங்கள் அறியமாட்டீர்கள். நான் எழுதினால் அது ஒருவேளை ராமுவுக்குப் பிடிக்காமலிருக்கலாம். நான் எழுதாமலிருந்தாலும் அவன் என்னைப்பற்றித் தப்பபிப்பிராயம் கொள்ளக்கூடும். ஜானகியின்மீதுள்ள அபிமானத்தினால் நீங்கள் என்னைக் குற்றம் சாட்டுவது நியாயமே. ஆயினும் என் ஸ்திதியை யறிந்து நீங்கள் பேசவேண்டும்!"

தான் கொஞ்சம் அதிகமாகவே பேசிவிட்டோமென் றெண்ணி, மீனாக்ஷி, இவ்வியாஜத்தைக் கொண்டு அவன் தன்னுறவை ஒழித்துவிட இடங் கொடுக்கலாகாதென்று கருதியவளாய், "ஏதோ பேசும் சாமர்த்தியம் இப்பொழுது அதிகமாய்த்தான் இருக்கிறது. அதனால்தான், பெரியவர்கள் சிறியவர்களென்ற வித்தியாசமில்லாமல் யாவரும் உன்னுடன் சந்தோஷமாய்ப் பேசக் கிளம்பிவிடுகிறார்கள்!" என்றாள். வயதிற் பெரியவளாயிருந்தும், அவள் இவ்வாறு வெகு சாதுர்யமாயும் அழகாயும் அவனை முகஸ்துதி செய்து கொண்டிருக்கையில், தபாற்காரன் ஒரு கடிதத்தை வாயிற்படியில் விட்டெறிந்து செல்ல, மீனாக்ஷி அதை உடைத்துப் பார்த்தாள். கடிதம் பின் வருமாறு:—

அலவந்தி
ஜூன், 19.

க்ஷேமம்.

அநேக நமஸ்காரம்

நான் நிலங்களைப் பார்த்துக் கொண்டு கிராமத்திலிருப்பது தான் தெய்வ சம்மதமென்று தெரிகின்றது. ஆகவே ஜானகியுடன் இங்கேயே யிருந்து நிலத்து வரும்படியைக் கொண்டு நிம்மதியாய்க் காலம் தள்ள நான் உத்தேசித்து விட்டேன். ஜானகியின் தாயென்ற பாத்தியத்தில் நீங்களும் இவ்விடம் வந்திருக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

ராமசந்திரன்.

இக்கடிதத்தைப் படித்து முடித்ததும், மீனாக்ஷி, "சேதாரி, உனது கஷ்டம் தீர்ந்து விட்டது! இதோ ராமுவிடமிருந்து லெட்டர் வந்திருக்கிறது. படித்துப்பார். ஜானகியின் தாயென்ற பாத்தியத்தில், என்னைத் தங்களுடன் வந்திருக்கும்படி கூப்பிடுகிறான். எவ்வளவு முடுக்காயும் அலக்ஷியமாயும் எழுதியிருக்கிறான், பார்த்தாயா? மகா சாந்தன், மரியாதை மீறி ஒருபோதும் பேசமாட்டான் என்றெல்லாம் கொண்டாடினாயே!" என்றாள்.

ஒரு நிமிஷம் யோசனை செய்து, மறுபடியும், "நல்லது, அவன் அழைத்ததற்கு மறுக்காமற் சென்று, ஒருவாரத்தில் அவர்கள் இருவரையுமே இங்கு அழைத்துக்கொண்டு வந்து விடுகிறேன். ராமு இன்னும் சிறு பையனே. பெரியவர்கள் கூறுவதை எவ்வாறு கேட்டு நடக்க வேண்டுமென்பதை அவனுக்குக் கற்றுக்கொடுக்கின்றேன். தாய் தந்தையரில்லாதவர், ஓட்டுவாரற்றுத் தானே மிதந்து சென்றுகொண்டிருக்குங் கப்பலைப் போன்றவரல்லவா? கப்பலோட்டியா

யிருக்கும் வேலையை நானே ஏற்றுக்கொள்ளுகிறேன். ஏழெட்டு வயது சிறுவனைப்போல், இனி அவனைத் தானாக ஒன்றும் செய்ய விடாமல், என்னுத்திரவின்படி நடக்கும் சிக்ஷையில் கொண்டுவரவேண்டும். எனக்கு வெகு வருஷங்களுக்கு முன், ஜானகிக்குப் பெரியவனாய், ஏழு வயதில் ஒரு பிள்ளை யிருந்தான். அவனை நானப்படித்தான் நடத்துவது வழக்கம். அந்தோ! அவனிப்பொழுது இருந்தால், இருபத்தைந்து வயதுக் காளையாய்க் குடும்பத்திற்கு எவ்வளவு ஆதரவாயிருப்பான்! ஜானகியின் அடக்கமும், பயந்த ஸ்வபாவமும் அவனுக்குக் கிடையாது. எனது சுறுசுறுப்பையும் தைரியத்தையுமே கொண்டிருந்தான்!" என்று இவ்வண்ணம் அவள், பழைய ஞாபகங்களிற் சென்று, தானே சொல்லிக்கொள்ளவே, கேதாரி, இனித் தாமதிக்கலாகாதென்று அவளிடம் விடை பெற்றுச் சென்றான்.

---

# அத்தியாயம் 12.

## அதிவிருஷ்டி.

அவ்வந்திக் காவேரியில் வெள்ளம் மேன்மேலும் பெருகிக்கொண்டிருந்தது. ராமு, ஜானகி, மீனாக்ஷி இம் மூவருக்கும் மனவமைதி சற்றுமில்லாத நாட்களாயிருந்தன. கூட்டிலடைபட்டிருக்கும் குட்டியின்பொருட்டுச் சண்டையிடும் பெண்சிங்கம்போல், மீனாக்ஷி பெண்ணின் நிமித்தம் போருக்கு நிற்கலானாள். தைரியத்தோடும் விடாமுயற்சியோடும் தாய் ஒருபுறம் சண்டையிட, தன்னையடைத்துத் திறவுகோலைத் தன் கையிற் கொண்டுள்ள கணவன் வாய் பேசாது அமைதியாய் மற்றொருபுற மிருப்பதையுங் கண்டு, ஜானகி ஒன்றும் செய்யத்தோன்றாது கலங்கினாள். பேராசைக்கு நிகராகத் திருப்தியும், கோபத்திற்கு முன் நிதானமும், சண்டைக்கு எதிராகப் பொறுமையும், வார்த்தைகளுக்கு பதில் மௌனமுமாய் இருக்கவே, அது மீனாக்ஷியின் சாமர்த்தியத்திற்கும் மேற்போய், அவளது வன்மையையும் ஒடுக்கியதுபோல் தோன்றிற்று. தனதிஷ்டத்தைத் தான் எவ்வளவு உறுதியுடன் செலுத்துகிறோமென்பதை யறிய ராமுவுக்கே ஆச்சரிய முண்டாயிற்று. இப்பொழுது தான் அவன் முதன்முதல் தனக்கெவ்வளவு மனோதிடமிருக்கின்றதென்பதை யுணரலானான். ஆயினும் மீனாக்ஷியும் எளிதில் அடங்கிவிடுவதாயில்லை. ஒரு காரியம் அவளால் அடியோடு நின்றுபோயிற்று. வீட்டைவிட்டுத் தென்னந்தோப்பில் போய் வசிக்கலாமென ராமு உத்தேசித்ததை முற்றிலும் பைத்தியக்காரத்தனமெனக் கூறி, அவள் தீர்மானமாய்த் தடுத்துவிட்டாள்.

பூமிக்குள் பதுங்கியிருந்து நடத்தும் சண்டைபோல் இவ்வாறு ஐந்து மாதகாலம் யுத்தம் விளங்தும், இருதிறத் தாருக்கும் சிறிதேனும் வெற்றி யென்பது உண்டாகவில்லை. ஐப்பசி பிறந்து மழை பலமாகத் தொடங்கிவிட்டது. தங்கள் நினைவுக்கெட்டியவரையில் ஒருபொழுதும் அவ் வாறு மழை பெய்ததை அவ்வூர் ஜனங்கள் அறிந்தவரல்லர். இயற்கையினழகைக் கண்டு களிக்கும் மனோபாவத்தை யுடைய ராமு, மழை பொழியுங்கால் ஆகாயம் கரியமேகங் கள் சூழ்ந்து, இருண்டு தோன்றுவதைக் காண்பதிற் பேரவா உடையவன். மழை நன்றாய்ப் பெய்து எங்கும் பச்சைப் பசேலென்று ஆவதைப்பார்க்க அவனுக்கு மிகவும் சந் தோஷம்.

தான் நிலத்தைப் பார்த்துக்கொள்ளும்முதல் வருஷமே நன்றாய் விளையப்போவதாகப் பூர்ண நம்பிக்கை ராமுவின் மனதிற் குடிகொண்டது. வயல்களெல்லாம் நீர் நிரம்பிப் பசுமையாய் விளங்க, பிரஸவகாலத்தை யெதிர்பார்த்திருக் கும் தாய்போல் முருகனும் மிக்க ஆவலுடனும் குதூஹலத் துடனும் அறுப்பு நாட்களை விரல்விட் டெண்ணிக்கொண் டிருந்தான். சாதாரணமாய், எப்பொழுதும், மழை சேர்ந் தாற்போல் ஒருவாரம்தான் பெய்வது வழக்கம். ஆனல் இச்சமயம் பதினைந்து நாட்களுக்கு மேலாகியும் சற்றும் ஓய்வதாய்க் காணவில்லை. காவேரியைப் பார்க்கப் பயங் கரமாயிருந்தது. இருகரையும் புரண்டு, ஓடும் சமுத்திரமோ வெனத்தோன்ற, ஜனங்கள் அதைப்பார்த்துக் கவலை கொள்ளலாயினர். வெள்ளம் இன்னும் பெருகிக்கொண்டே யிருந்தது. நடுநிசியில் அலவந்திக்கு மேற்கே கரை சிறிது சரிய, பொழுதுவிடிவதற்குள் சகலப் பிராணிகளுக்கும் நாசம் தோன்றுமாறு, எங்கும் ஜலமயமாகிவிட்டது. ராமு

வின் வயல்களெல்லாம் சேதமாகவும், கப்பலுடைந்து தவிக்கும் கப்பற்றலைவன்போல், வருந்தலானான். ஜானகியும் உணர்வழிந்து, கணவன், தாய் இருவர் நடுவிலுமகப்பட்டுக் கொண்டு துன்புற்றாள். ஆயினும் இச்சர்வநாசத்தின் மத்தியில், மீனாக்ஷிக்குமட்டும் ஏதோ நன்மையே வருவதுபோல் மனதிற்பட்டது. மறுபடியும் அவள் தன் பிரயத்தினத்தைத் தொடங்க, சம்பாதிக்காதவன் புருஷனல்லவென்று ஸ்திரீகள் பெரும்பாலும் கருது மியல்புள்ளவர்களாதலால், ஜானகியும் மெதுவாய்த் தாயுடன் சேரலானாள். இப்பொழுது ராமுவால் மீனாக்ஷியை யெதிர்க்க முடியவில்லை. நிலங்களெல்லாம் பாழாய்ப்போகவும் இனி யென்ன செய்வதென்பது பெருங் கவலைக் கிடமாகிவிட்டது.

வெள்ளம் ஊரை யழித்த பிறகு ராமுவும் மாறிவிட்டான். வயல்களைச் சரியாக்கி முன்போல் பயிரிடுவதற்குக் குறைந்தது மூன்று வருஷம் செல்லும். ஒன்று, அவன் எப்படியாவது சம்பாதிக்கவேண்டும்; அல்லது சந்நியாசியாய் வனத்தை நோக்கிச் செல்லவேண்டும். இளமையும், அழகும் வாய்ந்த ஜானகியை மனைவியாகப் பெற்றிருக்கும் பொழுது, அது எளிதில் சாத்தியமா? அவன் உத்தியோகம் செய்துதானாகவேண்டும். பணமில்லாமல் மீண்டும் காலேஜில்போய்ச் சேருவது முடியாத காரியம். மேலும் அவனுக்கு மறுபடியும் படிப்பதில் மனதுமில்லை. குமாஸ்தா வேலைக்குச் செல்வதுதான் அவன் தலைவிதிபோல் தோன்றிற்று. தெய்வ சம்மதம் அவ்வாறிருந்தால் அவன் ஏன் அதை யெதிர்க்க முயலவேண்டும்? தன் விதிப்படியும், மீனாக்ஷி சொற்படியும் நடக்கத் துணிந்து ராமு இருபத்தைந்து ஜில்லாக்களிலுமுள்ள சிறு ஸர்க்கார் வேலைகளுக்கு மனு எழுதிப்போடத் தொடங்கினான்.

ஒரு நாட்காலை கடப்பையிலிருந்து, இருபத்தைந்து ரூபாய் சம்பளத்தில் ஜில்லா கலெக்டரிடம் காலியாயிருக்கும் "காம்ப் கிளார்க்" உத்தியோகத்திற்கு அவனை யெடுத்துக் கொள்வதாக அவனுக்குக் கடிதம் வந்தது. வறண்ட பூமியாகிய கடப்பையில் கொளுத்தும் வெய்யிலையும், பிரசித்தமான முறை ஜ்வரத்தையும் ராமு உடனே நினைத்துக்கொண்டான். பின்னோடு காவிரியாற்றின் கரையிலிருக்கும் தன்னழகிய கிராமமும் நினைவிற்றோன்ற, அவனது உள்ளம் வாடிற்று. ஆனால் மீனாக்ஷியோ ஜானகிக்குக் கடைசியாக அதிருஷ்டம் பிறந்துவிட்டதென மனம்பூரிக்கலானாள். ராமு மெதுவாய்ச் சிறிது ஆக்ஷேபித்துப் பார்த்தான். ஓர் தெலுங்கு ஜில்லாவில், அற்ப "காம்ப் கிளார்க்" உத்தியோகத்தில் அவர்களனுபவிக்கப்போகும் தரித்திரத்தை அவன் எடுத்துரைத்துப் பார்த்தும், மீனாக்ஷி அவைகளுங் கொன்றும் பதிற் கூறாமல், புறப்படுவதற்கு வேண்டிய சாமான்களைச் சேகரித்து மூட்டை கட்டத் தொடங்கினாள். பாபம்! ராமு என்ன செய்வான்! விதி விட்ட வழியாகட்டுமென்று தீர்மானித்துக் கொண்டான்.

———

## அத்தியாயம் 13.

### விடைகோள்ளல்.

மீனாக்ஷி அலவந்திக்கு வந்த பிறகு ஜானகியும் சீதையும் அடிக்கடி சந்திக்க முடியாமற் போயினும், அவர்களன்பு சிறிதும் குறையவில்லை. ராமுவுக்கு வேலையான சங்கதி மறுநாட்காலை ஆற்றங்கரையில் சீதைக்குத் தெரியவந்ததும், அவள் சாயங்காலம் ஜானகியைப் பார்க்கச் சென்றாள். நாட்டுப்பெண்கள் தம்மோடொத்த தோழிகளுடன் உற வாடி உற்சாகமா யிருப்பதை மாமிமார்கள் கண்டு பொறுப் பார்களா? சீதையின் மாமியார் ஜானகியின் ஜாதியைப்பற் றியே சந்தேகம் கொண்டிருந்ததால், சீதை அவர்கள் வீட்டிற் குச் செல்வதே யில்லை. அன்று அவள் ஜானகியைப் பார்க்க வந்த சமயம் சரியாயிருந்தது. ராமு தோப்பிற்குச் சென் றிருந்தான். மீனாக்ஷியும் ஆற்றங்கரைக்குச் சென்றிருந்தா ளாகையால் ஜானகி தனியாய்த்தா னிருந்தாள்.

"ஜானகி! நீ போவதில் எனக்குத்தான் யாவரையும் விட வருத்த மதிகம். ஏனெனில் உன்னை என் சகோதரி போலவே யெண்ணியிருந்தேன்."

"உண்மையே. சீதா, நாங்களும் அவ்விதமே நினைக் கிறோம். ஊரைவிட்டுச் சென்ற பிறகு நமக்காக வருந்து வோர் சீதை, முருகன் இவ்விருவரைத் தவிர, இவ்வூரில் வேறு ஒருவரு மில்லை யென அவர்கூட இப்பொழுதுதான் சொல்லிக்கொண்டிருந்தார்."

இதைக்கேட்க சீதை முகமலர்ச்சியுடன், "ராமு அதிக அன்பும் பெருந்தன்மையுடையவர்," என்று கூறிப், பின்

னும் மெதுவாய் ஜானகியின் கைகளை யெடுத்துத் தன் கைகளில் சேர்த்து வைத்துக்கொண்டு, "உன்னகத்துக்காரர் எங்கள் விஷயத்திற் செய்த பேருதவியைப்பற்றி உன்னிடம் வெகு நாட்களாய்ச் சொல்லவேண்டு மென்று எண்ணியிருந்தேன். ஜானகி, கோவில்குளமெங்கும் நீங்களிருவரும் நன்ருயிருக்கவேண்டு மென்றுதான் நான் தெய்வத்தை வேண்டிக்கொள்ளும் பிரார்த்தனையாகும். உங்களாலன்ருே என் கணவர் மீண்டு மகத்துக்கு வந்து சேர்ந்தார்! உன்னகத்துக்காரர் பலவிதமா யெடுத்துச் சொன்ன புத்திமதிகளாலல்லவா அவர் கெட்ட நடவடிக்கை தொலேந்தது! எனது குடும்பசந்தோஷம் முழுவதும் உங்களைச் சேர்ந்தது. என்னகத்துக்காரர் இப்பொழுது என்னிடம் மிகவும் பிரியமாய் நடந்துகொள்கிருர். எனக்கு விவாகமானதுமுதல் இவ்வாறு அவர் ஒருபோது மிருந்ததில்லே. உன் கணவரை நேரிற் கண்டு நான் பேசுவது வழக்கத்திற்கு விரோத மென்பதனுலேயே, உன் மூலமாய் என் நன்றியறிவை வெளிப்படுத்துகிறேன். ஜானகி, என் மனதை வெளியிட்டுச் சொல்லுகிறேன். அவரையே நேரில் கண்டு நமஸ்காரம் செய்து, என் நன்றியறிவைக் காட்டவேண்டு மென்பது என் கருத்து—" என்று உருக்கமான குரலில் உரைத்தாள்.

"அதற்கென்ன? சீதா, நீ இப்பொழுதே வேண்டுமானுலும் பார்த்துப் பேசு; எனக்கு ஆக்ஷேபணை யில்லே. வழக்கத்தை யொன்றும் நான் கவனிக்கப்பட்டவளல்ல. பொருமையுள்ளவளுமல்ல. நீயோ குற்றமற்ற உத்தமி. நீங்களிருவரும் பேசுவதே எனக்கு ஸந்தோஷத்தை யளிக்கும். அவரும் உன்னைப்பற்றி எப்பொழுதும் பேசிய வண்ணமா யிருக்கிருர்."

இவ்வாறு பேசினால் சீதைக்குச் சந்தோஷ மதிகமா யிருக்கு மென்பதை யறிந்தே ஜானகி இவ்வண்ணமுரைத்து, சீதையின் கைகளைச்சேர்த்துப் பிடித்துக்கொண்டாள். ஜானகி பிசகாய் எண்ணிக்கொள்வா ளென்று எண்ணி யிருந்தவளாதலால், இப்பொழுது அவ்வுரைகளைக் கேட்ட தும் சீதைக்குச் சந்தோஷத்தினால் மார்பு படபட வென் றடித்துக்கொண்டது. ஓர் சகோதரிபோல், ஜானகி இவ் வாறு பக்ஷத்துடன் நடந்துகொண்டதைப் பார்த்து அவள் வியப்பினாலும், ஆநந்தத்தினாலும் பேச நாவெழாமலிருந் தாள். வேகமாய்ச் சுழலும் பம்பரம் தூங்குவதுபோல, அவள் மனமும் மயக்க முற்றிருந்தது.

ராமுவின் தென்னந்தோப்பு மேட்டுநிலமாதலால், ஆறு உடைத்துக்கொண்டதில் அதற்கொரு தீங்கும்நேரிட வில்லை. முன்னிலும் அடர்ந்து செழித்தே தோன்றிற்று.

"முருகா, என் பேரில் குற்றம் சொல்லாதே. மழை யின்மேல்தான் நீ குற்றங் கூறவேண்டும். எவ்வளவு மாத காலமாய் நான் என் உறுதியைக் கைப்பற்றிவந்தேன்! தெய் வத்தை நாம் எதிரிட்டு வாழ முடியுமா? இப்பொழுது மூன்று பெயர்களுக்கு நான் அன்னமிட்டாகவேண்டும். ஒரு வருஷம் பயிர்கள் சேதமானால் பிறகு மூன்று வருஷங் களுக்கு அந்நஷ்டத்தினின்றும் மீண்டுவருவது சிரமமல்ல வா?" என்று ராமு முருகனிடம் மெல்ல விஷயத்தைத் தெரிவித்தான்.

"ஜல மில்லாமே பயிர் காஞ்சு சேதமாப் போனா, அப் போ எசமான் சொல்றது வாஸ்தவந்தான். இப்போ வெள்ளம் பெருகியதிலே காலடி வண்டல் படிந்து, நல்ல எருவாக வல்லவோ ஆயிருக்குது, சாமி! நஷ்டமாப்போன

பயிரை இரட்டிப்பாய்ச் செழிக்கச்செய்யத்தானே வந்து சேர்ந்த எரு இது! இப்போ பார்த்தா சேதமாய்த்தான் தோணும்! காவேரி உடைத்துக்கொண்டது, நமது பாக்ய மின்னே சொல்லவேணும். அடுத்த வருசம் இரண்டு பங்கு விளையப்போகுது, பாருங்க. இப்பவே வயல்களை உழ ஆரம்பித்துவிடலாம். யாரிடமாவது கடனாகக் கொஞ்சம் விரைக்கு நெல் வாங்கி வந்துவிடுகிறேன். நாலைந்து மாசத்தில் எல்லாம் முன்னேபோலே சரியாப்போயிடும். படிச்சவங்க, பெண் பிள்ளைங்க பயப்பட்டாலும், உழைத்து அடிபட்ட குடியானவங்க நாங்க வெள்ளத்துக்கு ஒருபோதும் அஞ்சமாட்டோம். சாமி, நான் கேட்டுக்கொள்றேன்—இங்கிருந்து போகவேண்டாம். தோப்பிலே எப்படியாவது பாடுபட நானிருக்கிறேன். தென்னைமரம் காமதேனு வாச்சே! அதை யாராதிச்சுப் பாடுபட்டா உலகிலே என்ன குறைவு?'' என்று முருகன் வேண்டிக்கொண்டான்.

"அதெப்படி முடியும், முருகா? விரைக்குவிட நெல், சாப்பாட்டிற்கு நெல், இரண்டும் வாங்கவேண்டும். அது தவிர, உழுவதற்குக் கூலி;—பிறகு கிஸ்தி கட்டவேண்டும்! முடுக்கிவிட்ட யந்திரம்போல், ஸர்க்காரில் கண்ணை மூடிக்கொண்டு கிஸ்தி வசூல் செய்வார்களே! எல்லாவற்றிற்கும் மேல், கடனுக்கு வட்டியும் வளர்ந்துகொண்டே யிருக்கும் பொழுது, நாங்கள் மூன்று பெயர்கள், நீ, பொன்னி, இவ்வைவரும் எப்படிக் காலம் தள்ளமுடியும்? இத்தோப்பு அவ்வளவிற்கு ஈடு கொடுக்கக் கூடுமா! விஷயங்களை உள்ளபடி யுணர்ந்து பேசு. வீண் மனோராஜ்யங்கள் செய்யாதே, முருகா."

"ஏழை முருகனுடைய வார்த்தையிலே எசமானுக்கு நம்பிக்கை யிருக்காதுதான்! வயல் சோட்டிற் போய்த்

திரும்பிக் கொட்டகைக்கு வா நம்ம காளைக்கு வழி நன்னு தெரிஞ்சிருப்பது போலே, எனக்கு என் வேலை நன்னு தெரியும் ; சந்தேகமே யில்லை !''

"முருகா, அது ஒருவேளை சாத்திய மென்றே வைத்துக் கொண்டாலும், இப்படியாவது கஷ்டப்பட்டுக்கொண்டு இங்கு இருப்பதை என்னைச் சேர்ந்தவர்கள் வெறுக்கிறார்கள். அவர்களபிப்பிராயத்தை நான் ஒத்துக்கொள்ளாவிட்டாலும், அவர்கள் எண்ணுவ தொருவாறு நியாய மெனவும் தோன்றுகிறது. அது எதுவாயினும், இனி யோசிப்பது முடியாத காரியம். எல்லாம் முடிவாகி விட்டதால், நாளை விடியற்காலை சுக்கிரோதயத்திற்குள், நான் பிறந்த ஊர், என்ன திருஷ்டம் இவ்விரண்டினிடமும் விடை பெற்றுக் கொண்டு கிளம்ப வேண்டியதுதான். நீ என்பொருட்டு ஆக்ஷேபிப்பா யென்பதனாலேயே, நான் இதுகாறும் உன்னிடம் ஒன்றையும் கூறாமல் ரகசியமாய் வைத்திருந்தேன். முருகா, உன்னிடம் சொல்லிக் கொண்டு போகவே நானிப்பொழுது வந்தேன். கடப்பையில் ஓர் குமாஸ்தா உத்தியோகத்தை நான் ஒத்துக் கொண்டு விட்டேன்.''

"கடப்பையிலா ?'' என்றான் முருகன். "ஐயோ, அது காசியைப்போலே தூரமாச்சே ! வேண்டாம், சாமி. உங்க உடம்புக்கு அவ்வூர் ஒத்துக்கொள்ளாது.''

"இனி யென்ன செய்வது ? எல்லாம் தீர்மானித்தாய் விட்டது. நானென்ன அந்த உத்தியோகத்திலேயே என்றைக்கும் இருந்துவிடுவேனா ? முருகா, உன்னைத் தவிர வேறொருவரிடமும் நான் என் மனதிலிருப்பவைகளை வெளியிடுவதில்லை. மூன்று வருஷம் இவ்வேலையிலிருந்து விட்டு, அதில் சேர்ந்த ரூபாயைக் கொண்டும் நிலத்துவரும்படியைக்

கொண்டும் கடனை யடைத்து விடலா மென்று உத்தேசிக்கின்றேன். என் நிலங்களை யெல்லாம் நீ குத்தகை யெடுத்துக்கொள்.''

"குத்தகையா ?'' என்றான் முருகன், பிரமையுடன்.

"ஆம். நிலம், தோப்பு இரண்டிற்கும் வருஷத்திற்கு இருநூற்றைம்பது ரூபாய் கொடுத்தாற் போதும். ரூபாயை மட்டும் தவறாமல் அனுப்பிவிடவேண்டும். வருஷத்தில் ஒரு தடவைகூட நானிங்கு வர முடியுமென்று தோன்றவில்லை. குத்தகையினால் உனக்கு நஷ்டமேற்படாது. செட்டாய்க் குடித்தனம் செய்தால் நீயும் பணம் சேர்த்துக் கொள்ளலாம். முருகா, உன்னைப்பற்றி யோசிக்கும் பொழுது, எனக்கு வேலையானதில் அவ்வளவு வருத்தமில்லை.''

முருகன் கண்களில் நீர் ததும்பிற்று. "சாமி, என் மனசிலே எவ்வளவு வருத்த மிருந்த போதிலும், இந்த சமயத்திலே நான் அழுவது சரியல்ல. இந்த ஏழு தலை முறையாக ஒரு போதும் பூட்டப்படாமலிருந்த உங்க வீடு, இனி குடியிருப்பாரில்லாமே, பாழ் அடைஞ்சு போகுமே! நான் எவ்வளவுதான் பெருக்கி மெழுகி ஜாக்கிரதையா வைத்துக் கொண்டாலும், எசமானில்லாத வீடாகையால், கையாளாத மம்மட்டி துருப்பிடிச்சுப் போவது போலே, பாழடைஞ்சு போகாதா ? உங்க பார்வையில்லாமே, வயல்களும் எப்படிப் பசுமையாயிருக்கும்? மழையா யிருந்தாலும் வெய்யிலா யிருந்தாலும், உங்களைக் கண்டு தலை நீட்டி அசைஞ்சாடிக் கொண்டிருக்கும் நெற் கதிர்கள் இனி உலர்ந்து பதராகி, அறுப்புங் காலத்திலே ஒண்ணு மில்லாமலாகி விடுமே! சாமி, வீட்டை விட்டு எங்கும் போக வேண்டாம்! துரும்பு விழுந்த கண்போலே என் மனசு துடிக்குது!''

"முருகா, நீ கூறுவதைக் கேட்க எனக்கு முன்னிலும் துக்க மதிகமாகின்றது. இவ்வழகிய ஆற்றங்கரைத் தோப்பில் ஓர் சிறு வீடு கட்டிக்கொண்டு, உன்னோடு உழுது பயிரிட்டு நான் சந்தோஷமா யிருந்துவிடலா மென்று என்னாலானமட்டிலும் பாடுபட்டேன். ஆனால் என் விதிப்படி, மழையும், என் மாமியாரும் வேறுவிதமாய்த் தீர்மானித்து விட்டார்கள். ஆயினும் எல்லாம் நமது நலத்திற் கென்றே வைத்துக்கொள்வோம். அவ்வாறு நம்பியே நம் காரியங்களைச் சந்தோஷமாய்ச் செய்யவேண்டும்,'' என்றுரைத்து ராமு, விடைபெற்றுக் கொள்வதற் கடையாளமாய், முருகனை அன்புடன் பார்த்துவிட்டு மௌனமாய் வீடு திரும்பினன்.

இது நிற்க, ஜானகி குழந்தை போல் கபடமற்று அன்பாய்ப் பேசியதைக் கேட்டு, சீதையின் உள்ளம் என்றுமில்லாத களிப்பையும் சமாதானத்தையு மடைந்தது. அவ்வகையான ஆறுதலை அவள் இதற்கு முன்பு அனுபவித்ததேயில்லை. ராமுவினல் தன் கணவன் மனம் மாறி மீண்டும் தன்னிடம் வந்து சேர்ந்ததை நினைக்க, அவள் மனப்பூர்வமான நன்றி யுடையவளானாள். இரவு சமீபித்ததும் சீதை, இனி ஜானகி போய் விடுவாளே யென்ற வருத்தத்துடன் அவளிடம் அன்பாய் விடைபெற்றுக்கொண்டு, தெய்வத்தினிடம் தன் பிரார்த்தனைகளையும் வந்தனங்களையும் செலுத்தக் கோவிலை நோக்கிச் சென்றாள். அது ஓர் சிறு அழகிய விஷ்ணுவாலயம். ஒரு காலத்தில் நல்ல ஸ்திதியிலிருந்து, இப்பொழுது நித்தியப்படி பூஜைகூடச் சரியாய் நடவாமலிருந்தது.

ராமு தோப்பிலிருந்து வீட்டிற்குத் திரும்பும் வழியில் அக்கோவிலிருந்தது. சாதாரணமாய் ஆலயங்களுக்குச்

செல்வதில்லையாயினும், ஊரை விட்டுப் போவதால், ஸ்வாமி தரிசனம் செய்வோமென்று நினைத்து உள்ளே சென்றான். என்றும் போல் சந்தடியற்று விளங்கவே, மூல விக்கிரக மிருக்கும் கர்ப்பக் கிருகத்தினுள் நுழைந்தான். மினுக்கு மினுக்கென்று ஒரு சிறு விளக்கு எரிந்துகொண்டிருந்தது. இவ் வெளிச்சத்தில் விக்கிரகத்தின் முகம் சரியாய்க்கூடப் புலப் படவில்லை. ராமு சுற்றுமுற்றும் பார்த்தான். அச்சமயம் அவன் கண்ணுக்கு நேராய் ஓர் தூணுக்குப் பின்புற மிருந்து நிழலொன்று தோன்ற, மெதுவாய் ஒரு பெண்ணுருவம் வெளிக் கிளம்பவே, ராமுவின் இருதயம் படபட வென்று அடித்துக்கொண்டது. பூஜைகளொன்றும் சரியாக நடக்கா விடினும், அக்கோவில் அம்பாள் பிரத்தியக்ஷ தெய்வமென் றும், மிக்க சக்தி யுடையவ ளென்றும் அவ்வூரில் பிர ஸித்தம். ஈசுவரியே பிரத்தியக்ஷமாகித் தனக்குத் தரிசனம் கொடுக்கின்றாளோ வென்று ராமு திகைத்து நிற்கையில், அவ்வுருவம் வேகமாய் வந்து, வியர்த்திருக்கும் தன்னிரு கரங்களையும் சேர்த்துக் கூப்பிக் கொண்டு அவன் காலடியில் விழுந்து நகஸ்கரித்தது. "நான்தான் சீதை. இவ்வாறு பெண் தன்மைக்குத் தகாதபடி தைரியமாய் நடப்பதை மன்னிக்கவேண்டும். உங்கள் மூலமாய் அம்பாள் எனக் கிரங்கி அருள் செய்திருப்பதால், நான் அவளைத் தரிசனம் செய்ய வந்தேன். அவள் உங்களையே நேரில் இங்கு அனுப்பி விட்டாள். அவளது ஆஞ்ஞை அவ்வாறு இருக்கும் பொழுது, நான் உங்களைத் தொழுது பணியாம லிருக்க லாமா? என் நடத்தை நாண மற்றதாகத் தோன்றினல் மன்னிக்க வேணும். இப்பரிசுத்தமான விடத்தில் நமஸ் காரமே பெரிய பூஜை. வேறு வார்த்தைகள்—"என்று ஓர் மெல்லிய குரல் கூறக் கேட்டு,

"சிதா, எழுந்திரு. நான் சற்றுத் திடுக்கிட்டு விட்டேன்," என்றான் ராமு. "உன் கஷ்டங்கள் விடிந்தன வென்று கேட்க என் மனம் அளவற்ற சந்தோஷ மடைகின்றது. எழுந்திரு; நம்மேல் கருணைகூர்ந்த அம்பாளை இருவருமாய்க் கைகூப்பி வணங்குவோம். உன் கணவனை கும்பகோணத்திற் கண்டபொழுது, என் மனதிலிருந்த வற்றைக் கொஞ்சம் கடுமையாகவே யெடுத்துச் சொல்லிக் கண்டித்தேன். அதனால் அவன் திருந்தியது பெரிய சந்தோஷம்."

"இப்பொழுது அபிமானமாய்த்தானிருக்கிறா ரென்றாலும், இன்னும் சரியான நிதானபுத்தி யுடையவராக வில்லை. நீங்களும் ஊரைவிட்டுப் போகின்றீர்களே!" என்றாள் சீதை மெதுவாய்.

"வெகு வருஷங்களாகப் படிந்த தீய வொழுக்கங்கள் ஓரே நாளில் அகன்று விடுமா? சீதா, எல்லாம் நீ கொண்டு வரும் சாமர்த்தியத்தில் தான் இருக்கின்றது!"

"இருந்தாலும் புருஷர்கள் புருஷர்கள்தா மல்லவா? மேலும் என் கணவர் நடவடிக்கையும் அவர் எண்ணங்களுமோ—" சீதை மேலே சொல்லச் சிறிது தயங்க,

"ஆம்; கற்றறிந்தவனுக்கு ஏற்றதா யில்லை யென்பது உண்மையே," என்றான் ராமு. "என்ன செய்வது! சீதா, நீ இன்னும் மேலான பதவியையும் புருஷனையு மடைந்திருக்க வேண்டும்! அழகும் குணமும் அவைகளுக் குரிய விடத்திற் போய்ச் சேராமல், இவ்வாறு நியாய விரோதமாய்ப் பொருத்த மல்லாத விடத்திற் சேரும்படி நேருவது எதனாலென்று எனக்குச் சிறிதும் விளங்கவில்லை. ஈசுவரனுக்குக் கிருபை யிருக்கின்றதோ இல்லையோ வென்றும் தோன்று

கிறது. வானத்தின் நீல நிறம் போலும், கடலின் வர்ணம் போலும், விவாகமும் இவ்வித மென்று எடுத்துரைக்கக் கூடியதா யில்லை. மணமும், வானத்தின்கண் ஓரிடத்தில் நில்லாம லோடிக்கொண்டு மழை பெய்வதும் பெய்யாததுமாய் இருக்கும் மேகத்தைப் போலவே யிருக்கிறது. சீதா, இவ்விஷயங்களைப்பற்றி நான் எப்பொழுதும் ஆலோசிப்பதுண்டு.''

''நீங்கள் கூறுவது யாவும் உண்மையே. விவாகத்தைக் கை நகத்திற் கொப்பாகவும் சொல்லலாம். விரலோடு சேர்ந்திருக்கும் பொழுது நகமானது ஓர் அலங்காரமாகவே யிருப்பினும், கிள்ளி யெறிந்தவுடன் அருவருப்பைத் தரக் கூடியு தாகின்ற தல்லவா ?''

"சீதா, நீ கூறிய உபமானம் சாதாரணமா யிருப்பினும், பொருத்தமானதாயும் அர்த்தபுஷ்டி யுள்ளதாயு மிருக்கின்றது !''

''நாளை நீங்கள் யாவரும் கடப்பைக்குப் பிரயாணமாவதை ஜானகி என்னிட மிப்பொழுதுதான் தெரிவித்தாள். நீங்கள் இவ்வூரை விட்டுச் செல்வதில் எனக்கே யாவரையும்விட வருத்த மதிகம். ஜானகி யிருந்ததனுல் தான் இதுவரையும் ஒருவிதமாய் நான் மனம் தேறி யிருந்தேன்.''

''இரண்டு மூன்று வருஷங்களுக்குமேல் அவ்வுத்தியோகத்திலிருப்பதாக எனக்கு உத்தேசமில்லை. சீதா, நான் சீமானல்லன் என்பது உனக்குத்தெரியும். வெள்ளச் சேதத்தால் நான் இவ்வூரை விட்டுப் போய்ப் பிழைக்கும் வழி தேடவேண்டும்.''

"குற்ற மற்ற சீதை, ஜானகியின் தோழி யென,—என் ஞாபகம் உங்களுக்கு என்றைக்கு மிருக்கவேண்டும். ஈசுவர சந்நிதியா யிருப்பினும், நாமிருவரும் இனியும் தனித்துப் பேசிக்கொண்டிருப்பது சரியல்ல. வம்புக்காரப் பையன்கள் யாரேனும் நம்மை யிப்பொழுது கண்டால், ஏதாவது பேச்சிற் கிடமுண்டாய் விடும்," என்று சீதை, மெதுவாய்த் தாழ்ந்த குரலில் சொன்னாள்.

ராமுவுக்கு இன்னும் எவ்வளவோ பேச ஆவலிருந்த போதிலும், அவள் எச்சரிக்கையை மீற விருப்ப மில்லாத வனாய்ப் பேச்சை நிறுத்தினான். அவர்களைப் போலவே ஸ்வாமி தரிசனம் செய்யும் நிமித்தம் தனியாய் இன்னும் யாரேனும் அங்குவந்து அவர்களைக்காண நேரிடின், அதைப் பெரிய வம்பாய்த் தொடுத்து, ஊர் முழுவதும் விரைத்து, மறு நாட் காலை வீடு, ஆற்றங்கரை யெங்கும் பேச்சிற் கிட முண்டாக்கிவிடுவார்க ளல்லவா? ஆனால் அவ்வாறு நேரு வதற்கு முன்னமேயே, அவ்விருவரும் வெவ்வேறு வழியாய்ப் பிரிந்து, அவ்விடத்தை விட்டு விரைந்து சென்றார்கள்.

---

## அத்தியாயம் 14.

### ராமச்சந்திரன்—கலெக்டர் குமாஸ்தா.

பரம ஸாத்விகனான ராமுவும் அலவந்தியை விட்டு, கடப்பை ஜில்லா கலெக்டரான மிஸ்டர். காடெல், (எம். ஏ., ஐ. ஸி. எஸ்.) துரையவர்களிடம் "காம்ப் கிளார்க் ராமச் சந்திரனாக" அமர்ந்தான். கூட், கிளைவ் துரைகள் காலம் முதற்கொண்டு, காடெல் துரையின் குடும்பத்தினர் இவ் விந்தியா தேசத்தோடு நெருங்கிய சம்பந்த முற்றவராயிருந்த னர். "வந்தவாசி"யில் நடந்த பிரசித்தமான யுத்தத்தில், மிஸ்டர். காடெலின் முன்னோரொருவர் ஸர். அயர் கூட் துரையவர்களுக்குத் துணையாய் நின்று வெகு பராக்கிரமத் துடன் போர் புரிந்தது பொய்யல்ல. "ஈஸ்ட் இந்தியா" கம் பெனிக்காரர்கள் உயர்ந்தோங்கி யிருந்த காலத்தில், அவ் வம்சத்திலேயே யுதித்த மற்றொருவர் தஞ்சாவூரில் கலெக்டர் உத்தியோகம் வகித்து, அப்பொழுது அவ்வூரில் பொம்மை ராஜாக்களாயிருந்த சிவாஜி, ஸரபோஜி என்பவர்களைத் தன் கீழடக்கி அதிகாரம் செலுத்தினர். இது மட்டுமல்லாமல் இத்தேசம் பிரிடிஷ் சக்கிரவர்த்தியின் ஆளுகைக்குட் படு வதற்கு முன்னும் பின்னும், தென்னிந்தியாவில் ராணுவத்தி லும், ஸிவில் இலாகாவிலும் உத்தியோகம் வகித்திருந்த வர்கள் அக்குடும்பத்தில் இன்னும் வெகு பெயர்களுண்டு. ஆயினும் இக்காடெல் துரையைப் போல் "ஆக்ஸ்போர்ட்" ஸர்வகலாசாலையில் அவ்வளவு கற்றுத் தேர்ந்தவராயும், தன் வம்சத்தினர் அரைகுறையாய்விட்ட காரியங்களையும், கீர்த்தியையும் நிலைநாட்டி, இந்தியாவில் பிரிடிஷ் ராஜாங் கத்தை ஸ்தாபித்தவர்களான கிளைவ் ஹேஸ்டிங்ஸ்

இவர்களுடைய வரிசையில், தன் குடும்பப் பெயரையும் விளங்கும்படிச் செய்யும் உறுதியைக் கைக்கொண்டவராயு முள்ளவர் வேறொருவரும் இருந்ததில்லை.

மிஸ்டர். காடெல் தன் மனச்சாக்ஷிக்கு விரோத மில்லாமல் ஒழுகி, தன் கடமையையே பெரிதா யெண்ணி நடப்பவராகவுமிருந்தார். இந்தியா ஸிவில் ஸெர்விஸி லிருப்பவர்கள் வெகு காலமாய்க் கொண்டாடி வந்த பழக்கங்களும், அவரது புராதன கிரந்தங்களின் ஆராய்ச்சியும், அவர் மனதைக் கடுமையாக்கி விட்டன. அவரை திருப்தி செய்வது கஷ்டமென்று யாவரும் சொல்லிக்கொண்டார்கள். அது உண்மை யென்பதற் கடையாளமாய் மூன்று மாதத்திற் கொருதரம் "காம்ப் கிளார்க்" உத்தியோகம் காலியாகிக் கொண்டிருந்தது.

மிஸ்டர். காடெல் கண்டிப்பான துரை யென்று கேட்க ராமுவின் மனது ஓய்ந்து போயிற்று. கலெக்டரை நேரில் காண உத்திரவாகி, அவன் அவர் சமீபம் செல்லும் பொழுது, மூன்று நூற்றாண்டுகளாய் இது வரையும் தன் குடும்பத்தில் யாரும் இவ்வாறு ஓர் அற்ப வேலையை ஒத்துக்கொள்ள நேர்ந்த தில்லை யல்லவா வென்ற நினைவு உதிக்கவும், மிக்க வருத்த முற்றான். சந்தையில் ஓர் ஐரோப்பியன் நீக்ரோ ஜாதியா னொருவனை அடிமை கொள்வதன் பொருட்டுப் பார்க்கும் வண்ணமே, மிஸ்டர் காடெலும் அவனைத் தலையிலிருந்து கால்வரையும் உற்று நோக்கிப் பிறகு அதிகாரத்வனியோடு, "நீதானா அலவந்தியிலிருந்து வந்திருக்கும் ராமச்சந்திர னென்பவன்? பீ. ஏ. பரீக்ஷை கொடுத்தவர்களே முப்பத்தாறு மனுதாரர்க ளிருந்தபோதிலும், தந்திரமாய் வேலை செய்யும் புத்திமான்களைச்சேர்த்துக் கொள்வது தகா தென்று, உன்னைத் தேர்ந் தெடுத்தேன்.

உங்கள் ஜில்லாவோ அவர்களுக்குப் பேர்போனது! நான் வேண்டுவது நன்னடக்கையுள்ளவர்களே. கௌரவம் பாராட்டாமல், ருஜுவாயும் நாணயமாயுமுள்ள ஒரு கிளார்க் எனக்குக் கிடைத்தால் போதும். நீ சென்னைக் கிரிஸ்டியன் காலேஜில் வாசித்தவனென்று தெரிகின்றது. நீ அனுப்பிய மிஸ்டர். கிரேக் துரையின் யோக்யதாபத்திரத்தில் உனது நன்னடத்தையைப் பற்றிக் கண்டிருக்கிறதே யொழிய, உன் புத்தியைப் பற்றி ஒரு வார்த்தையேனுங் காணப்படவில்லை. எனக்குப் பிடித்தவன் நீதான். மிஸ்டர். கிரேக் மனச்சாக்ஷிக்கு பயந்து நடப்பவராகையால், அவரெழுதியிருப்பது சரியாகவே யிருக்குமென்று நினைக்கிறேன். வேலையை ஒழுங்காய்ச்செய்து, சம்பளத்தைச்சரிவரப் பெற்று, எனது விசுவாசத்தையு மடைவாய். "ஹெட் கிளார்க்" நீ செய்ய வேண்டிய வேலை எது வென்பதை உனக்குத் தெரிவிப்பார். நான் வேண்டும்பொழுது வந்து வேலையைச் செய்ய மூன்று நாட்களில் தயாராக வேண்டும். நீ இனிப் போகலாம்," என்றார்.

இவ்வாறு இரண்டொரு வார்த்தைகளுடன் போகும்படி உத்திரவாக, ராமு ஒன்றும் பதிற் சொல்லத் துணியாமல், தன் புத்தி சாமர்த்தியத்தைப் பற்றி நற்சாக்ஷிப் பத்திரத்தில் ஒன்றும் காணவில்லை யென்று சொன்னதை ஒத்துக்கொண்டு பேசாமலிருந்து விட்டான். மாதம் இருபத்தைந்து ரூபாய் சம்பளத்திற்காக அவன் தன் மானத்தையே உள்ளடக்கிக் கொள்ளும்படி யாயிற்று. வறண்ட பூமியான கடப்பை ஜில்லாவில், அதிலும் கலெக்டர் கண்பார்வையில் ஒரு குமாஸ்தாவாக இருக்கும் கஷ்டத்தைச்சீக்கிரத்திலேயே ராமு அறிந்து கொண்டான். பெரும்பாலும் இராக்காலங்களில் டேராத் துணிகள், அவைகளை நாட்டும் கழிகள்,

மடக்கும் நாற்காலிகள், மேஜைகள் முதலிய இன்னும் பற்பல சாமான்களைக் கட்டிச் சுருட்டி மாட்டு வண்டிகளிலேற்றி, அவைகளின் நடுவில் தானு முட்கார்ந்துகொண்டு, நாட்டுப் புரரஸ்தாக்களில் மிக்க அசௌகரியத்துடன் பிரயாணம் செய்வதே அவன் கதி யாயிற்று. ஆயினும் அவன் வாய் திறவாது தன் பொறியைத் தொலேத்துச், சம்பளம் பெற்றதும், அதை அப்படியே மாமியாரிடம் கொடுத்துவந்தான். மாதத்தில் இருபத்தைந்து நாட்கள் ஊரைவிட்டுச் செல்லும்படி நேர்ந்ததால், ஜானகியைக் கண்டு பேசுவதும் அவனுக்கு அருமையாய் விட்டது. ஆனல் இக்கஷ்டம் தனக்குண்டாவதற்குக் காரணமா யிருந்தவர்களோடு அதிகமா யிருக்க அவனுக்கே சம்மத மில்லே. சில மாதங்களுக்குப் பிறகு அவனுக்குத் தன் வேலேயில் ஓர் அபிருசியும் ஏற்படத் தொடங்கிற்று. எப்படியெனில், புஸ்தகங்களேப் படித்து அவைகளிலுள்ள உயர்ந்த எண்ணங்களே மேலிட்டிருந்த அவனுக்கு, உலகி லடிபட்டுப் பழகப் பழக, இச்சகம் பேசிப் பெரிய மனிதர்களேப் பின்பற்றித் திரிந்தும், தனிகர்களேத் தொழுது அடிபணிந்தும், பேராசையாலும் பேரபிமானத்தாலும் பிறரைக் கொள்ளேயிட்டு வஞ்சகம் புரியும் கொடியர்களும் புவியிலிருக்கிருர்க ளென்பது புலப்பட்டது. கவர்மெண்டாருடைய துரைத்தனமும் ஒரு ரீதியி லில்லாமல் சிக்லாயும், தயை தாக்ஷிண்ய மற்று மிருப்பதையறிந்து கொண்டான். மிஸ்டர். காடெலின் வேலேயி னெழுங்கையும் திறத்தையுங் கண்டு ராமு உள்ளூர மெச்சியதோடு, இந்தியர்கள் இனிப் புதிதாய் நாகரிகம் கற்றுக் கொள்ள வேண்டிய காட்டு மிருண்டி ஜனங்க ளென்ற, "ஸிவில் ஸெர்விஸ்" உத்தியோகஸ்தர்களின் அபிப்பிராயமே அவரது இரக்க மற்ற நடத்தைக் காதார மென்றும் நிணேக்கலானுன். கிரிஸ்டியன்

காலேஜிலுள்ள போதகாசிரியர்கள் கொஞ்சமேனும் கருப்பு மனிதர்களென்று வித்தியாசம் பாராட்டாமல் அன்போடிருக்க, ஸிவில் ஸெர்விஸி லிருப்பவர்கள் மட்டும் ஏன் இவ்வளவு வேற்றுமை கொண்டாடவேணுமென்பது அவனுக்கு ஆச்சரியமா யிருந்தது. ஒருவர் மேலும் குற்ற மில்லை; அவ்விதமான கொள்கைகளை மேற்கொண்ட துரைத்தனத்தார் ஏற்பாட்டின் கொடுமையே யென்று ராமு உணர்ந்தான். இவ்வாறு அனுபவமானது மேன்மேலும் அவன் சிந்தனையை யதிகரிக்க, ராமுவுக்குத் தன் வேலையில் விருப்பமும் உண்டாயிற்று. தன்னைப்பற்றியே தான் எவ்வளவு உயர்ந்த அபிப்பிராயம் கொண்டிருந்தாரோ, அவ்வாறே ராமுவும் ஸ்வய கௌரவம் பாராட்டி வந்தானென்று காடெல் துரை சந்தேகித்தவ ராயினும், எளிதில் திருப்தியடையாத அவர் சுபாவமும் ராமுவின் பேரில் குற்றங் கண்டு பிடிக்க முடியவில்லை. ஆனால் மேலதிகாரிகளை மீறி நடக்காத வரையில், மனதில் நினைத்துக் கொண்டிருப்பவைகளுக் கெல்லாம் ஸிவில் ஸெர்விஸின் சட்டதிட்டங்களிற்கூட தண்டனை விதிக்கப்படவில்லையே !

இப்படி யிருக்கையில், மீனாக்ஷியும், ஜானகியும், பெரும்பாலும் ராமு ஊரி லில்லாததனால், வீட்டில் ஒரு வேலையுமில்லாமல் பேச்சிலும் வம்பிலும் காலம் போக்கத் தொடங்கினார்கள். உண்மையில் வெட்டி வார்த்தைகள் அளப்பதற்கு அவர்கள் வீடே யாவருக்கும் சௌகரியமாயிருக்க, ஜானகியும் கொஞ்சம் துணி வடைந்தாள். இது ராமுவுக்குத் தெரிந்தும், பராமுகமா யிருந்தான். இவ்வாறு ஒரு விசேஷமு மில்லாமல் மூன்று வருஷங்கள் சென்றன.

---

## அத்தியாயம் 15.

### பண்ணையின் கோடுமை.

கடப்பையில் ராமு கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் பொழுது, அலவந்தியில் முருகனுக்கு அதிருஷ்ட காலமாக வேயிருந்தது. ராமு ஊரை விட்டுச் சென்றதைப் பற்றி முருகன் உண்மையாக வருத்த முற்றபோதிலும், அதனுலவனுக்கு தசை திரும்பிற் றென்றே சொல்ல வேண்டும். பண்ணை யாளான பழைய முருகனு யிராமல், இப்பொழுது ராமுவின் நிலத்தைக் குத்தகை யெடுத்தவ னல்லவா? அல்லும் பகலும் உழைத்துக் கொண்டிருந்ததுபோக, இப்பொழுது ஒரு ஆளாய்விட்டான்.

"பொன்னி, போன வருசத்தை விட இந்த வருசம், நன்னு விளையும். சொந்தக்காரனே பாடுபட்டு உழுதா, பூமி யெப்படி சொன்னதைக் கேக்குது, பார்த்தாயா? இப்போ பொறந்த, நம்ம சின்னக் குட்டி அதிருஷ்டத்தையும் கொண்டு வந்து விட்டதான்னு எண்றேன்," என்று முருகன் சொல்ல,

"ஆமாம். என்னைத் தான் அவ கொண்டிருக்கா. நமக்கு சொந்தத்திலே ஒரு பசு யிருந்தாக்கூட நல்லது தான். எவ்வளவோ லாபமா யிருக்கும். குழந்தைக்குப் பால் ஆப்படும். வயல்களுக்கும் நல்ல எருவு அம்பிடும். பசு தான் சம்பத்துக் கடையாளம். ஒண்ணு வாங்கினு, நிறைய விருத்தியாவாதா?" என்றுள் முருகன் மனைவி பொன்னி.

"ஆமாம்; நீ விருத்தி செய்யறது போலே, இல்லையா, பொன்னி?" என்று முருகன், தன் பரிகாசப் பேச்சிற்கு

மகிழ்ந்து, அவளையும் குழந்தைகளையும் பார்த்துச் சிரித்தான். பிறகு நெற்றியின் மேல் கை வைத்து, தூரத்தில் பார்த்து, "அதோ, வயலைத் தாண்டி தொப்பை யேதோ தன் கஷ்டத்தைச் சொல்ல, இங்கே வருன். நல்ல சுறு சுறுப்பும் தைரியமு முள்ள பையன்—" என,

"எனக்கு அவனைப் பிடிக்கவே யில்லை!" யென்றுள் பொன்னி.

"உனக்குப் பிடிக்கா விட்டா என்ன? அவனைச் சரியான படி வேலை வாங்கத் தெரிஞ்ச யசமாணு யிருந்தா, அவன் நன்ளு வேலை செய்வான். பட்டணத்திலே யிருந்த பைய னுனதாலே ரோசக்காரனும் தைரிய முள்ளவனுயு மிருக்கான். ஏழைக் குடிங்களை வெரட்டி யடிச்சு, வேலே வாங்கிற பாவி,—ஈவு இரக்க மில்லாத பெரியசாமி அய்யர் வெரட்டலுக்கு தொப்பை வணங்கிற தில்லை!"

"நல்ல காலம்! நாம் ஒரு பக்ஷமுள்ள யசமான் கீழே வேலே செய்யரோம்," என்று சொல்லி, பொன்னி குழந்தையை யிழுத்துக் கால்மீது போட்டுக் கொண்டாள். இதற்குள் தொப்பையு மங்கு வந்து சேர்ந்தான்.

"முருகா, எங்கும் நிழலாய் உங்க தென்னம் தோப்பு ஒரு சொர்க்கம் போலே யல்லவா தோணுது! என் தலை விதியைப் பாரு!" என்று கூறிக்கொண்டே உள் நுழைந்தான்.

"ஏன், தொப்பை, நீ யேதுக்குக் குறைஞ்சு கொள்ள வேணும்? உங்க பண்ணையைக் காட்டிலும் வேறே பெரிய பண்ணை இந்த கிராமத்திலே யேது? நாங்க ஏழைங்க. உங்களுக்குத்தான் எல்லா கௌரவமும் அதிகாரமும் இருக்கு. எங்க எசமான் ஊரைவிட்டுப்போய், எங்கேயோ

கூலிக்குப் பேரு பிடிச்சு யெழுதும் ஒரு சின்ன குமாஸ்தா யென்னுதானே உங்க அய்யர் கூட சொல்றாரு!''

"பண்ணையும் அய்யரும் மண்ணாப்போக! எனக்கு மட்டும் சக்தி யிருந்தா, இந்தத் தென்னம் நாருங்களை யெல்லாம் கயராய்த் திரிச்சு, இப்பவே அப் பாப்பானைக் குடுமியைப் பிடிச்சு, ஒரு நொடியிலே, எந்த மரம் கிட்டே யிருக்கோ, அதிலே மாட்டித் தூக்கி விடுவேன்!''

"தொப்பை, இப்படிக் கண்டபடி வாயிலே வந்ததைக் சொல்லாதே! உனக்குத்தான் கஷ்டம்!''

"ஏன், அவன்மட்டும் என்னை யெப்போ பார்த்தாலும் தோலுரியும்படி அடிக்க வில்லையோ? இரு; அவனுக்குப் புத்தி வரும்படியா செய்யறேன். நல்ல வேளை, நானொரு நாட்டுப் புரத்தானா யில்லை!''

"அவ்வளவு அவசரப் படாதே, தொப்பை. பின்னாலே உனக்குத்தான் கஷ்டமாகும். நீ வீறாப்பாய்ப் பேசறே. பக்கத்து கிராமத்து முதலியார் பண்ணையைப்பாரு. அங்கே வேலை யின்னும் அதிகம். முதலியாரும் இன்னும் கண்டிப்பான ஆசாமி. இப்படி யவதிப்படறது நம்ம தலைவிதி! அதுக் கென்ன செய்யலாம்? பெரியசாமி அய்யர்கூட கொஞ்சம் நல்ல பாப்பான்னு சொல்லலாம். அவர் வேலைக்காரருங்க, நம்மைப்போலே யிருக்கிற பள்ளி, பறையாச்சிங்க பண்ணற கொடுமைதான் எல்லாம்! நம்மைச் சேர்ந்தவங்கதாம் ரொம்பக் கொடுமையா யிருக்காங்க!''

"அப்படித்தான், முருகா. ஆனா அப்படி யெல்லாம் வித்தியாசம் பார்த்துக் கொண்டிருக்க எனக்கிப்போ மனசில்லை. நான் முதலியார் பண்ணையிலா யிருக்கேன்? அய்யருக்கு மெனக்குந்தானே வந்திருக்கு! அவர் ஒரு மாசமா

எனக்கு சம்பளம் கொடுக்கல்லே. கலியாணம் ஆகாதவனுக்கு வயறு இல்லேயா ? வேறே செலவு இல்லேயா ? எல்லாருக்கும் இந்த கதிதான். அவங்க யெல்லாம் பயங்காளிங்க ! நான் அப்படி யிருக்கமாட்டேன் !"

"கொஞ்சம் பொறுத்திரு, தொப்பை. அவசரப் படாதே !" என்ருன் முருகன்.

" இனி ஒரு நிமிஷங்கூட பொறுக்க முடியாது. என் மனசு கொதிக்குது. பசியினுலே எனக்குக் கண்ணே யிருட்டிக் கொண்டு தலே சுற்றுது !" என்ருன் தொப்பை. "காதாலே சீவன் போருப்போலே தோணுது. உன் குழந்தைக்கு ரொம்ப புண்யம், முருகா ! தாகத்துக்கு ஒரு இளநீர் வெட்டிக்கொடேன் !"

முருகன் அவ்வாறே கொடுக்க, தொப்பை அதை ஆவலாய் வாங்கி, அவனே வாழ்த்திக்கொண்டே குடித்தான்.

முருகனு மிதுதான் சமயமென்று அவனுக்கு புத்தி சொல்லத் தொடங்கினுன். "தொப்பை, மனுசாள் பேரில் என்ன குற்றம் ?—நமக் கேற்பட்ட விதியின் கொடுமை ! நம்மை ஒருத்தன் அடக்கி யாண்டா, அவனே வெரட்ட மேலே இன்னெருத்த னிருப்பான். அது நம்ம கண்ணிலே படாது. உன்னேப் போலே நானும் ஒரு பண்ணே யாளா யிருக்கும்போது, என் யசமான் எவ்வளவு தயவா யிருந்தும், நானெப்படி பாடு பட்டாலும், இந்த நிலத்திலே அஞ்சு கல நெல்லுதான் விளேஞ்சு வந்தது. ஆனு, போன வருசம் பத்துக் கலம் ஆச்சுது. இப்போ பன்னிரண்டு, பதிமூணு கலம் காணும் ! உங்கிட்ட உண்மையா சொல்றேன்,—நான் பதினேஞ்சுக்குப் புள்ளி போட்டிருக்கேன். கூலி வேலேயைப் போலே பாவம் வேறே யெதுவு மில்லே.

வேலை செய்யறவன், வேலை வாங்கிறவன் இரண்டு பேருக்கும் பாவந்தான். ஆனா லோகத்திலே இதெல்லாம் லேசிலே மாறாது. மனுஷனுடைய பேராசையும் கொஞ்சங் கொஞ்சமா அடங்கணுமே ஒழிய, லகுவிலே தீர்ந்துவிடுமா? நல்ல காலம்! இதுக்கும் விடிவுகாலம் வரும் போலே தோணுது! எதித்து நிற்காமே, பொறுமையா வேலை செஞ்சே, நம் காரியத்தைச் சாதிச்சுக் கொள்வோம். நமக்கு நல்ல காலம் வராமே போகாது!''

"உன் வரைலே அப்படித்தான், முருகா, நீ வேதாந்தம் பேசலாம்! வயறு காஞ்சு கிடக்கும் போது, பொறுமை வருமா? பழம் கூலிபாக்கியும், பொழுது விடிஞ்சா மறுபடி வேலை செய்யணுமே யென்ற நினைவையும் தவிர, வவுத்திலே ஒண்ணு மில்லாதிருக்கும் போது எனக்கு வேறே ஒண்ணும் தோணுவ தில்லை. ஐயா வீட்டுக் கொல்லையிலே பொழுது போற மட்டும் தினம் காத்துக் கிடந்தா, ஒருநா ஐயாவுக்குப் பெரிய மனசு வந்து, விறபடாத அழிஞ்சு போன பழைய நெல்லு ஏதாவ திருந்தா, பார்த்துக் கொண்டுவந்து கொடுப்பாரு! அதை வீட்டுக்குக் கொண்டுபோய்க் குத்தி, கஞ்சியாக் காய்ச்சி நடு ராவிலே குடிச்சுப் படுத்தா, பொழுது விடியுங் காட்டியும் மறுபடி வேலைக்கு யெழுப்பிடுவாங்க! எவ்வளவோ பேர் இம்மாதிரி இவ்வளவு வருசம் கஷ்டப் பட்டுக் கொண்டு சும்மா யிருக்காங்களே! சொல்லுறாப் போலே, பட்டணத்திலே நான் புஸ்தகம் படிச்சதுதான் என் மனசை திருப்பி விட்டதோண்ணு நினைக்கிறேன். நல்ல காலம்! எனக்கின்னும் கல்யாண மாவாததினாலே, ஒரு கை யெதித்துச் சண்டைபோடலாம். இவ்வளவு நாள் எப்படி யிருந்தோமோ, அது தான் ஆச்சரியம்!''

"தொப்பை, நீ பேசறதெல்லாம் வேறையா யிருக்கு" என்று முருகன் மீண்டும் கண்டித்துக் கூறத்தொடங்கினுன். "ஒரு காலத்திலே நாமின்னும் அதிகமா கஷ்டப்பட்டோ மென்பதை நினேச்சுக்கோ. இப்போ அவ்வள வில்லே. வர வர இன்னும் சவுகரியமாவே ஆகும். பொறுமையா வேலே செய். நல்ல காலம் வராமேபோகாது. உங்க அய்யரிட்டே யிருக்கப் பிடிக்காட்டா, நீ எங்கூட வேணுமானுலும் வேலே செய்யலாம்." இக்கடைசி வார்த்தையை முருகன் சிறிது தயங்கி மெதுவா யுரைக்க,

"என்னுலே நன்னு வேலே செய்ய முடியும், முருகா. ஆனு ஓர்த்தர் கீழே உழைக்கிறதுதான் எனக்கு வெறுப்பா யிருக்கு!" என்முன் தொப்பை.

"ஆனு, இப்போ சத்தியா நீ யாரிடமாவது கூலிக் குழைத்துத்தானே ஆகணும்! கையிலே ஒண்ணு மில்லாமே சொந்தத்திலே என்ன பண்ண முடியும்? சிறுவயதிலே, நானும் உம்மாதிரிதான் நினேச்சேன். ஆனு யிவ்வளவு முடுக் காயில்லே. இப்படி கோபிக்கிறது நியாயமா யிருந்தாலும், ஆபத்துக்கிடந்தான். நீ குடிக்கிற அரை வயத்துக் கஞ்சியும் உன் உடம்பிலே ஒட்டாதே போயிடும். என்னிக்காவது ஒருநா உனக்கு நல்ல கால முண்டாகாமேபோகாது. பெரிய வங்களோடே யெதித்துச் சண்டை யிட்டுத் துன்பத்திலே மாட்டிக்கொள்ளாதே. உன் வேலேயைப் பாரு. கடவுள் இருக்காரு. நான் உனக்கு ஒத்தாசை செய்யறேன். நம்மிரு வருக்கும் கடைசிலே சாமி பலன் கொடுப்பார்."

"முருகா, எனக் கெதனுலே தொப்பை யின்னு பேர் வந்தது, உனக்குத் தெரியுமா? பட்டணத்திலே, என் சித்தப்பன் வீட்டிலே, நான் எப்பவும் சாப்பிடறத்தையும்

பேசறத்தையும் தவிர வேறே ஒண்ணும் செய்ய மாட்டேனும்! அதனாலே தான்னு சொல்லுவாங்க. எனக்குத் தொப்பை ரொம்ப பெரிசாயிருந்ததனாலே, பெரியவங்க, சின்னவங்க எல்லாரும் என்னைத் தொப்பையின்னு கூப்பிட்டாங்க. அது அப்படியே நிண்ணு போச்சு!''

"உன் சித்தப்பனுக்கு என்ன வேலை?''

"கொல்லத்துவேலை. அவருதான் எனக்குச் சாப்பாடு போட்டு வளத்தாரு. என் சித்திகூட ஒரு மிட்டாய்க் கடை வைச்சிருந்தா. அவள் இல்லாத போது, கடைலே உட்கார்ந்து நான் விற்பேன். அப்போ ரொம்ப கொண்டாட்டந்தான். என் கஷ்டகாலம் இரண்டு பேரும் போயிட்டாங்க. அவங்க என்னைப் பள்ளிக்கூடத்திலே வச்சாங்க. லோகத்திலே இருப்பவங்க யெல்லாம் ரொம்பக் கெட்டவங்க யின்னுதான் நான் படிச்சது. முருகா, நீ பட்டணத்திலே இருந்ததே யில்லை! ஏழைங்களுக்கு அங்கே யிருந்தாலே போதுமே! பள்ளிக்கூடத்திலே படிக்கவே வேண்டாம்! இந்த லோகத்திலே பணத்துக்குக் குறைவே யில்லாதிருக்கும் போது, சிலர் மட்டும் பணக்காரங்களா யிருக்க, நாம் எவ்வளவு வறுமையிலே கிடந்து கஷ்டப்படுறோ மென்கிறது அப்போ நன்னா தெரியும். அய்யோ, முருகா, என் மாதிரி உனக்கு வீருப்பும் ரோசமும் இல்லையே!''

"தொப்பை, அதனாலே ஒண்ணும் லாபமில்லை! நான் சொல்றதைக் கேளு. பெரிய பண்ணையை விட்டு எங்கிட்டே வந்துவிடு. நான் உன்னைப் பார்த்துக் கொள்றேன்,'' என்று முருகன் அழைக்க, தொப்பை யாகட்டு மென்று மெதுவாய் முணுமுணுத்தான். அவனை துற்சகுனத்திற் கடையாளமான ஆந்தை போலெண்ணி, ஏதாவது கொடுத்

தனுப்பிவிட்டால் க்ஷேமமென்றே யெண்ணி யெப்பொழுதும் கருதுவாள். அவளுக்கிப்பொழுது முருகன் செய்ததிற் சிறிதும் சம்மதமில்லை. ஆனால் முருகனோ உலகம், படிப்பு முதலிய விஷயங்களைப் பற்றித் தொப்பையின் தைரியமான அபிப்பிராயங்களைக் கேட்டு, விசுவாசத்தோடு, வியப்புமடைந்தான்.

---

## அத்தியாயம் 16.

### முள்ளிலா ரோஜா.

ராமு "காம்ப் கிளார்க்கு" வேலையி லமர்ந்து மூன்று வருஷ மாயிற்று. தொப்பையைப் போலவே அவனும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தான். ஆனால் மீனாக்ஷியும், ஜானகியுமோ, முருகனைப்போல், தங்கள் ஸ்திதியைப் பற்றித் திருப்திகொண்டவர்களாய்ச் சந்தோஷமாயிருந் தனர். ஆயினும் கொஞ்ச நாட்களாய் ஜானகிக்கு, இவ் வாறு, ஒரே ரீதியில், தனியாய்க் காலம் போக்குவதில் சற்று வெறுப்பு உண்டாயிற்று. நன்றாய் வளரும் பருவத்தில், மீனாக்ஷி அவள் வளர்ச்சிக்குத் தடையா யிருந்தாள்.

"அம்மா, அவர் ஊரை விட்டுப் போய் இரண்டு வாரத் திற்கு மேலாகின்றதே! இன்றைக்காவது வருவாரா? இப்படி யிருப்பது அவருக்குக் கஷ்டந்தான். இந்த மூன்று வருஷங்களாக மாதத்தில் மூன்று நாட்கள் கூட நல்ல, அகத்துச் சாப்பாடு கிடையாது!" என்று ஜானகி சொல்ல,

"வீண் கவலையெல்லாம் படாதே, ஜானகி," யென்றாள் மீனாக்ஷி. "நமக்கு அடுப்பங்கரையும் புகையும் எவ்வளவு சகஜமோ, அதுபோலவேதான் புருஷர்களுக்கு வேலை. சிறுவயதிற்கூட வேலை செய்யாவிட்டால், அப்புறம் எப் படிக் காலம் தள்ள முடியும்? ராமுவின் சாதுத்தனந்தான் அவனிடத்திலுள்ள குற்றம். அவனுக்குப் படும்படியாக நம்மனதி லிருப்பவைகளை நீதான் வெளியிட்டுச் சொல்ல வேண்டும். இன்னும் கொஞ்சம் தைரியமாயிருந்து, இவ் வுத்தியோகத்தை விட்டு மேலே வருவதற்கு முயல வேண்

டாமா? பக்கத்து வீட்டுக் கமலம் என்ன சொல்லுகிறாள், பார்த்தாயா? மூன்று வருஷம் சேர்ந்தாற்போல் ஒருவரும் "காம்ப் கிளார்க்கு" உத்தியோகத்தில் இருந்ததில்லையாம்!"

"அவரென்ன செய்வார், அம்மா? தன் வேலையை நன்றாய்த்தான் பார்க்கிறார்!"

"ரொம்ப சரியாய்ச் செய்வதுதான் பிசகு! ஜானகி, தானில்லாவிட்டால் முடியாது போல் அவ்வளவு சரியாய் அவன் நடந்து கொள்வதனால்தான், கலெக்டர் துரைக்கு அவனை விட்டுவிட மனதில்லை. முள்ளில்லாத ரோஜா மலராயிருந்தால், குழந்தைகூட மொட்டாயிருக்கும்போதே பறித்து விடும். ஒண்டி சண்டியாய் வந்த மாடுகூட மிதித்தெறியும் படியான நிலைமையில் நம்மை வைத்துக்கொள்ளலாமோ?"

"ஆனால் நீ யவரை—" யென்று ஜானகி மிகுந்த மனத் தளர்ச்சியுடன் ஆரம்பிக்க,

"வெளிப்படையாய் ஒரு குற்றம் செய்து, அதற்காகப் பிறகு அகப்பட்டுக் கொள்ளவேண்டுமென்று நான் சொல்லவில்லை!" யென்றாள் மீனாக்ஷி. "தனக்குக் கிடைக்கும் இந்த அற்ப சம்பளத்தை வைத்துக்கொண்டு, மூன்று பேருக்கு அன்ன மிட்டாக வேண்டிய நிலைமையில், கடன் வாங்கியாவது யோக்கியமாய் வாழும் "காம்ப் கிளார்க்கு" ஒருவன் இவ்வுலகிலெங்கேயாவது இருப்பானா? இன்னும் பழைய கடன்கள் வேறே யிருக்கின்றன. கடனென்ன,—அக்கா, தங்கை கல்யாணத்திற்காக வாங்கியதா? தான் படிப்பதற்காகத்தானே வாங்கினான். கலெக்டர் அவன் சொல்வதைக் காது கொடுத்துக் கேட்கிறா ரென்பதினால், அவன் ஏராளமாய்ச் சம்பாதிப்பதாய் ஜனங்கள் நினைத்துக்கொண்டிரு

இன்றனர். உண்மை யென்ன வெனில், நமக்கு மேன்மேலும் கடன் அதிக மாகின்றது!"

"கடனா? ஏன், அம்மா, அப்படி? அவர்கூட அகத்தி லிருப்பதில்லையே! எப்படிக் கடனாகும்?"

"ஆனால் நம் புடவைத் துணிகள், ராமுவின் தினசரிப் பத்திரிகைகள், புஸ்தகங்கள் இவை யெல்லாம் இனமாகக் கிடைக்கின்றனவா?"

"அவ்வாறாயின் அவற்றையெல்லாம் நிறுத்திவிட்டு, நாம் இன்னும் செலவைக் குறைத்துக் கடனாகாமல் பார்த்துக்கொள்ளத்தான் வேண்டும்."

"அதைவிட அசட்டுத்தனம் வேறில்லை! அப்படி யிருந்தால் நம்மை யொருவரும் மதிக்கவே மாட்டார்கள். வீடு பெருக்கும் சூத்திரக் குட்டிகூடத் தன் சம்பளத்தைக் கீழே வைத்த பிறகுதான் வேலை செய்வதாய்ச் சொல்லும். ஜானகி, உனக்கு உலக மிப்படி யென்று தெரியவில்லை. ராமுவைப்போல்தான் நீயும் இருக்கிறாய். ஒருவரும் கடன்கூட நமக்கு அப்புறம் கொடுக்க மாட்டார்களே! நாணயம் புறளா விட்டால் உலகத்தி லென்ன விருக்கு? அது சுலபமாய் ஒரு நாளிலுண்டாகிவிடுமா? வெறும் குப்பையிலா பூச்செடி வளரும்? நாளடைவில் நாம் இருக்கும் நிலைமையைக் கண்டுதான் ஜனங்களுடைய மதிப்பும் விருத்தியடையும். நாம் நல்ல அந்தஸ்திலிருந்தால், ஈசுவரனும் கூடியமட்டும் நம்மைத் தகுந்த நிலைமையிலேயே வைப்பார். இதைத்தான் நீயும் ராமுவும் இன்னும் அறிந்து கொள்ளாமலே யிருக்கிறீர்கள்! முதலில் உனக்குத் தெரிந்து விட்டால், பிறகு ராமு தானே நன்று யறிந்து கொள்வான்!"

இவ்வாறு மூச்சு விடாமற் பேசிய மீனாக்ஷி, ஒரு நிமிஷம் நின்று, பிறகு மறுபடியும் சொல்லத் தொடங்கி

ளுள்.—"கமலத்தைப் பார். அவர்கள் முதலில் எவ்வளவு மட்டமாயிருந்தார்களென்பது உனக்குத் தெரியுமா? அவள் புருஷன் "மொச்சி" வேலையிலிருந்து இப்பொழுது சப் மாஜிஸ்டிரேட் உத்தியோகத்தில்,——உயர்ந்த பதவியிலிருக்கிறான். கமலம் இப்பொழுது ரொம்ப கௌரவம் பாராட்டிக்கொண்டு, கலெக்டர் மனைவியைக் காட்டிலும் மேலான ஆடையாபரணங்கள் அணிந்து கொள்ளுகிறாள்! அது எவ்வாறு என்று கேட்டால், தினமும், கைகட்டி வாய் பொத்தி அவர்களைப் பேட்டி காணவரும் மனுதாரர்கள் மூலமாயென்று உனக்குத் தெரியவில்லையா? பெரும்பாலும்,—— அகாரணமாய், தங்கள் உயிருக்கும் மானத்திற்கும் கேடு நேரும்பொழுது, ஏழை ஜனங்கள் அதை மாற்றுவதற்கு, நாம்மட்டும் சரியானபடிவாங்கத்தெரிந்தவர்களாயிருந்தால், என்னதான் கொடுக்கமாட்டார்கள்? கமலம் கெட்டிக்காரியானதால், எல்லாவற்றையும் தானே சாமர்த்தியமாய்க் கவனித்துக் கொள்ளுகிறாள். அவள் அகமுடையானுக்கும் அவளிடத்தில் நம்பிக்கை யிருக்கிறது. ஆதிமுதல் கமலம் தான் இவ்வாறு ஏற்பாடு செய்து கொண்டவள். ஆனல், ஜானகி, நீ ரொம்ப பயந்த சுபாவமுடையவள். ராமுவின் காலடிச்சத்தம் காதிற் பட்டால்கூட உனக்கு பயமுண்டாகி விடுகின்றது. புருஷர்கள் உலகை யாளப் பிறந்தவர்களென்றால், அவர்களை யடக்கியாள ஸ்திரீகள் தோன்றியவர்களென்றே சொல்லவேண்டும். தம்மைத் தாமே கவனித்துக் கொள்பவர்களைத்தான் கடவுளும் கவனித்துக் கொள்வார்!"

ஒரு நிமிஷம் நின்று மீனாக்ஷி பின்னும் ஆரம்பித்தாள்:— "நாமெல்லோரும் கமலத்தினிடமிருந்து தெரிந்து கொள்ள வேண்டும். அஷ்டதரித்திரம்—ஒரு பஞ்சாங்கியினுடைய பெண்ணுயிருந்தும், தைரியம், மனவுறுதி, கௌரவம் இவ்

வெல்லா குணங்களும் அவளிடம் நன்ருய் வேரூன்றி யிருக்கின்றன. மாதத்தில் பத்துநாட்கள் நாம் அவள் வீட்டுக்குப் போய் வந்திருந்தும், அவள் ஒரு தடவைகூட இன்னு மிங்கு வரவில்லை, பார்த்தாயா? ஆயினும் உலக மிப்படித்தா னிருக்கும். உதைக்கிற காலைத்தான் முத்தமிடவேண்டும்! நம்முடைய காலையும் முத்தமிடச் சிலர் வருவார்கள். நாம் ஏதோ அவள் வீட்டுக்குப் போய்வந்து கொண்டிருக்கிருேமென்பதினுலேயே நமக்குச் சில லாபங்க ளில்லாமற் போகவில்லை. கரிகாய்கள், ஒருவாரத்திற்குமேல் நில்லாத இன்னும் மற்றுமுள்ள சாமான்கள் ஏது விருந்தாலும் நமக்கனுப்புகிருள். அவளை நாம் உபேக்ஷை செய்ய முடியுமா? என்ன செய்வது? பேசாமல் அவளகத்திற்குப் போய்விட்டு வருவோம், வா," என்ருள்.

ஜானகி சற்று சம்மத மில்லாதவளாகக் காணப்படவே, மறுபடியும் கூப்பிட்டுக்கொண்டு எழுந்திருந்தவள் ஏதோ அடிச்சத்தம் கேட்டு நின்ருள்.

மறு நிமிஷம், "கமலம், வா. உனக்கு ஆயுசு நூறு!" என்று மீனுக்ஷி சந்தோஷத்துடன் வந்தவளை யுபசரிக்கலாளுள்.

"இப்பொழுதுதான் உன்னைப்பற்றிப் பேசிக்கொண்டு, உன்னகத்திற்கு வரலாமென்று கிளம்பினேம். ஏது அபூர்வமாய் வந்தது! அத்தி பூத்தது போலிருக்கிறதே! எங்கள் பாக்கியவசந்தான்! ஜானகி, நல்ல காபியாய்ப் போட்டுக் கொண்டுவா."

"வேண்டாம், மீனுக்ஷியம்மா! இப்பொழுது காப்பி சாப்பிடுகிற வேளை யில்லையே! நானே உங்கள் வீட்டிற்கு வரவேணு மென்று எண்ணியிருந்தேன். அதோடு ஒரு சிறிய காரியமும் கூடிற்று. எனக்கு நிற்க தேசால மில்லை.

உங்கள் தயவு கொஞ்சம் வேண்டியிருக்கிறது. உங்கள் மாப்பிள்ளை கலெக்டருக்கு ரொம்ப வேண்டியவராயிற்றே! என்னகத்துக்காரர் ஏதோ பொய்க் கேஸ் ஒன்றில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறார். கலெக்டரிடம் சமயம் பார்த்து, அவரைப் பற்றி உங்கள் மாப்பிள்ளை சற்றுச் சொன்னால் தேவலை. ரொம்ப நாணயமாயும் ருஜுவாயு மிருப்பதனால் தான், அவரை இங்கு ஒருவருக்கும் பிடிக்கவில்லை யென்று கலெக்டரிடம் சொல்லவேண்டும். இரகசியமான சமாசாரங்களடங்கிய சில கடிதங்கள்கூட வேண்டியிருக்கின்றன. மாப்பிள்ளை யெப்பொழுது ஊரிலிருந்து வருவார்?''

"நீ கேட்பதைச் செய்வதற் கென்ன? நீங்கள் எங்களுக்குச் செய்வதற் கெல்லாம் பதில் செய்ய சமயம் வாய்த்ததே யென்று சந்தோஷமே. ஒவ்வொரு நிமிஷமும் ராமுவின் வரவை யெதிர் பார்த்துக்கொண்டுதான் இருக்கின்றோம். இப்பொழுதுகூட அவன் இன்னும் வரவில்லையே யென்று தான், நாங்க ளிதுவரையிலும் சாப்பிடவில்லை,'' யென்று மீனாக்ஷி சொல்லி முடிப்பதற்குள் ராமு உள்ளே நுழைந்தான். நாணிக் கோணிக் கொண்டு கமலமும் அவசரமாய் அகத்துக்குப் புறப்பட்டுப் போய்விட்டாள். மீனாக்ஷிக்கு அதில் நிரம்ப வருத்தம். ஏனெனில் எதைப்பற்றியாவது பேசிக்கொண்டே, அன்று பகல் முழுவதும் கமலத்தை அங்கேயே யிருக்கச்செய்து, ஊரிலிருப்பவர்களுக் கெல்லாம் தான், கடைசியில், கேவலம் ஒரு அற்ப "காம்ப் கிளார்க்"கின் மாமியாராகமட்டு மில்லை யென்பதை யறிவிக்க வேண்டுமென்பது அவள் கருத்து. ராமுவும் ஏதோ மனவியாகூலத்துடன் ஒருவரோடும் பேசாமலே சாப்பிட்டுவிட்டு, அன்று சாயந்திரம் வரையும் தன் னறையை விட்டு, வெளி வராமலே யிருந்தான்.

---

## அத்தியாயம் 17.

### கௌரவம் உத்தியோகத்தின் உயிர் நிலை.

மகா சாதுவாய்த் தோன்றிய ராமு, எளிதில் திருப்தி யடையாத காடெல் துரையிடம், எவ்விதம் இன்னும் நீங்காமல் "காம்ப் கிளார்க்கு" உத்தியோகம் பார்த்து வருகிறானெனக் கடப்பை கலெக்டராபீஸிலிருந்தோர் அனைவரும் ஆச்சரிய முற்றனர். ஒருநாள் மாலை,—ஆகாயம் நிர்மலமாயிருந்தது. காடெல் துரை அன்று விடியற் காலந்தான் கடப்பை திரும்பிவந்து சேர்ந்தார். அவருடைய அழகிய பங்களா பெண்ணாற்றங்கரை யோரமாய், ஓர் விஸ்தாரமான மாஞ்சோலையின் நடுவில் கட்டப்பட்டு விளங்கிற்று. அவ்வருஷத்திய ஜமாபந்தி யப்பொழுதுதான் முடிந்தது. யாவரும் கிஸ்தி வசூல் செய்வது, கணக்குப் பார்ப்பது முதலிய தொந்திரவினின்றும் விடுபட்டு அலுப்பாறிக் கொண்டிருந்தனர். மிஸ்டர். காடெல் ஓர் விசாலமான கித்தான் நாற்காலியிற் சாய்ந்து, முன்னும் பின்னும் ஆடிக் கொண்டும், மாமிசமற்ற எலும்புத் துண்டை நாய் கடித்திழுப்பது போல், பற்களின் நடுவில் பென்ஸி லொன்றை வைத்துக் கடித்துக்கொண்டும், உட்கார்ந்திருந்தார்.

"இம்மாதிரி நீர் யோசனையில் ஆழ்ந்து உட்கார்ந்திருந்ததை நான் இதற்கு முன்பு பார்த்ததே யில்லையே! உம்மை யதனின்றும் கலைக்க வேண்டுமே யென்று கஷ்டமாயிருக்கிறது. எப்பொழுதும் காரியத்திலேயே கண்ணாயிருப்பவருக்கு வேறு சிந்தை யுண்டோ? ஆனால் எனக்குப் பயமாயிருக்கிறது!—நீர் கடித்துக் கொண்டிருப்பது நான் உபயோகிக்கும் பென்ஸில்! நான் படிக்கும்பொழுது, கவ

ணிக்கவேண்டிய இடங்களில் அதைக் கொண்டுதான் குறித்துக் கொள்வது வழக்கம்,'' என்றாள் காடெல் துரையின் மனைவி. அவளைப்பற்றி யிங்கு விவரிக்கவேண்டிய தில்லை.

"ஓஹோ, மேரி, உன்னுடைய ஸம்ஸ்கிருத புஸ்தகங்கள், வேதாந்த விசாரணை புஸ்தகங்கள் எல்லாம் எச்சிலாய் அசுத்தமடைந்து விடும்போலும்! உன் நிற மில்லாவிட்டால், உன்னை அநேகமாய் ஒரு ஹிந்து வென்றே கூறிவிடலாம்!'' என்று சிரித்துக்கொண்டே உரைத்து, காடெல் துரை பென்வஸில மனைவியிடம் எறிந்தார். "மேரி, உன்னைப் போலவேதான், என் "காம்ப் கிளார்க்'' ராமச்சந்திரனையும் இப்படிப்பட்டவ னென்று என்னால் அறியக் கூடவில்லை. உனது தத்துவ விசாரணைக்கு அவன் நிரம்ப ஏற்றவன்,'' என்று அவர், வேடிக்கையை விட்டு, வாஸ்தவமாயக் கூற,

"வேலை தோரணையை விட்டு, சாதாரணமாய்ப் பார்ப்போருக்கு அவனைப் பற்றி, கவனித்துத் தெரிந்து கொள்ளவேண்டியது ஒன்று மில்லை! பொய், புனைசுருட்டுகளற்ற, யோக்கியமான பையன். அப்படிப்பட்டவனைத்தான் நீர் எப்பொழுதும் கடுமையாய் நடத்துகின்றீர்! காரியமே பிரதானமா யிருப்போர், ஆடம்பர மற்று அடக்கமா யிருப்பவர்களைக் கண்டால் புத்தியில்லாதவர்க ளென்று நினைத்துக் கொள்வது சகஜந்தான். உமக்கும் அவர்களுக்கும் வெகு தூர மன்றோ?''

"மேரி, உன் உபன்னிசாசத்தைக் கேட்க நிரம்ப சந்தோஷம்! இதோடு நில்லாமல், கேவலம் கிளிஞ்சலையும் முத்தென்று நீ வர்ணிக்கத் தொடங்க வில்லையே யென்று சந்தோஷப்படுகிறேன். மொத்தத்தில், ராமச்சதிரனை யெனக்குப் பிடிக்கின்றது. இத்தேசத்தவர்களுள் அவனொரு அபூர்வ பிரகிருதி. மூன்று வருஷகாலம் அவனுடன் பழகிய

தில், இதுவே நான் அவன்மீது கொண்டிருக்கும் அபிப்பிராயம்.—ஆகையினால்தான், நாம் திருப்தி யடைய வேண்டுமானால், ஒருவருடைய யோக்கியதை பன்மடங்கு பிரபலமாயிருக்க வேண்டி யிருக்கிறது! ராமச்சந்திரனுடைய சாந்தம், வணக்கம், புத்திமேன்மை இவைகளை நாம் கவனியாமலிருக்க முடியாது. உன்னுடைய சகோதரர், மிஸ்டர். கிரேக், உன்னைப்போலவேதான், எது முக்கியமோ அதைப் பாராமல் விட்டுவிட்டார். அவர் ராமச்சந்திரனுக்குக் கொடுத்த யோக்கியதா பத்திரத்தில் என்ன எழுதியிருந்தா ரென்று உனக்கு நினைவிருக்கிறதா? ராமுவிடம் உயர்வாய்க் காணப் படுவது அவன் புத்தி விசேஷமே. ஆனால் அவர் அதைப் பற்றி யொரு வார்த்தைகூட எழுத வில்லை! பிறர் கணணுக்குத் தென்படாத, ஓர் நீர்நிலையினின்றும் உற்பத்தியாகும் ஊற்றுப்பெருக்கைப் போல், நல்லொழுக்கமாகிய மேன்மையான பூமியில் அது பிரவகித்துச் செல்லுகின்றது. இப் பெருக்கை மிஸ்டர். கிரேக் கண்ணால் மட்டும் கண்டவரே யொழிய, அதன் நன்னீரைச் சிறிதும் பருகிப் பார்த்தவரல்ல. கல்வியின் பொருட்டுப் பாடுபடும் இவர்களனைவரும் ஒன்றுக்கும் பிரயோஜன மில்லை!"

இச்சமயத்தில் அவர் மனைவி ஏதோ சொல்ல வாயெடுக்க, அவரதற்கு இடங் கொடாமல், மறுபடியும், "மேரி, ராமுவோடு நீ யின்னும் சற்றுப் பழகியிருக்கவேண்டும். இப்படிப்பட்டவர்களிடத்தில் பழகிப் பார்த்தால்தான், இந்தியாவின் உயர்வு உனக்கு முற்றிலும் விளங்கும். தன தபிப்பிராயங்கள் எவ்வளவு உறுதியா யிருந்தபோதிலும், அவைகளை நம்மிடம் ஒருபோதும் அவன் உறுத்திக் கூறுவதில்லை. வெளியிட்டுக் கூறுவதோடு நின்று விடுகிறான். நம்மிடம் வணக்கமாய் நடந்து கொண்டாலும், ஒரு ஊழிய

னைப்போல், தாழ்மையாகக்காட்டிக்கொள்வ தில்லை. மிகவும் மானியே யொழிய, அகம்பாவம் படைத்தவனு மல்லன். தடுத் துரைப்பது, கோட் சொல்வது, குற்றங் கூறுவது, அரைக் காசாயினும் லஞ்சம் கொடுப்பது அல்லது வாங்குவது, இத் துர்குணங்க ளொன்றும் அவனிடம் கிடையாது. அவன் கூறுவதுபோலவே, கடப்பை ஜில்லாக் காடுகள் நடுவே பெருகிச் செல்லும் பெண்ணை யாற்றைப்போல், அவனும் தன்னு லியன்றவரை தன் கடமையைச் செலுத்தி வருகிரு னென்றே சொல்லவேண்டும். இந்தியாவில் ராமச்சந்திர னைப்போல் மனிதர்கள் அகப்படுவது துர்லபம்; நம்மவர் களினும் அநேக ரிருக்கமாட்டார்கள்! அவன் சொல்வது, செய்வது அனைத்திலும், ஒரு விசேஷமும் அழகும் வெளி யாகின்றன. ஆனல் அவனை யுடனே அறிந்துவிடுவ தென் பது முடியாத காரியம்!'' என்றிவ்வாறு பிரமாதமாய் ஸ்தோத்திரம் செய்ய,

"என்ன, நீர் வியந்து கொண்டாடும் விதம் நூதனமா யிருக்கின்றதே!'' என்ருள் மேரி. "மனதிற்குள் வெகு வாய்ப் புகழ்ந்துகொண்டே, வெளியில் மிகவும் கடுமை யாய் நடந்துகொள்ளுகின்றீர்! பிரியமுள்ளவர்களிடத்தில் கோபத்தை அதிகமாகக் காட்டிப், பிறகு பச்சாத்தாபப்படு வதுதான் உமது வழக்க மென்று எனக்குத் தெரியும்!'' என்று கூறித், தன்னையே நோக்கிப் புன்னகை செய்து,

"இன்று காலை ராமச்சந்திரனிடம் நீர் வெகு கடுமை யாக விருக்க வில்லையா? அவன் முகக்குறியிலிருந்தே அவன் தன் வேலையை ராஜீநாமா கொடுத்துவிடுவா னென்று எனத் குத் தோன்றிற்று. எத்தப்பிதத்திற்காக நீர் அவனைக் கோபித் துக்கொண்டீரோ, அது பிறகு உம்முடைய தப்பிதமென்றே

நீர் கண்டு கொண்டீர்! அதை யவனிடம் ஒத்துக்கொண்டு, நீர் மன்னிப்பும் கேட்டுக்கொள்ள வில்லையே!" என்றாள்.

"என் 'காம்ப் கிளார்க்' கினிடமே நான் பகிரங்கமாய் மன்னிப்புக் கேட்டுக் கொள்வதா! நன்றா யிருக்கிறது! உலகம் கை கொட்டிச் சிரிக்கும். ஆகவேதான் நானிப் பொழுது அதைப் பற்றி நினைத்து வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நாளை 'ஹெட் கிளார்க்' கின் முன் சிரித்த முகத்துடன், அவனைப் பெயர் கொண்டழைத்துப் பிரியமாய்ப் பேசி, அதற்குப் பதில் செய்து விடுகின்றேன்," என்றார் மிஸ்டர். காடெல்.

"ஆயினும் நீர் அவ்வாறு நடப்பது உமக்கழகா? வெளிப்படையாய் மன்னிப்புக் கேட்டுக் கொள்வதில் என்ன குறைந்து விடும்?"

"மேரி, இவ்வுலகில் காரிய நிர்வாகம் செய்ய வேண்டாதவர்கள்போல் பேசுகிறாய்! உத்தியோகத்தி லிருப்பவர்களுக்கு கௌரவ மன்றோ உயிர் நிலை! அதில்லா விடில் நாங்கள், சாம்பலுக் கொப்பாகவே ஆய்விடுவோ மல்லவா? 'காம்ப் கிளார்க்' ஒருவனை எவ்விதம் எல்லோர் முன்னிலையிலும் நான் புகழ்ந்து கொண்டாட முடியும்? நமது துரைத்தன மெல்லாம் அடியோடு தொலைந்து விடாதா? அத்துடன்"—

"தேசம் முழுவதும் ஸர்வநாசம் உண்டாய் விடும் போலும்!" என்றாள் மேரி. "இருக்கட்டும்! ஆயினும் நாம் மரியாதையாய் நடப்பதுகூட அத்துரைத்தனத்துக்கு விரோதமா?"

"மேரி, இப்படிப்பட்ட நிலைமையில் மரியாதைதான் எவ்வாறு வளரும்? வழக்கம் பெரிதன்றோ? பிறரை

யோட்டி வேலை வாங்குபவர் தாக்ஷிண்ணியம் பார்க்க முடியுமா? கடுகடு வென்றுதான் இருக்கவேண்டும். குதிரையின் வேகம் தளராமலிருப்பதற்காகக், குதிரை யோட்டுபவன் எப்பொழுதும் சவுக்கைச் சொடுக்கிக் கொண்டே யிருப்பதில்லையா?"

"சரி, அதற்குமேல் எனக்கும் தெரியும். அவ்வாறு ஓட்டுபவன் குதிரையோட்டத் தெரியாதவனே! ஆயினும், காரியவாதிகள் இவ்வாறுதான் தத்துவம் பேசுவார்கள்! தாம் நாசமடையாமல் பிழைத்திருப்பதற்காகப் பிறரை முதலிலேயே ஒழித்துவிடுவதா? இதைவிட அற்பத்தனமும் கொடுமையும் வேறென்ன விருக்கின்றது? இந்நீதியின் மகிமையினால் இவ்விந்தியா தேசம் நமக்கும் சொந்தமாக வில்லை. இப்பொழுது நாம் அனைவருடனும் சகஜமாய்ப் பழகுவதை விட்டுவிட்டோம். ஒருவரோடும் சேருவது மில்லை, பேசுவது மில்லை. நம்மால் ஆளப்பட்டவர்களை நாம் அறிந்து கொள்ளும் விதம் இஃதன்று! நமது முன்னோர்கள் வெகு சாமர்த்தியமாய்ப் பாடுபட்டுச் சேர்த்துவைத்துச் சென்றதைக் கொண்டு, நாமிப்பொழுது சுகமாய்க் காலம் தள்ளி வருகின்றோம். ராமச்சந்திரனையும் அவன் மனைவியையும் ஒருநாள் சாயங்காலம் இங்கு அழைத்து, அவர்கள் பழக்க வழக்கங்களைப் பற்றி நாம் சிறிது அறிந்து கொள்ள முயன்றா லென்ன?"

"எனக்கு மவ்வாறு எண்ண முண்டு."

"மனதிற் றோன்றுவதை உடனே செய்துமுடிப்பவரா யிருந்தால், நீர் இப்பொழுது அப்படியே செய்ய வேண்டும்!"

"பிறர் என்னைப் பற்றிப் பரிகசிக்க, நமது அரசியல் முழுவதும் பெருங் குழப்பமும் ஏளனமு முற்றுக் கெட்டு விடுமே யென்பதுதான் கவலை. நம்மவர்களுடைய கௌர

வம் யாவும் அழிந்து விடும். நாம் ஒருவருடனும் பேசாமல், ஒருவரையும் நம்மிடம் அணுக வொட்டாமலிருக்கும் சக்தியை யிழந்துவிட்டால், பிறகு நாம் வாழ்வ தெப்படி?"

"அப்படி யொருநாளு மில்லை! நீர் கூறுவது தவறு. "ஈஸ்டு இந்தியா கம்பெனி" காலத்தில் உங்கள் சிறிய பாட்டனார் தஞ்சாவூரில் உம்மைப் போல் ஒரு கலெக்டராய்த்தானே யிருந்தார்! அப்படி யிருந்தும் அவர் எவ்வளவோ பெரிய காரியங்கள் செய்யவில்லையா? மிகச் சக்தி வாய்ந்த அரசர்களைக்கூட, வெகுவாய்ப்பேசித் தன் வழிக்குக் கொண்டுவந்து தன்னாதீனத்தில் அடக்கியும் வைத்திருந்தார். அவர் இவ்வாறு எவருடனும் பேசாமலிருந்ததில்லை. தமிழ், தெலுங்கு இவ்விரு பாஷைகளையுங் கற்றுக் கொண்டு ஜனங்களுடன் சாதாரணமாய்ப் பழகி, அவர்கள் பழக்க வழக்கங்களைப் பற்றித் தேசயாத்திரை செய்பவர்கள் எழுதி வைத்துச் செல்லும் புஸ்தகங்களா லன்றி, நேரிலேயே கேட்டறிந்து கொண்டது மல்லாமல், சாதாரண அரிசிச் சாதம் கூடச் சாப்பிடுவ துண்டென்று கேள்விப்பட்டிருக்கின்றேன். தாமே பார்த் தறிந்துகொண்ட விசேஷத்தால், அவர்கள் ஒரு பெரிய ராஜ்யத்தை ஸ்தாபித்தார்கள். நாம் இவ்வாறிருந்தால், இன்னும் பத்து வருஷங்கள்கூட அது நம் கைவசமிருப்பது சந்தேகந்தான்!"

"மேரி, ஏதோ புஸ்தகத்திலிருந்து ஒப்பிப்பது போல் பேசினாலும், நீ கூறுவது உண்மையே. ஆயினும் அந்நாளுக்கும் இந்நாளுக்கும் பேதமில்லையா? வியாபார உரிமையினின்றும், இப்பொழுது அரசுரிமை யன்றோ நம்முடையதா யிருக்கின்றது! தொன்று தொட்டு வந்த வழக்கத்தையும் நாம் மீறி நடக்கக் கூடுமா? ஒருநாளில் ஒருவனே எவ்விதம் எல்லாவற்றையும் மாற்ற முடியும்?"

"அப்படி யல்ல! உலக வழக்கங்களை ஒருவனேதான் எக்காலத்திலும் மாற்றக் கூடும்! பல பெயர்கள் சேர்ந்து செய்யும் காரிய மன்று அது!"

"அதற்கு இன்னும் காலம் முதிர வில்லை. நான் உள்ள வரை அக்காலம் ஏற்படா தென்றே நினைக்கிறேன். பலத்த காரணங்கள் ஏற்பட்டு, பக்குவ மடையவேண்டும்," என்று காடெல் துரை தனக்குள்ளேயே மெதுவாய்ச் சொல்லிக் கொள்ளும் பொழுது, டபேதார் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து அவரிடம் கொடுத்தான். அவர் அதைப் பிரித்துப் பார்த்து மனைவியிடம் கொடுக்க, அவளும் அதை வாங்கிப் படித்து விட்டு,

"நான் கூறியது சரியா யிருக்கின்ற தல்லவா? என் வார்த்தைகள் அநேகமாய்ப் பலித்து விடும்?" என்றாள். கடிதம் பின்வருமாறு:—

கடப்பை,
மே, 10.

கனம் பொருந்திய துரை யவர்களுக்கு,

என் குடும்ப சம்பந்தமான ஏதோ ஒரு முக்கிய விஷயத்தின் பொருட்டுத், தாமதிக்காமல் நான் இன்றிரவே புறப்பட வேண்டியிருப்பதால், ஒரு வாரத்திற்கு ரஜா வளிக்கக் கேட்டுக் கொள்ளுகிறேன். தாங்கள் லீவு கொடுப் பதற்கு முன், ஊரை விட்டுப் போவதை மன்னிக்க வேண்டும். என் காரியம் மிகவும் அவசரமா யிருப்பதாலும், இம்மூன்று வருஷகாலமாக நானும் லீவு கேட்டதில்லை யாதலாலும், தாங்கள் மறுக்க மாட்டீர்க ளென்று நம்பும்,

தங்கள் மிகவும் பணிவுள்ள
ஊழியன்,
ராமச்சந்திரன்.

---

## அத்தியாயம் 18.

### "தலையணை மந்திரம்."

காடெல் துரைக்கு ராமு எக்காரணத்தால் அக்கடிதமெழுத நேரிட்ட தென்பதை விசாரிப்போம். மிஸ்டர் காடெலும் அவர் மனைவியும், மேற்கூறியவாறு, பெரிய விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, ஜானகியும் ராமுவும், தங்கள் நல்வாழ்க்கைக்கு இன்றியமையாத சில விஷயங்களைப்பற்றி, யொருவரோ டொருவர் தர்க்கம் செய்துகொண்டிருந்தனர். ராமு அதிகமாய்ப் பேசவில்லை; அவன் கூறிய மொழிகள் மட்டும் மிகவும் அழுத்தம் திருத்தமாயிருந்தன. பெருங்காற்று, மழை யடிப்பதற்கு முன் எங்கும் நிச்சலமா யிருப்பதுபோல், வெளிப்பார்வைக்கு அமைதியுடன் தோன்றினன். கடைசியில் அவனை மீறிக் கொண்டு வார்த்தைகள் கிளம்பின.

"ஜானகி, இவ்வாறு காலந்தள்ளுவது எனக்கு மிகவும் அலுப்பா யிருக்கிறது," என்று ராமு, அதிகத் தீர்மானத்தோடு கூறத் தொடங்கினன். "ஊரூராய்த் திரியவேண்டியிருக்கும் இவ்வற்ப உத்தியோகத்தை விட்டொழித்துவிட்டு நமது கிராமத்திற்குச் சென்றுவிடலா மென்றெண்ணுகிறேன். ஓடும் நீரைக் கண்ணுற் கண்டு, அதில் ஒரு நாளாயினும் அமிழ்ந்து ஸ்நானம் செய்து மூன்று வருஷகாலமாகிவிட்டது. இப்பொட்டல் வெளியான கடப்பை ஜில்லாவும் நானும் ஒன்றுய்த்தா னிருக்கின்றேம். வருஷத்திற் பலமாதங்கள் நீர்வற்றி, மணல்வெளியாய்க் கிடக்கும் இப்பெண்ணையாற்றைப் போலவே, என் வாழ்வும் ஆய்விட்டது. இன்னும் மூன்று வருஷத்திற்கு எனக்கு வேலை யுயர்வதாய்த் தெரிய

வில்லை. உன் தாயார் கூறுவதை நான் இனியும் கேட்டுக் கொண்டிருக்க முடியாது. ஜானகி, நீ என் பக்கமாய்ப் பேசவேண்டும், ஸ்வபாவத்தில் யாவும் தெரிந்து நடப்ப வளே யெனினும், ஆலமரத்து நிழலிலடிபட்டு வளர்ச்சி குன்றி யிருக்கும் வேப்பமரத்தைப்போல் நீயும் மன மொடுங்கித் தைரிய மற்றவளாய்விட்டாய்! உன் தாயோ—"

"ஐயோ, அதெப்படி முடியும்?" என்றாள் ஜானகி, கவலையும் பயமும் குடிகொண்ட பார்வையுடன்.—

"நீங்கள் இவ்வாறு கூறுகின்றீர்கள். ஆனால் அம்மா வோ நிலத்தை விற்கமுடியாவிட்டாலும், நீங்கள் ஊருக்குச் சென்று ஆயிரம் ரூபாய் யாரிடமாவது கடன்கேட்டு வாங்கி வரலா மென்று அபிப்பிராயப்படுகிறாள். இங்கு உள்ளூரி லேயே ஐந்நூறு ரூபாய் வரையும் கடனாய்விட்டது. இல்லா விடில் இம்மூன்று வருஷகாலமாக மாதம் இருபத்தைந்து ரூபாயில் நாமெவ்வாறு காலந்தள்ள முடியும்? மற்ற "காம்ப் கிளார்க்கு" களைப்போல, உங்களுக்கு மேல்வரும் படி சம்பாதிக்கும் விதமும் தெரியவில்லை."

"நீ கூறுவதும் சாத்திய மல்ல, ஜானகி. காலேஜ் படிப் பின் நிமித்தம் ஏற்கனவே எனக்கு ஆயிரம் ரூபாய் கடனா யிருப்பது உன் தாயாருக்குத் தெரியுமே! ஐந்து வருஷமாக அதற்கு வட்டி கட்டக்கூட நமக்குச் சக்தி யில்லையே!"

"ஆகவே, அம்மா சொல்வதுபோல் நீங்கள் பெருந் தொகையாய்க் கடன் வாங்கி, இச்சிறு கடன்களை யொழித்துவிடுவது, இன்னும், அவசிய மென்றே யாயிற்று! நீங்கள் லோகத்தாரைப்போல் சிறிது நடக்கவேண்டும்; இல்லாவிடில் நமதுபாடு கஷ்டந்தான்!"

"ஜானகி, அதெல்லாம் முடியாது. உன் அம்மா வுடன் சேர்ந்து, நீயும் அறிவிழந்து பேசுகிறாய்! குடிக்கக்

கஞ்சியற்று, ஒரு பறநாய் போல், நான் பிராணனை விடுவதா யிருந்தாலும், ஏழு தலைமுறையாய்ப் பிதிரார்ஜித சொத்தா யிருக்கும் நிலத்தை யணுவளவும் விற்கச் சம்மதியேன்! இவ்வெல்லாத் துன்பமும் உங்கம்மாவினால் ஏற்பட்டதே யொழியவேறல்ல. இந்த வயதில் எவ்வளவு ஜம்பமும்,பேரா சையும், உற்சாகமும் அவளிடங் குடிகொண்டிருக்கின் றன! நீயும் சற்று அவளைப்போல்தான் இருக்கிறாய். இல்லை யென்றாலும், உன்னைத் தன்சொற்படி யவள் ஆட்டிவைப் பதிற் குறைவில்லை. நானோ உயர்ந்த மனோபாவங்களோடு, ஒன்றும் செய்யச் சக்தியற்றவனாய், துன்பத்திலாழ்ந்து தவிக் கின்றேன். புண்ணிய தீர்த்தமான காவிரி நதி பாயும் நம் சிறு கிராமத்தில், நமக்குச் சொந்தமான ஒரு வேலி நிலம் தென் னந்தோப்பு, இவ்விரண்டையும் வைத்துக்கொண்டு, நம்மிடம் பரமவிசுவாசமுள்ள முருகனோடும் நாமெல்லோரும் எவ்வள வோ ஆனந்தமாய்க் காலங்கழிப்பதை விட்டு, ஒரு அன்னிய தேசத்தில், நீ கட்டிக்கொள்ளும் இவ்வுயர்ந்த புடவையின் விலை காணாத, அற்ப சம்பளத்தில் எதற்காகப் பாடு பட்டுக்கொண்டிருக்கவேண்டும்? எனது பீ. ஏ. படிப்பின் பொருட்டு, அம்மா வைத்துச்சென்ற சிறு கடனையும், எனது இங்கிலீஷ் படிப்பையும் சேர்த்து நாளடைவில் தொலைத்து விடுவேன்! ஜானகி, உன்னுடன் கிராமத்திலி ருப்பது எனக்கு ஸ்வர்க்க சுகமாகவே தோன்றும். ஆனால், அந்தோ!—"

"நாம் முன்பு ஒருதரம் இருந்து பார்க்கவில்லையா?"

"அது மூன்று வருஷங்களுக்கு முன்பு. முருகன் கூறியவண்ணமே, வெள்ளத்தின் காரணமாய், இப்பொழுது நிலங்க ளெல்லாம் இரு மடங்கு விளைந்து செழிப்பாயிருக் கின்றன. கலெக்டர் துரை அவர்போக்கில் மிகவும் நல்ல

வரும் பக்ஷமுள்ளவருமே யெனினும், மிகக் கடுமையும் கண்டிப்பு முள்ளவர். வேலையை ராஜீநாமா செய்துவிடுவதாய் நான் அவருக்கு லெட்டர் எழுதியாய் விட்டது. அதை யிப்பொழுதே அனுப்பிவிடப்போகிறேன். உன் தாயார் என்னவேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளட்டும்! இனி நானொன்றும் அசையப் போவதில்லை!''

இச்சமயம், கதவு திறக்கப்பட, வாயிற்படிக்கு வெளியே நின்று யாவற்றையும் ஒட்டுக்கேட்டுக்கொண்டிருந்த மீனாக்ஷி உட் பிரவேசித்து, பெண்ணின் பக்கமாய்ச் சற்று ஒதுங்கி நின்றுகொண்டு, அதிகாரமான குரலோடு கூறியதாவது:— "நீ யோசிப்பதும் பேசுவதும், அம்மாவின் மடியைச்சொர்க்கமாக நினைத்துக்கொண்டிருக்கும், தாய்ப்பால் மறவாத பச்சைக் குழந்தைக்கே யேற்றவையா யிருக்கின்றன! அயல் வீட்டுக்காரனைப் பார்! அவனுக்கு மெட்ரிகுலேஷன் பரீக்ஷைகூடத்தேறவில்லை! பத்து வருஷத்திற்குள் ஸப் மாஜிஸ்டிரேட் உத்தியோகமாய், அதிகாரமும் ஆடம்பரமும் வாய்ந்து விளங்குகிறான். அவனைப் பார்த்து உனக்கு ஒன்றும் தோன்றாவிட்டாலும், ஜானகிபடும் கஷ்டமும் என் சொற்களுமாவது மனதிற் புகவேண்டாமா? ஒத்தாசைக்கு ஆளொருவரு மில்லாமல், மூன்று வருஷகாலமாக, நாங்களே சமைத்துக்கொண்டு சகல வேலைகளையும், புழுக்கைமாதிரி, செய்துகொண்டிருக்கிறோம்! ஸதா காரியம் செய்து, ஜானகியின் கைகள், பற்றுத் தேய்க்கும் வேலைக்காரியின் கைகளுக்கு மேல் ஆகிவிட்டன. அவளைப் பார்க்கப் பரிதாபமா யில்லையா? அடுத்த வீட்டுக் கமலத்தைப் பார். ஓர் ஏழை உபாத்தியாயருடைய பெண். அவள் புடவை யென்ன! நகை யென்ன! அன்ன நடை யென்ன! ஒரு வேலையு மில்லாமல் எப்பொழுதும் கூடத்தி லுட்கார்ந்து, சப் மாஜி

ஸ்டிரேட் உத்தியோகம் அவளே பண்ணுகிறது போல், அதிகாரம் செலுத்துகிறாள்! என் னருமை ஜானகி கையிலெப்பொழுதும் துடைப்பத்தைப் பிடித்தவண்ணமாயிருக்க, அவள் அதை விரலாற் கூடத் தொடுவதில்லை!"

மீனாக்ஷி மேன்மேலும் படபடப்பாய்ப் பேசினாள். ராமு நடுவில் தடுக்க முயன்றும், அவள் நிற்கவில்லை.

"இப்படி யடிமைகள் மாதிரி உழைத்துக்கொண்டிருக்க எனக்குச் சிறிதும் விருப்பமில்லை. எங்களை யின்னும் சற்றுப் பெரிய அந்தஸ்தில் வைக்காவிட்டால் முடியாது! பிறரை இரந்தோ, லஞ்சம் கொடுத்தோ, எவ்வழியிலாயினும் நீ அதற்கு முயற்சி செய்யவேண்டும். கலகமும் கக்ஷியும் குடிகொண்டு, பாழடைந்து கிடக்கும் உன் தரித்திரக் கிராமத்தை இனி மனதாலும் ஸ்மரிக்க வேண்டாம். உன்னற்ப நிலத்தை அங்கேயே யாருக்காவது விற்று, அப்பந்தத்தை யொழித்து விட்டுக், கையில் பணத்துடன் வந்து சேர்! நீ முன்னுக்கு வரும்படி நான் செய்கிறேன். ஊரூராய் அலைந்து கொண்டிருக்கும் ஒரு "காம்ப் கிளார்க்" கின் மனைவியா யிருக்க ஜானகி இனி யுடன்படமாட்டாள்! உனக்கு முன், அவளைக் கலியாணம் செய்து கொள்ளச் சம்மதித்த பையன் இப்பொழுது வக்கீலாய்க், குதிரை வண்டியிலேறிக் கச்சேரிக்குச் சென்று, பணத்தைப் படியாலளந்து கொண்டிருக்கிறான்!"

மறுபடியும் ராமு ஏதோ சொல்ல வாயெடுக்க, மீனாக்ஷி அவனைக் கையால் அமர்த்திக்கொண்டே, மேலே கூறத் தொடங்கினாள். "இப்படி வேதாந்தம் பேசுவதை விட்டு, நீ காரிய மாவதைப் பார்க்கவேண்டும். காலேஜிற் படிந்த அடக்கத்தையும், கொள்கைகளையும் அகற்றிவிடு. கையாலாகாதவ னன்றோ வேதாந்தம் பேசுவான்! பிறருக்கு நியா

யம் செய்யப் புகுந்தால், நமக்குத் தீங்கைச் செய்து கொண்டதாகுமே யொழிய வேறல்ல. தேகத்தில் ரத்தம் முறிந்துபோனல் எப்படியோ, அப்படியே மேம்பதவியி லாசை யற்றிருப்பதும் ஒருவித நோயேயாகும். ஆடம்பர மற்று வாழ்வது, ஒன்றும் கையாலாகாத எளிய ஜனங்களுக் கேற்பட்ட உபதேச மல்லவா? தேங்கிக் கிடக்கும் நீரில் தவளை யன்றோ விருத்தியாகும்! தெருக் குட்டையானது தவளைகளுக்கும் நத்தைகளுக்கும் இருப்பிடமாவதே போல், கிராம வாழ்க்கையும் அறிவற்ற அற்பர்களுக்கே யேற்ற தல்ல வா? இனிக் கிராம வாழ்க்கையைப்பற்றிப் பேசாமல், உத்தி யோகத்தைச் சிரமப்பட்டு வகிப்பாய். டிப்டி கலெக்டர் வேலை யாகவேண்டு மென்று அல்லும் பகலும் கோரிக்கொண்டி ருந்தால், கூடிய சீக்கிரத்தில் ஆகாம லிராது. அதற்குச் சிரமப்படுவது தோஷ மில்லை! இப்பொழுது நான் கூறுவது கடுஞ் சொற்க ளெனத் தோன்றினும், ஒரு நாள், அவை களின் உண்மை விளங்க, என் பேரில் திருப்தி யடைவாய்!''

பெரும் புயலுடன் கொந்தளிக்கும் கடலில், உடைந்து போன கப்பலினின்றும் சாமான்கள் அலைகளால் கரையி லடித்துக்கொண்டுவந்து தள்ளப்படுவது போல், மேன் மேலும் படபட வென்று கிளம்பும் இவ்வார்த்தைகளைக் கேட்க, ராமு ஒன்றும் சொல்லத் தோன்றுதவனுய் மதி கலங்கி நின்றுன்.

மீனுக்ஷி தான் சொல்லவேண்டியவைகளைச் சொல்லி விட்டு, உடனே அவ்விடத்தை விட்டுச் சென்றுள். அவள் சென்ற பிறகும், அவளது கம்பீரமான அதிகாரக் குரல் எங்கும் நிரம்பி, ராமுவின் காதுகளில் துவனித்துக்கொண்டி ருப்பது போலவே யிருந்தது. மீனுக்ஷி யம்மாளின் இப்

பிரஸங்கத்திற்குப் பிறகுதான், வேலையை ராஜீநாமா செய்து விடுவ தென்று தானெழுதியிருந்த கடிதத்தைக் கிழித் தெறிந்து விட்டு, ராமு முன் னத்தியாயத்திற் கண்ட கடிதத் தை வரைந் தனுப்பினன்.

---

## அத்தியாயம் 19.

### பயிர்க்குள் புழு.

இங்கிப்படி யிருக்க, முருகன் தன் தென்னந் தோப்பில் ஒரு குறைவு மில்லாமல் சுகமாயி ருந்தான். அவனுக்கு மேன்மேலும் அதிருஷ்ட காலமாகவே யிருந்தது. தன் யசமான் கூறிய புத்திமதியின்படி, முருகன் செட்டா யிருந்து பணம் சேர்த்தான். பொன்னியும் அதற்கு ஏற்ற மனைவியா யிருந்தாள். பூலோகத்தின் கண்ணுள்ள சிறு ஸ்வர்க்கமோ வென ஐய முண்டாகும் வண்ணம், அவ்விருவரும் சேர்ந்து, தமது தென்னந்தோப்பைச் சிறந்து விளங்கச் செய்ய, அதைப் பார்த்து அவ்வூரில் ஆசையும் பொருமையுங் கொள்ளாதவ ரில்லை. முருகன் தன் யசமானனைப் பற்றி யடிக்கடி நினைத்துக்கொண்டான்.

"பொன்னி, யசமான் முகத்தைப் பார்த்து மூணு வருசமாச்சு! கொஞ்ச நாளா அவர் சரியா எழுதுவது கூட இல்லே. நாமிப்படி சௌக்கியமா, சந்தோஷமா யிருப்ப தெல்லால் நம்ம யசமான் தயவுனலே யல்லவா?" என்று முருகன் நன்றி விசுவாசத்தோடு சொல்ல,

"ஆமா; ஆனா, நம்ம சொத்து சுதந்திரத்தைக் கண்டு ஊரிலே வயிற் றெரிச்சப் படாதவங்க இல்லே!" என்றாள் பொன்னி.

"அது சகஜந்தான், பொன்னி! ஆனா, கொஞ்ச நாளைக்கு நாமின்னும் அதிகமா அடக்க ஒடுக்கத்தோடு நடந்து கொண்டா, அப்பொருமை யெல்லாம் ஓடிப் போயிடும்," என்று முருகன் உபதேசித்து விட்டு, வேறு விஷயமாய்ப் பேசத் தொடங்கினான். "பொன்னி,

இந்த மூணு வருசமா நாமெவ்வளவு சேர்த்தோம்; நம்ம சொத்து யெவ்வளவு யின்னு கணக்குப் பார்ப் போம்! சரீரப் பாடுபட்டுச் சேர்த்த தொகை ஐந்நூறு. இந்த ஜோடிக் காளைகள் நூறு ரூபா பொறும். ஆனா, ஒரு கஷ்டம்! நாம் இந்தப் பணத்தைப் பூமிக்குள்ளேதான் புதைச்சு வைக்கணும்! ஏனெனில் நாம் பண்ணையாளுங்க! ஆகையாலே நிலம் வாங்கவாவது, பணத்தை வட்டிக்கு விட வாவது, ஒண்ணும் செய்ய முடியாது. ஊரிலே எல்லோ ருக்கும் எரிச்சலும் பொறாமையும் உண்டாயிடும். பணக் காரங்க எல்லாம் ஒண்ணு சேர்ந்து நம்மைத் திட்டிக் கொட்டி, திருட்டுச் சொத்து யின்னு பணத்தைப் பிடுங்கிக் கொண்டு விடுவாங்க!"

"ஆமா," என்று பொன்னியும் ஆமோதித்தாள். அப்புரம் மலர்ந்த பார்வையுடன், "இத்தென்னந் தோப்பு நமக்கே யெப்பவும் சொந்த மாயிட்டா, எவ்வளவு சந்தோச மா யிருக்கலாம்! ஒருத்தர் வம்புக்கும் போகாமே, நம்ம பாட்டுக்கு சீவனம் பண்ணிக் கொண்டு கிடக்கலாமே?" என,

"பொன்னி, நம்ம யசமான் சொத்துக்கு நாம் ஆசைப் படுவது பாவம். எந்தப் பள்ளி, படையாச்சியாவது ஒரு ஏகர் நிலம் சொந்தத்திலே வைச்சுக் கொண்டிருக்கானா, பாரு! நாளைச் சாப்பாட்டுக்கு என்ன வழி என்பது அவ னுக்குத் தெரியுமா? பண்ணை ஏற்பாடே ஒண்ணும் ஒழுங் கா யில்லை! உழுது பாடுபடுகிறவனுக்கு நிலத்திலே ஒண்ணும் பாத்தியங் கிடையாது! தலைமுறை தத்துவமா அவன் வேலை செய்஧்சு வந்தாலும், அன்றுடம் கூலிக்கு அமர்ந்தவன் போலேதான் அவனை நடத்துறுங்க! யசமான் தன்னிலத் தை நம்மிடம் குத்தகை யடைச்சிருப்பதாலேதான், முன்

போலில்லாமே, நாமிப்போ கொஞ்சம் நல்ல ஸ்திதியில் இருக்கோம். விளைச்சலும் முன்னேவிட இப்போ இரட்டிப்பா யிருக்கு. உழுது பயிரிடுறவனுக்கே நிலம் சொந்தமா யிருந்தா, பிறகு ஒருத்தருக்கும் ஒரு குறைவு மில்லை. ஆனா நிலம் சொந்தமா யுள்ளவன், தானே உழறது கிடையாது. அவனுக்கு யெவ்வளவு வேணுமோ அதுக்கு மேலே யிருந்தா, அவனுக்குப் பாடுபடத் தோணுவ தில்லை. அது ரொம்ப அக்கிரமம்! லோகத்திலே எல்லாம் விபரீதமாத்தான் இருக்கு! ஆனா அதை நான் சொன்னா யாரு கேப்பாங்க? அங்கே பாரு! யாரோ வேகமா வராப்போலே தோணுது.—தபால்காரன்மாதிரி யில்லை; தலையாரி யின்னு நினைக்கிறேன். அவன் வந்தா கெட்ட சகுனம்தான்!"———— "என்ன விசேஷம்?" என்று முருகன் அவனை விசாரிக்கச் சென்றான்.

"முருகா, உன் னதிருஷ்டத்துக் கெல்லாம் முடிவு காலங் கிட்டிவிட்டது! உங்க எசமான் இன்று ஊருக்கு வந்து விட்டாங்க. உன்னை உடனே வரும்படி சொல்லி யனுப்பி யிருக்காங்க. அதற்குள்ளே என்னென்னமோ சொல்லிக் கொள்றாங்க!" என்று தலையாரி சொல்ல,

"என்ன சொல்லறாங்க?" யென்று முருகன் வினவினான்.

"நீயே போய் கேட்டுக் கவலைப்படேன்! வதந்தி பொய் யாகாது! அப்படி யிருந்தா, உன் னதிருஷ்ட மெல்லாம் அவ்வளவுதான், போ!" என்று அலக்ஷியமாய்க் கூறிவிட்டுத் தலையாரி, கையி லிருந்த கிராம போலீஸின் அதிகாரச் சின்னமான தடியைச் சுழற்றிக் கொண்டே, வயல் வழியே வேகமாய்ப் போய்விட்டான்.

---

# அதியாயம் 20.

## நியாயம் என்பது தனி!

கவலையும் பயமும் ஒருபக்க மிருக்க, யசமானைக் காணு வதில் சந்தோஷமும் நன்றியுங் குடி கொண்ட மனத்தினனாய், முருகன் தன் குடிசையை விட்டுக் கிளம்பினான். அவன் சிறிது தூரம் செல்வதற்குள் ராமுவே யெதிரே வர, இரு வரும் மீண்டும் தோப்பிற்குள் புகுந்தார்கள்.

"எசமானைக் கண்ட சந்தோஷம் எனக்குக் கண் ஒண் ணும் தெரியல்லே! ஆனா, எசமான் முகம் வாடிப் பேசாமே யிருப்பதற்குக் காரண மென்ன?" என்று முருகன் கேட்க,

"முருகா, இனி நான் உன் எசமான் அல்ல. பிற ருடைய தீய பேராசைக்காக, வீட்டை விட்டோடி, அற்ப "காம்ப் கிளார்க்" உத்தியோகத்தி லுழைத்துக்கொண்டி ருப்பவன்! நீ குத்தகை யெடுத்திருக்கும் நிலங்கள் இனி என்னுடையவை யல்ல. இப்பொழுதுதான் நான் அவை களைப்பெரியசாமி ஐயருக்கு விற்று வந்தேன். இத்தோட் டத்தை இன்னும் ஒன்றும் செய்யவில்லை. ஆயினும் அதையும் விற்க வேண்டியதே!" என்றான் ராமு. ஒரு நிமிஷம் பொறுத்து, மறுபடியும், "முருகா, நியாயமாக இத் தோப்பு உனக்கே சொந்தம். கடவுள் முன்னிலையில், அவ்வுரிமை உன தல்லாது, பிறருக் கில்லை. என் குடும்பத்தவர்களுக்கும் முன்பு, ஒன்பது தலைமுறையாக நீங்கள் இங்கு வசித்துக் கொண்டிருக்கிறீர்கள். முதலில் இவ்விடம் வெறும் திட லாக விருந்தது. உன் தகப்பன்தான் இதைச் சீர்படுத்தித் தென்னம் பிள்ளைகளை வைத்துப் பயிராக்கினான். அவைகள் வளர்ந்து மரமாவதற்கு அவன் கவலையுடன் பாடுபட்டது

போல், உன் தாயும் உன்னை வளர்த்திருக்கமாட்டாள்! நியாய மாக இத்தோப்பு உன்னுடையதே! ஆயினும், மனிதனுக் கிருக்கும் சபலத்தில், தனக்குச் சொந்த மல்லாதவைகளை அவைகளுக் குரியவரிடங் கொடுப்பதற்கும் பணம் வாங்குகிறான்! முருகா, நீ ஏதோ கொஞ்சம் ஆஸ்தி சேர்த்திருப்பதாக இங்கு சொல்லிக்கொள்ளுகிறார்களே! அதைக் கேட்க எனக்குப் பெருமையாகவே யிருக்கிறது. அது எவ்வளவு கொஞ்சமாயினும், எனக்குக் கொடுத்துவிடு. நான் இன்று மாலையே இத்தோப்பை உன் பெயருக்கு மாற்றி, உனக்கே சொந்தமாக்கி விடுகின்றேன்!'' என,

அவ்வார்த்தைகள் முருகனுக்கு மிக்க வருத்தத்தையும் மனக்கலக்கத்தையு முண்டாக்கின. தான் சேகரித்திருந்த ஆஸ்தி வெளியாகி, அதனால் நேர்ந்த துன்பங்களையும் கருதிச் சிறிது ஏக்கமுற்று நின்றான்.

''சாமி நான் நன்னி கெட்டவ னில்லை! நீங்க என்னை பரீக்ஷை பண்ணுகிறாப்போலே தோணுது! ஒரு ஏழைக் குடியானவன்,—அவன் என்ன ஆஸ்தி சேர்த்திருப்பான்? ஊரிலே யிருக்கிறவங்க பொறாமை, குறும்புத்தனம்,— என்னைத் தொலைக்கக் கிளம்பிய வேலை இது!''

''முருகா, நான் கூறுவதை நீ யறிந்துகொள்ள வில்லை. உன் சொத்தை நான் இப்பொழுது அபகரிக்க வரவில்லை. என்னிடம் ஒன்றையும் மறைக்கவேண்டாம். நீயோ மிகவும் நம்பிக்கையும் நாணயமும் வாய்ந்தவன். நானும் வேடிக்கை யாகப் பேசவில்லை. ஏதாவது பெயருக்கு ஓர் கிரயத்தை நீ கூறினாலும், நான் அப்பணத்தைப் பெற்றுக்கொண்டு இத் தோப்பை உனக்கு விற்றுவிடுகின்றேன். பொன்னி, நீயும் ஒன்றும் பேசாம லிருக்கிறாயே! என் முன்னிலையில் நிஜத் தைச் சொல்ல உனக்கும் பயமா யிருக்கிறதா? உங்கள்

உழைப்பையும் செட்டையுங் காண எனக்கு எவ்வளவோ பெருமையா யிருக்கிறது! நீங்கள் ஐந்நூறு ரூபாய் கொடுத்தாலும் போதும். அதற்கு மும்மடங்கு அதிக விலை இத்தோட்டம் பெறு மென்றாலும், நான் ஆக்ஷேபிக்க வில்லை. என்ன சொல்லுகிறாய், பொன்னி?"

முருகனும் பொன்னியும் ஒருவர் முகத்தை யொருவர் நோக்கினார்கள். பிறகு இருவரும் ஒரு மனத்தினராய், "நாங்க சேர்த்த ஆஸ்தி யெல்லாம் ஒரு மண் பானையிலே போட்டு மூடி, எசமான் நின்னிருக்கும் மரத்தடியிலேதான் புதைச்சு வைச்சிருக்கோம்! அதிலே ஐந்நூறு ரூபா, அவ்வளவும், பணமாகவே யிருக்கு! சாமி, நியாயமா அது உங்க சொத்துதான்! உங்களுக்குத் தேவையா யிருந்தா, அதை யெடுத்துக்கொள்ளுங்க. ஆனா இத்தோப்பையாவது நிலத்தையாவது கொஞ்சங்கூட விற்கவே வேண்டாம். எசமானுக்கு வேண்டும்போது உதவாத முருகன் விசுவாசம், என்ன விசுவாசம்? நான் சொல்றேன், சாமி!——ஏழுதலை முறையா அப்படியே யிருக்கும் நிலத்தை ஒண்ணும் செய்ய வேண்டாம்!" என,

"முருகா, இவ்வுபதேச மெல்லாம் இனிப்பிரயோஜன மில்லை. எவ்வளவோ வருஷங்களுக்கு முன்பு கேட்டிருக்க வேண்டும்!" என்றான் ராமு. "நான் என் வீட்டைக்கூட விற்றாய் விட்டது. இவ்வழகிய தோட்டமாவது உன் கைவச மிருக்கக் கூடுமானால், எனக்கு சந்தோஷமா யிருக்கும். அது உன்னாலும் உன் தகப்பனாலும் பரிபாலிக்கப்பட்டது. பக்கத்திலிருக்கும் ஒருமா நிலத்தையும் நான் உனக்கு இனாமாகக் கொடுக்கின்றேன். நீ நன்றா யுழைத்துப் பாடுபடுவதனால், அதில் வருஷத்திற்கு இருபத்தைந்து கலம் நெல் விளையும். உனக்கு அது யதேஷ்டம். இத்தோப்பிலீ

ருந்தும் உனக்கு மேற் செலவிற்குக் குறைந்தது மாதம் பதினைந்து ரூபாய் அதிக வரும்படியுங் கிட்டும். உங்களுக்கு இஷ்ட மிருந்தால், எவ்வளவோ பரிசுத்தமான மார்க்கத்தில் நீங்கள் காலம் தள்ளலாம்!''

“ஆனு, ஊரிலே எல்லாரும்—'' என்று முருகன் கூறு முன்,

“அவர்களை நீ கவனிக்க வேண்டாம்!'' என்றான் ராமு. “ஒருவர் வம்புக்கும் போகாமல், நீ யோக்கியமாயிருந்தால் உனக்கு ஒரு கவலையு மில்லை. நான் இப்பொழுதே பத்தி ரத்தை யெழுதி விடுகிறேன். என்னுடன் வா. ரிஜிஸ்டர் செய்து விடுவோம். இன்னும் இருபத்து நான்கு மணி நேரத்தில் நான் என் வேலைக்கு மீண்டும் போய்ச்சேர வேண்டும். மரணதண்டனைக்குட்பட்ட கைதிக்குக் காலம் எப்படிச் செல்லுமோ, அவ்வாறே என் ரஜாவும் ஓடுகின் றது! முருகா, பொன்னி! உங்கள் உழைப்பிற்கும் சிக்கனத் திற்கும் தக்க கைம்மாருக, நீங்க ளிருவரும் யோக்கியமாய்ச் சன்மார்க்கத்தை யனுசரித்துச் சுகமாய் வாழ்வீர்கள்!''— துக்கத்தினுல் ராமுவின் தொண்டை தழதழத்தது.

“முருகா, நீ இளநீர் சீவி யருந்தும்பொழுது, என் அன்னை உயிருட னிருந்த காலத்தில், குழந்தையாய் ஒரு கவலையு மில்லாமல் நானும் உன்னுடன் சேர்ந்து விளையாடி, இளநீர் அருந்தியதை நினைத்துக்கொள்! கல்வி கற்றதின் பயனுக, நான் சம்பாதிக்க இவ்விடத்தை விட்டுச் செல்ல வேண்டியிருக்கிறது. உலகத்தை எதிர்க்க என்னுல் முடி யாது; அதற்கு நான் அடிமைப்பட்டுத்தான் தீரவேண்டும்! நீ சிரமப்பட்டு இத்தென்னைகளைப் பயிராக்கி யிருக்கின்ருய். அவைகளின் உரிமை உனக்கே ஏற்பட்டது. நியாய மென்ப தொன்று தனியா யுண்டல்லவா? முருகா, வருத்தப்படாதே!

என்னுடன் வா. நான் நாளையே என் வேலைக்குப் போய்ச் சேரவேண்டும். என் குரலிலிருந்தும், என் முகத்தினின்றும், நான் ஏதோ வருந்துவதா யெண்ணி நீ கவலை கொள்ள வேண்டாம். அதன் காரணம் நீ யறியக் கூடிய தல்ல. இவ்வுலகிலுள்ளோ ரனைவரையும் பற்றி நான் சிந்திக்கிறேனே யொழிய, என்னைப்பற்றி மட்டுமல்ல! முருகா, வா,—போவோம்.''

---

ROJA MUTHIAH
47, HOSPITAL STREET
KOTTAIYUR—623 106
P.M.DIST. INDIA

## அத்தியாயம் 21.

### அலவந்தி ஆற்றங்கரை.

ராமு முருகனுடன் பேசிக்கொண்டிருக்கும் பொழுது, ஊரிலும் ஒருவரும் நமக் கென்ன வென்று இருக்க வில்லை. காலையில் வழக்கம்போல் காவிரிக்கரையில் பெண்டுகளின் மானோபாவங்களும் எண்ணங்களும் நன்கு வெளியாயின. ஆற்றங்கரையே ஸ்திரீகளின் ராஜ்யமா யிருந்தது. வீட்டிலும் வயல்வெளிகளிலும் புருஷர்கள் அதிகாரம் செலுத்திய போதிலும், நதிக்கரையில் அவர்களை யொருவரும் கவனிப் பாரில்லை. வந்தவுடன், நிற்காமல் ஸ்நானம் செய்துவிட்டு, அவரவர்கள் காரியத்திற்குத் தக்கவாறு, ஜபதபாதிகளை விரைவில் முடித்துக்கொண்டு, மற்ற காரியங்களை கவனிக்கத் தத்தம் வீடு செல்ல, ஸ்திரீகளோ ஸ்வேச்சையாய் வம்பளப் பதில் காலம் போக்கினார்கள். வேனிற் காலத்தில் ஸ்படிகம் போல் தெளிந்த, அக்குளிர்ச்சியான நீரி லிறங்கியதும், அவர் களால் பேசாமல் சும்மா விருக்க முடியுமா ?

பாலியத்தில் சிறிது பெயருடையவ ளென்று, நாம் முன்பு கூறிய, நடுத்தர வயதுள்ள அம்மாள் ஆற்றங்கரைக்கு வந்து, வெகு லாகவமாய், புடவையின் ஒரு தலைப்பை மட்டுங் கட்டிக்கொண்டு ஜலத்தில் இறங்கினாள். கை கால்களை நனைத்துக்கொண்டு கழுத்துமட்டும் நீரில் அமிழ்ந்ததும், பலவர்ணமான அவளது நீண்ட ஆடை யானது ஓடும் ஜலத்தில் ஆங்காங்கு ஒப்பி, அழகாய்க் கொப் பள மிட்டுக்கொண்டிருந்தது.

"அப்புரம் சமாசாரம் உங்களுக்குத் தெரியுமோ ? ராமு தன் வீட்டைக்கூடப் பெரியசாமி ஐயருக்கு விற்று விட்டானாம் !" என,

"அவன் நில மெல்லாம் என்ன வாயிற்று?" என்று ஒருத்தி வினவினாள். "என்னகத்துக்காரர் அவன் நாத்தங் காலை வாங்கவேண்டு மென்று ரொம்ப வருஷங்களாய் எதிர் பார்த்துக் காத்துக்கொண்டிருக்கிறார்."

"எல்லாவற்றையும் ராமு பெரியசாமி ஐயருக்கே விற்றுவிட்டான். இனி யொன்றும் பாக்கி யில்லை."

"என்ன கத்துக்காரர் இப்பொழுது ஊரி லில்லையே யென்றிருக்கிறது. இனிமேல் ஒன்றும் முடியாதா?"

"ஏது, இனி அதைப்பற்றி நினைப்பதில் பிரயோஜன மில்லை. எல்லாவற்றிற்கும் மேல் ஒரு பெரிய வயிற்றெரிச்ச லென்ன வெனில், தன் தென்னந்தோப்பை முருகனுக்கு ராமு கொடுத்துவிடப் போகிறானும்! அவனுக்கு நல்ல அதி ருஷ்டம்! இனிமேல் கழுத்தில் தலை நிற்காது!"

"பள்ளிகளுக்கும் படையாச்சிகளுக்கும் நல்ல காலமா யிருக்கிறது; பிராம்மணர்களுக்கு கஷ்டகாலம்! முருகனுக்கு இனிமேல் தலை தரிக்காது. கர்வம் அதிகமாய்விடும். ஏற் கனவே பொறாமையினால் ஒருவருக்கும் அவனைக் கண்டால் இப்பொழுது பிடிக்கிறதில்லை. ஒரு பள்ளிக்குச் சொந்தத் தில் நிலம் எதற்கு?"

"இதோ சீதை வருகிறாள். ராமுவின் வர்த்தமானங்க ளெல்லாம் அவளுக்கு நன்றாய்த் தெரிந்திருக்கும்; அவளைக் கேட்போம். ராமுவும் அவளும் ஒருவருக்கொருவர் ரகசிய மாய்க் கடிதங்கூட எழுதிக்கொள்வதாய்ச் சொல்லுகிறார் கள்!"

"என்! மூன்று வருஷத்திற்கு முன்பு, ராமு ஊரை விட்டுச் செல்வதற்கு முதல்நாள் சாயந்திரம், அவ்விருவரும் கோவிலில் சந்தித்து,— ஒருவரை யொருவர் கட்டி முத்த

மிடாத தோஷம்!—அவ்வளவு நெருங்கி நின்று பேசிக் கொண்டிருந்ததாகச் சொல்லிக்கொள்ள வில்லையா? கோவி லில் விளக்கேற்றும் சூத்திரப்பையன் அவர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கண்ணால் பார்த்ததாகச் சத்தியம் செய் கிறான்!''

"பாபம், ஒரு பாவமும் அறியாதவர்கள்மேல் வீண் பழி சுமத்தவேண்டாம். சீதை மாசற்றவள். இந்த ஏழு வருஷங்களாக இதுவரையும் அவளைப்பற்றி நாம் ஏதாவது தவறாய்க் கேட்டிருக்கிறோமா?'' என்று வேறொருத்தி ஆக்ஷேபித்தாள். ஆற்றங்கரையா யிருந்தாலும், அங்கு பேசும் வம்புக்கும் ஓர் வரம்பு உண்டென்று, இவள் அதிக மா யொருபொழுதும் வீண் வம்பளப்பதில்லை.

"எப்படியோ, முன் பெல்லாம்விட இப்பொழுது அவளுக்குச் சற்று நல்ல காலந்தான்! ஒரு பிள்ளை பிறந்து விட்டது! அவள் கணவன் பழையபடி கெட்ட நடத்தை யில் இறங்கியதனால் இனி யென்ன பாதகம்? குழந்தை முகத்தைப் பார்த்துத் தன்னைத் தேற்றிக் கொள்ளுகிறாள்!''

இதற்குள் அங்கு வந்துசேர்ந்த சீதை, "என்னைப்பற்றி யென்ன? ஏதோ கண்சிமிட்டிக்கொண்டு குசுகுசு வென்று பேசிக்கொள்ளுகிறீர்கள்!'' என்று கேட்டாள். ஸ்திரீக ளுக் கியல்பான நுண்ணறிவினால், தன்னைப்பற்றித்தான் ஏதோ வம்பென்று அவளுக்குத் தெரிந்துவிட்டது.

"ஒன்று மில்லை, யம்மா. உன் அதிருஷ்டம் இவ்வளவு அழகான பிள்ளை பிறந்திருக்கிற தென்று பேசிக்கொண் டோமே யொழிய, வேறல்ல.''

சீதைக்கு இதைக்கேட்க மிகவும் பெருமையா யிருந் தது. குழந்தையை மணலில் விளையாட விட்டு, விரைவாய் நீரி லிறங்கி ஸ்நானம் செய்யலானாள்.

"ஏன், உன் முகம் இன்று ஏதோ ஒருவாறு யிருக்கிறது, சீதா?" என்று ஒருத்தி புன்சிரிப்புடன் விஷமத்திற்காகக் கேட்க,

"ராமு தன் நிலத்தை யெல்லாம் விற்று ஊரை விட்டுச் செல்லும்படியான காலம் வந்ததே யென்றுதான்!" என்றாள் சீதை. "நம்முடைய வூராரொருவர் இனித் திரும்பிவாராமல் வீடுவாயில் யாவற்றையும் விற்றுச் செல்வ தென்றால், யாருக்குத்தான் வருத்தமா யிருக்காது? அதுவும் ராமுவைப் போல் பரம சாந்தமும் நற்குணமும் படைத்தவரைப்பற்றிக் கேட்கவேண்டுமா?" இச்சம்பாஷணையை வளர்க்கச் சீதைக்கு விருப்ப மில்லையாதலால், வாய் பேசாது தன் னெண்ணங்களிலேயே முற்று மாழ்ந்தவளாய், வேகமாய் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு அகத்திற்குப் புறப்பட்டாள்.

ராமுவும் அப்பொழுதுதான் தோப்பிலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்தான். வழியிலிருவரும் சந்திக்க, அவ்வாறு நேர்ந்ததை யெண்ணி சீதையும் ராமுவும் உள்ளுக்குள் சந்தோஷ மடைந்தனர். அவனுடன் வாய் திறந்து பேச சீதைக் கிருந்த ஆவல் இவ்வள வவ்வள வென்றில்லை. ராமுவுக்கும் அதற்கு மேலேயே இருந்தது. ஆயினும் குலாசாரத்தை மீற முடியா தன்றோ! இருவ ருள்ளமுங் கண்களும் ஒன்றுபட்டன. "கண்ணோடு மனமும் கூடினால் பேசவும் வேண்டுமோ!" ஸ்நானம் செய்து ஈர வஸ்திரத்தை யணிந்திருந்த சீதை, பறிக்காத அழகிய வாழைப் பூவைப் போல் விளங்க, அவளது அன்பு நிறைந்த உள்ளத்தைத் தான் புகுந்து பார்ப்பது போல் ராமுவுக்கும் தோன்றிற்று.

அவர்க ளிருவரும் மௌனமா யிருந்தபோதிலும், சீதையின் ஹிருதயம் களிப்பெய்துமாறு அவளது சிறு பாலகன் ராமுவை யெதிர்கொண் டழைத்தான். மூன்று

வயது குழந்தை யெவ்வண்ணம் பேசும்? இனிய மழலைச் சொற்களுடன், தனது சிறு கரங்களை அவன் ஆவலாய் நீட்டி யழைக்கவும், சீதை யடைந்த ஆனந்தத்திற் கெல்லையே யில்லை.

“முருகா, சீதையின் குழந்தையா யிவன்?” என்று ராமு முருகனைக் கேட்டது அவள் காதுகளில் விழுந்தது.

“ஆமாம், சாமி? மூணு வயசாச்சு. இப்பிள்ளையைப் பார்த்துத்தான் அவங்க மனம் தேறி யிருக்காங்க. அவங்க யசமான் மறுபடியும் கெட்ட வழியிலே யிறங்கிவிட்டாரு. ஆனா பெரிய அம்மா இறந்து போயிட்டதனாலே, சீதை யம்மாதான் இப்போ வீட்டுக்கு எசமானி,” என்றான் முருகன்.

ஆனால் ராமுவுக்கு இவ்வார்த்தைக ளொன்றும் சரியாய்க் காதிற் படவில்லை. போகும் சீதையையும் அவள் குழந்தையையும் அன்புடன் பார்த்துக்கொண்டே நின்றான். அவள் போகட்டு மென்று வேண்டு மென்றே பின் தங்கிய ராமுவுக்குத் திடீரென்று ஓராசை யுதித்தது. “உலக மரியாதையும் வழக்கமும் எக்கேடாயினும் கெடட்டும்! நான் அலவந்தியிலிருப்பது இன்று கடைசி நாளாகையால், சீதையி னகத்துக்குத் தைரியமாய்ச் சென்று, அவளுடன் பேசி, அங்கு சாப்பிட்டு வந்தா லென்ன? ஒரு சீமாட்டியின் வீட்டில் ஓரெளிய பிராம்மணன் போஜனம் செய்வது முறை தவறன்றே!” என்று யோசித்தான். திடீரென்று ஒரு நிமிஷத்தி லுதித்த அவ்வெண்ணத்தைப்பற்றி மறுபடியும் தீர்க்கமாய் ஆலோசித்த ராமு, முடிவில், தாகசமனம் செய்து கொள்ளாமலும், ஆகாரம் புசிக்காமலும் உடனே அவ்விடத்தைவிட்டுச் சென்றுவிடவேண்டு மென்றே தீர்மானித்தான். ஆயினும், சீதையின் ஞாபகத்திலேயே, அவ்விரண்டும்

அவனுக்கு மறந்துபோய் விட்டது. அவனுள்ளத்தில் வேறு பல நினைவுகள் தோன்றின. சீதையைக் கோவிலில் சந்தித்தது அவன் மனதைவிட்டு அகலவே யில்லை. இத் தகைய எண்ணங்களுடன், தான் வைக்கும் ஒவ்வோர் அடி யும் பிறந்த ஊரைவிட்டு அவன் பிரிந்து செல்வதை யறி வுறுத்த, ராமு கிராமத்திற்கு மேற்கே யுள்ள குளத்தை யடைந்து, அக்குளிர்ந்த ஜலத்தில் கால்களைக் கழுவிக்கொண் டான்.

மௌனமாய்த் தன் எசமானனைப் பின் தொடர்ந்து சென்ற முருகனும், வேறுவித யோசனையில் ஆழ்ந்தவனாய், இது கனவோ நினைவோ வென்று திக்பிரமை யடையலா னான். அலவந்தியில் யார் கண்டாலும் ஆசைகொள்ளும் அவ்வழகிய தென்னந்தோப்பு அவனுக்கே சொந்தமாய் விடுவதென்றால், இது ஸ்வப்னமே யன்றி வேறல்ல வென்று முருகன் கருதலானான்.

———

## அத்தியாயம் 22.

### புனர் ஜனனம்.

அலவந்தியின் புழுதிகூடக் காலி லிருக்க லாகா தென் றெண்ணியவன்போல், ராமு குளத்தி லிறங்கிக் கால்களை யலம்பிக்கொண்டவுடன், தான் முற்றிலும் மாறிவிட்டதாக அவனுக்குத் தோன்றிற்று. புது ஜன்மமும், புது உணர்ச்சியு முண்டானது போல் தோன்ற, தன் பந்தங்க ளெல்லாம் அற்று, சொல்ல வொண்ணாத மன ஒழிவை யடைந்தான். தன்னைப்பற்றிய கவலை அவனுக்கு முற்றிலும் நீங்கிவிட்டது. இனி உலகின் பொருட்டே, நிஷ்காமமாய் அவன் உயிர் வாழ் பவனானான். சகல ஆசைகளையும் துறந்த, ஒரு யோகியின் மனோ நிலைமை அவனைப்பற்றவும், நன்னீரும் இலைகளும் மட்டும் உண்டு, தியானபரனா யிருக்கும் ஒரு முனிவரைப் போல், தானும் உயிர்வாழத் தீர்மானித்தான்.

இவ்வாறு ஓர் புதிய உள்ளக் கிளர்ச்சி அவனுக் குண் டாக, அக்கணமே அவன் மனதிலிருந்த சந்தேகங்கள், துன் பங்கள் யாவும் அடியோடு விலகிவிட்டன. அவன் கல்வி கற்ற நாட்க ளெல்லாம் இறுதி யடைந்து, இனி அக்கல்வி யின் பயனை, ஒன்றுக்கு நூறு மடங்காகப் பிறருக்கு அளிப்ப தன்றோ அவன் கடமை! அதன் பொருட்டுப் பாடுபடுவதி லும், இதுவரையும் தோன்றாத வோர் புதிய அனுபவமும் களிப்பும் இப்பொழுது ராமுவுக்கு உண்டாகத் தலைப்பட் டன. ஆகாயம் பூமி இவ்விரண்டையும் ஆக்கிரமித்து, யாவற்றையும் தனது பேரொளியில் மழுங்கச் செய்து ஜ்வலித்துக்கொண்டிருக்கும் தினகரனான சூரியன் அஸ்தமித்

ததும், கீழ்த்திசையில் ஒன்றன்பின் னொன்றாய்க் கிளம்பும் நக்ஷத்திரங்கள்போல், ஜீவியதத்துவங்களும் ராமுவுக்கு, இவ்வுலகப்பற்று நீங்கியதும், நன்கு விளங்கத் தொடங்கின. ஆசை யென்னும் அலையா லலைப்புண்ட சம்சாரசாகரத்தில் தத்தளிக்கும் கப்பலைப்போன்ற அவன், கடைசியாகத் தன்னைப் பிடித்திழுக்கும் நங்குரக்கயிறுகளை யறுத்து விடுவதே, தான் உயிர் தப்பும் வழி யென்பதைக் கண்டு கொண்டான். ஏனெனில், பெரும் புயலில், பிணிக்கப்பட்டு நிற்பது கப்பலுக்குப் பெரும் ஆபத்திற் கிடமன்றோ!

மீனாக்ஷியின் வார்த்தைகளும் ஒரு விதத்தில் உண்மையாகவே முடிந்தன. ஊர்ப்பாசமாகிய விலங்கு தெறித்ததும், துன்பத்திற்கு ஹேதுவாய், மாந்தருக்கு இயல்பாயிருக்கும் 'தன்னுடையது' என்ற நினைவு அவனை விட்டொழிந்தது. ஆலமரத்தைச் சுற்றி அதனடியிலே யுண்டாகும் ஆலம்விழுதுபோல், பிறந்த ஊரில் வேரூன்றிய பாசமுடைய ராமுவும், அலவந்தியில் ஒன்று மறியாத பேதையா யிருந்தது போக, இப்பொழுது உலக முழுவதையும் தனதாக வெண்ணிப், பலவிதமாய், எங்கும் தன் நூதன பாவங்களுக் கிணங்க, மானிட வர்க்கத்தையே சீர்திருத்தும் பொருட்டுக் கிளம்பியவ னானான்.

காலத்தில் பூமியைக் குளிரச் செய்து, சகல ஜீவராசிகளுக்கும் மகிழ்வு தோன்றப் பொழியும் மேகமும், கொதிக்கும் கடலின் வேதனையினின்றும் தோன்றியதே யல்லவா? இவ்வாறான அவஸ்தையைக் கடந்த ராமு, தேவ ரகசியமான அபூர்வ சக்தியினால் சகல உயிர்களையும் உய்ப்பிக்க வல்லதான மழைமேகமானது, வானத்தில் நாலாபக்கமும் பரவி,

மலை, கடல், ஆறு, குளங்களிலும், நகரங்கள், வயல்களிலும் தன் நன்னீரைப் பொழிய பெருங்காற்றை யெதிர்நோக்கி நிற்பதுபோல், தன் பிறவிப்பயனைப் பிறரின்பொருட்டுச் செலுத்தத் தாழ்மையுடன் காத்திருப்பவ னானன்.

---

## அத்தியாயம் 23.

### கேதாரியின் முதல் கேஸ்.

இதுகாறும் நாம் கேதாரியை அடியோடு மறந்துவிட்டோம். ஆனால் சென்னையில் எவராவது அவனை மறக்கக் கூடுமா? இது பரியந்தம் அவன் காலமும் கொஞ்சமேனும் விருதாவாகக் கழியவில்லை. பீ. எல். பரீக்ஷையில் கேதாரி வெகு சாதாரணமாய் மூன்றாவது வகுப்பில் தேறியதைப் பார்க்க, அவனதிருஷ்டம் இம்முறை அவனையே ஏய்த்து விட்டதுபோல் தோன்றிற்று. அவனுக்கு அதில் மிகுந்த வருத்தம். ஆயினும், பீ. எல். பரீக்ஷையில் மூன்றாவது வகுப்பில்தேறியவர்கள்தான் பின்பு பெரிய வக்கீல்களாவார்களென்றும், அதற்குச் சாட்சி மார்க்கண்டம் அய்யர் முதலியவர்களே யென்றும் அவன் வெளியில், தன் பெருமையை விட்டுக்கொடுக்காது, சொல்லிக்கொண்டான். ஆனால் மார்க்கண்டம் அய்யருக்கோ, தான் பீ. எல். பரீக்ஷையில் எவ்வகுப்பில் தேறினே மென்பது சரியாய் ஞாபக மில்லை. பணம் ஆயிரக்கணக்காய்ப் பாங்கியிலிருந்தால், பூர்வ விருத்தாந்தங்களைப்பற்றி ஞாபகம் வருமா? கேதாரியை அவர் வியந்து கொண்டாடுவது, இப்பொழுது வெகுவாய்க் குறைந்து விட்டது. அவர் அவ்வா றிருந்ததற்கு, அவன் மூன்றாவது வகுப்பில் தேறியது மட்டும் மன்றி, வேறு பல காரணங்களு மிருந்தன.

மார்க்கண்டம் அய்யர் பேச்சில், அழகிய பழமொழிகள் போன்ற வாக்கியங்களை உபயோகிப்பது வழக்கம். ஆனால் அவைகள் நல்ல கற்பனைகள் பொருந்தியாவது, உயர்ந்த தத்துவங்க ளடங்கியாவ திராவிடினும், வக்கீல் தொழிலில்

முன்னுக்கு வருவதற்கு உபயோகமாகவும் சாதுர்யமாகவும் இருக்கும். போர்முனை, காதல், வக்கீல்தொழில் இம்மூன்றிலும், நியாயமா யிருந்தும் இராமனும், உதாரகுணங் காட்டியும் காட்டாமலு மிருக்கவேண்டு மென்று அவர் கூறுவது வழக்கம். இதைப்பற்றி விவரிக்கும்பொழுது அவர் குரலும், மாதிரியும், பகவத்கீதையிலுள்ள சில பிரசித்தமான சுலோகங்களை ஞாபகத்துக்குக் கொண்டுவரும். இவ்வாறு தன்னைக் காத்துக்கொள்வதற்காக இருபொருளாகப் பேசும் மார்க்கண்டம் அய்யர், எப்படியாவது முன்னுக்கு வந்துவிட வேண்டுமென்ற பேரவா குடிகொண்டிருந்த கேதாரி, தன்னிடம் அப்பிரென்டிஸாக யிருக்கக் கேட்டுக்கொண்டதும், அவனை யேற்றுக்கொள்ள மனமற்றவரா யிருந்தார்.

ஆனால் கேதாரி இதனால் மனம் தளருவதா யில்லை. இச்சகம் பேசுவதோடு, பிறரைத் தன் கைவசப்படுத்தும்படியான சாமர்த்தியமும் தைரியமும் அவனிடம் அழகாய் ஒன்றுசேர்ந்திருந்தன. எவ்வளவு பெரிய மனிதர்களாயிருப்பினும், இக்குணங்களுக்கு வசிய மாகாமல் இருக்க முடியா தல்லவா? இதுமட்டு மல்ல. கேதாரியைத் தன்னிடம் வைத்துக் கொண்டால், சாமான்யமா யிருந்தாலும், வக்கீல் தொழிலுக்குப் பிரயோஜனமாயுள்ள தனது சாமர்த்தியத்தை அவன் பறையடித்துப் பிரபலப்படுத்த வேண்டுமென்ற குறிப்போடு, மார்க்கண்டமய்யர், அவன் பீ. எல். பரீக்ஷையில் மூன்றுவது வகுப்பில் தேறியவனுயிருந்தும், தன்னுபீஸின் ஐதீகத்திற்கு விரோதமாய், அவனைத் தன்னிடம் வேலை செய்யும்படி யேற்றுக்கொண்டார். பரீக்ஷையில் முதலாகத் தேறுபவர்களே தொழிலிற் கடைசியாகப் பின்தங்கி நிற்பவர்க ளென்பதை அவர் நன்கு யறிந்தவராதலால், அப்படிப்பட்டவர்களை யல்லாது மற்றவர்களைத்

தன் ஆபீஸில் சேர்த்துக் கொள்வதில்லை. அவருக்குச் சௌகரியமாகவே ஸர்வகலாசாலைப் படிப்பும் முதல்தரமாய்த் தேறியவர்களை ஒன்றுக்கு முதவாமல் அடித்துக் கொண்டிருந்தது!

கேதாரி அவராபீசுக்கு வந்து ஒருவருஷ மாயிற்று. தன் னதிருஷ்டத்தைப்பற்றி யென்றுங் கவலை கொள்ளாதவன், இப்பொழுது, தான் கொண்டிருந்த நம்பிக்கைக ளெல்லாம் வீணே யென்று கண்டுகொண்டான். காலேஜ் மாணவர் சங்கத்துக்கு அக்கிராசனம் வகிக்க, அவன் வெகு பெருமையுடனும் சந்தோஷத்துடனும் அழைத்து வந்த மார்க்கண்டமய்யரை, வக்கீல்களுள் முதன்மையானவராக ஹைகோர்ட்டில் காணும்பொழுது, ஒரே மனிதராகத் தோன்றவில்லை. ஆபீஸிலும், ஹைகோர்ட்டிலும் அவர் முற்றிலும் வேறுவிதமாய்க் காணப்பட்டார். எப்பொழுதும் கடுகடுப்பாய்க் காரியாவசரத்தோடு விளங்கியதுடன், கேதாரியிடம் அவர் நடந்துகொண்ட மாதிரி மரியாதைக் குறைவாகவு மிருந்தது. பட்டியி லடைபட்ட கழுதைகளைப் போல் வாய்திறவாது, பொறுமையுடன் வயிற்றுப்பிழைப்பிற்காகக் காத்துக்கொண்டு தன்னாபீஸில் திரண்டுகிடக்கும், கணக்கற்ற பீ. ஏ., பீ. எல். களில், கேதாரியை அவர் தனியாய்த் தேர்ந்தெடுத்து அபிமானம் பாராட்ட வில்லை. இவை யெல்லாம் கவலையற்ற, உத்ஸாக ஸ்வபாவத்தையுடைய கேதாரி எதிர்பார்த்ததற்கு முற்றிலும் விரோதமா யிருந்தன.

மார்க்கண்டமய்யருடைய மாறுபாடான குணங்கள் அவன் புத்திக் கெட்டவே யில்லை. கேதாரியின் குணம் எவ்விதமா யிருந்தபோதிலும், மாறுபாடில்லாமலிருந்தது. அவனும் ஆழ்ந்த சுபாவ முடையவனே யாயினும், ஒரு சமய

மிருந்ததுபோல் மற்றொரு சமயம் காணப்படாமல், பார்ப்ப வர்களை திகைக்கச்செய்பவ னல்ல. ஆனால் மார்க்கண்ட மய்யர் ஐசுவரியமதத்தி லாழ்ந்தவ ரல்லவா? கோர்ட்டில் மரியாதைக் குறைவாய்க் கடுகடுத்துக் காணப்படுவாராயின் அன்று சாயந்திரமே வேலை யின்றி யுட்கார்ந்திருக்கும் நேரத் தில் வேடிக்கையாகப் பேசி அதை மாற்றிவிடுவார். ஆயினும் ஒட்டகம்போன்ற, அவரது திவ்விய முகம் மட்டும் இந்நடிப் பிற்கு அவ்வளவு ஏற்றதா யில்லை.

ஏற்றத்தாழ்வுகளை யொழித்துவிடக்கூடிய கடற் கரையில் மார்க்கண்டமய்யர் விளையாட்டும் வேடிக்கையுமா யிருப்பது வழக்கம். "ஆபட்" என்பவர் எழுதிய நெப் போலியனது சரித்திரத்தைப் படித்திருந்ததினாலேயோ என்னவோ, அவர் கேதாரியை முதுகில் தட்டிக்கொடுத்து, வேடிக்கையாக அவன் காதைப்பிடித்துக் கிள்ளுவதுகூட வுண்டு. இன்னும், முகத்தில் மீசையரும்பாத சிறு பைய னென்பதை உறுதி செய்வார்போலும், அவன் முகவாய்க் கட்டையை அவர் தடவிக் கொடுப்பது, அவனை அவசரப் பட வேண்டா மென்று புத்திகூறுவதுபோலிருக்கும். ஆயி னும் ஹைகோர்ட்டுக்கு வெளியே எவ்வளவு அபிமானம் காட்டினாலுந்தான் என்ன? கேதாரி பசிக்குச் சாப்பாடா குமா? அவன் மனைவி கோகிலமும் குறைகூற ஆரம்பித்தாள்.

"வாழ்வார்க்கே வாழ்வு வரும்," என்ற கொள்கையை யுடையவனாதலால், கேதாரி, மைலாப்பூரில் நடுத்தெருவில், பார்வைக்கு கண்ணியமாயுள்ள ஓர் சிறிய வீட்டை வாட கைக்கு அமர்த்திக்கொண்டு, அதில் கோகிலத்துடன் கௌர வமாய் வசிக்கலானான். முப்பதுவருஷ காலத்திய பரம் பரை பிரபுக்க ளிருந்துவரும் லஸ் ரோட்டின் கீர்த்தியாவது, மாட வீதியின் தற்காலப் பணப்பெருமையாவது நடுத்

தெருவுக் கில்லை. ஆயினும் அதிகம் சம்பாதிப்போ மென்ற எண்ண மில்லாதவர்கள் குடியிருக்கும் மந்தவெளித் தெருவைப்போல் தாழ்மையாகவாவது, கடைத்தெருவைப் போன்று அசுத்தமாகவாவது அது காணப்படவு மில்லை. நடுத்தெரு வானதால், யாவற்றிலும் நடுத்தர ஸ்திதியிலேயே யிருந்தது. உண்மையில் தற்காலம் சிறிய தெருவாய் விளங்கினும், நேராக மாட வீதியில் வந்து சேர்ந்து, முடிவில ஐசுவரியம் தங்கி நிற்கும் லஸ் ரோட்டிற்கே கொண்டுசேர்ப்பதா யிருந்தது. நடுத்தெருவில் குடியிருப்பதினாலேயே, வாழ்வில் இன்ன விதமா யிருக்கவேண்டு மென்று தான் கொண்டிருந்த கொள்கைகளையும் பாவனைகளையும் கேதாரி நன்கு எடுத்துக் காட்டுபவ னானான்.

மனைவியுடன் இல்லறம் நடத்தும் புதுவருஷமாகவு மிருந்ததால், இல்வாழ்க்கையின் விசேஷங்களை இனிதுணர்ந்து கேதாரி களிப்பெய்தினானாயினும், தன் வேலையின் மீதும் கண்ணயரவில்லை. வக்கீலென்று ஹை கோர்ட்டில் சந்நது பெற்ற பிறகு, தான் முன்னுக்கு வருவதைப்பற்றி, மிகுந்தமனோதிடத்துடன் முன்னிலும் பலமாய் அஸ்திவாரம் போடத் தொடங்கினான். சுரங்கத்தில் வேலை செய்பவன் எவ்வாறு வேறொன்றையும் பாராமல் தன் கார்யமே கண்ணாயிருப்பானோ, அவ்வாறே கேதாரியும் வேறு புஸ்தகங்களொன்றையுந் தொடாமல், சட்ட புஸ்தங்களிலேயே சதா முழுகி யிருந்தான். அவனது ஆசாரியரான மார்க்கண்டமய்யர் கோர்ட்டில் ஏதாவது முக்கியமான கேஸ் பேசிக்கொண்டிருந்தால், அவன் போய்க் கேட்க ஒருபோதும் தவறுவ தில்லை. அவர் வாதிக்கும் கக்ஷி தோல்வியுற்ற போதிலுங்கூட, கோர்ட்டுக்கு வெளியே வந்து அவரைப் புகழ்ந்து பேசியும், கோர்ட்டுக்கு உள்ளே நின்று தலையசைத்துப்

புன்னகை புரிந்தும், தோற்றுப்போன கக்ஷி ஜயித்துவிட்டது போலவே தோன்றும்படிச் செய்வான்.

நற்காரியங்கள் பிரதி பலனில்லாமற் போவதுண்டா? இவ்வளவு நாட்களாய் ஒன்றுங் கிடைக்காவிட்டாலும், கடைசியில் சேர்த்துப் பெருந் தொகையாகத் தனக்குக் கிடைக்காமற் போகா தென்று கேதாரி நம்பியிருந்தான். ஒரு வருஷ மாயிற்று. கேவலம் நம்பிக்கையிலேயே கேதாரி காலங் கழிக்கலானுன். ஆனுல் அவனு லடையும் சிறு உபகாரங்களை மார்க்கண்டமய்யர் அறியாதவரா? உண்மையில், யாவற்றிற்கும் அவன் முன் வந்து நிற்பதை அவர் கக்ஷிக்காரர்கள் கூடக் கவனிக்கத்தொடங்கினர். மார்க்கண்டமய்யரும் உதாரமுள்ள, இளகிய மனதுடையவரே. தக்க சமயத்தில், அதற்குரிய காலம் வரும்பொழுது, கேதாரிக்கு ஒத்தாசை செய்யவேண்டு மென்றே எண்ணிக்கொண்டிருந்தார். தற்காலம் அவர் செய்யக் கூடியது இதற்குமேலில்லை:— யாதெனில், கோர்ட்டு திறப்பதற்கு ஒருவாரம் முன்பு, அவனைக் கடற்கறையிற் சந்தித்தபொழுது அவர் தைரியம் கூறியதாவது,—"கேதாரி, மனந் தளரவேண்டாம்! எனக்கு முதல் கேஸ் கிடைப்பதற்கு மூன்று வருஷ மாயிற்று. முயற்சியைக் கைவிடாதே! உன்போன்ற யோக்கியதை யுள்ளவர்களுக்கு அப்பொழுது ஒருநாளும் கவலை யில்லை. வெளியூரிலிருக்கும் நண்பர்களுக்கு எழுது. என் ஆபீஸில் இருப்பதாய் நீ அவர்களுக்குத் தெரியப்படுத்தலாம். பிறரின் உதவியை எதிர்பார்க்கலாகாது. அதுதான் முன்னுக்கு வரும் வழியாகும். மூன்று வருஷகாலம் காத்துத் திண்டாடிய பிறகு, இப்பொழுது எனக்குப் பெரிய வக்கீலென்று பெயர் வந்திருக்கிறது!"—இவ்வாறு கூறி, மார்க்கண்டமய்யர், இச்சொற்களுக்கே அவன் எவ்வளவோ நன்றி

பாராட்ட வேண்டியவன் போல், சற்றுப் புன்சிரிப்புடன் அவனை நோக்கினார்.

தன் நம்பிக்கையில் இடி விழுந்தவன்போலாகி, கேதாரி குன்றிய மனத்துடன் வீட்டிற்குத் திரும்பினான்.

"இன்றைக் கென்ன ஒரு மாதிரியா யிருக்கின்றீர்கள்!" என்று கோகிலம் வினவ,

"ஒன்று மில்லை! உன் மாமாவைக் கேட்டாயா?" என்றான் கேதாரி.

"என்ன கேட்பது?"

"பணம் கேட்டேனே, அதைத்தான்."

"மாமா சற்று முன்புதான் இங்கு வந்திருந்தார். அவரிடம் பணமில்லையாம். இனிமேல் கடன் கொடுக்க முடியாதென்று சொல்லிவிட்டார்."

"அப்படியானால் வேறு யாரைப்போய்க் கேட்பது?"

"முன்பெல்லாம் ஒரு நண்பர் உங்களுக்கு எப்பொழுதும் உதவி செய்துகொண்டிருந்தாரே; அவரை நீங்கள் இவ்வளவு வருஷகாலமாக அலக்ஷ்யம் செய்து விட்டீர்கள்! அவரிடம் நீங்கள் நன்றியுடன் நடந்துகொள்ளவில்லை."

"எனக்கு இப்பொழுது மிகவும் வருத்தமாய்த்தானிருக்கிறது. கோகிலம், அதை அதிகமா யுறுத்திக் கூறவேண்டாம். ஏற்கெனவே லா காலேஜ் படிப்பானது என் உணர்வை யழித்துவிட்டது. வக்கீல் தொழிலோ, கருங்கல்லிற்கும் இரும்பிற்கும் ஒப்ப, இன்னும் முற்றிலும் உணர்வில்லாதவனாக என்னைச் செய்துவிடும். இப்பெரிய வக்கீல்களனைவரும், மூல விக்கிரகங்கள் போல், கற்பிரதிமைகளே! எனது எஜமானர், வார்த்தைகளைக்கொண்டே என்னை ஜீவித்திருக்கும்படிச் செய்வதாய் உத்தேசித்திருக்கிறார்!"

"அவர் அவ்வாறு செய்யாமல் வேறென்ன செய்வார்? நான் எப்பொழுதும் உங்களிடம் சொல்லியிருக்கிறேன்! நீங்கள்தான், அவர் மிகவும் பிரியமா யிருப்பதாயும், கடைசியில் பெருந் தொகையாக உங்களுக்குச் சமர்ப்பிக்கப் போவதாய்ச் சொல்லி, அதைக்கொண்டு என் துடுக்கான வாயை யடக்கி விடுவதாய் வீரம் பேசிக்கொண்டிருந்தீர்கள்!"

"வாஸ்தவமாய், கோகிலம், நான் அப்படித்தான் நம்பியிருந்தேன். நீ கூறுவது நிரம்ப சரி. செய்த வேலைக்குக் கூலியா யிருந்தாலும், வற்புறுத்தின லன்றி, இனமாக வொன்றும் நமக்குக் கிடைப்பதில்லை. என் யஜமானர் தனது உயர்ந்த "ரோல்ஸ் ராய்ஸ்" மோட்டாருக்கு மாதம் முன்னூறு ரூபாய் செலவழிக்கின்றார். ஆயினும் அதற்கு மேல், இன்னும் அதிகமாய்ச் சாப்பிட்டுக்கொண்டு, சிறிதும் சப்தம் செய்யாம லிருக்கும் பெரிய 'எஞ்சின' வயிறென்பதொன்று, தன் கீழ் வேலை செய்யும் வக்கீலுக்கு உண்டென்றே அவர் யோசிப்பதாய்த் தெரியவில்லை!"

"உலகம் என்றால் என்ன? இப்படித்தான்! உங்களுக்குக் கீழ்ப்பட்ட ஜனங்களைப் பற்றி,—அவர்கள் எவ்வண்ணம் தங்கள் வயிற்றுப் பிழைப்பைத் தேடுகிறார்களென்பதை நீங்கள் சிறிதாயினும் யோசிக்கின்றீர்களா?"

"நீ கூறுவது உண்மை, கோகிலம். என்னை நன்றாய்க் குத்திக் காட்டி விட்டாய். எனக்கு அது வேண்டியதுதான். ராமுவைப் பற்றியும், அவன் செய்த உபகாரத்தைப் பற்றியும் நான் இப்பொழுது நினைத்துக்கொண்டிருக்கின்றேனா? ஆயினும், பின்னால் பச்சாத்தாபப்படுவது ஒரு பரிஹாரமாகக்கூடு மென்றால், நான் இன்று முதல் அப்படிச் செய்யத் தடை யில்லை." கேதாரி இவ்வாறு சொல்லி வாய்

மூடுமுன், யாரோ வாயிற்படி யேறி உள்ளேவரும் அடிச் சத்தம் கேட்க,

"யாரோ வருகிறார்களென்று தோன்றுகிறது," என்று கூறி கோகிலம் உள்ளே சென்றாள்.

"இன்று விடிந்த பிறகு, இரண்டு பெயர்கள் பணத்திற்கு வந்து போயாயிற்று. இன்னும் மூன்றாவதாக ஒருவரும் வராமலிருக்கவேண்டும்! முதன் முதல் கேஸ் கொண்டு வரும் கக்ஷிக்காரனாக விருக்கும்படி ஏழுமலையப்பன் கிருபை செய்யலாகாதா?" என்று கேதாரி தனக்குள்ளேயே வேண்டிக்கொண்டான்.

"ஹை கோர்டு வக்கீல், கேதாரி யென்பவர் இருக்கிறாரா? நான் அவரைப் பார்க்கவேண்டும்," என்று பெரிய பணக்காரன் போல் தோன்றிய ஒருவர் உள் நுழைந்து கேட்க,

"நான் தான்," என்று பவ்வியமாய்க் கூறி, கேதாரி ஒரு பிரம்பு நாற்காலியைக் கொண்டு வந்து அதில் அவரை யுட்காரும்படி உபசரித்தான். வந்தவர் பெரியசாமி அய்யரைத் தவிர வேறொருவரு மல்ல. நேரில் பார்க்காமலே, சென்னை வக்கீல்களைப்பற்றி அவர் மிகவும் உயர்வாய் எண்ணி யிருந்ததுடன், ராமுவும் அவர்களைப்பற்றி வெகு வா யவரிடம் வருணித்துக் கூறியிருந்த படியால், இப்பொழுது அவற்றிற் கெல்லாம் விரோதமாய், கேதாரியினுடைய அதியிளமைத் தோற்றத்தையும், அவன் குடியிருக்கும் சாமான்ய வீட்டையுங் காண, அவருக்கு மிகவும் வியப்பா யிருந்தது.

"உங்களுடைய நண்பர் ராமச்சந்திரய்யர்தான் என்னை உங்களிடம் அனுப்பியிருக்கிறார். இதோ அவர் கொடுத்த கடித மிருக்கிறது."

"என்ன, ராமுவா?"

"ஆம்."

"ராமு இப்பொழுது எங்கே யிருக்கிறான்?"

"கடப்பையில் "காம்ப் கிளார்க்" உத்தியோகத்திலிருக்கிறான்."

"காம்ப் கிளார்க்" உத்தியோகத்திலா?" என்றான் கேதாரி.

"சென்ற வாரம் அவன் தந்நிலத்தை யெல்லாம் எனக்கு விற்றுவிட்டான்."

"விற்று விட்டானா?" என்று கேதாரி சிறிது கலவரத்தோடு கேட்க,

"ஆம்," என்றார் பெரியசாமி அய்யர்.

"அவனுக்குக் கடித மெழுதி விசாரிக்க வேண்டும். நாங்கள் ஒருவரை யொருவர் பார்த்து நெடுநாளாய் விட்டது," என்று கேதாரி, தன் கக்ஷிக்காரன் கௌரவமாக நினைக்கும்படி சிறிது கம்பீரமாய்க் கூறிவிட்டுப் பிறகு ராமுவை மறந்துவிட்டான்.

தன் கக்ஷிக்காரராக வந்த பெரியசாமி அய்யரை அவன் ஆவலுடன் பார்த்துக்கொண்டிருந்த மாதிரியானது, முதன் முதல், தன் ஆகாரத்திற்காகப் பறந்து சென்று, ஆகாயத்தில் வட்டமிட்டுக்கொண்டிருக்கும் ஓர் சிறு பருந்தின் பார்வைக் கொப்பாக விருந்தது. கேதாரியைப் போன்ற ஒரு பருந்துக்குப் பெரியசாமி அய்யரும் சாதாரண வேட்டையல்ல. அவர் ஓர் பணம் பெருத்த, கொழுத்த ஆசாமி. அவர் பருத்த தேகமே, அவர் பையில் குலுங்கும் பவுன்களுக் கோர் அத்தாட்சியாக விருந்தது. அவர் நல்ல புத்திசாலி; நன்றாய்ப் பேசுவார். கேதாரிக்கும் அது நன்

மையாகவே யாயிற்று. ஏனெனில் தான் சிறு வயதினனுயி யினும், தைரியமாய் முனைந்து பார்ப்பதில் எவ்வளவு ஆவலுள்ளவ னென்பதை அவருக்கு நன்ருய்க் காட்டக்கூடு மல்லவா ? இவ்வளவு நாட்கள் ஒன்றுமில்லா திருந்ததற்கு, இப்பொழுதுதான் முதல் கேஸ் கிடைத்திருந்தபடியால், தன்னுள் அடைந்து கிடந்த தன் முழுச் சாமர்த்தியத்தை யுங் காட்டி கேதாரி பேசத் தொடங்கினன். பெரியசாமி அய்யருக்கு மிகுந்த மதிப்பு ஏற்பட்டு விட்டது. முதன் முதல் வந்த கக்ஷிக்காரனைச் சும்மா செல்ல விடாமல், புதிதான நூறு ரூபாய் நோட் ஒன்றையும் கேதாரி பற்றிக் கொண்டுவிட்டான். மார்க்கண்டமய்யரைப் போல் மூன்று வருஷகாலம் காத்திருக்க வில்லையென்று நினைக்க, அவனுக்கு உள்ளம் பூரித்தது.

"இக்கேசுக்குப் பெரிய வக்கீல் யாரையாவது வைக்கும் படியாயிருக்குமா ?" என்று பெரியசாமி அய்யர் கேட்க,

"இந்நிலைமையில் அவசிய மென்று தோன்ற வில்லை," என்று கேதாரி தைரியமாய்ப் பதிலளித்தான்.

பெரியசாமி அய்யர் அவன் தீர்மானமாய்க் கூறியதைப் பார்த்து ஒப்புக்கொள்ள, தன் அளவற்ற ஆநந்தத்தை யவர் அறிந்து விடலாகா தென்ற எண்ணத்துடன், கேதாரியும் அவரை மிகவும் உபசாரமாயும், பிரியமாயும் பேசியனுப்பி னன். அவர் வீதியி லிறங்கிச் செல்லும் அடிச்சத்தம் கேட்பது நின்று, ஜன்னலுக்கு வெளியே அவர் பருத்த தேகம் கண்ணுக்கு மறைந்ததும், கேதாரி, வெகு ஆவலாய்ப் பரபரப்புடன், "கோகிலம், வா, வா ; நமக்கு அதிருஷ்டம் பிறந்து விட்டது ! இதோ ஒரு நூறு ரூபாய் நோட்டு இருக்கிறது ! அதாவது, பத்து, பத்து ரூபாய் நோட்டுக் கள் ; மாற்றினல் இருபது ஐந்து ரூபாய் நோட்டுக்களாகும் !

முழு வெள்ளி ரூபாய்களாக ஒரு நூறு! என் முதல் கேஸ் பணம்! இனி ஒருமாதத்திற்கு நமக்குக் கவலை யில்லை. குளத்தில் விழும் கல் மேன்மேலும் நீர்ச்சுழிக ளிடுவதற் கொப்ப, எனது பெயரும் பரவிச்சென்று, கக்ஷிக்காரர் களேயும் பணத்தையும் இனிக் கொண்டுவந்து சேர்க்கும். சிலந்தியின் வலையில் சிக்கும் ஈக்களைப்போல், இனிப்பலரும் என்னைத் தேடிவருவார்கள். கோகிலம், நீயும் என்னை அப் பொழுது அதிகமாய் விரும்புவா யல்லவா?" என,

"உங்கள் நண்பர் செய்த உதவிக்காக, அவருக்கு நன்றி செலுத்திக் கடித மெழுதுங்கள்!" என்றாள் கோகிலம்.

"என்ன? நாங்கள் பேசியது முழுமையும் நீ மறைந்து கேட்டுக்கொண்டிருந்தாயா? கோகிலம், அது கெட்டவழக்க மல்லவா?"

"முதன் முதல் கேஸ் வரும்பொழுது, அது தவறாகாது. நான் வேண்டிக்கொள்ளுகிறேன்.—ராமுவுக்கு உடனே எழுதுங்கள்! அவர் அனுப்பாவிட்டால், உங்களுக்கு இது கிடைத்திருக்குமா?" என்று கோகிலம் கண்களில் நீர்ததும்பக் கூறினாள்.

"எல்லாம் எழுதுகிறேன்! ராமுவைப் பற்றி இப்படி எப்பொழுதும் பிதற்றாமல் நீ வாயை மூடிக்கொண்டிருந் தால் போதும். நான் செய்யவேண்டியது எனக்குத் தெரியும். பாவம்! தன் நிலத்தை யெல்லாம் விற்றுவிட்டு, அவன் இப்பொழுது "காம்ப் கிளார்க்" உத்தியோகத்தி லிருக்கிறானாம்! அதாவது மிகவும் அற்பமான வேலை. மாதம் இருபத்தைந்து ரூபாய் சம்பளத்திற்கு மேலிருக் காது."

கேதாரி ராமுவுக்கு எழுதுவதாக ஒருவாறு ஒப்புக் கொண்டாலும், கோகிலம் கேட்டுக்கொண்ட பிறகு,

அவனுக்கு அவ்வளவாகச் சம்மத மில்லை. அவனுக்கே இன்னதென்று விளங்காத ஒரு கௌரவம் இப்பொது அவனது உள்ளத்தில் போராடவும், முதல் கேஸ் என்றாலுங் கூட, ஒரு ஹைகோர்ட் வக்கீல் "காம்ப் கிளார்க்கு" ஒருவனுக்கு நன்றி செலுத்திக் கடிதமெழுதுவதா வென்று, அதை நூதனமாய்க் கருதத் தொடங்கினான்.

---

## அத்தியாயம் 24.

### ஈசன் செயல்.

ராமுவி னெதிரில் நின்று மீனாக்ஷி படபடப்பாய்ப் பிரசங்கம் செய்ததின் பயனை நாமறிவோம். தான் வெகு வருஷங்களாகக் கோரிக்கொண்டிருந்ததை ஓரே நாளில் மீனாக்ஷி நிறைவேற்றிக்கொண்டாள். ஆயினும் ராமு அலவந்திக்குப் புறப்பட்ட அன்றிரவே, அவளுக்குத், தான் பேசின படபடப்பும் சிரமமும் தாங்க முடியாமல், முறை ஜுரம் வந்துவிட்டது. அக்காரணமாகவே படுத்திருந்து, அவள், ராமு கடப்பைக்குத் திரும்பிவந்த மறுநாள், இவ் வுலகை நீத்துப் பரலோகம் சென்றாள். இறக்கும் தருவாயில், தன் ஞாபக மில்லாதிருக்கும்போது கூட, மேலுத்தி யோகத்தைப்பற்றியும், பெரிய அந்தஸ்தைப் பற்றியுமே பிதற்றினாள். அவள் இறந்த பிறகு தான், ராமு அவளைப்பற்றி வருந்த வாரம்பித்தான். பெண் தன்மை யனான ராமுவுக்கு, ஆண்மையுடன் கூடிய மீனாக்ஷி யினது மேற்பார்வை மிக்க அவசியமாகவே யிருந்தது. ஜானகியோ அவனிலும் அதிகமென்மை பொருந்தியவள். கொழுகொம்பினின்றும் அறுக்கப்பட்டு அந்தரத்தில் ஆடிக் கொண்டிருக்கும் கொடிபோல் வருந்திய ராமுவுக்கு, ஜானகி அவனைச்சுற்றிப் பின்னிக்கொண்டிருக்கும் மற்றோர் கொடி போல்பவளாகி, அவன் நிராதரவான நிலைமையை யதிகமாக்கு பவளானாள்.

நிலத்தை விற்றதில் சேர்ந்த சொற்பப் பணத்தை, மீனாக்ஷியின் உத்தரக்கிரியைகளின் பொருட்டுச் செலவழித்து சில்லரைக் கடன்களையும் கொடுத்துவிட்டுப் பிறகு பார்த்த

பொழுது, அவனிடம் மூன்னூறு ரூபாய் தான் மிகுந்து நின்றது. ஒருவருஷ முழுவதும் அவன் சம்பளத்தைச் சேர்த்துக் கூட்டிய தொகையைவிட அதிகமல்ல. ஆகவே மீனுக்ஷி யிறந்து போயும், அவன் தன் கிராமத்திற்கும் போக முடியாமல், மூன்று வருஷகாலம் கஷ்டப்பட்டு உழைத்த உத்தியோகத்தையும் விட முடியாதவனானன்.

"ஜானகி வருத்தப்படாதே! ஈசுவர சம்மதம் இவ்வாறு இருக்கின்றது. யாவும் நமது நலத்துக்கே யாகும். உன் தாயார் விரும்பியது நிறைவேறும் தருணத்தில், அவள் இறக்கும்படி நேர்ந்தது பரிதாபமே. ஆயினும் தெய்வத்திற்கு அவ்வா றெண்ணம் இருக்கையில் நாமென்ன செய்யக் கூடும்? பேசாமல் பொறுத்துக்கொள்ள வேண்டியதுதான்! அவள் இறந்த பிறகே, நான் அவளில்லாமையைக் குறித்து வருந்துகின்றேன். நமக்கு வேறு துணையில்லை. "காம்ப் கிளார்க்" உத்தியோகத்தி லிருப்பது எனக்கினி சரிப்படா தென்று நான் கலெக்டரிடம் கூறிவிடுகிறேன். இனி உன்னுடன் எப்பொழுதும் இருப்பேன்," என்று ராமு கூற,

"ஆம், என்னால் இனித் தனியாயிருக்க முடியாது. நீங்கள் ஒருபொழுதும் இனி என்னைத் தனியே விட்டுச் செல்லலகாது," என்று ஜானகி குழந்தையைப்போல் விம்மியழுது கொண்டு சொன்னாள்.

"அதற்கும் சந்தேகமா? நான் தைரியமாய் அப்படியே கலெக்டரிடம் சொல்லி விடுகின்றேன். இனி இவ்வுத்தியோகத்திலிருப்ப தில்லை யென்று நான் தீர்மானித்தாய் விட்டது."

"யாரோ வருவது போல் தோன்றுகிறது."

RM. MUTHIAH
ARTIST
KOTTAIYUR

"கலெக்டரின் டபேதா ரென்று நினைக்கிறேன். அவனிங்கு வருவது சற்று அதிசயந்தான். நான் இன்னும் வேலைக்கு வராமல் லீவிலிருப்பதில் கலெக்டருக்குக் கோப மூண்டாயிருக்கும். வேலையை விட்டு நீங்கவோ, அல்லது உடனே வேலைக்கு வரும்படியாகவோ, கண்டித்து லெட்டர் எழுதி யிருப்பார்."—இதற்குள் டபேதார் அவனை யணுகி, ஒரு கடிதத்தை அவனிடம் கொடுக்க, ராமு பின் வருமாறு வாசித்தான் :—

கடப்பை,
ஆகஸ்டு, 7.

பிரியமுள்ள ராமச்சந்திரன்,

உங்களுக்குச் சமீபத்தில் நேர்ந்த பெரிய துக்கத்தைப் பற்றி நாங்கள் மிகவும் அனுதாபப்படுகிறோம். உங்களுக்கு என்ன கஷ்டம் நேரிடினும், அது என் மனைவிக்கும் எனக்கும் வருத்தத்தை யுண்டு பண்ணுமற் போகாது. ஆனால் துயரிலாழ்ந்து நீ வேலைக்குத் திரும்பி வராமல் இருக்கலாகாது. உங்கள் கவலையைச் சிறிது மாற்ற வேண்டி, உன்னையும் உன் மனைவியையும் நாளை மாலை இங்கு "டீ"க்கு வரவேண்டு மென நாங்கள் அழைக்கின்றோம். உன்னிடம் சில விஷயங்கள் பேசவேண்டும். நாளை சாயங்காலம் நாங்கள் மட்டுந் தான் இருப்போமாதலால், துக்கத்தைப் பாராட்டாமல் நீ வருவதற்கு ஒத்துக்கொள்வாயென்று நம்பும்,

உன் பிரியமுள்ள, ஹென்ரி காடெல்.

"ஜானகி! கலெக்டரும் அவர் மனைவியும் நம்மை "டீ"க்கு அழைப்பது நமக்கு ஓர் பெரிய கௌரவ மென்று சொல்லவேண்டும். நீ வரமாட்டாய்! ஆயினும் நான் போகலா மென்று நினைக்கிறேன். அவர் மிகவும் மரியாதையாக அழைத்திருக்கிறார்."

---

## அத்தியாயம் 25.

### அரிய மரியாதை.

சென்னை கிரிஸ்டியின் காலேஜில் இங்கிலீஷ் பாஷையிலும் தத்துவசாஸ்திரத்திலும் போதகாசிரியரா யிருந்த மிஸ்டர். கிரேக் என்பவர் மிஸஸ். காடெலின் உடன்பிறந்த சகோதரர். இங்கிலீஷ் கல்வியைப் பரவச் செய்வதன் பொருட்டே தன்னுயுளையும் புத்தியையும், இருபத்தைந்து வருஷங்களுக்குமேல், செலவழித்துப்பாடுபட்டவர். மிகவும் கண்டிப்புள்ளவராயினும், எம்மதத்தையும் ஒப்புக்கொள்பவராயும், மிக்க கருணை குடிகொண்டவராயு மிருந்ததல்லாமல், ஜாதி வேற்றுமையற்றவராயு மிருந்தார். தற்சமயம் கடப்பையிலிருக்கும் தன் சகோதரியைப் பார்க்கும் பொருட்டு அவர் அங்கு வரவே, நாம் முன்னத்தியாயத்திற் கூறியுள்ள "டீ. பார்டி" அவருக்கென்றே ஏற்பாடாயிற்று. அதற்குத்தான் ராமுவையும் காடெல் துரை அழைத்திருந்தார்.

"காலேஜில் படிக்கும் நாளில் ராமச்சந்திரன் எப்படியிருந்தான்? உமக்கு நினைவிருக்கின்றதோ? அவனைப்பற்றி நீர் மிகவும் கொண்டாடி எழுதியிருந்தீரே!" என்று காடெல் துரை கேட்க,

"உண்மையைக் கூறும் பக்ஷத்தில், எனக்கு அவனைப் பற்றி அவ்வளவு சரியாய் ஞாபக மில்லை," யென்றார் மிஸ்டர் கிரேக். "வகுப்பில் முதன்மையான பையன்களில் ஒருவனு யிருக்கமாட்டான்; இருந்தால் எனக்கு ஞாபக மில்லாமற் போகாது. அவர்கள் யாவரும் எனக்கு நன்றாய் பரிசய முண்டு. எங்கள் கஷ்ட முனக்குத் தெரியாதா? ஒவ்வொரு

வகுப்பிலும் முன்னூறு பையன்களுக்குக் குறையாம லிருக்கின்றார்கள்! நன்றாய்ப் படிக்கும் பையன்கள், பின் தங்காமல் தைரியமாய் எதற்கும் முன்வருபவர்கள், அல்லது எங்கள் "பார்டி"களுக்குச் சகஜமாய் வந்து எல்லோருடனும் தாராளமாய்ப் பேசக்கூடியவர்கள்,—இவர்களே எங்கள் ஞாபகத்தி லிருக்கக்கூடும்."

"அவர்கள் மட்டுந்தான் நினைவுக்குப் பாத்திரமானவர்களென்று எப்படிச்சொல்ல முடியும்?"

"இல்லை, இல்லை! ஆயினும் நாம் வேறென்ன செய்வது? புத்தியில் மேம்பட்ட பையன்கள்தான், நற்பிறப்பும் வணக்கமு மற்று, குணத்திற் கீழ்ப்பட்டவர்களாயிருக்கிறார்களென்றே எனது துணிபு. ராமச்சந்திரனைப் பார்த்தால் எனக்கு ஞாபகம் வரும்."

"பார்த்தவுடன், மிகவும் சாந்தமும் அடக்கமுங் குடிகொண்டவ னென்பது உனக்கு விளங்கும்," என்று காடெல் துரையின் மனைவி ராமுவைப்பற்றி மிகவும் பரிவாய்க் கூற வாரம்பித்தாள். "நம் மெல்லோரையும் விட, அவனே "ஜீஸஸ் கிரைஸ்டி"னுபதேசங்களை நன்கு பின்பற்றுபவனா யிருக்கிறான். நல்ல கல்விப் பயிற்சி யுள்ளவன். அதிகங் கூறுவானேன்?—மூன்று வருஷகாலமாய் இங்கு "காம்ப் கிளார்க்" உத்தியோகத்தில் இருந்து வருகிறானென்பதே அவன் நற்பெயருக்கு ஓர் தகுந்த அத்தாக்ஷியல்லவா?"

இதைக்கேட்டு காடெல்துரை சிரித்தார். அச்சமயம் வெட்கத்தால் சிறிது தயங்கிய நடையுடன், ராமு சற்று தூரத்தில் வருவதைப்பார்த்து, "ஓகோ, இவனா! எனக்குத் தெரியுமே! எனக்கு நன்றாய் ஞாபகமிருக்கிறது," என்றார் மிஸ்டர். கிரேக். "இவன் மூலமாய் நிகழ்ந்ததோர் சம்பவ

மானது, காலேஜ் "பியூன்" முதல் "பிரின்ஸிபால்" வரையிலும், இவன் எப்படிப்பட்டவ னென்பதை நன்ருய்ப் பிரசித்தமாக்கிவிட்டது. ஒருநாள் காலேஜில் நூறு ரூபாய் நோட் டென்றைக் கொடுத்து, அதற்குப் பத்து ரூபாய் நோட்டுக்கள் இவன் கேட்டபொழுது, தவருக பத்து ஐம்பது ரூபாய் நோட்டுகள் கொடுத்துவிட்டார்கள். அன்று மாலே வெகு நேரத்திற்குப்பிறகு கணக்குப் பார்க்கும் பொழுதுதான், அப்பிசகு அவர்களுக்குத் தெரியவந்தது. ஆயினும் அக்கூட்டத்தில் அவ்வாறு தவருக வாங்கிச் சென்றது யாரென்பதுமட்டும் கண்டுபிடிக்க முடியவில்லே. ராமச் சந்திரனுக்கும் அன்றிரவு வெகு நேரத்திற்குப் பிறகு தான், அது வெளியாயிற்ரும். மறுநாட் காலே பத்து மணிக்கு, வாய் திறவாது, அதிகமா யிருந்த நானூறு ரூபாயையும் அவன் திருப்பிக் கொடுத்ததும், அனேவரும் கவலே நீங்கிச் சந்தோஷ மடைந்தனர். முக்கியமாய் அந்த "அக்கவுண்ட் கிளார்க்" வயிற்றில் பாலே வார்த்ததுபோ லாயிற்று! ஆம், இப்போது ஞாபகம் வருகின்றது.——அவனுக்கு நன் மதிப்புக்கடித மொன்று நான் எழுதிக் கொடுத்தேன்."

"ஆயினும் நீர் அதில் அவன் புத்தி வன்மையைப் பற்றி யொன்றும் எழுதவே யில்லேயே!" என்ருர் மிஸ்டர். காடெல்.

"அதைப்பற்றி யொன்றும் எனக்குத் தெரியாததனுல் தான் எழுதவில்லே. ராமச்சந்திரன், எப்பொழுதும், சங்கோ சப்பிரகிருதி. ஒருவருடனும் அதிகமாய்ப் பேசமாட்டான். காலேஜ் விசேஷங்க ளொன்றிற்கும் அவன் வந்ததில்லே. அவனுக்கு பீ. ஏ. பரீக்ஷைகூடத் தவறிப்போய்விட்ட தென்று நினேக்கிறேன்."

"அவனேப்பற்றி யறிந்துகொள்ளத் தகுந்த சமயம் இப்பொழுது வாய்த்திருக்கிறது. எவ்வளவு தகுதியுள்ள

பையனுக்கு நீங்கள் பீ. ஏ. பட்டம் அளிக்காம லிருந்து விட்டீர்க ளென்பதைப் பார்த்து வருத்தமுங்கொள்ளலாம்!' அவன் உலக வியவகாரங்க ளெல்லாவற்றையும் ஆழ்ந்து விசாரணை செய்பவன். கல்விப் பயிற்சி யுள்ளவன். எதை யும் உள்ளாழ்ந்து கவனிப்பதுடன், சற்று வேடிக்கையாகப் பேசும் இயல்பு முடையவன். அவன் பெருந்தன்மை பொருந்திய மனது எதையும் அதன் நிலையினின்றும் உயர்த்திவிடுகின்றது," என்று காடெல் துரையின் மனைவி சொல்லிக்கொண்டு வருகையில், மிஸ்டர். காடெல் தன்னை நோக்கிப் புன்னகை செய்வதைக் காணவும், "ஹென்ரி (காடெல்) கூட அடிக்கடி இந்தியாவின் நிலைமையைப்பற்றி அவனுடன் பேசுவதுண்டு!" என்றாள்.

இதற்குள் ராமுவும் அங்கு வந்து சேர்ந்தான். தன்னைப்பற்றித்தான் அவர்கள் பேசிக்கொண்டிருக்கிறார்க ளென்று தெரிந்தபோதிலும், அது என்ன வென்று அவ னுக்குச் சரியாய் விளங்கவில்லை. அவனைக் கண்டு சந்தோ ஷத்துடனெழுந்த கிரேக் துரை, அவன் கையைப் பிடித்து பலமாய்க்குலுக்கி நல்வரவு கூற, அவரை அங்கு காணச் சிறிது ஆச்சரியமுற்ற ராமுவும் சங்கோசத்துடன் கை குலுக்கினான். காடெல் துரையோவெனில், வாயி லிருந்த சுருட்டினின்றும் இரண்டு நிமிஷத்திற் கொருதரம் பலமா யிழுத்து விடப்பட்ட புகை தன்னைச் சுற்றிலும் சூழ, நாற் காலியை விட்டு எழாமலே யுட்கார்ந்திருந்தார்.

"என் பழைய ஆசிரியர், கிரேக் துரை யல்லவா?"

"ஆம் ராமச்சந்திரன்? நீ முன்பு பார்த்ததற்கு இப் பொழுது அதிக வயது சென்றுவிட வில்லை! நின்று கொண்டே எவ்வாறு "டீ" யருந்துவாய்! உட்கார்ந்து கொள். உன் கலெக்டரிடம் உன்னைப்பற்றித்தான் சொல் லிக்கொண்டிருந்தேன்!"

"என் ஞாபகமிருக்கும்படி தங்களுக்கு என்னை அவ்வளவு நன்றாய்த் தெரியாதென்றே எண்ணியிருந்தேன்."

"ஆயினும் உன் முகத்தை ஒருக்காலும் நாங்கள் மறக்க முடியாதபடி ஓர் சம்பவம் நிகழவில்லையா?"

"அந்த நோட் சம்பந்தமாய் நிகழ்ந்ததைக் கூறுகின்றீர்களா? அதி லென்ன அதிசய மிருக்கின்றது? சாதாரணமான நாணயமுள்ளவ னெவனும் செய்யக்கூடியதுதான்! இந்திய னொருவன் இவ்வாறு நடப்பது மிக்க அபூர்வ மென்பதுபோல், நீங்கள் இதை வெகுவாய் எடுத்துரைப்பதனாலேயே, எங்களை மிகவும் கேவல மாக்குகின்றீர்கள்! எவன்தான் இவ்வாறு செய்யமாட்டான்?"

"உனக்குச் சகஜமா யிருந்தாலும், என் அனுபவத்தில் அவ்வா றில்லை," என்றார் மிஸ்டர். கிரேக்.

"என் அனுபவத்தைப்பற்றியோ, கேட்க வேண்டியதே யில்லை!" என்று காடெல் துரையும் தயங்காம லுரைத்தார்.

"அதெல்லாம் நீங்கள் சரியான பையன்களைத் தேர்ந்தெடுத்து ஆதரிக்காததினாலேயே? கேவலம் புத்தி வன்மை படைத்தவனையும், எதற்கும் துணிந்து நிற்பவனையுந்தான் நீங்கள் கொண்டாடுகின்றீர்கள்! பாப புண்ணியத்திற்கு அஞ்சி, சீலமுள்ளவர்களாயிருப்பவர்களை மனவலிமையும் சுறுசுறுப்பு மற்றவர்களென்றும், ஒன்றுக்கும் யோக்கியதை யில்லாதவர்களென்றும் பெயர் வைத்து, ஒதுக்கிவிடுகின்றீர்கள்! உங்கள் நாகரிகமானது புத்தியையே பெரிதும் பாராட்டுகின்றதே யன்றி, எப்படியும் நல்லொழுக்கத்திற்கும் தெய்வபக்திக்கும் அது கீழ்ப்பட்டதே யென்பதாகக்கருதுவதில்லை. இவ்வெண்ணமே யாவற்றிற்கும் மூல காரணமாயுள்ள தவறு. கருவிகள் எவ்வளவு நேர்த்தியா யிருப்பினு

மென்ன? அவைகளை யுபயோகிப்பவர்க ளன்றோ தயை தாக்ஷிண்யம் நிறைந்தவர்களாயிருக்க வேண்டும்!"

மேனாட்டார்கள் எதிரில், எளிய நடையிற் பேசவாவது சாதாரண எண்ணங்களைப்பற்றி விவரிக்கவாவது ராமுவால் ஒருபோதும் முடியாது. அவர்கள் தன்னை மதிக்கவேண்டு மென்று கருதியவ னாதலால், கம்பீரமான மொழிகளைப்பேச லானான்.

"நமது குற்றங் குறைவுகளை எவ்வள வழகா யெடுத்துக் கண்டிக்கின்றார், பார்த்தாயா?" என்று காடெலின் மனைவி தன் சகோதரனைப் பார்த்து வியந் துரைத்தாள். "என தம்பி! பிராயமும் அதுதான். கண்டனை பலமா யிருந்த போதிலும், இந்த விஷயங்களை யெல்லாம் மென் மொழியால் சொல்வதிற் பயனில்லை."

சிறிது யோசனையில் ஆழ்ந்திருந்து விட்டுப்பிறகு, மிஸ்டர். கிரேக், "நல்லது, ராமச்சந்திரன், நீ கூறுவது வாஸ்தவமாகவே யிருக்கலாம். ஆயினும் உண்மையான யோக்கியதையானது, தானே கிளம்பி முன்வராது, தலையிறங்கிப் பின் சென்றால், முன்னூறு பையன்கள் நடுவில் நாங்க ளெவ்வாறு அதைக் கண்டுபிடிப்பது? அதற்கு எவ்வளவு சிரமும் அவகாசமும் பிடிக்கும்?"

"ஆம்; நாகரிக வாழ்க்கையின் துன்பம் இதுதான்! அதன் ஆகாரம் பெருக்கப்பெருக்க, நற்குணங்களானவை மேன்மேலும் அடியில் அமிழ்ந்து, கடலிலாழ்ந்த முத்தென, மறைந்து போகின்றன." இவ்வாறு ஓர் மலை யருவியில் உருண்டு வரும், சிறு கற்களென வந்து குவியும் ராமுவின் அலங்கார மொழிகளைக் கேட்கப் பொறாத காடெல் துரை "நாம் மிகவும் பெரிய விஷயங்களைப்பற்றிப் பேசுகிறோம்! உங்களுக்குச் சாதாரணமா யிருந்தாலும், என் புத்திக்கு

அவ்வளவு எட்டக் கூடியதா யில்லை. ஒரு உபாத்தியாயர் தன் மாணுக்கனைக் கண்டுவிட்டால், இவ்வண்ணந்தான்! ஒவ்வொருவரும், தான்மட்டும் படித்திருக்கும் புஸ்தகத்திலிருந்து ஒப்பிப்பதுபோல், பேசக் கிளம்பிவிடுகிருர்கள். இது நிற்கட்டும். நமது சமூக வாழ்க்கையைப்போன்ற சாமான்ய விஷயங்களைக் குறித்து இனிப் பேசுவோம். மேல்நாடு, கீழ்நாடு இவ்விரண்டும் தனியே! அவைகள் ஒருநாளும் ஒன்று சேரமுடியா தென்று கூறுவது எவ்வளவு உண்மையாயிருக்கிறது! மேரி, நீ அதைத் தடுத்துரைப்பதில் பிரயோஜனமில்லை. இதோ பார்! ராமச்சந்திரன், அவன் மனைவி இருவரையுந்தானே நாம் வரும்படி யெழுதியிருந்தோம். அவன் மட்டும் வந்திருக்கிருன், பார்த்தாயா? தன் மனைவியைச் சம்மதிக்கச் செய்து அழைத்துவர அவனுல் முடியவில்லை யென்று தோன்றுகிறது. இவ்வா றிருந்தால் எப்படி இருதேசத்தவர்களும் ஒருவரோடொருவர் பழகி நட்பு பாராட்டக்கூடும்? ஒன்று, அரசாங்கத்தா ரென நாம் அதிகாரம் செலுத்திக்கொண்டிருக்கவேண்டும்! அல்லது, நமது மூட்டையைக் கட்டிச் சுருட்டிக்கொண்டு, வந்த வழியைப் பார்த்துக்கொண்டு செல்லவேண்டியதுதான்!" என்ருர்.

"அப்படியல்ல. எவ்வளவு முக்கியமா யிருந்தாலும், இக்கஷ்டங்களை ஒரேநாளில் அகற்றுவது எளிதான காரியமன்று. மேலும் சமூக வாழ்க்கையைப்பற்றி இருவருடைய அபிப்பிராயமும் முற்றிலும் மாருயிருக்கின்றது," என்று ராமு நயந்துரைக்க,

"போயும் போயும், அந்த ஒரு சரக்குத்தானே! அதை எவ்வளவு காலமாய்ச் சொல்லிக்கொண்டு வருகிறீர்கள்!' என்று மிஸ்டர். காடெல் இகழ்ந்து கூறினர்.

பேச்சு, பலமா யிருந்ததனுல், ராமு அதைக் கவனிக்காமல், காடெல் துரையின் மனைவியையும் கிரேக் துரையையும் நோக்கிச் சொல்லத் தொடங்கினுன். "சமூக வாழ்க்கைக்கு இன்றியமையாதவைகளென்று கூறி, நீங்கள் சில நிபந்தனைகளிடுகின்றீர்களே யொழிய, இதுவரையும் அவ்வாருன விஷயங்களைப்பற்றிச் சிறிதும் கவலை கொள்ளாதிருந்த ஜனங்களை, அவைகளுக் கேற்ற வழியில், கற்பிக்கத் தகுந்தவற்றை நீங்கள் செய்வதியில்லை! ஸ்திரீகளுக்குக் கல்வி வேண்டு மென்பதை நான் ஒப்புக்கொள்பவனே. இதுவரையும் எங்கள் தேசத்து ஸ்திரீகளுக்கு ஏதோ ஒரு விதமான படிப்பு இருந்து வந்ததென்றே சொல்லவேண்டும். புஸ்தகங்களினின்றும் அப்படிப்பு ஏற்படாமற் போயினும், குமிழியிட்டு நீர் பெருகி நிரம்பி யிருக்கும் ஊற்றுப்போல், தானுகவே அவர்களுக்கு அது பூர்ணமாயிருந்தது."

"இன்னும் பக்குவ காலம் வரவில்லை யென்று நீங்களே ஒத்துக்கொள்ளும்பொழுது, ஸ்வதேச உரிமைகளுக்கும் ஸ்வராஜ்யத்திற்கும் எவ்வாறு நீங்கள் ஆசைப்படமுடியும்?" என்று, தன் கேள்விக்கு இன்ன பதி லென்பது தன் மட்டிலாவது சந்தேகமில்லாதவர்போல், மிஸ்டர். காடெல் கேட்க,

"ஸ்வராஜ்யம் கிட்டாதவரையும், அதற்குரிய பக்குவ நிலைமையும் தேசத்திற் கேற்படாது. நீரில் இறங்கினு லல்லது நீந்தக் கற்றுக்கொள்ளுவது எப்படி ?" என்ருன் ராமு.

"இதுவும் வெகு காலமாய் வழங்கிவரும் வார்த்தையே! கக்ஷி பேசும்பொழுது அதை யெடுத்துச்சொல்வது அழகாயிருக்கின்றதே யொழிய, கடினமான ராஜ்யபரிபாலன முறைகளைக் கற்றுத் தேறுவதற்கு அதனுல் எள்ளளவும் பிரயோஜன மில்லை!"—கிரேக் துரையைப் பார்த்து, "நான் எவ்வளவு தயவுள்ள கலெக்டரா யிருக்கிறேன், பார்த்தீரா ? சம

நிலையில், எவ்வளவு தாராளமாய் என் "காம்ப் கிளார்க்" என்னுடன் பேச நான் இடங் கொடுக்கின்றேன்! இந்தியர்கள் தகுந்தவர்களா யிருந்தால், நாம் அவர்களுக்குச் செய்யக் கூடியதும் இதற்கு மேலில்லை. இருந்தாலும் ராமச்சந்திரனைப் போலொத்தவன்கூட, இவ்வளவு சங்கோசத்துடனும் பயத்துடனும், தாராளமாப்ப் பேசி சமநிலை கொண்டாடுவதை நம்மைப்போல் சகஜமாய் ஏற்றுக்கொள்ளக் காணேமே!" என்றார்.

"எங்களுடைய ஆவி, உடல், பொருள் மூன்றும் உங்கள் துப்பாக்கிக்கு இலக்காயிருக்கின்றதென்பதை எவ்வண்ணம் மறக்கமுடியும்? இங்கிலீஷ் படிப்பானது, பரம்பரையாய் என் முன்னோர்கள் கையாண்டதாயும், செடிகளுக்கு ஜலம் போல் எனக் கவ்வளவு சகஜமாயுமுள்ள விவசாயத் தொழிலுக்கு என்னை உதவாம லடித்துவிட்டது. பிறவியில் நான் ஒருவரை அடக்கி யாளுபவனு மல்ல; ஒருவருக்குக் கீழ்ப் படிந்து நடக்கக்கூடியவனு மல்ல. இவ்விரண்டும் எனது இயற்கைக்கு விரோதமே. புத்திமானான எவனுக்கும் அப்படித்தான் தோன்றும். காலேஜ் படிப்பானது எனது பூர்வீக சொத்தை யழித்து, என் ஸ்வாதந்திரியத்தையும் அபகரித்துவிட்டது. அப்படிப்பும் கேவலம் புஸ்தகப் படிப்பாயிருப்பதனல், எழுதும் ஒரு "கிளார்க்" வேலைக்கே நான் தகுதியுள்ளவனு யிருக்கிறேன்! வேண்டுமானல் ஆங்காங்கு ஷேக்ஸ்பியரினின்றும் ஷெல்லியினின்றும் ஒவ்வொரு வரியெடுத்துக் கலந்தெழுதக்கூடும்! இவ்வாறிருக்கும்பொழுது, அடிமைத்தனம் என்னை யேன் அடையாது? அதில் ஆச்சரியம் ஏதேனும் உண்டோ? ஸர்க்காரின் கீழ் குமாஸ்தா வேலை பார்ப்பதற் கென்றே எங்களைத் திட்டஞ்செய்து, அம்முறையில் எங்கள் கல்வியையும் அமைத்திருக்கின்றீர்களே யன்றி, கல்வியின் சிறந்த அம்சங்க ளொன்றையும் நீங்கள் கொஞ்ச

மேனும் கருதவில்லை. மலையிடுக்கை யணுகியவுடன் பெருகிச் செல்ல வழியில்லாமல் நதியானது தடைப்பட்டு நிற்பது அதிசயமா? இந்திய ஜனங்களின் பெருங் குறை இது தான்! அடைபட்டுத் தேங்கிக் கிடக்கும் ஜலத்தைத்தாராள மாய்ப் பெருகிச் செல்ல வழி செய்வீர்களே யாயின், இத் தேசம் மட்டு மன்று,—உலக முழுவதுமே அது பாய்ந்து எங்கும் செழிக்கச் செய்யு மென்பதில் தடை யில்லை.''

ராமு இவ்வாறு பேசிக்கொண்டு வரும்பொழுதே காடெல் துரை சிறிது கண்ணயர்ந்துவிட்டார். ஆனல் அவர் மனைவியும் கிரேக்துரையும் வியப்புடன் வெகு கவனமாய்க் கேட்டுக்கொண்டிருந்தனர். பெருகி வரும் பிரவாகத்தைத் தடுத்து நிற்குங் கற்பாறைகளைப் பெயர்த்தெறிந்து, வழி யைச் சீராக்கும் வேலை தங்களைச் சார்ந்ததாய் இல்லையே யென இருவரும் வருத்தமுற்றனர். ஏற்கனவே ஓட வழி யில்லாமற் கிடக்கும் ஜலத்தை, மலைமேலிருந்து மேன்மே லும் தான் பெருகவைப்பதாகவே கிரேக் துரைக்குத் தோன் றிற்று. மிஸஸ். காடெலும், தான் ஒரு வாயில் காப்பவனின் மனைவியைப் போன்றவளா யிருக்கையில், தன் ஆதீனத்திலில் லாத விஷயங்களைக் குறித்துத் தன் சொல்லை ஒருவரும் கேட்கமாட்டா ரென நினைக்கலானுள். ராமுவோ தனக் கொன்றும் யோக்கியதையில்லை யென்றும், தன் எண்ணங்க ளெல்லாம் கேவலம் பெருமையே யென்றும் எண்ணிய வனுய், ''உலகில் ஆளும் வகை யிவ்வாறு தான்! பிரளயம் போல் இன்னல் விளையுங் காலத்து, நமது குறைவுகளை நினைத்து நாம் ஏங்கி நின்றாலும், அவ்வின்னல் நீங்கியதும் நமது ஏக்கமும் மறைந்துவிடுகின்றது! அனுபவித்த பின் பும் நமக்குப் புத்தி வருவதென்பது ஒருக்காலுமில்லை. மீண் டும் பழைய அற்ப வழியிலேயே சென்று, உலகிற் சிறந் தோரைச் சிறையி லிட்டும், அதமர்களை அரண்மனையிலு

மல்லவோ வைத்துப் போற்றிவருகின்றோம்!" என்று தனக்குள்ளேயே மெதுவாய்ச் சொல்லிக்கொண்டான்.

இவ்வண்ணம் நானு விஷயங்களைப் பற்றிய சம்பாஷணை முடிந்து அவர்கள் எழுந்திருக்கும்பொழுது இருட்டிவிட்டது. தன்னைப் பற்றியும், மொத்தமாய் உலகத்தைப்பற்றியும் வருத்தத்தி லாழ்ந்தவனாய் ராமு வீட்டிற்குத் திரும்பினான்.

"கலெக்டரைக் கேட்டீர்களா?" என்று ஜானகி அவன் உள் நுழையும்பொழுதே கேட்க,

"இல்லை; அதற்குச் சமயம் சரியா யில்லை," என்றான் ராமு.

"ஐயோ, நீங்கள் இந்த உத்தியோகத்திலிருந்து கொண்டே, என்னைத் தனியேதான் விட்டுவைக்கப் போகிறீர்கள்! இச்சமயம் சரியா யில்லாவிட்டால், வேறெப்பொழுது வாய்க்கப் போகின்றது?" என்று ஜானகி குழந்தையைப் போல் அழ வாரம்பிக்க,

"இல்லை.—நாளை ஆபீஸில் கட்டாயம் கேட்டுவிடுகின்றேன்! "டீ" சாப்பிடும்பொழுது, தயவெதிர்பார்ப்பதை மேனாட்டார் விரும்பமாட்டார்கள்," என்றான் ராமு.

மறுநாட் காலை டபேதார் மீண்டும் கலெக்டரிடமிருந்து கடிதத்தோடு வர, அதை வாங்கிப் பார்த்ததும் சந்தோஷத்துடன் ராமு, தன் மேல் வேஷ்டியுடன் ஒரு ரூபாயை அவனிடம் வீசி யெறிந்துவிட்டு, காஞ்சீபுரத்திற் கருகி லிருக்கும் துசி யென்ற ஊரில் நூற்றைம்பது ரூபாய் சம்பளத்தில், தனக்கு டிப்டி தாசில்தார் வேலையாயிருக்கும் நற்செய்தியையும், மிஸ்டர். காடெல் ரெவினியூ போர்டு மெம்பராய்ச் சென்னை செல்வதையும் ஜானகியிடம் அறிவிக்க வேகமாய் உள்ளே சென்றான்.

---

# அத்தியாயம் 26.

## நாட்டேலி நகரத்தேலியைப் பார்த்தது.

அலவந்தியில் முருகன் இப்பொழுது சொந்தத்தில் நிலமுள்ள ஒரு மிராசுதாராய்விட்டான். சாதாரணக் குடியானவனு யிருந்து குத்தகை யெடுப்பவனுகிப், பிறகு நிலத்திற்குச் சொந்தக்காரனுய்ப் படிப்படியாய் மேலே யுயர்ந்தது, எசமான் அவன் நாணயத்தையும், சுறுசுறுப்பையும் கண்டு மெச்சி அவனுக்குச் சைய்த பேருதவியே யொழிய, பெரிய அதிருஷ்ட மெடுத்து அடித்ததனு லல்ல வென்றிருந்தபோதிலும், முன்பு ஏழையாய் யாவருக்கும் வேண்டியவனுயிருந்த முருகன், இப்பொழுது பலருக்கும் விரோதியாய் விட்டான். ஆயினும், அவன் யாவற்றையும் பொறுமையோடு சகித்து வந்தான்.

அவனது புதிய அந்தஸ்தைக் கண்டு சந்தோஷங் கொண்டாடி விசாரித்தது முதன் முதல் தொப்பையே. அவனிட முள்ள நன்றி விசுவாசத்தினுலும், தற்சமயம் தனக்கு வாய்த்திருக்கும் மிராசுதார் பதவிக்குத் தக்கவாறு கௌரவமாய் நடக்கவேண்டு மென்ற எண்ணத்தினுலும் முருகன், தொப்பையைக் கேவலம் ஒரு வேலைக்காரனுக வன்றி, சிநேக பாவத்திலும், காரியஸ்தன் முறையிலுமே தன்னிடம் வைத்துக்கொண்டான்.

“தன் நிலத்தைத் தானே உழுது பயிரிடவேணு மின்னு நீங்க சொல்லிக் கொண்டிருந்தது உங்களுக்கு எப்படி மறந்து போச்சு? தொப்பை ஒண்ணுக்கும் அஞ்சமாட்டான்! கண்டபடி நடக்கிறவன். ஊரிலே எல்லா மிராசு தாரங்களையும் நமக்கு விரோதமாக் கிளப்பிப் பெரிய

நாசத்தையும் நமக்குக் கொண்டு வருவா னென்பது நிச்சயம். குடிக்கிற வழக்கமும் அவனண்டே யிருக்கு," என்று பொன்னி வெகுவாய்ச் சொல்லிப்பார்த்தாள்.

"பொன்னி, பெண்பிள்ளை யென்கிறது சரியாயிருக்கு! அப்படித்தான் நீ பேசறே. இவ்வளவு பெரிய தோட்டத்திலே, நிசமா இரண்டு பெயருக்கு வேலை யிருக்கு. அப்போ நாலு மடங்கு அதிக வரும்படியே நமக்கு வரும். தானே எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு, பிறருக்குப் பிழைப்பில்லாமே செய்யறது கெட்ட தல்லவா? கடவுளுக்கும் அது சம்மத மாகாது! பாவம், தொப்பை என்னிடம் எவ்வளவோ நம்பிக்கையும் விசுவாசமும் வச்சிருக்கான். நல்ல பலசாலி. அவனுக்கு ஒருத்தரும் கிடையாது. சுத்த ஏழை. பொன்னி, அவன் உன் தம்பியா யிருந்தா, நீ மாட்டேன்னு சொல்லு வாயா? இது வரைக்கும் என்னைத் தேடிவந்த ஒத்தரையும் நான் சாடையாலேகூட வெளியே போகும்படி சொன்ன தில்லே. இன்னும் கொஞ்சம் வயசாயி, பட்டண வாசத்திலே படிஞ்ச குணமும் சற்று மாறத் தொடங்கினு. தொப்பையும் நாளடைவிலே சரியாய்விடுவான். அவன் சாமர்த்தியம் எவ் வள வின்னு நோக்குத் தெரியாது. நல்ல தைரியசாலி. படிச்சவன். நம்மைத் தொலைக்க வேணு மின்னு கிளம்பியிருக்கிற படுகொளிப் பயங்களைப்பற்றிச் சர்க்காரிடம் சொல்லி, அவங்க ஒத்தாசையைச் சம்பாதிக்க அவனுக்குச் சாமர்த்திய முண்டு. அவன் கிடச்சிருப்பது நமக்கு நல்ல கால மின்னு சொல்லவேணும். வலியவரும் சீதேவியை யாராவது காலாலே யுதைப்பாங்களா? தன்னலத்தையும், பிறரிடம் ஈவு, இரக்கத்தையும் நாம் கோருகிறவங்க இல்லையா? பொன்னி, குழந்தைங்களையும், வீட்டு வேலையையும் பார்த்துக்கொண்டு நீ சும்மா விரு. வீணு ஒரு நல்ல பையனைப்

பற்றித் தப்பா யெண்ணிக்கொண்டு கஷ்டப்படாதே!" என்று முருகன் பதி லுரைக்க, பொன்னி, அதற்குமே லொன்றும் பேசாது தன் காரியங்களைக் கவனிக்கலானுள். தொப்பை அவர்கள் வீட்டி லொருவனுனதுடன், யாவற்றிற் கும் அவனே பெரும் யோசனை கூறுபவனுகவு மாய்விட் டான்.

பல மாதங்கள்வரையும் முருகன், தன் எசமான் கூறிய புத்திமதியையும், எச்சரிக்கையையும் மனதி லெண்ணி அதன்படியே நடந்துவந்தான். ஆயினும், டம்ப மின்றியும், சோம்ப லின்றியும் வேலைசெய்யவேண்டு மென் பதில் அவனுக்கு வரவர நம்பிக்கை குறையத் தொடங்க, அதற்குப் பதிலாக தொப்பையின் கொள்கைகளும், சகவாச மும் அவனைப் பலமாய்த் தம் கைவசமாக்கத் தொடங்கின. அதிகப் பாடு படாமலே, தனக்குத் தேவையா யிருப்பதற்கு மேற்பட்ட வரும்படி கிட்டவே, முருகனுக்கு என்ன செய்வ தென்று தெரியவில்லை. முதலில், தான் வழக்கமாய் இடுப் பில் கட்டியிருந்த சிறு சவுக்கத்தைக் களைந்து நான்கு முழ வேஷ்டி கட்டத் தொடங்கினுன். பிறகு, மேல் வேஷ்டி ஏற்பட, நாளடைவில் தலைக்குட்டையும் குடைத்துணியும் வேண்டியதாயின. அவ்வாறே பழையது சாப்பிடுவது நின்று காபி வழக்க மாயிற்று. முருகன் குச்சு வீட்டை விட்டு மச்சு வீட்டில் வசிக்கலானுன். ஆயினும் இப்பெருமையை யெல்லாம் அவன் எவ்வாறு தான் பிறந்த ஊரிலேயே காட்டு வது? குட்டையில் ஊறிக்கொண்டிருக்கும் தென்னை மட் டையைப்போல், இவ்வாறு தன் தோப்பிலேயே அற்ப காலக்ஷேபம் செய்துகொண்டிருப்பதைக் காட்டிலும், பட் டணத்திலிருக்கும் இரண்டொரு நண்பர்களைப் போய்ப் பார்த்துவிட்டு வந்தா லென்ன வென்று முருகன் யோசிக்க,

அதி லொன்றும் பிசகில்லை யென, தொப்பையும் பல வித மாய்ச் சொன்னன். கும்பகோணத்தில் கள்ளுக்கடை வைத்திருப்பவனுன தன் மாமன் மகனை முருகன் முதன் முதல் போய்ப் பார்த்து வந்தான். முருகனது தற்கால ஸ்திதியையும், வரும்படியையும் பற்றித் தெரிந்துகொண்டு, அந்த மாமன் மகன் அவனை மிகவும் பிரியமா யுபசரித்து, குடிக்க உயர்ந்த சாராயமும், நல் விருந்து மளித்தான். இப் பொழுதுதான் முதல் தடவை முருகன் சாராயத்தை ருசி பார்த்தவ னுதலால், அவனுக் குண்டான சந்தோஷம் இவ் வளவு அவ்வளவென்றில்லை. அலவந்தியில் கள்ளுக்கடை யொன்று மில்லை யாதலால், தனக்கு வரும் தீங்கையும், பொருட் செலவையுங்கூடச் சிறிது மெண்ணுமல், முருகன் அடிக்கடி பட்டணம் போய் வரத் தொடங்கினன். பயமும், கவலையும் மேலிட்டு, பொன்னி தடுத்துக் கூறிய தொன்றை யும் அவன் கவனிக்கவில்லை. இவ்வண்ணம் மூன்று வருஷங் கள் சென்றன.

---

## அத்தியாயம் 27.

### அரசாங்கத்தாரின் பேருதவி!

ஒரு நாள் தொப்பை, "முருகா, உனக்குச் சமாசாரம் தெரியுமா? குதிரைங்க, டேரா, சேவகங்க, முதலிய சர்க்கார் கௌரவத்துடன், "கலால் கமிஷணர்" இலுப்பைத் தோப்பிலே, முகாம் போட்டிருக்காராம். ஏழைங்களுக்கு நல்லது செய்யறதுக்காகத்தான் அவர் வந்திருப்பதாய்ச் சொல்றுங்க." என்றான். ஒரு நிமிஷம் பொறுத்து சுற்று முற்றும் பார்த்து விட்டு, "இதிலே ஒரு தங்க கிடாரம் உனக்கிருக்கு! புதைய லின்னு பூமிக்குள்ளே மறைஞ் சில்லே! கையிலே வந்து நிக்குது; மம்மட்டியாலே வெட்டிக் கஷ்டப்பட வேண்டாம்! ஒவ்வொருத்தருக்கும், அவங்க ஆயுசிலே, நல்லதுக்கு இன்னு ஒரு காலம் வருமல்லவா? அந்தக் காலம் உனக்கு இப்போ வந்திருக்கு. முருகா, நீ சாமர்த்தியமா நடக்கிறதிலேதான் எல்லா மிருக்கு. நீ பெரிய பணக்காரனுவுறதுக்கு எனக்கு ஒரு வழி தெரியும்," என்று எதிரிலிருந்த தென்னைகளை ஆசையுடன் நோக்கிக் கொண்டே கூறினான்.

"தொப்பை, ஏற்கெனவே நாம் ஊரிலே ஒருத்தருக்கும் வேண்டாதவங்க ளாயிட்டம். பெரியசாமி அய்யரு கல்லை விட்டெறிஞ்சு நம்மைக்கொண்ணுடுவாரு!" என்றான் முருகன் மெதுவாய். குடியினாலும், வேலை யின்மையினாலும், தனது மூளையும் உழைப்பும் குன்றிப் போக, முருகன் இப்பொழுது மிகவும் மாறிவிட்டான்.

"பணக்காரங்க அப்படித்தான் ஏழைங்க மேலே எப்பவும் கல்லை விட்டெறிவாங்க! அதுவும், பணக்காரங்க

ளாவுறதுக்கு ஏழைங்க பிரயத்தினப்பட்டா, கேக்கவே வேண்டாம்! அதொண்ணும் புதிசு இல்லே. நீ இந்தத் தோப்பை வாங்கின போது, தங்களுக் கிருந்த பொறாமையிலும் கோபத்திலும், ஊரிலே எல்லாரும் உன்மேலே எப்படிக் கிளம்பினுங்க!—பட்டணத்திலே யானு, என்ன செய்வாங்க இன்னு எனக்குத் தெரியும். நான் சொல்றதை மட்டும் கேட்டாயானு, மூணு வருசத்திலே இந்த கிராமம் முழுவதுமே உன்னுதாயிடும். பெரியசாமி அய்யரு பெரிய வியாச்சியத்திலே அகப்பட்டுக் கொண்டு கிடக்காரு. நல்ல காலம்! வக்கீலுங்களும், வக்கீல் குமாஸ்தாக்களும் பெரும் வயறு படைச்சவங்களா யிருக்காங்க! பட்டணம் சமாசாரம் எனக்குத் தெரியும். அவர் வியாச்சியம் தோத்துப் போயிட்டா, அவர் நிலத்துக் கெல்லாம் விலே ரொம்ப இறங்கிப் போயிடும். அதுக்குள்ளே, நீ மட்டும் பணம் சம்பாதிச்சு, தயாரா கையிலே வச்சிருந்தா,—இந்த படுகாளிப் பயங்களே யெல்லாம் நாம் ஊரை விட்டு ஓட்டி விடலாம். பெரியவங்க தொலேஞ்சா, மற்றவங்க தானே போறுங்க!"

"தொப்பை, பணக்காரனுகும் வழி இன்னு, நீ ஊரையே எதிர்த்து நிற்கச் சொல்றையே! எனக்கு வயசாச்சு; யோசிக்கிற சக்தி யெல்லாம் குறஞ்சு போச்சு. இந்த கிராமம் முழுவதுமே வாங்குவதா? சொப்பனத்திலேகூட ஆவாது! கெட்ட பேராசை யல்லவா?"

"முருகா, வயசுதான் ஆச்சு இன்னு, ரொம்ப நாட்டுப் புறமாகவும் இருக்காயே! ஜுரமா கிடந்ததிலே, உன் புத்தியும் தைரியமும் மழுங்கிப் போச்சு! எல்லாத்தையும் எங்கிட்டே விட்டு விடு. நான் பார்த்துக் கொள்றேன். சொந்தக்காரங்க அவதிப்பட்டுக்கொண்டிருக்கும்போது நிலத்துக்கு ஒரு மதிப்பும் கிடையாது. போட்டிக்கும் சுத்து

வட்டத்திலே ஒத்தரு மில்லே. அக்கிரகாரம் பாழடஞ்சு போச்சுன்னு, இப்பவே தோணுது. நிலத்தை வச்சுக் கிறதுக்கு ஒத்தருக்காவது யோக்கியதையைக் காணும். உன் எசமான் ராமு இருந்தாரே, அவரை வேணுமானு சொல்லலாம். ஊரிலே இருக்கிறவங்க எல்லாருமாத்தான் சேர்ந்து அவரை இவ்விடத்தை விட்டுத் துரத்தி விட்டாங்க. அப்படிப்பட்டவங்களே என்ன தண்டனை பண்ணினுதான் என்ன?—பதினுயிரம் ரூபா இருந்தா போதும். நான் சொல்ற வழியைக் கேட்டு நடந்தா, மூணு வருசத்திலே சம்பாதிச்சு விடலாம்,'' என்று தொப்பை தன் யோசனையை அழுத்திக் கூறினுன்.

"பதினுயிரமா? அதெங்கிருந்து கிடைக்கும், தொப்பை? தென்னை ஓலேகளெல்லாம் என்ன தங்கமா?''

"ஊரிலே ஒரு கள்ளுக்கடை மட்டு மிருந்து, நீயும் அதுக்குச் சொந்தக்கார ஞயிட்டா, பிறகு தென்னை ஓலேங் கெல்லாம் தங்கந்தான்! அதிலே என்ன சந்தேகம்?''

"கள்ளுக் கடையா? நானு வைக்கிறது? அது ரொம்ப தப்பு, தொப்பை! எல்லாரும் நம்மை வாயிலே வந்தபடி திட்டுவாங்க.''

"பட்டணத்திலே இருக்கிறவங்க சொல்றமாதிரி, கடவுள் அமைச்சிருக்கும் பொருளுங்களேக் கொண்டு ஒரு மனுசன் நாணயமா சம்பாதிச்சா, அது ஒரு நாளும் இழிவாகாது. பணம் சம்பாதிக்கிறதிலே ரொம்ப நியாயமும் தர்மமுமா பார்ப்பாங்க? அதனலே தான் ஏழைங்க எப்பவும் ஏழைங்களாகவே கஷ்டப்பட்டுக்கொண்டு கிடக் காங்க. பணக்காரங்க வயிற்றை ரொப்புறதுக்குத்தான், இவங்க இவ்வளவு நியாயமாயும், நல்லவங்களாயு மிருக் காங்க! முருகா, என்னைப் போலே நீ கலியாணம் ஆகாதவ

னில்லே. உன் குழந்தை குட்டிங்களை நீ காப்பாத்த வேண்டாமா? காற்றிலே ஆடிக்கொண்டு பசேலென செழிப்பா யிருக்கும் இந்த தென்னைகளைப் பாரு! இந்தக் கலிகாலத் திலே, அதுங்கதான் கல்பக விருட்சம்! நீ அதுங்களை ஒண்ணும் ஆட்டிக் குலுக்கக்கூட வேண்டாம். நித்தியம் மெது வாய்த் தட்டிக் கொட்டிக்கொண்டு வந்தா, தேன், பால் போலே, தங்கம் பெருகி வரும். நான் சொல்றதை ஒத்துக் கொள்றாப்போலே காற்றிலே அதுங்க அசையறதைப் பாரு!"

"தொப்பை, எனக்கு ஆஸ்தி சேர்க்கிறதுக்கு நீ இந்த மாதிரி யெல்லாம் பேசறதைக் கேக்க, என் மூளைக்கு ஒரே கலக்கமா யிருக்கு. இந்த முன்னூறு தென்னைகளி லிருந்தும் நாம் கள்ளு இறக்கலா மின்னுதானே நீ சொல்றே! ஊரிலே நாம் ஒரு கள்ளுக்கடை வைச்சா,——"

"மாசத்துக்குக் குறஞ்சது ஐந்நூறு ரூபா கிடைக் கும். நம்ம ஊரிலே ஜனங்க ஜாஸ்தி. சுத்து வட்டத்திலே பத்து மயிலுக்கு ஒரு கள்ளுக்கடைகூட கிடையாது. ஒரு கலெக்டர் சம்பளம்! ஐந்நூறு ரூபா கிடைக்கிறது நிச்சயம்! மூணு வருஷத்துக்குள்ளே, கிராமத்துக்கு முழுவதும் எச மானாகவும் ஆயிடலாம். நம்மைச் சேர்ந்தவங்களான, பள்ளி படையாச்சிங்களுக்காவது நல்லது செய்யக்கூடாதா? உன் நல்ல மனசைப் பற்றி, முருகா, எனக்குச் சந்தேகம் கிடையாது."

"இருந்தாலும், அவங்களும் ரொம்ப வைய மாட் டாங்களா?" என்று முருகன் மீண்டும் தயங்கிய வண்ணமே கூறினான்.

"பணம் போகிறது போதாதுன்னு, வாயையும் செல வழிக்க வேணு மின்னு தோணினு, அப்படியே செய்யட்

டுமே ! ஏழைங்க என்ன கத்திஞலும்,பணக்காரங்களுடைய ஒரு மயிர்க்காலுக்குக்கூட கெடுதல் பண்ண முடியாது. அவங்க ஒண்ணையும் காதிலே போட்டுக்கொள்ளாமே இருக்க முடியும். முருகா, உன் அனுபோகத்திலே, நீயே பார்த்துத் தெரிஞ்சுண்டதை யெல்லாம், நான் உனக்குத் திருப்பி எடுத்துச் சொல்லணுமா ? நீ ஊருக்கு எசமாஞு, யாரு உன்னே வையுவாங்க இன்னு நீ பயப்படறையோ, அந்த ஏழை சனங்களே, கடைசியிலே நீ எவ்வளவு தய வாயும் பக்ஷமாயும் தங்க விஷயத்திலே இருக்கே யின்னு தெரிஞ்சுகொள்ளப் போருங்க !''

"சரி, தொப்பை, உன்னேடே எனக்குப் பேச முடியாது. எனக்காக என்ன செய்யணுமோ, அதைச் செய். நான் பயந்தவன். வயசானதோடே, பழங்காலத்து மனுஷன். எல்லாத்தையும் உன் கிட்டே ஒப்பிச்சு விட்டேன். நீ எனக்குத் தம்பி மாதிரி. உனக்கும் பங்கு கொடுக்கிறேன். காரியம் கைகூடும்படி சாமி கிருபை செய்யட்டும்!'' என்று முருகன் சொல்ல, தொப்பை காரியவாதியாகையால், பன்னிரண்டு இளநீர்களே வெட்டி யெடுத்துக்கொண்டு உடனே "கலால் கமிஷணரை'' ப்பார்க்கச் சென்ருன்.

இதன் நடுவில் முருகன் மனதில் ராமுவைப்பற்றி எண்ண முண்டாயிற்று. அவனும் தொப்பையும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டிருந்த 'பொன்னி, புருஷனிடம் வந்து அழுதாள்.

"தொப்பை நமக்குச் சனியன் மாதிரி! அவன் கலியாண மாகாதவன். இந்த ஊரிலே அவனுக் கென்ன பிடிப்பு? அவன் சொல்றதைக் கேக்காதிங்க! திரும்பிப் பாருங்க? நமக்கு இரண்டு பிள்ளேங்களும், மூணு பொங்களுமிருக்கு. —கள்ளுக் கடை வைக்கிறதுக்குப் பிரயத்தனப்படவேண்

டாம்! அதைப்பற்றி ஆசை கொள்ளாதிங்க! உங்களை, எற்கெனவே, ஊரிலே ஒருத்தருக்கும் ஆகல்லே. குடிகாரனின்னு தாராளமாச் சொல்ல ஆரம்பிச்சுட்டாங்க. வேண்டாம் ! நான் சொல்றதைக் கேளுங்க!''

"போடி பைத்தியக்காரி!'' என்று முருகன் அலக்ஷ்யமாய்ப் பதிற் சொன்னான். "நான் எதுக்காகக் கள்ளுக்கடை வைக்கிறதுக்கு எற்பாடு செய்யறேனின்னு உனக்குத் தெரியாது. நான் குடிக்கிறதுக்கு இன்னு நினைச்சுக்கினையா? நீங்க எல்லாம் எண்ற மாதிரி நான் அவ்வளவு குடிகாரனில்லே. வயலிலே உழைக்கிறதிலே வரும்படி அதிக மில்லே. பயிர்த்தொழில் ஏழைங்களுக்கும், புத்தியில்லாதவங்களுக்கும் ஏற்பட்ட தல்லவா ? பட்டணங்களிலே எப்படிச் சம்பாதிக்கிருங்கன்னு உனக்குத் தெரியாது. சர்க்காரிலே, இங்கே ஒரு கள்ளுக்கடை வைக்க எற்பாடு செய்ருங்க. அப்படியே வைச்சாயிட்டா, நான் அதன் சொந்தக்காரனுவது ரொம்ப சுலபம். பொன்னி, இத்தோப்பிலே இருக்கிற ஒவ்வொரு தென்னையும் அப்போ தங்கமா கொட்டும் ! உழுது கஷ்டப்பட்டுக்கொண்டு கிடக்கும் இந்த ஏழைப் பயங்க கண் முன்னே, மூணு வருஷத்திலே ஏராளமா சம்பாதிச்சு, இந்த கிராமம் முழுவதுமே வாங்கி விடலாம்!''

பொன்னி எவ்வள வெடுத்துரைத்தும் முருகன் செவிக் கேறவே யில்லே. அவள் வடித்த கண்ணீ ரெல்லாம் வீணுயிற்று !

———

## அத்தியாயம் 28.

### நட்பெனும் துலைக்கோல்.

இதிவ்வாறிருக்க கேதாரி, வெகு விரைவாய் முன்னுக்கு வந்துகொண்டிருந்தான். "ஒருநாள் மாலை மார்க்கண்டமய்யருடைய உயர்ந்த "ரோல்ஸ் ராய்ஸ்" மோட்டாரானது, சிறிதும் சப்த மில்லாமல், வெகு கம்பீரமாய் நடுத்தெருவில் கேதாரியின் வீட்டி னெதிரில் வந்து நின்றதும், யாரோ பெரிய மனிதர்களா யிருக்க வேண்டு மென்ற சந்தோஷத்துடன், உடம்பு சிலிர்க்க, கோகிலம் ஜன்னலண்டை சென்று வெளியே மெதுவாய் எட்டிப்பார்த்தாள். கேதாரி, அப்போதுதான், மோட்டாரிலிருந்து இறங்கிக்கொண்டிருப்பதையும், தன்னை வீட்டுக்குக் கொண்டு வந்து விட்டதைப் மற்றி மிக்க மரியாதையுடன் அவன் உபசாரம் கூறுவதை உள்ளே யுட்கார்ந்திருந்தவர், உருவில் சிறியவராயினும், செல்வத்தில் பெரியவரா யிருந்தமையால், ஏதோ வேறு ஞாபகத்துடன் அலக்ஷியமாய்க் கேட்டுக்கொண்டிருப்பதையும் கண்ட கோகிலம், அவர்தான் வக்கீல்களுள் முதன்மையான மார்க்கண்ட மய்யரென உடனே யறிந்து கொண்டாள். அவள் நினைத்தவாறே, அவ்வளவு பிரசித்தி பெற்றவருக்குத் தக்கபடியே அவர் மோட்டாரும் அமைந்திருந்தது. வீதி மட்டும் "காரு"க்குச் சரியானபடி அகலமா யில்லை. மார்க்கண்ட மய்யருடைய மோட்டாரில் வந்து, வீட்டு வாயிலில் இறங்கும் பெருமை இப்பொழுதுதான் முதன் முதல் வாய்க்கப் பெற்ற கேதாரி, தனக்கு விடை யளிப்பா ரென்று, பூர்ண நன்றியுடன் எதிர்பார்த்தவனாய், வண்டிப் படியில் ஒரு காலை வைத்தப்படியே நின்றிருந்தான்.

"ரொம்ப சிறிய தெரு; ஆனால் ஜூனியர் வக்கீல்கள் வெகு பேர்கள் இங்குதான் குடியிருக்கிறார்கள்," என்று மார்க்கண்ட மய்யர் அங்கு வருவதை வெகு கஷ்டமாய் எண்ணியவர் போல் கூற,

"ஆம்; ஆனால் நல்ல "ஷகரி"ல் இருக்கிறது. இத் தெரு இப்படியே மாடவீதியிற் சேர்ந்து, கடைசியில் "லஸ் ரோட்" டில்தான் கொண்டுபோய்விடும்," என்று கேதாரி தைரியமாய் உருவகப்படுத்திக் கூறினான். வெகு தந்திர மாய், செய்யாததுபோல் முகஸ்துதி செய்வதில் மார்க் கண்ட மய்யருக்கு ரொம்ப சந்தோஷம். சந்திலும் பொந்தி லும் மோட்டாரை ஜாக்கிரதையாய் விட்டுக்கொண்டு தான் செல்ல வேண்டியிருக்கத், தன் எஜமான் இவ்வளவு தயவு காண்பிப்பதுகூட அதிக மென்று நினைப்பவன் போல், "ஓட்டுபவன்," கேதாரி பேசிக்கொண்டிருக்கும் பொழுதே மோட்டாரை விடத் தொடங்கி விட்டான்.

உள் நுழைந்ததும் கோகிலம் சிரித்த முகத்துடன் எதிரே வருவதைக்கண்டு, "என்ன, நீ கூட இன்று என் னைச் சந்தோஷத்துடன் வரவேற்கின்றாய், கோகிலம்!" என்றான் கேதாரி.

"உங்கள் ஸீனியர் வக்கீல் உங்களிடம் மிகவும் பிரிய மா யிருப்பதுபோல் தோன்றுகிறதே! எல்லாம் என் னதிருஷ்டம்!—"

"ஆமாம்! துரதிருஷ்ட மெல்லாம் என்னைச் சேர்ந் தது; அதிருஷ்ட மெல்லாம் மட்டும் உன்னுடையது! அப் படிச் சொல்லிக்கொள்வதுதான் ஸ்திரீகளுக்கு அழகு போலும்! நீங்கள் எங்களைச் சிரித்த முகத்துடன் நோக்கு வதற்குப் பதில்,நாங்கள் கேவலம் உங்கள் நிமித்தம் கூலியில் லாச் சேவகம் செய்யவேண்டு மென்றல்லவா திட்டம் செய்திருக்கிறீர்கள்!"

"மோட்டாரில் ஏற்றிக் கொண்டுவந்து, வீட்டு வாயி லில் விடும்படி அவ்வள வென்ன தயவு இப்பொழுது!"

"மேன் மேலும் கேட்பானேன். எல்லாம் உன்னதி ருஷ்டமென்று இப்பொழுதுதானே சொன்னாய்!"

"ஆனால் சொல்ல வேண்டாம்; நீங்களே ரகசியமாய் வைத்துக்கொள்ளுங்கள்!"

"கோபம் கொள்ளாதே, கோகிலம்,—அதனால் உன் முகம் சிவந்து, அழகு அதிகரித்தாலும். எல்லாரும் ஒன்று சேர்ந்து பேசிக்கொண்டு வரும்பொழுது, "எக்கச் சக்க மாய்" அவர் மாட்டிக்கொண்டு விட்டார். சட்ட புஸ்த கங்களைத் தவிர வேறொன்றும் அவர் அதிகமாய்ப் படித்த தில்லை. வயதில் இளையவர்களுடன் பேசும்பொழுது பள் ளத்தில் தடுக்கி விழாதபடி நான்தான் எப்பொழுதும் பார்த்துக்கொள்ளுகிறபடியால், தன் "ஷோபர்,"கிளார்க்கு கள், நண்பர்கள், ஏழை பந்துக்கள்,மற்றுமுள்ள சிறு வக்கீல் கள் இவர்கள் யாவரு மிருக்க, அவர் வரவர என்னிடம் அபிமானம் பாராட்டத் தொடங்கிவிட்டார். தைரியமாய்த் துணிந்தடிப்பவர்கள் வெல்லுவது சுலப மன்றோ? அவ ரோடு ஒட்டிக்கொண்டுவிட்டேன்,—அல்லது அவரை பற்றிக் கொண்டே னென்றும் சொல்லலாம். நான் ஒரு வரையும் கிட்ட நெருங்க விடுவதில்லை. வல்லான் வகுத்ததே வாய்க்கால். ஆணவத்தின் வன்மைக் களவில்லை. அதுவே பெரும் தருமமாகும். பொறுத்தார் பூமி யாள்வார் என் பது பொய். என்னால் கூடியமட்டும் நான் அடக்கமா யிருந்து பார்த்தாயிற்று. அடித்துப் பிடுங்குபவன் பொறு மையாயிருக்க முடியுமா? என் அனுபவமே அதற்குச் சாக்ஷி. நான் இருவிதமாகவும் நடந்து பார்த்தேன்.—"

"எப்பொழுதும் அயோக்கியத்தனத்தையே மெச்சிக் கொண்டாடுகின்றீர்களே! ஒரு நாள் அதனுல் பெரும் துன்பமே சம்பவிக்கும்! உங்கள் நண்பர் ராமுவுக்கு நேர் விரோதமா யிருக்கிறீர்கள்! அவரைப்பற்றி எவ்வளவோ தரம் நீங்கள்—"

"ஆகையினுல்தான் நல்ல வரும்படி வரக்கூடிய சிறு வக்கீலாய் நானும், "காம்ப் கிளர்க்கு" உத்தியோகத்தில் அடிமைத் தொழில் செய்பவனுய் அவனும் இருக்கின்ருேம். அது கிடக்கட்டும்!—நான் உனக்கு ஒரு சங்கதி சொல்ல மறந்துவிட்டேன். கடற்கரையில் ராமுவைச் சற்று முன்பு தான் நான் பார்த்தேன். எப்பொழுதும் போல பழைய ஆடை யணிந்த ராமுவாகவே காணப்பட்டான். இருபத் தைந்து ரூபாய் சம்பளத்தில் "காம்ப் கிளார்க்" காயிருப்ப வன் என்ன செய்வான்? பாவம், தன் நிலத்தைக்கூட விற்று விட்டானும்!—"

"எல்லாம் உங்களைப்போன்ற நண்பர்களுக்கு உதவி செய்யும் பொருட்டுத்தான்! ஒன்றும் தெரியாதவர்! ஏன் அவரை அகத்திற்கு அழைத்துக்கொண்டு வரவில்லை? சாதாரண நன்றி விசுவாசம் கூட—" என்று கோகிலம் ஆக்ஷேபித் துரைப்பதற்குள்,

"நன்றி விசுவாசமா? மணிக்கு நாற்பது மைல் வேகத்தில் நான் பறந்து வந்துகொண்டிருக்கும்பொழுது என்ன செய்வது? ரோட்டில் கால் நடையாய்ச் செல்லும் ஒவ்வொருவனையும் எங்கள் "ஸீனியர்" தன் மோட்டாரில் ஏற்றிச் செல்வா ரென்று நினைக்கின்ருயா? என்னை ஏற்றிக் கொண்டுவந்து வீட்டில் விடுவதற்கே எவ்வளவோ சுற்றி வளைத்து சமத்காரமாய்ப் பேசவேண்டியிருந்தது. அதுவும் ஒரு தடவையாவது நான் மோட்டாரில் ஏறி யிறங்குவதை நீ

பார்க்கவேண்டு மென்பதற்காக நான் சிரமப்பட்டதே யொழிய வேறல்ல,'' என்முன் கேதாரி.

"நீங்கள் ராமுவை யழைத்துக்கொண்டு சாதாரண மாய் நடந்து அகத்திற்கு வந்திருந்தால் எனக்கு இன்னும் எவ்வளவோ சந்தோஷமா யிருக்கும். ஆனால், நீங்கள் அவரைக் கண்டு பேசவே யில்லையா ?''

"பாபம்! மோட்டாரில் என்றைக்காவது ஏறியிருந்தா லல்லவா உனக்குத் தெரியும்! நாற்பது மைல் வேகத்தில் தார் அடித்த ரோட்டில் பறந்து கொண்டிருக்கும்பொழுது, வழியில் நடந்து செல்லு மொருவனுடன் பேசுவ தெப் படி ?''

"கண்டவுடன், நீங்கள் வண்டியை விட்டாவது உடனே இறங்கி யிருக்கலாம்.''

"ஒரு "காம்ப் கிளார்க்'' குடன் பேசப்போய், இவ் வளவு பெரிய மோட்டாரில் வந்து, வீட்டு வாயிலில் இறங்கு வதை நீ மட்டு மல்ல, தெருவில் அனைவரும் பார்ப்பதைக் கெடுத்துக்கொள்ளுவதா ? நன்றாய்ச் சொன்னாய்! நான் இன்னும் அவ்வளவு பைத்தியக்கார னாகவில்லை !''

"நானா யிருந்தால், உடனே மோட்டாரை விட்டுக் குதித்து, ராமுவின் காலில் விழுந்து நமஸ்கரித்திருப்பேன். அவரில்லா விட்டால், நாம் இப்பொழுது கையில், அரைக் காசில்லாமல் திண்டாடிக்கொண்டிருக்கமாட்டோமா? அவர் அக்கேஸை யனுப்பியிரா விட்டால்,—''

"நான் இன்னும் தைரியமாய் எதையாவது செய்து சம்பாதித்திருப்பேன்! அப்பொழுது இந்தத் தொல்லை யெல்லாமில்லை. கோகிலம், ஒருவருக்குக் கடமைப்பட்டிருப் பது எவ்வளவு கஷ்ட மென்பது உனக்குத் தெரியாது. நன்றியில்லாம லிருப்பதுதான் எவ்வளவோ சகஜமா யிருக்

கிறது! செய்த உபகாரத்தை மறக்க முயலுவதே மனித னியல்பு. அவனவன் விதி அவனவனைப் பொறுத்ததே யொழிய, ஒருவனுல் ஒருவன் உயருவதும் தாழ்வதும் ஒரு நாளுமில்லை. இம்மாயா வுலகில், வெளிப்பார்வைக்கு எல் லாம் அப்படித்தான் தோன்றும். அம்மாதிரியான வீண் பிரமைக்குள்ளானுல், நாம் பிழைப்பது துர்லபந்தான். ராமு இல்லா விட்டா லென்ன? வேறு யாராவது ராமுவுக் குப் பதிலாய் எனக்கு வந்து சேர்ந்திருப்பான்! மலேமே லிருந்து ஓடி வரும் ஜலமானது வழியில் எவ்வளவு கற் பாறைகள், விருட்சங்கள், புதர்கள் முதலியவை தடையாய் நின்றபோதிலும், எவ்விதமாகவாவது கீழ்நோக்கிச் செல் லுமே யொழிய, தனக்கு வழி விட்ட ஒவ்வொரு இடுக்கிற் கும், பொந்திற்கும் தன் நன்றியைச் செலுத்தும் பொருட் டுத் தங்கி நிற்ப தென்றுல், சாத்தியமா?''

"இதுவரையும் இவ்வளவு அநியாயமாய் நீங்கள் பேசி நான் கேட்டதில்லை. இவ்வண்ணம் நன்றியில்லாமலிருப் பது பழக்கத்தினு லென்று வைத்துக்கொண்டாலும், நீங் கள் இவ்வாறிருப்பது விசனிக்கத்தக்கது!''

"நன்றி விசுவாசத்தினுல் உறவு நிற்காது. அதனுல் ஒருவருக்கும் நன்மை யில்லை. பிரான்ஸ்தேசத்துச் சக்கிர வர்த்தி நெப்போலிய னென்பவர், இதை யொரு சித்தாந்த மாய் எவ்வளவோ தரம் கூறியிருக்கின்றுர்.''—கேதாரி கோகிலத்தி னெதிரில் நிமிர்ந்து நின்றுகொண்டு, "கோகிலம், இன்னும் அதிகமாய் இரைச்சலிட்டு என்னுடன் சண் டைக்கு நிற்கிரு யென்பதைத் தவிர, மற்றபடி, நீயும் ராமு வும் எல்லா விஷயத்திலும் ஒரே மாதிரியாகவே யிருக்கின் கின்றீர்கள். என் னினத்தைச் சேர்ந்தவள் மீனுக்ஷி. அவ ளைப்போல்தா னிருக்கவேண்டும். கலியாணமாவதற்கு முன்,

ராமுவுடன் சேர்ந்து வேண்டாத உயர்ந்த எண்ணங்களை யெல்லாம் மேற்கொண்டு அவதிப்பட்டேன். இப்பொழு தோ, நீ வந்து ஒன்றும் புரியாமல் உனக்குத் தோன்றி யதைச் சொல்லி என்னை வருத்திக்கொண்டிருக்கிறாய். உப நிஷத்துக்களில் சொல்லியிருப்பதுபோல், உயிர் வாழ்க் கை ஒரு யாகம் போன்றதே. ஒன்றைக் கொண்டு ஒன்று ஜீவிக்கின்றது. தவளையைக் கொன்று பாம்பு ஜீவிக்க, தவளை ஈயைக் கொன்று உயிர் வாழ்கின்றது. ஆயினும், ஒவ்வொன் றும் தன் தன் வழியில் நிரபராதியே! இதுதான் உலக வாழ்க்கையி னியல்பு,'' என்றான்.

"இதற் கெல்லாம் ஒரு நாள் நீங்கள் அனுபவிக்காமற் போகமாட்டீர்கள். நான் ஒரு ஸ்திரீதானே எனினும், எனக் கென்னவோ அவ்வாறு தோன்றுகிறது. வக்கீல்களின் ராஜ்யத்தில் மட்டும் மேலே ஈசுவர னொருவ ரில்லையா? ராமு உதவி செய்திராவிட்டால், நீங்கள் ஒரு நாளும் வக்கீலா யிருக்க முடியாது. அவர் சிபார்சு செய்திராவிட்டால், அவ்வளவு பெரிய கேஸ் உங்களுக்கு முதலில் எப்படிக் கிடைத்திருக்கும்? பெரியசாமி அய்யருடைய கேஸினால் தனக்கு நல்ல வரும்படி கிடைக்கவேதான், உங்கள் "ஸீனி யரும்'' ஏதோ உங்களை இப்பொழுது கொஞ்சம் சட்டை பண்ணுகின்றார். உங்கள் நண்பர் ராமுவினால்தான் இவ்வ ளவு அபிவிருத்தியும் உங்களுக்கு ஏற்பட்டது. அவ ரில்லா விட்டால், நீங்கள் திண்டாடிக்கொண்டுதான் கிடக்கவேண் டும்!''

"ஆம்; நானும் உன்னைக் கலியாணம்செய்து கொண் டிருக்கமாட்டேன்.''

"அவ ரில்லாவிடில், நீங்கள் வாரச் சாப்பாட்டிற்கும் அலைந்துகொண்டுதான் கிடந்திருப்பீர்கள்! இத்தோஷத்

திற்குத் தெய்வம் உங்களை க்ஷமிக்கட்டும்! இப்பொழுது தானென்ன? அவர் எங்கே யிருப்பா ரென்று போய்த் தேடிப்பார்க்கக்கூடாதா? அவராவது உங்களைப் பார்த் தாரோ, இல்லையோ?''

"ஒருக்ஷணம் நானும் அவனைப் பார்த்தேன்; அவனும் என்னைப் பார்த்துத் தெரிந்துகொண்டான். ஆனால் இரு வரும் தன்னறியாமலே மறுபக்கம் திரும்பிக் கொண்டோம். ஒருவர்மேலும் தப்பித மில்லை! என் சிறு கோகிலமே, உலகமே இவ்வா றிருக்கின்றது!''—கேதாரி கோகிலத்தின் கையை யிழுத்துப் பிடித்துக்கொண்டு, அவளைநோக்கி அன்பு டன் கூறத் தொடங்கினான். "உண்மையில், நான் கெட்ட வனா? என் ஹிருதயத்தினுள் நான் ராமுவை சில சமயம் கொண்டாடுவதுண்டு. அவன் ஓர் "காம்ப் கிளர்க்.'' நானோ நல்ல வரும்படி வரக்கூடிய ஒரு வக்கீல். இவ்வளவு ஏற்றத் தாழ்வுள்ள இருவரிடம், சம நிலையில் நிற்கக்கூடிய நட்பென் னுந் துலைக்கோல் எவ்வாறு நிலைத்து நிற்கக்கூடும்? இரு முனை களும் ஏற்றத்தாழ்வாயிருந்தால் கோலும் தலைகீழாய் விழுந்து விடும். விஷயத்தை யுள்ளபடி பார்க்கவேண்டாமா? தெய்வ சம்மதம் அவ்வண்ணமிருக்கும்பொழுது, நாமென்ன செய்யலாம்? உயர்ந்த எண்ணங்களை வைத்துக்கொண்டு யோக்கியதை யற்றிருப்பதும், முற்றிலும் காரியவாதியாயி ருப்பதைப்போல் பாபத்திற் கிடமே. கோகிலம், இன்றிரவு சமையலென்ன? வெண்காயம் வாசனை வீசுகின்றதே. விசேஷதினங்களில் அதைப்போல் ருசியான பதார்த்தம் வேறொன்று மில்லை. நல்ல சந்தோஷ சமயத்தை நன்றாய் அனுபவிப்போம், வா.——ஒவ்வொன்றையும் அதிகமாயுட் புகுந்து கவனித்து, அனாவசியமாய் பயந்துகொண்டு அச்சந் தோஷத்தைக் கெடுக்காதே!''——இவ்வாறு சொல்லி

கேதாரி, தன் அன்பை யுறுதியாக்கும் பொருட்டு அவளை யிழுத்துக்கன்னத்தில் முத்தமிட்டுக், கொஞ்சம் கொஞ்சமாய் ரோஜா மலர் போன்ற செவ்விதழை யணுகினன். எவ்வளவு மனோதைரியமுள்ளவர்களும் யௌவன மங்கையர் கோபங் கொள்ளுவதைக்காண அஞ்சுவார்கள். சொந்த மனைவிகளா யிருந்தால் கேட்கவேண்டுமா ?

---

## அத்தியாயம் 29.

## நூதன விளக்கம்.

ராமுவின் தோற்றம் மிகவும் மட்டமா யிருந்ததெனக் கேதாரி தன் மனைவியிடம் கூறியது முற்றிலும் சரியல்ல. தற்கால நாகரீகத்தை யொப்பிட்டுக் கவனிக்கும்பொழுது, ராமு மிகவும் தாழ்ந்த உடையணிந்திருந்தா னென்றே கூற வேண்டுமாயினும், அவன் இப்பொழுது ஓர் அற்ப "காம்ப் கிளார்க்" அல்ல. தூசி என்ற ஊரில் டிப்டி தாசில்தார் உத்தியோகம் வகிப்பவ னென்று முன்னமே கூறியிருக்கின்றோம். இதற்குள் ராமுவுக்கு உத்தியோகத்தில் நல்ல பெயரு முண்டாய் விட்டது. கடற்கரையில் கேதாரி அவனைக்கண்ட பொழுது, தலைமை ஸ்தானத்திலிருந்து, தன்னை மிகவும் ஆதரித்துக் கொண்டாடிவந்த காடெல் துரையை அவன் பார்க்கச் சென்றுகொண்டிருந்தான். மிஸ்டர். காடெல் அதிருஷ்ட வசத்தினால், "ரெவுனியூ போர்டி"ன் பிரதான அங்கத்தினராய் இப்பொழுது சென்னையில் வசித்து வந்தார். அவருக்கு அதிருஷ்டம்நாட் கழித்து வந்தபோதிலும், அரைகுறையாய் வரவில்லை.

"ரெவினியூ போர்டு" ஆபீஸானது, சென்னை ஸர்வ கலாசாலைக் கட்டடத்தின் பக்கத்தில், கவர்னர் பங்களாவுக்குச் சமீபமாய் கடற்கரை யோரத்தி லிருந்த "சிபாக் அரண்மனை" யென்ற விடத்தி லிருக்கிறது. முற்காலத்தில் கர்நாடகநவாப்புகள் அக்கட்டடத்தைத்தான் தங்கள் விஹாரப் பிரதேசமாய் உபயோகித்துக்கொண்டிருந்தனர். நானாவித இனிய வாத்தியங்களி னொலி நிரம்பியிருந்த விடத்தில், இப்பொழுது "டைப்" அடிக்கும் ஓசையும், வியர்த்துக்

களைத்துப்போன கிளார்க்குகளின், அடங்கிய பெருமூச்சின் சப்தமுமே ஓய் வொழி வில்லாமல் கேட்டுக்கொண்டிருந்தன. ஆயினும், நாம் மேற்கூறியது கீழே யிருப்பவர்களின் கதி. கண்ணுடிபோல் வழவழப்பாயும், விசாலமாயுமுள்ள படிக் கட்டுகளின் வழியா யேறி மேலே சென்றால், முன்பு விஹா ரப் பிரதேசமா யிருந்த அடையாளங்கள் காணப்படும். சல வைக் கல்லினலாகிய சுவர்கள், இன்றும், வழவழப்பாய் விளங்குகின்றன. வெகு நேர்த்தியாய் அலங்கரிக்கப்பட்டு, காற்று நன்றாய் அடிக்குமாறு கடற்கரையை நோக்கிய வண்ண மிருக்கும் விசாலமான முன்பக்கத்தறை யொன்றில் காடெல் துரை "ஹாவன்ன வஸிகார்" ஒன்றைப் பிடித் துக்கொண்டு ஒரு சோபாவி லுட்கார்ந்திருந்தார். வாயி லிருந்த சுருட்டினின்றும் அனுயாஸமாய் விடப்பட்ட புகை சுருள் சுருளாய் மேலெழும்புவதைக் களிப்புடன் அவர் பார்த்துக்கொண்டிருந்ததானது, சிறு கற்களை உயர விட டெறிந்து மகிழ் வெய்தும் ஒரு குழந்தைக்குச் சமான மாகவே யிருந்தது. யாரோ ஒரு நண்பர் வரவை யெதிர் பார்த்தவர்போல் காணப்பட்ட காடெல் துரை, காலதாமத மாவதைப் பொறுக்காதவராய் உட்கார்ந்திருந்தார். அச்சம யம் மாடிப்படியில் அடிச்சத்தங் கேட்க, வருவது ராமு வென்று, சங்கோசமும் அச்சமுங் குடிகொண்ட அவனது நடையினின்றுமே ஊகித் தறிந்தவராய், "வா, வா, ராமச்சந் திரன்!" என்று தன் சோபாவினின்றும் நகராமலே களிப் புடன் கூவி யழைக்கலானர்.

'விர்' ரென்று உள்ளே அடிக்கும் கடற்காற்றும் அக் குளிர்ந்த மாலே நேரமும் வெகு சுகமா யிருந்தது. "வா, இந் நாற்காலியி லுட்கார்ந்துகொள். இல்லே,—இச்சோபாவி லேயே உட்கார்! சுகமா யிருக்கும்! சங்கோசப்படாதே!

இப்பொழுது நீ ஒரு "காம்ப் கிளார்க்" அல்ல. டிப்டி தாசில் தா ரல்லவா? என்னுடன் சமமாய் உட்கார்ந்து கொள்ள லாம்! உன்னைக் காண எனக்கு மிகவும் ஆவலா யிருந்தது. தூசி-மாமந்தூர் ஏரியை ஏதோ பழுது பார்க்கவேண்டு மென்று கேட்டுக்கொள்ளும் வியாஜமாக, அரசியல் முறை யைப்பற்றி நீ எழுதிய சிறந்த வியாசத்தைப் படித்து, "ரெவினியூ போர்டு" ஆபீஸில் அனைவரும் வெகு ஆச் சரிய மடைந்தனர். அதன் தத்துவ விளக்கமும், எழுதி யிருந்த மாதிரியும் யாவரையுங் கவர்ந்து விட்டது," என,

"தங்களுக்கு என்னிடம் எப்பொழுதும் பக்ஷம் அதி கந்தான்," என்று ராமு சங்கோசத்தினால் தயங்கிய குர லில் உரைத்தான்.

"இப்பொழுது தான் ஒரு மணி நேரத்திற்கு முன்பு ஸர்வகலாசாலை "வைஸ்சான்ஸலர்" அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தேன். உனக்கு இரண்டு தடவையும் பீ. ஏ. பரீக்ஷை தவறியது எதனாலென்று எனக்கு விளங்கவே யில்லை. கவர்னர் அவர்களிடமும், ஸர்வகலாசாலை "வைஸ் சான்ஸலர்" அவர்களிடமும் உன்னுடைய "ரிபோர்டைக் காட்டினேன்; அவர்களும் மிகவும் மெச்சினார்கள்.—சரி, நமது ஆபீஸ் சம்பந்தமான விஷயங்களைப்பற்றி இனிப்பேசு வோம். தூசியில் நீ நன்றாய் வேலை பார்த்து வருவதைக் காண, உனக்கு அவ்வுத்தியோக மளித்ததைப்பற்றி மிகவும் சந்தோஷப்படுகின்றேன். இந்தியாவைப்போல் விவசாயத் தொழிலே பிரதானமாயிருக்கும் தேசத்தில், கிராமச் சீர் திருத்தம் தான் முதலில் கவனிக்கவேண்டிய விஷயமென்று நீ கொண்டிருக்கும் கொள்கையை நான் முற்றிலும் ஒப்புக் கொள்ளுகிறேன்."

"இவ்வளவு முக்கியமான விஷயத்தைத்தான் பிரிடிஷ் கவர்மெண்டார் சென்ற நூறு ஆண்டுகளாகச் சிறிதும் கவனிக்கவேயில்லை!"

"ஆம், உண்மையே! ஆயினும், உன்னுடைய உள்ளக் கிளர்ச்சியின் தூண்டுதலால் நான் அதைத் திருத்தமுயலு வேன்!" இதுவரையும் காடெல்துரை இவ்வாறு ஒருவரை யும் கொண்டாடியதேயில்லை. "எங்கே, அந்த ஏரியைப்பற்றி நன்றாய்ச் சொல், கேட்போம்!"

"தூசி என்பது ஓர் சிறு கிராமம். அங்கு, தூசி-மாமண் டூர் ஏரியினின்றும் வருஷமுழுவதும் வற்றாத ஓர் வாய்க் கால் ஓடிக்கொண்டிருக்கின்றது. எல்லா கிராமங்களையும் போல், ஊர்நடுவில் சிறு அழகிய விஷ்ணுவாலயமும், அதைச் சுற்றித் தெருக்களும் விளங்க, அவற்றின் வெளிப்புறத்தில் வேலைசெய்யும் எளிய ஜனங்கள் வசித்து வந்தனர். வலப்பக் கத்தில் ஓர் சிறு குளமிருப்பினும், ஊருக்குவேண்டிய ஜல மெல்லாம் நாம் மேற்கூறிய வாய்க்காலினின்றுமே உபயோ கப்படுத்தப்பட்டுவந்தது. தூசி-மாமண்டூர் ஏரி இயற்கையில் அமைந்ததென்றே சொல்லலாம். தெற்கு-வடக்கான இரு குன்றுத் தொடர்கள் நூறுகெஜதூரத்திற்குள்ளேயேஒன்று சேர, அங்கு பெரிய ஏரியொன்று இயற்கையிலேயே அமைந் திருந்தது. வெகு காலத்திற்குமுன் பல்லவ வம்சத்தைச் சார்ந்த அரசனொருவன் இதைப் பார்த்துச் சந்தோஷித்து, இவ்விரண்டு மலைத்தொடருக்கும் நடுவில் பலமான அணை யிட்டு, முப்பது சதுரமைலளவுள்ள ஏரியில் நீரைத்தேக்க ஐயாயிரம் ஏகர் நிலத்திற்கு ஜலம் பாயும்படியாகவும், முப் பது கிராமங்கள் சௌக்கியமடைவதாகவு மாயின. இவ் வேரிக்கு மூன்று மைலுக் கருகாமையிலேயே ஓடிக்கொண் டிருக்கும் பெரிய காட்டாறான பாலாற்றினின்றும் கால்வா

யொன்று மேற்கில் பிரிந்து, மழைக் காலத்தில் ஏரிக்கு நீர் நிரப்பும். ஏரி முற்றிலும் நிரம்பிவிட்டால், பிறகு மூன்று வருஷங்களுக்கு ஜலத்தைப் பற்றிக் கவலையில்லை. இதர கிராமங்களைவிட, தூசி என்ற கிராமம் இவ்வேரியின் முதன் மடையிலுள்ளது. நீர் வரண்ட காலத்திலும், அதன் விளைச்சலுக் கொன்றும் குறைவில்லை. சிறிது வரண்ட பூமியான வட ஆற்காடு ஜில்லா முழுவதிலும் இக்கிராமம் ஒன்றுதான் சமீபகாலம் வரையிலும், மிகவும் செழிப்பும், பணப் பெருக்கு முடையதாயிருந்தது. ஆயினும், இவ்விடைவிடாது பெருகிய செல்வத்திற்கு ஆதார மொன்றிருந்தது. என்னவெனில், ஏரிக்கு ஜலம்பாயும் கால்வா யொன்று உண்டென்று சொன்னேமல்லவா? அது பத்து மைலிலுக்குமேல் நீளமுள்ளது. பாலாற்றில் ஒரு வாரத்திற்கு மேல் வெள்ளம் நிற்பது அரிதாகையால், பிரதி வருஷமும் சேறு, மணல் தேங்காவண்ணம் கால்வாயை வெட்டி வைத்திருந்தாலல்லது, அதன் வழியாய் ஏரிக்கு நீர் நிரம்புவது சாத்திய மன்று.

ராமு தூசியில் டிப்டி தாசில்தாராகச் சென்ற பொழுது, அவ்வூரின் ஸ்திதி மிகவும் கேவலமாயிருந்தது. சற்றேறக்குறைய இருபது வருஷங்களுக்கு முன்பு, அதுவரையும் பெய்யாத பெரும் மழையின் காரணமாக, வெள்ளம் அதிகரித்துப் பாலாறு கரையுடைத்துக் கொண்டதில், கால்வாய் இருந்த விடம் தெரியாமற்போய், மணல் வந்து மூடிக் கொண்டது. அதை மறுபடியும் வெட்டுவதென்றால், தனியாய் ஒரு சிறு கிராமம் என்ன செய்யும்?

இவ்விஷயமெல்லாம் காடெல்துரையின் மனதில் நன்ருய்ப் படும்படி ராமு மிக்க ஆவலுடன் தெளிவா யெடுத்துரைத்தான்.—"இவ்வொரு கிராமம் மட்டுமெல்ல,—அந்த

முப்பது கிராமங்களும் சேர்ந்து முயன்றாலும், பத்துமைல் தூரம் வெட்டுவதனாலேற்படும் பொருட் செலவைத் தாங்க முடியாது. இருபது வருஷகாலமாய்க் குடிகொண்டிருக்கும் வறுமையானது ஜனங்களை, ஒத்துழைக்க வொட்டாமற் செய்திருப்பதுடன், அவர்களுக்கு வேறு கதியொன்று மில்லாமலு மடித்துவிட்டது. ஊரில் சண்டையும், பலவேற்றுமைகளும் ஏற்பட்டு, ஆலயமும் பாழடைந்த ஸ்திதியிலிருக்கின்றது. இப்பேருதவியைச் செய்து இச்சனங்களின் சிரமதசையை நிவர்த்திப்பது கவர்மெண்டாரின் கடமையன்றோ?'' என்று ராமு கேட்டுக்கொள்ள,

"ஆயினும், ராமச்சந்திரன், சில சிறு கிராமங்களுக்கு ஜலம் பாய்ச்சும் பொருட்டு, கவர்மெண்டார் ஒரு லக்ஷம் ரூபாய் எங்கிருந்து கொண்டுவருவார்கள்? அது சாத்தியமன்று,'' என்றார் மிஸ்டர் காடெல்.

"சாத்தியமல்ல வென்று சொன்னாலெப்படி! தாங்கள் செய்தே தீரவேண்டிய, பிரதானமான காரியமொன்றை கவர்மெண்டார் செய்யாமல் விட்டதாகத்தான் அப்பொழுது கூறவேண்டும். அதனால், அதிருப்தியும், கலகமும் இவ்விடங்களில் மேன்மேலும் அதிகமாகும். ஓர் ஹிந்து அரசன், எவனாயிருப்பினும், இவ்வுபகாரத்தை ஆதியிலேயே செய்திருப்பா னென்பதில் ஐயமில்லை. பிழைக்க வழியில்லாமையால், எவ்வளவோ சம்ஸ்கிருத வித்துவான்களும் வேதாந்த விசாரணை செய்பவர்களும் அக்கிராமத்தை விட்டு வேறிடம் சென்றுவிட்டார்கள். பயிர்வேலை செய்யும் எளிய ஜனங்களோ ஒருவரை யொருவர் அடித்துக் கொலைசெய்துகொண்டு, பெரும் கொள்ளைக்காரர்க ளாய்விடவே, ஊரில் கலகமும், கக்ஷியும் குடிகொண்டு விட்டன!—''

"இவைகளுக்கும் ஏரிக்கும் என்ன சம்பந்தம்? இவ் விஷயங்களைப் பற்றிச் சண்டையிடுவது எப்பொழுதும் உங் கள் வழக்கம் தானே!"

"ஆம், வயிறு நிரம்பியிருக்கும்பொழுது இதெல்லாம் வேடிக்கையே. வயிறு காய்ந்துகிடக்கும் பொழுதோ வேடிக்கை வினையாக மாறிவிடும்! பட்டினி கிடக்கும் பொழுது மனிதன் சண்டையிடாமலென்ன செய்வான்? தேசங்களுக்குள் யுத்தமும், ஜாதிக் கலகமும் பசிப்பிணி யினாலேயே பிறக்கின்றன. உண்பதற்கு ஒன்றுமேயில்லா விடில், கேவலம் காட்டுப் பிராணிகளென ஒருவரையொரு வர் கொன்று தின்ன முயலுகின்றார்கள்."—இவ்வாறு கூறி ராமு சிறிது நிறுத்த,

"ராமச்சந்திரன், நீ சொல்வது சரி. வெகு சாவதான மாய் நீ எனக்கு விஷயத்தை முற்றிலுமெடுத்துக் கூறிவிட் டாய்," என்று காடெல்துரை கூறினார்.

"இதோடுமட்டுமல்ல! இருபது வருஷங்களுக்கு முன்பு, போலீஸ் ஸ்டேஷன், சப்மாஜிஸ்டிரேட் கோர்டு இவையொன்றும் அங்கு தேவை யில்லாமலிருந்தது. இப் பொழுதோ, இரண்டிற்கும் ஓய்வு ஒழிவு இல்லாமல், வேலை இருக்கின்றது. சர்க்கார் செலவு விருத்தியாகிக் கொண்டே வர, ஜனங்களும் மேன்மேலும் செல்வப்பற் றுள்ளவர்களாய், பிறர் பாடுபட்டுழைப்பதைக் கொண்டு ஜீவிக்கின்றனர். தலைமையான பயிர்த்தொழிலை விட்டு, பேனாவைப் பிடித்தெழுதும் நிஷ்பலமான உத்தியோக முறையைக் கைக்கொள்ளுகின்றார்கள்!"

"நீ சொல்லுவதில் விஷயமுண்டு. ஆயினும், ராமச்சந்தி ரன், நாகரிகமென்பது இதுதான். அதை நாம் எவ்வாறு மாற்ற முடியும்?"

“ அப்படியே யிருக்கட்டும்! ஆயினும், அதனால் நூற்றில் தொண்ணூறு பெயர்கள் அடையும் கதி என்னவென்பதைக் கவனியுங்கள். பத்து பெயர்கள் பாடுபட்டுழைக்க, ஒருவன் மட்டும் சுகமடைகிறான். இக்காலத்து நாகரிகமாவதென்ன? சட்டைத்துணிகள்தானே! உடல், ஆவி இரண்டும் உணவற்றிருப்பதனால், நாடி தளர்ந்து, ஹிருதயம் நொந்து, சுவாசம் திணறிக்கொண்டிருப்பினும், வேஷத்திற்காக உடையணிந்து வெளியிற் செல்லுவது அவசியமாயிருக்கின்றது! ஆடம்பரமற்ற வாழ்க்கையும், உயர்ந்த மனோநிலையும் இப்பொழுது மிக்க அபூர்வமாய்விட்டன. சொந்தத்தில் பசுவொன்றிருந்தால், அதன் பாலைக்குழந்தைகளின் தேக சௌக்கியத்தின் பொருட்டு உபயோகிப்பதில்லை. அதை விற்றுச் சட்டைத்துணிகள் வாங்கி, இவ்வுஷ்ணப் பிரதேசத்தில், உடம்பிற்குப் பாரமாக அணியத் தொடங்குகின்றார்கள். இன்னும், மண்ணெண்ணெய், நெருப்புப்பெட்டிகள், காப்பிக்கொட்டை, சர்க்கரை முதலிய டாம்பீகப் பொருட்களை வாங்குவதற்குமே பயன்படுகின்றது.”

“ ஆயினும், ராமச்சந்திரன், இச்சில்லறைப் பிழைகளினால் உங்கள் கிராமங்கள் நாசமடைய வேண்டுவதில்லை. தப்பிதம் உங்கள்பேரில்தா னிருக்கின்றது. நீங்கள் பாடுபட்டு உழைப்பதில்லை. உங்கள் நிலங்களைச் சீர்திருத்தி, எரு விடுவதற்குப் பதிலாக வெட்டி வம்பளந்து, காலத்தைக் கழித்துவிட்டு, பொறுமைக் கடலாகிய ஈசுவரன் மீதும், ஓர் அன்னிய கவர்மெண்டின் மீதும், பழியைச் சுமத்துகின்றீர்கள்!”

“ எங்கள் நிலவிஷயத்தில் எங்களுக் கென்ன அதிகாரமிருக்கின்றது? கிராமங்களின் கதி என்னவென்பதைக்

கூறுகிறேன், கேளுங்கள்! விளைவில் மூன்றி லொரு பாகத்தைச் சர்க்கார் தங்களுக்குச் செலுத்த வேண்டிய தீர்வையென எடுத்துச் செல்லுகின்றனர். மற்றோர் பகுதி நாகரிக வாழ்க்கைக்கு இன்றியமையாததான சட்டைத் துணிகள், காப்பிக்கொட்டை, சர்க்கரை, மண்ணெண்ணெய் முதலிய சாமான்கள் வாங்குவதில் செலவழிகின்றது. மிஞ்சிய பாகந்தான் கிராமத்தில் தங்கி நிற்கின்றது. அதையும் வெளியூர்களுக்கு அனுப்பிவிடுகின்றோம். யாவற்றையும் கொள்ளை கொள்ளும் நாகரிகமாகிய பெரும் காற்றினின்றும், கவர்மெண்டு கிஸ்தியினின்றும், நாங்கள் தப்பிப்பிழைக்கவேண்டியிருக்கும்பொழுது, கஷ்ட ஜீவனமாகத்தான் முடிகின்றதென்பதைக் கூறவேண்டுமோ? நிலங்களிலும் சரியான விளைச்சலில்லை. வயிறுகாய்ந்து கிடக்கும்பொழுது யோசனையோடுமா? எவ்வாறு விஷயங்களை யாராய்ந்து, பிற்காலத்தைப் பற்றி எண்ணமிடக்கூடும்?''

"விவசாயமே ஜீவாதாரமான தேசத்தில், கவர்மெண்டார் நீர்ப்பாய்ச்சலைப்பற்றி அதிகம் கவனம் செலுத்த வேண்டுமென்பது உண்மையே. ஆயினும், நெடுநாளாய் வந்த வழக்கம் வேறு விதமாயிருக்கின்றது. காலத்திற்கேற்றபடி பரிபாலன முறைகள் விதிப்பதைக்காட்டிலும், துரைத்தனத்தின் அதிகாரம் கெடாமல் பார்த்துக்கொள்ளும் வேலைதான் எங்களுக்கு முக்கியமாக விருக்கின்றது! இதை மாற்றும் முயற்சி உங்களிடத்திலிருந்தாவது மேலதிகாரிகளிடத்திலிருந்தாவதுதான் வரவேண்டும். அபிப்பிராயங்களே அடியோடு மாறவேண்டிய நிலைமையிலிருக்கையில், "ரெவினியூ போர்டி"ன் பிரதான அங்கத்தினனாக விருப்பினும், ஒருவனாய நான் என்ன செய்யமுடியும்? என்னாற் செய்யக்கூடியதை நான் செய்தாயிற்று. இனிவரும் வாலி

பர்கள்தான் ஒருகை பார்க்கட்டுமே!" என்று கூறி காடெல் துரை கம்பீரமாய் நகைத்தார்.

"அப்படியல்ல! ஒருவரே யனேக காரியங்கள் செய்ய முடியும். மேலும், வயதிலும் அறிவிலும் முதிர்ந்தவர்களே செய்வதற்கு உரிமையும் அதிகாரமு முடையவர்கள். காரியத்தை ஆரம்பித்து நடத்துவது ஒருவரால்தான் கூடும். பிறகு மற்றவர்களும் அவர் வழியைப் பின்பற்றுவார்கள். உதாரணமாக, தூசியில் ஒருநாள் ஏழை ஜனங்களுக்கு அன்னமிட்டு, அதற்குப் பதில் கோவிலைச் சிறிது பழுது பார்க்கவேண்டு மென்று கிராமத்தார் யாவரையும் ஒன்று கூட்டி வேலைசெய்ய நான் ஏற்பாடு செய்ததில், ஊரிலுள்ள கக்ஷிச்சண்டைகள் கொஞ்சம் அடங்கின. அவ்வாறு அன்ன மிட்டதற்கு எங்களுக்கு நூறு ரூபாய்தான் செலவாயிற்று. ஆனால் "பப்ளிக் ஒர்க்ஸ் டிபார்ட்மெண்டார்" (Pubilc Works Department) இதற்கு ஆயிரம் ரூபாய் செலவாகு மென்று திட்டம் போடுவதுடன், மூன்று மாதகாலமும் கழிப்பார்கள். மிராசுதாரர்களுக்கும் குடியானவர்களுக்கும் பெரும் மனஸ்தாப மொன்றிருந்தது. ஏரி வறண்டுகிடந்த தனால் நிலத்தில் ஒருவருக்கும் வரும்படியில்லை. ஆயினும், சர்க்காருக்குக் கட்டவேண்டிய கிஸ்திமட்டும் நிற்காதல்லவா? ஏரிப்படுகையில் நல்ல ஊற்று ஒன்றைக் கண்டுபிடித்தேன். அதைச்சொற்பச் செலவில் வெட்டி, அதனின்றும் காய்ந்து கிடந்த பயிர்களுக்கு ஜலம் பாய்ச்சினேம். ஜலத்திற்கு ஓர் வழி ஏற்படவே, இப்பொழுது அவர்கள் தாமாகவே, பெரிய வாய்க்காலொன்று வெட்டிக்கொண்டிருக்கிறார்கள். இதனால் சில ஏகர் நிலங்களுக்கு மட்டும் ஜலகஷ்டம் நீங்கிற்று. மற்ற கிராமங்களுக்கும் இவ்வண்ணம் ஜலம் வேண்டுமென்றால், கலகமும் அடிதடியும் ஏற்பட்டுவிடுமென்பதில் ஐய

மில்லை. எவ்வித குற்றங்களையும் உற்பத்தி செய்யும் மூலகாரணம் வறுமையே. சென்ற தலைமுறையிற் குடியானவர்களாயிருந்தவர்கள் இந்தத்தலைமுறையில் கொள்ளைக்காரர்களாய் விட்டனர். சர்க்காரிலிருந்து ஒருலக்ஷரூபாய் உத்திரவானால், இவ்வருஷத்திய கோடை காலத்தில் வேலைசெய்து, மழைக் காலம் வரும்பொழுது, ஏரியில் ஜலம் வரும்படி செய்து விடுவேன். லக்ஷரூபாய் செலவழித்தால், முப்பது லக்ஷ ரூபாய்க்கு அக்கிராமங்களில் தானியம் விளையும். ஒரு வருஷகாலத்தில், ஏறக்குறைய இருபத்தைந்து கிராமங் களுக்கு, அதாவது, இரண்டரை லக்ஷம் ஜனங்களுக்கு மீண்டும் சந்தோஷமும் சௌக்கியமும் ஏற்படும்.''

"ராமச்சந்திரன், நீ சொல்வது ஒரு பேருபகாரமான காரியமென்பதை நானும் ஒருவாறு ஒத்துக்கொள்ளு கிறேன். எங்களிற் பலர் தங்க ளின்பத்தை நாடியே பாடுபடு கின்றனர். ஜனங்களுக்கு இன்றியமையாத உணவுப் பொருட்களை யாராவது பயிரிடத்தானே வேண்டும்?—ராமச்சந் திரன், நீ இவ்விஷயங்களை நூதனமாய் விளக்கிக் காட்டினாய்! கவர்னர் துரையவர்கள் இப்பொழுது இங்கில்லையே என்று வருந்துகிறேன். இருந்தால் போலீஸ் விஷயமாய் இன்னும் மூன்று லக்ஷரூபாய் வேண்டுமென்று கேட்பதை விட்டு, இதற்கு ஒருலக்ஷரூபாய் அளிக்கச் சம்மதித்திருப்பார்! இவ்விஷயத்தில் என்னாற் கூடியமட்டும் சிரமமெடுத்துக் கொள்ளுவதற்குத் தடையில்லை.''

---

## அத்தியாயம் 30.

### மோட்டாரைப்பற்றிய விவாதம்.

இது இவ்வாறாக, தன் வேலையில் கேதாரியும் சும்மா விருக்கவில்லை. அவன் முன்னுக்கு வந்தே தீருவானென் பதை "வீனியர்" வக்கீல்களும் ஒத்துக்கொண்டு வாய் திறவாம லிருக்கும்படியாயிற்று. பிறரை எதிர்ப்பதிலும், தம்மைக் காத்துக்கொள்வதிலும் தாங்களிருவரும் சேர்ந்தி ருப்பது இருவருக்கும் நன்மையளிப்பதாகவே யிருப்பதைக் கேதாரியும் மார்க்கண்டம் அய்யரும் கண்டுகொண்டனர். இதைக் காண அநேகம் பெயர்களுக்குப் பொறாமை மண்டிற் றென்றாலும், முன்னுக்கு வருபவ னொருவனை அவர்கள் பொறாமை என்னசெய்யும்? நடு ஆற்றில் தப்பித்தவறி வந்து தங்கிய கற்பாறைகளினால் ஆற்றுவெள்ளத்திற்குத் தடை யேதேனுமுண்டோ? அவை நதியின் வேகத்தை யெடுத்துக் காட்ட உபயோகப்படுமேயன்றி வேறென்ன?

ஆற்றில் வெள்ளம் அதிகரித்தால், கரையுடைந்து போவதுடன், அஃது ஓரே வழியிற் செல்லுவதும் அரிது. பேராசை கொண்டவர்கள் காட்டாறுகளைக் காட்டிலும் அதிக நிலையற்றவர்களே.

மார்க்கண்டம் அய்யர் பேராசை பிடித்தவர்தா னெனி னும், தந்திரமாயும், ரகசியமாயும் சூழ்ச்சி செய்யக்கூடிய பேராசை அவருடையது. ஆனால் கேதாரியோ, நாமம், விபூதி யணிவதுபோல், பிறர் பார்த்தவுடன் அறிந்துகொள் ளும் வண்ணம் நெற்றியிலேயே அப்பேராசை துலங்க வேண்டுமென்று கருதுபவன். சிறு வயதி லேற்பட்ட பழக் கத்தால் அவன் முன்யோசனையின்றி, செலவைக் கவனி

யாமல், மனதில் தோன்றியவாறு செய்வான். அவ்வாறு நடப்பதனால் விளையும் லாபநஷ்டங்களோ, உலகத்தாரையே சார்ந்தவையாயின. அவர்கள் தம் நலத்தைக் கருதியே, தன்னைப்போன்ற புத்திமானை ஆதரித்து வந்ததை யெண்ணி கேதாரி சிலவேளைகளில் நன்றி பாராட்டுவதுண்டு. அவன் வக்கீலாகி ஐந்து வருஷத்திற்கு மேலாயிற்று; நடுத் தெருவைப்போன்ற வோர் சிறிய தெருவிலிருப்பது இனித் தன் அந்தஸ்திற்கு மிகவும் குறைவு என்று நினைக்கத் தொடங்கினான். ஆயினும், அவனது பேராசைபிடித்த யோசனைகளுக் கேற்ற மனைவியாய் கோகிலம் அமையவில்லை. கணவன் செயல்களுக்கு மனைவி வாய்திறவாம லிருக்கவேண்டுமல்லவா? அவள் அப்படியுமிராமல், ஒவ்வொன்றுக்கும் அவனுடன் தைரியமாய்ச் சண்டைக்கு நின்றாள். மனோதிடமற்ற, ஓர் எளிய வைதிகனுடைய பேதமைப் பெண், அதிருஷ்ட வசத்தினால் தன்னைக் கணவனாக அடைந்துவிட்டதாய்க் கேதாரி நினைக்கலானான்.

"வரும்படியை யெல்லாம் செலவழிக்கின்றீர்களே! இந்த வயதிலேயே ஒரு பிள்ளையும், இரண்டு பெண்களும் நமக்குப் பிறந்திருப்பது நமக்கு ஒரு எச்சரிக்கையா யிருக்க வேண்டாமா?" என்று கோகிலம் ஆக்ஷேபிக்க,

"உனது நியாயோபதேசமெல்லாம் எனக்குத் தெரியும், கோகிலம்! ஈசுவரனே வக்கீல் தொழிலில், போதாக் குறைக்கு ஒரு "ஜூனிய" ராகவு மிருந்தால்,அவருக்கு எங்கள் கஷ்டங்க ளெல்லாம் நன்றாய் விளங்கும். அவரும் என்னைப்போல் நடப்பதுடன், அதுவே சரி யென்றும் கூறுவார்! பிறருக்கு நியாயமெடுத் துரைப்பது மிகவும் எளிதே! வக்கீல் தொழிலோ மிகக் கடினமானது. எவ்வளவோ சாமர்த்தியமாயும், தந்திரமாயும் நடக்கவேண்டும். அதில்

அதிருஷ்ட முள்ளவர்களுக்கே மேன்மேலும் ஜெயிக்கும். போலி ஜம்பம் இல்லாவிட்டால் முடியாது. ஐந்நூறு ரூபாய் வருவதற்கு, ஆயிரம் ரூபாய் வருவதுபோல் காட்ட வேண்டும். அப்படிக் காட்டுவதற்குக் குறைந்தது மாதம் அறுநூறு ரூபாயாவது செலவழிக்க வேண்டாமா? நீ கணக்கில் கெட்டிக்காரி யாயிற்றே! நமக்கு அதனால் நஷ்டம் எவ்வளவென்று சொல். நூறுரூபாய் தானே! எங்கள் "ஸீனியரை"ப் போல் மாதம் மூவாயிரம் வரத்தொடங்கிவிட்டால், அப்பொழுதுஎல்லாம் சரியாய் விடுகின்றது.——அவ்வளவு தானே!"

"மூவாயிரந்தானு? அவருக்கு முப்பதினுயிர மல்லவோ வருவதாய் ஊரில் சொல்லிக்கொள்ளுகிறுர்கள்!"

"அதெல்லாம் முழுப்பொய்! ஒரு வக்கீலினுடைய வரும்படி எவ்வளவென்பது அவனிறந்த பிறகுதான் வெளியாகும். மங்கையர் மனத்திலுள்ள காதல்போல், இதொன்றுதான் புருஷனுடைய ரகசியமாயுள்ளது;—இதை அவன் மனைவியும் அறிந்துகொள்ள முடியாது! இவ்வுலக முழுவதும் ஓர் நாடகமேடை போன்றதென, பெரும் நாடகாசிரியரான ஷேக்ஸ்பியர் கூறியிருப்பது எவ்வளவு உண்மையா யிருக்கிறது! முகத்தில் வர்ணம் பூசி, வாசனைப் பொடியையும் ஒத்திக்கொண்டு, மாலை வெயிலில் பறக்கும் பட்டுப் பூச்சியைப்போல், சிறிது நேரம் ஆடிப்பாடுகின்றோம். ஆட்டம் முடிவதற்குள் நமது இறக்கைகள் களைத்து ஓய்ந்துவிட அவ்விளையாட்டை நன்கு கற்றுக்கொள்ளுவதற்கு முன்பு நமது ஆயுட்காலமும் முடிவடைந்து விடுகின்றது!"

"என்ன, நீங்கள் கூட வேதாந்தம் பேச ஆரம்பித்து விட்டீர்கள்!"

"ஆம், என்னை யறியாமலே வந்துவிட்டது, கோகிலம்! நான் அதற்கு வசியமாகாமல் உதறியெறிந்துகொண்டு கிளம்பவேண்டும். இல்லாவிடில், எனது உற்சாகத்தை முற்றிலும் குலைத்துவிடும். புஸ்தகங்கள் படிப்பதனால் சிந்தனை யுண்டாகின்றது. சிந்தனையி லாழ்ந்து செயலற்றுவிட்டால், அப்புறம் குடித்தனம் எவ்வாறு நடக்கும்? கோகிலம், நீயும் என்மேல் அதிக கோபங்கொள்வாய்! முன்பெல்லாம் நான் இவ்வா றிருக்கமாட்டேன். பரமசாந்தனான ராமு எனக்கு நற்புத்தி புகட்டும் நண்பனாயிருந்த பொழுது, கள்ளம் கபடற்றவர்களையும் எளியவர்களையும் கண்டவுடன் என் மனம் இளகிவிடும். ஆனால், இவ்வைந்து வருஷகாலமாக வக்கீலா யிருந்ததில் எனக்கு அத்தகைய உணர்ச்சிகள் அற்றுப் போய்விட்டன. சம்சாரத்திலோ துன்பமே பிரதானமா யிருக்கின்றது. அதை யறியாதவர் கஷ்டப்படவேண்டியது தான்! சிறந்த எண்ணங்களை மேற்கொண்டு வருந்துவதெல்லாம்,—"

"நாம் ஜாக்கிரதையாய்ச் செலவழித்துச் சேர்க்க முயலுவது இன்னும் அவசியமேயென்று இதனால் ஏற்படுகின்றது. என்னையும் குழந்தைகளையும் பார்த்தால் எவ்வளவு மட்டமாய்த் தோன்றுகிறது! நீங்கள் மட்டும் அழகிய உடை யணிந்துகொள்ளுகின்றீர்கள்!"

"வேறு வழியில்லை! என்னசெய்வது! கோகிலம், நாடக வரங்கில் நடிக்கச் செல்லுபவன், ஆடையாபரணங்களில்லாமல் செல்லமுடியுமா? விதூஷகனாக விருக்க விரும்பினாலும், அதற்கேற்ற அலங்காரங்க ளுண்டு. இழுக்க இழுக்க, நீண்டு வந்த திரௌபதியின் வஸ்திரத்திற்குமேல், வக்கீலினுடைய ஆடைகளும் விதம் விதமாய் வளர்ந்து முடிவற்றதா யிருக்கவேண்டும். நல்லாடை யணிந்து நடிப்

பதே நாகரீகமென்று கொண்டாடப்படுகின்றது! ஒரு படியிலிருந்து மற்ருெருபடி யேறவேண்டியிருக்கிறது. உயர்ந்த உடைகளை யணிந்து, ஒருவன் புழுதிபடிந்த ரோட்டில் நடந்து சென்ருல், பிறர் வெறித்து நோக்காமல் என்ன செய்வார்கள்? ஆகவே,மோட்டார் அவசியமாகின்றது. கோகிலம், மோட்டார் வாங்கலாமா வென்று யோசிக்கிறேன். ஊராருடைய மதிப்பைக் கவனிக்காம லிருக்கமுடியாது. என் நண்பர்களும் வெகுவாய்ச் சொல்லுகின்ருர்கள். ஒன்று தைரியமாய்த் துணிந்து வாங்கவேண்டும்; அல்லது கீழ் ஸ்திதியில் கிடந்து கஷ்டப்படவேண்டும். காலமோ அதி விரைவாய்ச் செல்லுகின்றது. வக்கீல் தொழிலும் குதிரைப் பந்தயத்திற்குச் சமானமே! அதில் பந்தயக் குதிரையைச் செலுத்துபவன், தனது முழங்காலையும் தோள் எலும்பையும் பற்றிக் கவலைப்பட்டுச் சாத்தியமா? மோட்டார் ஏஜெண்டுகள் வாரம் தப்பாமல் என்னை வற்புறுத்துகின்ருர்கள். அவர்கள் முகஸ்துதி செய்து குறிசொல்வதும் கொஞ்சமல்ல. எவ்வளவு தடவைதான் வேண்டாமென்று நான் அவர்களைப் போகச் சொல்லுவேன்! பாவம்! அவர்களும் பிழைக்கவேண்டுமே! எல்லாரும் அடித்துக் கொள்ளையிடுவதில், அவர்களுக்கு மட்டும் பங்கில்லாம லிருப்பானேன்? என் மனது கேட்கவில்லை. ஒரு "போர்டு" மோட்டாராவது நான் வாங்கித்தா ருகவேண்டும்! நன்ருய் ஓடும்; விலையும் அதிகமில்லை.—"

"மோட்டாரா? அதெப்படி வாங்கமுடியும்?" என்ருள் கோகிலம் படபடப்பாய். "குழந்தைகளுக்கு அவசியமானவற்றை வாங்குவதற்குக்கூட நீங்கள் கஷ்டப்படுகின்றீர்கள்! நான் பதினைந்து ரூபாயில் புடவை கட்டிக்கொள்ளுகிறேன்; இன்னும் வைரத்தோடு போட்டுக்கொள்ளவில்லை!

இதற்கெல்லாம் நல்லகாலம் இனி வரப்போகிறதென்று நம்பி, நான் பொறுமையாய்க் காத்திருக்கும்பொழுது, நீங்கள் மோட்டாரைப்பற்றி எப்படிப் பேசுகின்றீர்கள் ?"

"உன் திருப்திக்காக, முதலில் வைரத்தோடு வாங்குவதாகவே வைத்துக்கொள்ளுவோம். அதற்கு மட்டும் மோட்டாரில் பாதிவிலை யாகாதா ? மேலும்—"

"ஆனல், அதற்கு எண்ண தேவையில்லையே ! பளபளப்பாய் வைத்துக்கொள்வதற்கும் சிரமப்படவேண்டாம். உங்கள் மனைவி ஓர் வேலைக்காரியைப்போல் நிற்கும்பொழுது நீங்கள் மோட்டார் வாங்கினல் ஊரில் என்ன நினைப்பார்கள்? புருஷர்களுக்கு யாவும் தலைகீழ்ப்பாடந்தான் ! மோட்டார் வாங்குவது பெரும் நஷ்டமேயொழிய வேறல்ல."

"கோகிலம், உனக்குத் தெரியாது. மோட்டாரினல் ஒரு நஷ்டமுமில்லை. அதனல் எனக்குவரும்படி அதிகமேயாகும். நீ வைரத்தோடு போட்டுக்கொண்டால் அப்படியல்ல! கக்ஷிக்காரர்கள் சாதாரண மனிதர்கள்தானே ! மோட்டாரில் வேடிக்கையாக ஏறிச் செல்லலாமென்று நிறைய பணம் கொடுப்பார்கள். லௌகிக சித்தாந்தப்படி, நான் முன்னுக்கு வருகிறே னென்பதற்கு மோட்டார்தான் அடையாளம். நாமிருவரும் சேர்ந்து கடற்கரைக்குச் செல்லலாம். ஜட்ஜகளும், வேலையின்றி உல்லாசமாய் உட்கார்ந்திருப்பவர்களுங் கூட நம்மை இன்னரென்று அறிந்து கொள்ளுவார்கள்."

"மோட்டார் வாங்கிய பின்பு, சில மாதங்கள் வரும்படியே வரவில்லை யென்று வைத்துக்கொண்டால்,——?" என்று கோகிலம் கேட்க,

"பாவம் ! உலகம் இப்படி யென்பது உனக்குத் தெரியாது," என்முன் கேதாரி. "உழுது பயிரிடுபவன் நிலத்தை யுழுது, தெளிப்பதற்கு விதைகளைத் தயாராய் வைத்திருப்

பான். ஸர்வஞ்ஞரான ஈசுவரன் காலத்தில் மழை பெய்யச் செய்தவுடன், செய்யவேண்டிய வேலையைச் செய்தால், கடைசியில் லாபம் அவனுக்கே யன்றோ! மோட்டார்கள் ஓடு வதற்கு ஏற்பட்டதே யொழிய வேறெதற்கு? மோட்டாரை வாங்கிவிட்டு மறுநாளைப்பற்றிச் சிந்தனையில்லாம லிருந்தால், ஈசுவரனிருக்கிறார்,——பார்த்துக்கொள்ளுவா ரென்பதில் ஐயமில்லை.''

"இந்த வேதாந்தத்தை நான் ஒத்துக்கொள்ளமுடி யாது! நீங்கள் நிமிஷத்திற்கு நிமிஷம் மாறிக்கொண்டிருக் கிறீர்கள். இம்மாதிரி யிருப்பது சரியென்று எனக்குக்கொஞ் சமும் தோன்றவில்லை. இவ்வெளிவேஷம் என்றும் நிலைத் திருக்குமா? இதைக் காட்டிலும், மாதந்தோறும் கணக் காய்ச் சம்பளம்பெற்றுவரும் ஒரு "காம்ப் கிளர்க்'' கின் மனைவியா யிருப்பது மேலென்று தோன்றுகிறது.''

"உன்னைப்பற்றி என்னிடம் சிபார்சு செய்ததற்குப் பதிலாய், ராமுவே உன்னை விவாஹம் செய்து கொண்டிருக்க லாம்! ஓர் எளிய வைதிகனுடைய பெண்ணாய்ப் பிறந்த உனக்கு எவ்வாறு இத்தகைய விஷயங்கள் விளங்கும்? அவைகள் உனக்கு உடன் பிறந்தவையல்ல. நடந்து காட்டிய பிறகுதான் நான் செய்வது சரியென்று தோன்றும்.''—— இவ்வாறு கேதாரி சிறிது கோபத்துடன் கூற, அம்மொழி கள் கோகிலத்தின் மனதில் தைத்ததும், அவள் அதற்கு மேலொன்றும் பேசாமல் தன் காரியத்தைக் கவனிக்கச் சென்றாள்.

---

## அத்தியாயம் 31.

### சகடக்கால்போல் செல்வம்.

சென்னை ஹைகோர்டு,

"முருகனும் தொப்பையும் ஜாமீனில் விடப்பட்டிருக்கிறார்கள்."

கேதாரி.

என்று திருச்சினாப்பள்ளியி லிருக்கும் வக்கீலொருவருக்குக் கேதாரியினிடமிருந்து தந்தி கிடைத்தது. ஜெயிலில் முருகனுக்கு இச்செய்தி எட்டியதும், ஆநந்தத்தால் அவனது உடம்பு முழுவதும் நடுங்கிற்று. தொப்பை அதிகச் சந்தோஷப்படாமல் சிறிது வருத்தத்துடன், "முருகா, வா! நம்ம வக்கீலிடம் போயி, நடந்தது முழுவதும் சொல்லுவோம். ஒரு தப்பும் செய்யாமே, நிசமா நடந்தாலும், இவ்வுலகத்திலே ஒரு லாபமு மில்லேண்ணு, பிரிடிஷ் ராஜாங்கம் ஏனிருக்கு? வக்கீலுங்களும் ஏதுக்காக இருக்காங்க? நானும் இப்படி யோக்கியனா யிருந்திருக்கமாட்டேன்!" என்றான்.

செயலற்றவனாய் முருகன் பதிற் பேசாம லிருப்பதைக் கண்டு, அவன் மறுபடியும், "முருகா, தைரியமாயிரு! இப்போ நமக்கு ஏதோ கொஞ்சம் கஷ்டகாலம். ஜாமீனிலே விடுதலை யடைஞ்சதுபோலே, சீக்கிரத்திலே நம்மையே விட்டு விடுவாங்க! நம்ம துரதிருஷ்டமெல்லாம் போயிட்டுது! இனி நமக்கு நல்லகாலந்தான். ஊரிலே நமக்கு ஆகாதவங்க செய்த வேலை இது. பெரியசாமி அய்யர் திருப்திக்காக போலீஸாரே நம்மமேலே கதை கட்டிவிட்டாங்க," என,

முருகன் அதற்கொன்றும் பதிற்கூறாமல், வக்கீல் வீட்டிற்குப் போவதற்குமட்டும் ஒத்துக்கொண்டான். சிகப்பு

மண்ணைக் கரைத்துவரும் புதுவெள்ளத்துடன் பூர்ணமாய் ஓடும் காவிரியாற்றின் கரையில், பதஞ்சலி சாஸ்திரியென்று பெயர்கொண்ட அவ்வக்கீலின் வீடு காணப்பட்டது. அது அவர் முன்னோர்கள் கட்டிவைத்த வீடு. தாங்கள் நற்கதி சேருவதற்கும், பிராம்மணர்களுடைய பொது க்ஷேமத்தைக் கருதியும் அவர்களியற்றிய பல சத்கருமங்கள் அவ்விடந் தான் நடைபெற்றிருந்தன. மீமாம்சை, வேதாந்தம் இவ்விரு சாஸ்திரங்களிலும் மிக்க தேர்ச்சிபெற்ற வம்சத்தில், முதன் முதல் பதஞ்சலி சாஸ்திரிதான் குலதனமான வித்தையை விட்டுப், பணம் சாம்பாதிக்கும் தொழிலை மேற்கொண்டவர். இயற்கையாகவே "ஹிந்துலா"வில் நன்கு தேர்ந்தவராயிருந்ததுடன், நல்ல கல்விப்பயிற்சியும், நற்குணமும், பெருந்தன்மை பொருந்திய தோற்றமும் வாய்ந்தவராயிருந்தார். ஆயினும், தற்காலவாழ்வாகிய, சுழன்றோடும் வெள்ளத்தில் நீந்திச்செல்லும் சக்தியற்றவர். "ஸிவில்" கேசுகளை நடத்துவதற்குத்தான் அவருக்கு இஷ்டமெனினும், எப்படியோ, அக்கேசுகள் ஒன்றுகூட அவருக்குக் கிட்டாமற்போயின. இதை யெண்ணி அவர் தன் மனதிற்குள் சற்று வருத்தப்பட்டுக்கொண்டிருக்க, அவர் மனைவியின் அதிருப்தியோ இவ்வளவு அவ்வளவென்றில்லை! வீட்டைத் தவிர வேறு பிதிரார்ஜித சொத்து ஒன்றுமில்லாமலிருக்கும்பொழுது, குடித்தனம் எவ்வாறு செய்யமுடியும்? ஆகவே, ஜலத்தில் மிதந்து செல்லும் குச்சி, நாணற் செடிகளிலகப்பட்டுச் சிக்கிக்கொள்ளுவதுபோல், வேறு வழியில்லாமல், "கிரிமினல்" கேசுகளை ஒத்துக்கொள்ளுவாராயினர்.

பதஞ்சலி சாஸ்திரிக்கு இன்னும் இளமைப்பருவம் மாறவில்லை. அவர் முகத்தில் விளங்கிய பிராம்மணக் களை நெற்றியிலணிந்திருந்த விபூதியினால் இன்னும் அதிகமாகவே

பிரகாசித்தது. அவர் உட்கார்ந்திருந்த அறை மிகச் சிறிய தாயிருந்ததுடன், நான்கு பக்கமும் காகிதங்களும் புஸ்தகங் களும் நிறைந்திருக்க, அங்குபோடப்பட்டிருந்த "பெஞ்சு", நாற்காலிகளினால் கால் வைப்பதற்கு இடமில்லாமலு மிருந் தது. ஆபீஸ் பண்ணும் அறையாக அது விரும்பத்தக்கதா யில்லை. முருகன் அவரைத் திருப்தியோடு நோக்கினானாயி னும், அங்கு நிரம்பியிருந்த சாமான்களையும், அவரையும் காணத் தொப்பைக்கு மிகவும் வியப்பாய்த்தா னிருந்தது. அவன் சிறுவனாயிருக்கும்பொழுது, சில வக்கீல்கள் ஆபீஸ் பண்ணும் அறைகளைப் பார்த்திருந்ததல்லாமல், கும்பகோ ணத்தில் ஒரு பெரிய வக்கீலிடம் மூன்று மாதகாலம் "அட்டெண்டர்" வேலையிலு மிருந்ததனால், அவர்கள் விமரி சையும், வைபவமும் அவனுக்கு நன்றாய்த் தெரியும்.

"சாமி, உங்களாலேதான் நாங்க ஜாமீனிலே விடுதலை யடைஞ்சோம்!" என்று முருகன் நன்றியுடன் கூற,

"பட்டணம் வக்கீலினாலென்று சொல்! வயதில் சிறிய வராயினும் நன்றாய் முன்னுக்கு வரக்கூடிய கெட்டிக்காரர்," என்றார் பதஞ்சலி சாஸ்திரி.

"நாங்க ஒண்ணும் தெரியாத ஏழைங்க, சாமி! போலி ஸிலே அநியாயமா எங்களைக் கைது செய்து விட்டாங்க. நடந்த கலகத்திலே, நாங்க சேரவே யில்லை. ஊரிலேயுள்ள மிராசுதாரர்கள் எங்களுக்கு ஆகாதவங்க. அவங்களே கல கத்தைக் கிளப்பிவிட்டு, எங்கமேலே சுமத்திவிட்டாங்க. ஏதோ கொஞ்சம் பணம் சம்பாதிச்சோம் என்கிற தப்புத் தான் நாங்க செய்தது. சாமி, எங்களைக் காப்பாத்துங்க. எவ்வளவோ காலம் விசுவசமாயிருப்போம். நீங்கதான் எங்க தெய்வம்!" என்று தொப்பை இரக்கமாய்க்கூறினான்.

அதற்கொன்றும் அவர் பதிற் சொல்லாமல் மௌனமாயிருக்கவே, அவன் மறுபடியும், "எங்கமேலே கொஞ்சங் கூட குற்றமில்லே. எங்க கள்ளுக்கடைக்கு வழக்கமா குடிக்க வரவங்கதான் நிசமான கலகக்காரருங்க. இதிலே சேர்ந்தவங்க இன்னு எங்களை வேணுமின்னே பிடிச்சு அடைச்சிருக்காங்க. நாங்க கள்ளுக்கடை வைச்சு, பணக்காரங்க ளாவதைப் பார்த்து ஊரிலே எல்லாருக்கும் வயித்தெரிச்சல். எங்களைத் தொலைக்க வேணுமின்னு செய்தவேலை இது!" என,

"நீங்கள்தான் கிளப்பிவிட்டவர்கள் என்றல்லவோ உங்கள்மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது! உங்கள் சூழ்ச்சியினாலும், ஏற்பாட்டினாலுந்தான் இக்கலகம் உண்டாயிருப்பதாக உங்கள் மீது கேஸ் போடப்பட்டிருக்கின்றது," என்றார் பதஞ்சலி சாந்தமாய்.

"அதனாலே எங்களுக்கென்ன லாபம், சாமி? என்ன உத்தேசம்,——சொல்லுங்க!" என்று தொப்பை வேண்டிக் கொண்டான்.

"பெரியசாமி அய்யரை மட்டந்தட்டுவதற்காக, அவர் வைக்கோல் போரிலும், நெற்களஞ்சியத்திலும் நெருப்பு வைத்து விட்டீர்களாம்! அதனால் அவருக் கேற்பட்ட நஷ்டம் கொஞ்சமல்ல. மூன்று மணிநேரம் ஒரு சிறு யுத்தமாகவே, அடிதடி சண்டை நடந்ததென்று சொல்லப்பட்டிருக்கிறது. மாட்டுக் கொட்டகையின் சுவரை யிடித்து, பிராம்மணர்களிருக்கும் தெருக்களையும் முற்றுகையிட்டதாக,—"

"அதெல்லாம் மற்றவங்க செய்தவேலை. எங்களுக்கு அதிலே சம்பந்தமே யில்லே," என்றான் தொப்பை. "எங்க கள்ளுக்கடையிலும் நுழைஞ்சு கொட்டகையைப் பத்த

வைச்சுட்டாங்க. எங்க சாமான் ஒண்ணு பாக்கியில்லாமே போயிட்டது.''

''நீங்கள் அகப்படாமல் தப்பித்துக்கொள்ளுவதற்காக உங்களுக்கு அனுகூலமான சாக்ஷியா யிருக்கட்டுமென்று நீங்களே அதையும் செய்தீர்களென்று சொல்லுகிறார்கள். எதிர்க்கக்ஷியிலும் வேண்டிய ருசுக்க ளிருக்கின்றன. ஊர் முழுவதும் உங்களுக்கு விரோதமாயிருக்கிறார்கள். எனக்கு அதிக நம்பிக்கை யில்லை. ஆனால், ஈவு, இரக்கமுடையவராயும், இன்னும் இரண்டு மாதத்திற்குள் பென்ஷன் வாங்குபவராயுமுள்ள ஜட்ஜ் உங்களுக்கு வாய்த்திருப்பது பெரும் சாதகம் என்று சொல்லவேண்டும். நான் செய்யவேண்டியதைச் செய்கிறேன்.''

பதஞ்சலி பேசிக்கொண்டிருக்கும்பொழுது, தொப்பை முருகனிடம் ரகசிமாய், ''இவர் பயந்தவராயும், ரொம்ப சாதுவாயு மிருக்காரு! நம்ம கேசுக்குப் பிரயோசனமில்லே! பட்டணம் வக்கீலே வரவழைக்கலாமா? பணச் செலவைக் கவனிக்கக்கூடாது,'' என, முருகன் சிறிது தயங்கியதும், அவனே பதஞ்சலியிடம், ''உங்களுக்கு ஒத்தாசையாயிருக்கப் பட்டணம் வக்கீலே வரவழைக்கலாமா, சாமி?'' என்று கேட்டான்.

''அதற்குப் பணமிருந்தால், உங்களிஷ்டப்படி செய்துகொள்ளுங்கள். எனக்கு ஒன்றும் ஆக்ஷேபணை யில்லை. அடுத்த மாதம் விசாரணை. அதற்குள் தயாராகவேண்டும்.''

முருகனும் தொப்பையும் அவரிடம் விடை பெற்றுச் சென்றார்கள்.

''தொப்பை, உன் யோசனை யெல்லாம் வரவர விபரீதமா முடிஞ்சுபோச்சு!'' என்று முருகன் மனதில் வேதனை

யுடன் சொல்லத் தொடங்கினன். "போலீஸ்காரங்களுக்கு நிறைய லஞ்சம் கொடுத்து நம்மை விட்டுவிடும்படி சொன்னதுக்கு, நம்மை ரொம்ப கஷ்டப்படுத்தாமே விட்டதைத் தவிர வேறே லாபமில்லே. மூணு வருசத்திலே ஜலமா பெருகி வந்த பணம், காத்துப்போலே பறந்துவிட்டது. நம்ம வக்கீல் தனக்கு ஐந்நூறு ரூபா கேக்கிறுரு! பட்டணம் வக்கீலேயும் வைச்சா, இன்னும் ஆயிரம் ரூபா அதிகம் கொடுக்கும்படியாகும். நம்மைக் கசக்கிப் பிழிஞ்சு ஒரே நாளிலே பணம் சம்பாதிச்சுவிட, லோகம் முழுதும் கிளம்பியிருக்காப்போலே தோணுது. தொப்பை, பார்த்தையா, நீ கண்டபடி யோசனே பண்ணிச் செய்ததனலே வந்த ஆபத்தை! ஒவ்வொரு சமயத்திலும் எனக்கு நடுக்கந்தான்! ஆனல் தடுக்கிறதுக்கு எனக்குத் தைரியமில்லாதே போச்சு. கடவுளுடைய சம்மதம் அப்படியானு நாமென்ன செய்யலாம்! தென்னந்தோப்பை விற்றுப்பணமாக்கி, விடுதலே யாவதற்குக் கடைசிப் பிரயத்தினம் செய்யவேண்டியதுதான். பாவம்! பொன்னியும், என் பிள்ளே குட்டிங்களும் சாப்பாட்டுக்கு என்ன செய்வாங்க? கூலிவேலேக்குப்போகணும்; இல்லாட்டா, பிச்சை யெடுக்கணும்!" என்று சொல்லி முருகன், அதை நினேத்துக் குழந்தையைப்போல் விம்மியழத் தொடங்கினன்.

"முருகா, நீ அழுவுறதைப் பார்க்க என் மனசு தாங்கல்லே! நானும் உன்னேடு சேர்ந்து அழுதா, எல்லாம் கெட்டுவிடும். நான் மேல் காரியத்தைப் பார்க்கணும். இது கடவுளுடைய சோதனேயே தவிர, வேறெண்ணுமில்லே. நம்முடைய கஷ்டகாலம்,——ஏழறைநாட்டுச்சனி நம்மை இப்போ பிடிச்சிண்டிருக்கு. நாம் தைரியமா யிருக்கணும். இல்லாட்டா, அடியோடு துலேஞ்சுபோவோம். இந்த சாது

வக்கீலிடம் நம்ம உயிரை ஒப்பிவைக்கக்கூடாது. அவருக்குச் சாமர்த்தியமில்லே. நமக்கு ஜாமீனிலே விடுதலே உத்தரவு சம்பாதிச்சுக் கொடுத்த பட்டணம் வக்கீலே இங்கே வரவழைக்கவேண்டியதுதான். பெரியசாமி அய்யரைக் கும்பிடணும்! அவராலேதான் இவர் பேர் ஊரிலே எல்லாருக்கும் தெரிஞ்சுது. அய்யரை அவர் வெட்டின குழியிலேயே தள்ளிவிடலாம்!''

"தொப்பை, ஒரு பக்கம் தைரியமாயிருந்தாலும், ஒரு பக்கம் பயமாயுமிருக்கு. என் தலே சுத்துது. நான் நாட்டுப்புறத்தான். இந்த பெரிய பட்டணத்தைப் பார்த்தாலே எனக்குப் பயமாயிருக்கு. உன்னலேதான் இந்த ஆபத்தெல்லாம் வந்ததனலே, நீ தான் இதிலேயிருந்து நாம் தப்புறதுக்கு வழி செய்யணும். நான் பக்கத்து கிராமத்திலேயிருக்கேன். நீ போயி, எனக்காகத் தோப்பை விற்க ஏற்பாடுசெய். என் கால் தள்ளாடுது. இந்த ஸ்திதியிலே என்னலே ஊருக்குள்ளே போகவே முடியாது. பொன்னியையும், குழந்தைங்களேயும் தகுந்தவங்களிடம் ஒப்பிவை.சீதையம்மா ரொம்ப இரக்கமும் நல்ல மனசுமுள்ளவங்க.அவங்களிடம் ஒப்பிச்சா, பார்த்துக் கொள்ளுவாங்க,'' என்று முருகன் வருத்தத்தோடு சொன்னன்.

---

# அத்தியாயம் 32.

## விடாயாறும் நினைவு.

ராமு செய்வதாய் அனுமதி கேட்ட சீர்திருத்தமானது, சர்க்காருக்கு கிஸ்தி விஷயத்தில் லாபகரமாக விருக்குமென்பதையும், விவசாயத் தொழில் பிரதானமான வோர் தேசத்தில், இம்முறையையே முற்றிலும் அனுசரித்து நடப்பதனுல், இப்பொழுதுள்ள ஜனங்களுடைய அதிருப்தி குறைந்து, பெரும் நன்மையும் ஏற்படுமென்பதையும் காடெல் துரையவர்கள் கவர்னர் மனதிற்படும்படி எடுத்துரைத்தார். நாட்டிலுள்ள சச்சரவிற்குக் காரணம், எப்பொழுதும், வறுமையேயென்று ராமு வாதித்ததை அவர் எடுத்துக்கூறியது நல்ல பயனுள்ளதாயிற்று.

லக்ஷரூபாய்க்கு மேற் செலவழித்து தூசி-மாமந்தூர் ஏரியைச் சீர்படுத்தியது அவ்வூரைச் சுற்றிலும் ஓரே பேச்சாக விருந்தது. ஒவ்வொரு வீட்டிலும் ராமுவின் பெயர் வழங்கி வர, ராமுவும், ஊருக்கு ஜலசௌகரிய மேற்படுத்தியதோடு கிராமச் சீர்திருத்தத்தின் பொருட்டு தன் முழு மனதுடன் பாடுபட்டுக்கொண்டிருந்ததனுல், சர்க்கார், ஜனங்கள் இருவருக்கும் வேண்டியவனுனன். அதன்றியும், ஊரிலிருந்த குளங்களையும் சீராக்கும் பொருட்டு, மலைமேல் வசித்துக்கொண்டு கீழிருந்த எளிய ஜனங்களுடைய பொருள்களை யபகரித்துச் சீவித்துக் கொண்டிருந்த, பெயர் போன கொள்ளைக்கூட்டத்தாருள்பட நாலுவகுப்பினரையும் அவ்வேலையில் அமர்த்தலானுன். அவ்வாறு வேலை நடந்துகொண்டிருக்கும்பொழுது, சுற்றிலும் ஓரிடத்திலாவது ஒரு கள்ளுக்கடைகூட இருக்கலாகாதென்று ஏற்

பாடு செய்துவிட்டான். எளிய வாழ்க்கையும், வழக்கங் களுமே மேலெனை, அவைகளைக் கைக்கொள்ளும்படி, அவர் களைப் பலவிதமாய்த் தூண்டி உற்சாகப்படுத்தி வந்த துடன், தானே அவ்வாறு நடந்தும் காண்பிக்கவே, சிக்கனமாயிருந்து பணம் சேர்க்கும் வழக்கம் அவர்களுக் குண்டாகத் தலைப்பட்டது. மிக்க சிரத்தையுடனும் ஊக்கத் துடனும், வேலைசெய்யும் இப்பயிர்த்தொழிலாளிகளான ஜனங்களுக்கு அவன் ஓர் ரக்ஷகனாகவே தோன்றினான். இந் நற்காரியத்தை மேற்கொண்டதைப்பற்றி ராமுவும் மிக்க திருப்தியோடிருந்தான். வேலை அநேகமாய் முடிந்தது. அதற்குள், அதை மெச்சிப் பல பெயர்கள் சந்தோஷம் விசாரிக்கத் தொடங்கிவிட்டார்கள். தான் எண்ணிய கருமம் நிறைவேறிவிட்டதால், இனிக் கொஞ்சம் விடா யாற்றிக்கொள்வோமென்று ராமு நினைக்கத்தொடங்கினான்.

"எதைப்பற்றி யோசித்துக்கொண்டிருக்கிறீர்கள்? இங்குள்ள இவ்வளவு ஜனங்களுடைய வீடுவாயில்களைக் காப்பாற்றுவதற்காக அலவந்தியில் உங்கள் பிதிரார்ஜித சொத்தை யிழந்ததைப்பற்றி யல்லவே?" என்று ஜானகி ஒருநாள் ராமுவைக் கேட்க,

"நல்லவார்த்தை சொன்னாய், ஜானகி! நீ ஊகித்தது சரியே. நான் அலவந்தியைப்பற்றித்தான் நினைத்துக்கொண் டிருந்தேன். இவ்வுஷ்ண பிரதேசத்தில் நமது கஷ்டங்க ளொன்றையும் பாராது, இவ்வளவு வருஷகாலமாக நான் உழைத்தாயிற்று. இவ்விடம் விட்டு வேறிடம் சென்று, சில காலம் வேலையின்றி யிருக்க விரும்புகிறேன். அலவந்தி யில் ஒரு ஏக்கர் நிலமும், ஒரு சொந்த வீடும் மட்டு மிருந் தால், மனதிற்கும் தேகத்திற்கும் எவ்வளவு சந்தோஷத்தை யும் சௌக்கியத்தையு மளிப்பதாயிருக்கும்! ஒரு மாதம்

லீவு பெற்றுக்கொண்டு அங்கு சென்றுவிடுவேனன்றோ!'' என்ருன் ராமு.

"ஆம், சாதாரணமாயில்லாமல், ரஜாவில் வந்திருக்கும் டிப்டி தாசில்தாரென்ற கௌரவத்துடனுமல்லவா?''

"பரிசுத்தமான காவிரியாற்றில் ஸ்நாநம் செய்து, இவ்வளவு வருஷங்களாக ஏங்கி வறண்டுகிடந்த, என் மனது, சரீரம் இவ்விரண்டினுடைய தாபத்தையும் தீர்த்துக்கொள்ளுவேன்! ஆயினும், அப்பாக்கியம் எனக்கில்லை. ஆஹா! அலவந்தியைப்பற்றி நினைக்கும்பொழுது, என்ன இனிய நினைவுகளெல்லா முண்டாகின்றன!—ஜானகி, எங்கே நம் கண்மணி சீதை?'' என்று ராமு திடீரென்று கவலைக்குரலில் கேட்டான். அவனுக்கு ஓர் பெண்குழந்தை பிறந்திருந்தது.

"எந்த சீதையைப் பற்றிக் கேட்கிறீர்கள்?'' என்று ஜானகி, அவன் களிப்படையுமாறு, ஓர் கள்ளச்சிரிப்புடன் கேட்டாள். "நம் குழந்தைக்குச் சீதை யென்று ஏன் பெயர் வைத்தீர்கள்? நிசத்தைச் சொல்லவேண்டும்! அலவந்தியிலிருக்கும் சீதையின் ஞாபகார்த்தமாகவா?'' என,

அச்சமயம் குழந்தை சீதை தட்டித்தடுமாறி நடந்துகொண்டு அங்கு வர, ராமு அவளை வாரித் தன் மார்போடணைத்துக்கொண்டான். மக்கள் மெய் தீண்டலினு லுண்டாகும் ஆநந்தம் பெற்றவர்களே யன்றி வேறெவர் அறிவார்!

"அவ்வாறு பெயரிடவேண்டுமென்று என் மனதில் ஏதோ ஓர் சிறு விருப்பம் பிறந்தது. எனக்கு அலவந்தியிலிருக்கும் சீதை உன் சகோதரி போன்றவள். அவளைப்பற்றிய சமாசாரம் நமக்கெட்டி எவ்வளவு வருஷங்களாயின!''

"நீங்கள் ஏன் அவளுக்குக் கடித மெழுதலாகாது?''

"நம் வழக்கத்திற்கு அது விரோதமாயிற்றே!''

"அவளுக்கு ஓர் அழகான குமார னிருப்பதாகவும், உங்களைக் கண்டு சந்தோஷத்துடன் வரவேற்றானென்றும் சொன்னீர்கள். நாளை அவன் மாமனா ராகப்போகின்றவர்கள் நீங்களல்லவா? என் கண்மணி சீதையை நான் அவனுக்குத்தான் கொடுக்கப்போகின்றேன். என் மனதிற்குள் நிச்சயமாய்விட்டது. சீதையும் நிரம்ப நல்லவள். ஆனால் அவள் சீமாட்டி; நாம் ஏழைகளாயிற்றே!"

"ஜானகி, உன் உத்தேசம் நிரம்ப சரி. அதற்காகவாவது நான் கஷ்டப்பட்டுச் சம்பாதித்துச் சீமானாகவேண்டும்."

"அப்பா, அம்மா என்ன சொல்றா?" என்று குழந்தை கேட்க,

"நம் கிராமத்தில் உன்னுடன் விளையாட ஒரு சிறு பையனிருக்கிறானென்று," என்றான் ராமு. சீதை மேலே கேட்கவில்லை.

"பாபம்! சீதையைப்பற்றி இப்பொழுது என் மனம் சிந்தனையி லாழ்கின்றது. என்னாலியன்ற அளவு நான் செய்த சிறிது உபகாரத்தினால், அவளுக்கு நற்காலம் திரும்பியது போல் தோன்றிற்று. ஆனால், அது அதிக நாள் நிற்கவில்லையென்று முருகன் சொன்னான்," என்று அவன் யோசனையுடன் தாழ்ந்த குரலி லுரைக்க,

"முருகனைப்பற்றி ஏதாவது சமாசாரம் தெரியுமோ? இப்பொழுது அவன் பெரிய மிராசுதாராக விருப்பானென்று நினைக்கிறேன். பொன்னியும், பள்ளி படையாச்சிகளுள், நாகரீகத்திலும் செல்வத்திலும் முதன்மையாக விருப்பாள்!" என்றாள் ஜானகி.

"ஐசுவரிய தேவதையான லக்ஷ்மியின் கடாக்ஷம் பெறுவது மிகவும் சிரமமல்லவா? பொதுவாக, எல்லா

ROJA MUTHIAH
47, HOSPITAL STREET
KOTTAIYUR—623 106

ஸ்திரீகள் விஷயத்திலும் அவ்வாறிருக்க, தேவதைகளைப் பற்றிக் கேட்கவேண்டுமா? ஏழை முருகனைப்பற்றி யொரு கவலையு மில்லை. ஆனால் பணக்கார முருகன் எப்படியிருப் பானோ! செல்வமும், அதன் உற்பத்திக்குக் காரணமான பேராசையைப்போன்று, இருமுனைக் கத்தி போன்றது. அது தீயைப்போல், நாம் உபயோகிப்பதற்குத் தக்கவாறு, நன்மை தீமை இரண்டையும் விளைப்பதா யிருக்கின்றது. ஆனால் பிறரைப்பற்றி நான் இவ்வாறெல்லாம் யோசித்துக்கொண் டிருப்பானேன்! கேதாரிக்குப்பிறகு நான் அதை விட்டு விட்டேன்.''

கேதாரியின் பெயரைக் கேட்டதும், ஏதோ மந்திரம் போட்டதுபோல், இருவரும் ஒருவரை யொருவர் ஒரு நிமி ஷம் நோக்கியவண்ண மிருந்தார்கள்.

"சென்னைபோய் ஒருவார மிருந்துவந்தா லென்ன? இடம் மாற்றினால் உங்களுக்கும் நல்லதாயிற்றே,'' என்றாள் ஜானகி. ராமு கேதாரியின் பெயரைக் கூறியதும், அவளுக் குச் சென்னை நினைவு வந்துவிட்டது.

"அங்கு போய் ஒரு வருஷமுழுவதும் சேர்த்துவைத்த ரூபாயை ஒரு வாரத்தில் செலவழித்து, மறுபடியும் நம் கண்மணி சீதையைப்பற்றிக் கவலையும் கஷ்டமும் படுவதற் கா? சென்னை போனால் எங்கிருப்பது? அங்கு எனக்கு உற வினர் ஒருவரும் கிடையாது. ஒரு ஏழை டிப்டிதாசில்தார் தூசியில் தெய்வமாக விளங்கினாலும், சென்னையில் கடற் கரையிலுள்ள சிறு மணலுக்குச் சமானமே.''

"ஏன், அங்கு நம் கேதாரி யில்லையா?'' என்றாள் ஜானகி.

"ஓஹோ! அவன் உனக்கு உறவென்பதை மறந்து விட்டேன்! ஆயினும் உன்னை அவன் இப்பொழுது தெரிந்த

தாகக் காட்டிக்கொள்ளுவானா? நல்ல வரும்படிவரும் வக்கீலாய்விட்டான். மாதம் ஆயிரம் ரூபாய் வருகின்றது. மோட்டார் வைத்துக்கொண்டிருக்கிறான். நான் முன்பு சென்னைக்குப் போயிருந்தபொழுது, அவன் என்னைத் தெரிந்ததாய்க் காட்டிக்கொள்ளவில்லை. ஆனால், உன்னுடைய நலன்கள் அவனை ஒருவேளை மாற்றலாமாயினும், அதற்கு நான் இடம் கொடுப்பதாயில்லை. ஜானகி, பெரிய பட்டணமாயினும், சென்னையின் அசுத்தமும், ஆபாஸமும், அங்குள்ள ஏழ்மையின் கொடுமையும் இவ்வளவென்று சொல்லமுடியாது," என்று கூறி, ராமு இப்பேச்சைமாற்றி, மறுபடியும் "ஜானகி, உன் சிறு ஹிருதயத்தில் தெய்வபக்தி எவ்வளவு குறைவாயிருக்கின்றது! பழனிக்குப்போய் ஸர்வசக்தியுள்ள பழனியாண்டவரைத் தரிசித்து வருவோம், வா! நான் பத்து வயதாயிருக்கையில், என் தாயார் வேண்டிக்கொண்ட பிரார்த்தனை யொன்றிருக்கிறது. அதை இன்னும் செலுத்தவில்லை. அங்கு போய்வந்த பிறகு, ராமேசுவரம் செல்வோம். ஒரு மாதத்திற்குள் ஊருக்குத் திரும்பிவிடலாம். பணம் செலவழிந்தாலும், நற்காரியத்தின் பொருட்டுச் செலவழிந்ததாகும்," என்றான்.

"நம் சீதைக்கு ஓர் சிறு சகோதரன் பிறப்பதா யிருந்தால், அப்பொழுது, செலவழிந்த பணத்தைப்பற்றி உண்மையாய்த் திருப்திகொள்ளலாம்," என்று ஜானகி கூறி, சீதையைத் தன் மார்போ டணைத்துக்கொண்டாள்.

---

## அத்தியாயம் 33.

### அலவந்தி யாற்றங்கரை.

அலவந்தியில் நடந்த கலகத்தையும், அதன் பின் கூடி வந்த போலீஸாரையும் மாஜிஸ்டிரேட்களையும் கண்டு திகி லடைந்த அவ்வூராரனைவரும் வெகு நாட்கள் வாய்திறக்கவே யில்லை. என்றும் வற்றாத ஆற்றங்கரை வம்பும் வறண்டு விட்டதுபோல் தோன்றிற்று. ஏனெனில், ஒவ்வொருவரும் பயத்தினால் மௌனமாயிருக்க, ஆற்றங்கரையில் கூட்டம் கூட்டமாய்ச் சேர்ந்து ஸ்நாநம் செய்வோரும் குறைந்து விட்டனர்.

பொன்னியின் அதைரியத்திற் கேற்றவாறு, அவள் கதி வெகு கஷ்டமாய் முடிந்தது. இவ்வளவு வயதானபிறகு தனக்கு இப்பெரும் துன்பம் சம்பவிக்குமென்று அவள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அவள் மூத்த பிள்ளையும், சிறு பெண்குழந்தையும் தந்தையிடம் போகவேண்டுமென்று கத றியழலாயினர். தங்களுக்கு நேர்ந்த பெரும் கஷ்டத்தை நன்கு அறியாதவர்களாயிருக்கும் அவர்களைப் பார்க்க, துக் கம் தாங்கமாட்டாமல் பொன்னியின் கண்களில் நீர் பெரு கிற்று. ஆயினும் தன் விசனத்தை யொருவாறு அடக்கிக் கொண்டு, அவர்கள் அழுகையை மாற்றித்தேறுதல் சொல்ல லானாள். முருகன் ஜெயிலுக்குச் சென்றபிறகு தென்னந் தோப்பில் ஒருநாளுக்குமேல் அவளா லிருக்கமுடியவில்லை. அவர்களுக்கு எவ்வளவோ நண்பர்களும் உறவினர்களு மிருந்தும், அவர்க ளொருவரும் அவள் மனதிற் கிசைய வில்லை. அவர்களும் இக்கஷ்டகாலதில் அவளுக்கு உதவா தாராயினர். கடைசியாக, அவளுக்குச் சீதையின் நினைவுவர,

சிறிது மனம் தேறியவளாய், பொழுது விடிந்ததும் அவள் ஆதரவில் போயிருக்கத் தீர்மானித்தாள். ராமுவுக்கு மிகவும் வேண்டியவனான முருகனுடைய மனைவி பொன்னியைப்பற் றிச் சீதைக்கும் நினைவு வராமலிருக்கவில்லை. இக்கஷ்டசமயத் தில் அவளுக்குத் தேறுதல் சொல்லவேண்டுமென்றெண்ணி யவளாய், பொழுதுவிடிந்ததும் அவளுக்குச் சொல்லி யனுப்ப, பொன்னியும் அதற்குச் சம்மதித்து அங்கு சென் றாள்.

இவ்வாறு சில நாட்கள் சென்றன. இன்னும் அவ்வூ ரார் தம் பயம் நீங்கி வழக்கம்போலாகவில்லை. நாட்டுப்புற மாதலால், நிகழ்ந்த சம்பவங்கள் அவர்களுக்கு மிகவும் பெரியனவாய்த் தோன்றின. வெயிலின் கொடுமையும் அதிகமாயிருக்க, என்றும் வற்றாத காவிரிநதியும், ஓடப் பயந் ததுபோல், மெதுவாய்ச் சென்றுகொண்டிருந்தது.

திடீரென்று ஒருநாள், சோர்ந்துகிடந்த சகல உயிர்க ளும் உய்யுமாறு ஆகாயம் கறுத்தது. இடியுடனும், மின்ன லுடனும் குளிர்ந்த காற்று வீச, மேகங்கள் கூடி வருஷிக்க வாரம்பித்தன. மறுநாட்காலை காவிரியில் பூர்ணப்பிரவாஹம் வந்துவிட்டது. பக்ஷிகள் ஆலமரக் கிளைகளி லுட்கார்ந்து, மீண்டும் இனிமையாய்க் கூவத்தொடங்க, காக்கைகள் வழக் கம்போல் வீட்டுக்குவீடு கூரைமேற் பறந்துசென்று எங் கும் சுத்தமாக்கின. மேய்வதை யெண்ணி மாடு கன்றுகள் ஆநந்தத்தால் எக்காளமிடவும், எங்கும் பசுமையாவதற் கடையாளமாய் புற்களும், இலைகளும் தளிர்க்க வாரம்பித் தன. பொழுது புலருவதற்குள், இரவு பெய்த மழையால் நில மெங்கும் ஒரே மாறுதலடைந்துவிட்டது. யாவும் ஆநந்த மும் அமைதியும் குடிகொண்டு விளங்கின. இவ்விரு வாரங்

களாகத் தம்மைப்பிடித்திருந்த திகிலை மறந்து, அலவந்தியில் யாவரும் பழையபடி உற்சாகம் மேலிட்டவர்க ளானார்கள்.

காவிரியில் ஜலம் பெருகியதைக் கண்டதும், மாதர்க ளின் கொண்டாட்டத்தைச் சொல்லவேண்டுமா? ஒவ்வொரு வரும் ஆற்றங்கரையில் முன்போல் வம்பளக்கத் தொடங்கி னார்கள். ஒருமாதத்து வர்த்தமானங்கள் பேசப்படாமல் பாக்கி நின்றிருந்தமையால், இப்பொழுது ஒருவரையொரு வர் கண்டதும், மலைச்சாரலில் பெருகி யோடிவரும் வெள் ளம்போல், தடங்கலில்லாது ஊர்வம்பு தொடங்கிற்று. ஒரு மாதமாய்க் காணாததால், மிக்க ஆசையுடன் சுழன்று, அவர்கள் கால்களைத் தழுவிநின்ற காவிரிநதியும், அலவந்தி யிலுள்ள ஏழை, பணக்காரர்க ளனைவரையும் பற்றிக் கூறப் பட்ட அதிசய விஷயங்களைக்கேட்டுச் சந்தோஷத்துடன் சலசலவென்று சத்தமிட்டுச் சென்றது.

இப்பொழுதுதான் கரையை யணுகி ஜலத்தில் காலை வைத்த ஒருத்தி, ஜலத்தி லிறங்கி அமிழ்வதற்கு முன், "பெரியசாமி அய்யரை நினைத்தால் ஐயோபாவ மென்றிருக் கிறது! மிகக் கருமியானாலும், நம்மூரில் அவர்தான் யாவரை யும்விட பணக்காரர். பரம்பரைச் சீமானல்லவா?" என்றாள்.

"உன்னையும், என்னையும்போன்ற ஏழைகளுக்குக் கரு மியே யொழிய, வக்கீல்கள், டாக்டர்கள், ஜோசியர்கள், மந் திரவாதிகள் இவர்களனைவருக்கும் வாரியிறைத்துக்கொண் டிருக்கவில்லையா ?" என்றாள் மற்றொருத்தி.

"பெரியசாமி அய்யரால் குடும்பம் நாசமடைந்து, அவர் சொத்து முழுவதும் எதிர்வீட்டுக்காரர்களிடம் சேர்ந்துவிடுமென்று அவர் பிறந்தபொழுதே என் தகப்ப னார் ஜோசியம் சொன்னதாக எங்கம்மா சொல்லியிருக் கிறாள்," என்றாள் அவ்வூர் ஜோதிஷருடைய பெண். இவள்

அவருக்கு ஏகபுத்திரி. பத்துவயதிலேயே கைம்பெண்ணுய் விட்டாள். "அது இப்பொழுது எவ்வளவு சரியாய்ப் பலித்திருக்கிறது! யாவருக்கும் அலக்ஷ்யமாயிருந்த சீதை அலவந்திக்கு ராணியாவாளென்று ஐந்து வருஷங்களுக்கு முன் யார் நினைத்திருப்பார்கள்? அப்புறம் சமாசாரம் தெரியுமோ?"—ஒரு நிமிஷம் நிறுத்தித் திரும்பிப்பார்த்துவிட்டு, "அற்ப சொற்பமா யிராமல், லக்ஷரூபாய் ஆஸ்தியன்றே சீதைக்கு இப்பொழுது கிடைத்திருக்கிறது!" என,

எல்லாரும் எப்படியென்று ஆத்திரத்துடன் கேட்டார்கள். "புதையல் எங்கிருக்கிறதென்று பார்ப்பதற்குத் தானே அவள் ஒவ்வொருபக்கமாய் வீட்டை யிடித்துக் கட்டிக்கொண்டிருந்தாள்?" என,

"புதையலொன்றும் அகப்படவில்லை!" என்றாள் ஜோசியர் பெண். "அதிருஷ்டம் எந்த வழியாய் வருமென்று ஒருவரும் சொல்லமுடியாது. சீதையின் அகமுடையான், கும்பகோணத்தில், நல்ல லக்ஷணமாயும் பணக்காரியாயுமுள்ள ஒரு தாசியை வைத்துக்கொண்டிருந்தானென்பது நமக்குத் தெரியுமே! தனது சொத்தையெல்லாம் சீதையின் பிள்ளைக் கெழுதிவைத்துவிட்டு, அவள் இரண்டு வாரத்திற்கு முன் இறந்துவிட்டாளாம்! கேட்க அதிசயமாயிருந்தாலும், இதில் பொய் எள்ளளவும் கிடையாது. அப்பிள்ளைக்கு என்ன அதிருஷ்டம்! சீதையைக் கண்டால் நமக்கு முன்பு எவ்வளவோ பரிகாசமா யிருந்தது. அந்த சீதை இப்பொழுது அலவந்திக்கு ராணி யாய்விட்டாள்! என் தகப்பனுர் கூறிய ஜோசியமும் பலித்துவிட்டது!"

"முருகனுடைய நிலத்தையும் அவள் வாங்கிவிடப் போகிறுளென்று கேள்வி. அந்த படவாப்பயல் தொப்பை,—ஜெயிலிலேயே அவனை யடைத்துவைக்கவேண்டும்!—

இங்கே இருக்கிறான். அவன்தான் எல்லாத் துன்பத்திற்கும் காரணம். பெரியசாமி அய்யருக்கு அவனை அடியோடு தொலைத்துவிடவேண்டுமென்றிருந்தது. ஆனால், பாபம்! வீடுவாயிலை யிழந்து அவரும் அநேகமாய்த் தொப்பைக்குச் சரியாய்விட்டார். இன்னும் கொஞ்சம் நாட்களில் தொப்பைக்குத் துணையாக ஜெயிலுக்கும் சென்றுவிடுவார்போல் தோன்றுகிறது.''

"பாவமென்ன? கோர்ட்டுக்குப் போனால் நாசந்தான்! கொடுப்பவன், வாங்குபவன் யாவரும் தலையவேண்டியது தானே!'' என்று வக்கீல் குமாஸ்தாவின் மனைவி யொருத்தி உலகநியாய மெடுத்துரைக்கலானாள். சில வருஷங்களுக்கு முன் குமாஸ்தாவாகவிருந்த இவள் கணவன், வக்கீல் தன்னிடம் கொடுத்துவைத்திருந்த ரூபாயைத் தைரியமாய்த் திருடிய குற்றத்திற்காக நீக்கப்பட்டு இப்பொழுது வேலையொன்று மில்லாமல் வீட்டிலிருந்தான்.

"நம்மூரின் பெருமையெல்லாம் இனித் தொலைந்தது! ஒரு பெண்பிள்ளை,—அதிலும் ஒரு கைம்பெண்ணின் அதிகாரத்தில், கிராமத்தின் களையே யழிந்துவிடும்! நமக்கிருக்கும் சொற்பநிலத்தையும் நம் அகத்துக்காரர்களிடம் சொல்லி, சீதைக்கே விற்றுவிட்டுப் பட்டணவாசத்தை நோக்கிச் செல்லும் காலம் வந்துவிட்டது!'' என்று சீதையின்மீது எப்பொழுதும் பொறாமைகொண்டிருந்த ஒருத்தி பொறுக்காமற் கூறினாள்.

"இல்லை! சீதை மிக்க நல்லமனதும், தெய்வபக்தியு முடையவள். பெரியசாமி அய்யர் மகாகருமி; தன்னையும், தன் பெண்டுபிள்ளைகளையும்பற்றித்தான் அவருக்குக் கவலை! பிறருக்கு அவர் ஒன்றும் செய்ததேயில்லை: சீதை அவ்வாறில்லாமல் வேண்டிய உபகாரம் செய்வாள். அதோ பிள்ளை

யுடன் வருகிறாளே ! அவளையே கேட்டால் தெரியும். இப்பொழுது முன்னிலும் லக்ஷணமாகவே தோன்றுகிறாள்,—இல்லையா ? கைம்பெண் கோலமும் அவளுக்கு அழகாயிருக்கிறது. ஏழைகளிடத்தில் அவளுக்கு எப்பொழுதும் இரக்கமுண்டு. இல்லாததையும், பொல்லாததையும் சொல்லி அவளை நாம் விரோதித்துக்கொள்ளவேண்டாம்,'' என்றாள் எப்பொழுதும் சீதையின் கக்ஷியி லிருந்த ஒருத்தி.

பாலபருவத்தின் இனிய தன்மைக் கேற்றவாறு, கற்களையும், கிளிஞ்சல்களையும், சிறு குச்சிகளையும் பொறுக்கிக் கொண்டும், மணலில் அடிச்சுவடுக ளிட்டுக்கொண்டும், விளையாட்டுப்புத்தியுடன் சுற்றிவளைந்து, இங்குமங்கும் ஓடித் திரிந்துகொண்டும் குழந்தை பக்கத்தில் வந்துகொண்டிருக்க, சீதை ஆற்றங்கரையை யணுகினாள். உயர்குல விதவைகள் அணிவதான நார்மடியை அவள் தரித்திருந்தது அவள் வைராக்கிய சுபாவத்திற்கு ஒத்ததாகவே யிருந்தது.

''சீதா, வா. உனக்கு ஏதோ புதைய லகப்பட்டிருக்கின்றதாமே ! அது உண்மைதானா? எங்களுக்கு ஏதாவது அதில் கொஞ்சம் கிடைக்குமோ ?'' என்று ஏககாலத்தில் பல பெயர்கள் கேட்க,

'' அப்படியே ! அதற்கென்ன ? என்னு லியன்றமட்டும் பொது நன்மைக்கே அதைச் செலவழிக்கப்போகின்றேன். இடிந்துகிடக்கும் கோவிலைக் கட்டுவதற்கும், தூர்ந்துகிடக்கும் குளத்தை வெட்டுவதற்கும் நான் ஏற்கெனவே அதிலிருந்து எடுத்துவைத்தாயிற்று. கேவலம் ஒரு லோபியா யிராமல், சொற்ப நிலமுள்ளவர்கள் தங்கள் நிலத்திற்கு முதலில் ஜலம் கட்டிக்கொள்ளும்படி ஏற்பாடு செய்யப் போகிறேன். நீங்கள் ஆக்ஷேபிக்காம லிருந்தால், ஏழைகளுக்கு வேண்டிய தனைத்தும் நான் செய்யத் தடையில்லை.

நம் சிறுவர், சிறுமிகள் கற்பதற்கு ஓர் பள்ளிக்கூடம் கட்டலாமென்று நினைக்கிறேன். என் பிள்ளைக்கு உரிய வயது வருமளவும், என்னிஷ்டப்படி செலவழிக்க எனக் கதிகாரமுண்டு. இதற்கெல்லாம் நீங்க ளெல்லோருந்தான் எனக்கு ஒத்தாசையாயிருக்கவேண்டும். இக்கிராமத்தையே எவ்வளவோ சீர்திருத்தம் செய்யவேண்டியதா யிருக்கிறது. ஆனால், யோக்கியதையற்று ஒருவேலையு மில்லாமல் சோம்பித் திரிபவர்களைத் தவிர, நல்ல புத்திமான்கள் எல்லாரும் ஊரைவிட்டுச் சென்றுவிட்டார்கள் !" என்றாள் சீதை.

"ஆம், பேராசை குடிகொண்ட பெரியசாமி அய்யர், ஊருக்குப் பெருநிதிபோன்றிருந்த, ராமுவின் நிலத்தையெல்லாம் சொற்பவிலைக்கு அபகரித்துக்கொண்டு அவனையும் ஊரைவிட் டோட்டிவிட்டார் !" என்று சீதையின் மனதை யறிந்த ஒருத்தி அவளுக்குத் திருப்தியுண்டாக்குவதன்பொருட்டுக் கூறினாள்.

"அந்தப் பாபத்திற்குத்தான் இப்பொழுது நன்றா யனுபவிக்கின்றார் ! மனிதர்களுக்குமேல் தெய்வமும் அவருக்கு விரோதமாகிவிட்டது !" என்றாள் வேறொருத்தி.

"சீதா, ராமுவைப்பற்றி உனக் கேதாவது தெரியுமா ? இப்பொழுது எங்கே யிருக்கிறான்? என்ன பண்ணிக்கொண்டிருக்கிறான் ? ஜானகியும் நல்ல பெண்," என்றாள் ஒருத்தி.

"தூசியில், டிப்டிதாசில்தாராக அவர் இப்பொழுது நல்ல செல்வாக்கி லிருப்பதாய்ச் சென்னையிலிருக்கும் என் தமையன் எழுதியிருக்கிறான். அவர்களுக்கு ஒரு பெண் பிறந்திருக்கிறது; மூன்று வயதாயிற்றாம்," என்று சீதை தன் குழந்தையை அன்புடன் நோக்கிக்கொண்டே சொல்ல,

"அம்மா, என்ன சொன்னாய் ?" என்று அவன் கேட்டான்.

"உங்கம்மாவின் தோழிக்கு ஒரு சிறு பெண் ணிருக்கிறதாம்! அவளைக் கலியாணம் செய்து கொள்ளுகிறாயா!" என்று ஒருத்தி வினவ,

"என்னைப்போல அழகாயும், பணக்காரியாயுமிருந்தால், செய்துகொள்ளுவேன்!" என்று அலக்ஷ்யமாய்ப் பதிலுரைத்துவிட்டு அச்சிறுவன், ஆற்றில் தண்ணீர் குடிக்க வந்த ஓர் கன்றுக்குட்டியைத் துரத்திகொண்டு ஓடி விட்டான்.

"சீதை அதற்குள் பெரிய ராணிபோல் பேசக் கற்றுக் கொண்டுவிட்டாள்! ராமுவின் ஞாபகம் அவள் மனதை விட்டு இன்னுமகன்றபாடில்லை. ஜானகியையும் அவள் மறக்க வில்லை. அவள் பிள்ளை தகப்பனைத்தான் கொண்டிருப்பது போல் தோன்றுகிறது. பதினெட்டுவயதானவுடன் கெட்டலையத் தொடங்கிவிடுவான். 'முப்பது வருஷம் வாழ்ந்தவர்களுமில்லை, முப்பது வருஷம் கெட்டவர்களுமில்லை,' என்ற வசனம் பொய்யாகாது. தெய்வாதீனம்! செல்வம் சகடக் கால் போலவே சுழலும்!" என்றிவ்வாறு சிலர், நாம் முற் கூறிய நடு வயது அம்மாளைப் பிரதானமாய்க்கொண்டு, ஒரு புறமாய்த் தாழ்ந்த குரலில் வம்பளந்தனர். ஆயினும், அவர்கள் எதைக் குறித்துப் பேசினார்களென்பது சீதையின் செவிகளுக்கு முழுவது மெட்டாமற் போகவில்லை. உலகவியல்பிதுவென்று நினைத்து, அவள் தன் விரோதிகளை வெறுக்கவுமில்லை. பரோபகார சிந்தையே அவள் மனதில் இப்பொழுது குடிகொண்டிருந்தது. ராமுவையும் ஜானகியையும்போன்ற நண்பர்களிருந்தால், யாவரும் க்ஷேமமடையும்வண்ணம், அலவந்தியில் எவ்வளவு சீர்திருத்தங்கள் செய்யலாமென்று நினைக்கலானாள்.

---

## அத்தியாயம் 34.

### கேஸ் விசாரணை.

அலவந்தியில் இவ்வண்ணம் ஆற்றங்கரைப்பேச்சு முடிவதற்குள், திருச்சினுப்பள்ளி கோர்ட்டில் அன்றையதினமே விசாரணையும் ஆரம்பித்துவிட்டது. கைதிக்கூண்டில் தொப்பையுடன் முருகனையும், வேறு முப்பது கைதிகளையும் ஏற்றினார்கள். அக்கூட்டத்தில் பள்ளி படையாச்சிகளைத் தவிர, சிலர் பிராம்மணர்களும் இருந்தனர். கிராமத்தில் எதிர்த்து நின்று கலகம் செய்யக்கூடியவர்கள் யாவரையும், தொலைத்து விடுவதற்காக, போலீஸாரின் ஒத்தாசையைக்கொண்டு பெரியசாமி அய்யர் தன்னதிகாரத்தின் கடைசி காரியமாகச் செய்தவேலை இது. திருச்சினுப்பள்ளி "ஸெஷன்ஸ்" கோர்ட்டு அவருக்குப் புதிதன்று; எவ்வளவோ தடவை சொந்தகாரியமாய் அங்கு சென்றிருக்கிறார். இச்சமயம் அவரது ஆக்கிரகம் கடைசியாய்க் கொழுந்துவிட்டெரிந்து, அணையும் சமயமா யிருந்தது.

நாகரிக வாழ்க்கையின் வியாதிகளோடு உடனுதித்த நானுவித ஜனங்களால் அந்நியாயஸ்தலம் நிரம்பியிருந்தது. உயர்ந்த ஆசனத்தில், அசைவற்ற தெய்வவிக்கிரகம்போல் எழுந்தருளியிருக்கும் நியாயாதிபதி தங்கள் கஷ்டங்களை நிவர்த்திக்கவேண்டுமென்று அவர்கள் கோரியபடி நிற்க, "ஸெஷன்ஸ்" ஜட்ஜ், மிஸ்டர். டர்னர், (எம். ஏ., ஐ. ஸி. எஸ்.,) துரையவர்களும், தன் முதுமைப் பருவத்திற்கேற்ற சீலம் குடிகொண்ட, அமைதியான முக காந்தியுடன் வீற்றிருந்தார்.

மேலிருக்கும் பங்கா முன்னும் பின்னும் வெகு மெதுவாய் அசைந்துகொண்டிருப்பதைப் பார்த்தால், மறைவில் பங்கா இழுப்பவன் சுவற்றில் சாய்ந்தபடி அரைத்தூக்கத்திலிருக்கவேண்டுமென்று தோன்றிற்று. ஈக்கள் அவர் மேலுட்காராமலிருக்கவும், ஒழுங்காய்க் கத்தரித்துவிடப்பட்ட ஜட்ஜியினது நரைத்த மீசைசிறிது கலைந்துபோவதற்குமே போதுமான காற்று பங்காவிலிருந்து வீசிக்கொண்டிருந்தது. இழுப்பவன் தன் அரைத்தூக்கத்தினின்றும் திடீரென விழித்துக்கொண்டு, பயத்துடன் வேகமாய்க் கயிறையிழுத்ததும், கோர்ட்டு விசாரணை செய்பவைபோலும் சில நரை மயிர்கள், காற்றடிக்கும் பக்கத்தை விளக்குபவைகளாய் டர்னர் துரையவர்கள் தலையினின்றும் சிலிர்த்து நின்றன. ஆனால் ஜட்ஜ் அவர்கள் அதைக் கவனிக்கவில்லை; என்றுமில்லாத கூட்டம் கோர்ட்டில் கூடியிருப்பதை ஆச்சரியத்துடன் நோக்கிக்கொண்டிருந்தார். கறுப்பிலும், மாநிறத்திலும், அளவில்லாத வித்தியாசத்தோடு கூடிய அக்கூட்டத்தாரைச் சிறிது தயவுடன் பார்த்துக்கொண்டிருந்த டர்னர் துரையவர்கள், இக்கலகக் கேஸில் ஜனங்கள் இவ்வளவு ஊக்கமடைந்திருப்பதைக் கண்டு கொஞ்சம் கவலையடைந்தார். ஆகவே, யோசனைக் கடையாளமாய் அவர் நெற்றியில் சுருக்கமுண்டாக, அவரது வயதுமுதிர்ந்த கண்களுக்காதாரமாகிய மூக்குக்கண்ணாடியும் மூக்கில் நன்றாய்ப்பதிந்தது. இவ்வாறு விசாரணைக்குச் சித்தமான ஜட்ஜ் அவர்களைப்பார்க்க, பக்தி சிரத்தையுடன் நின்றிருக்கும் கட்சிக்காரர்களுக்கு மிகவும் தைரிய முண்டாயிற்று.

டர்னர் துரையவர்கள், பால்யத்தில், "கேம்ப்ரிட்ஜ்" ஸர்வகலாசாலையில் முதல் தரமாய்ப் படித்துத் தேறியவர்களிலொருவர். வேண்டுமென்றே இந்தியா ஸிவில் ஸெர்விஸில்

அமர்ந்தார். ஸாஹித்தியத்தில் அவர் முன்னோர்களுக்கிருந்த அபிருசி அவருக்கு மிருந்தது. "பொருளீட்டுவதெப்படி," என்றும், "களிக்கக் கற்பதெப்படி," என்றும் இரண்டு பிரசித்தமான கிரந்தங்களை இயற்றிவர் அவர் தந்தையே. விமர்சத்திற்காக அனுப்பப்பட்டு, விமர்சம் பண்ணப்படாமலேயிருந்த பிரதிகளைத் தவிர, இவ்வருமையான புஸ்தகங்களின் மற்ற பிரதிகள் யாவையும் எண்ணிக்கை குறையாமல், தந்தை மகனுக்கு ஆஸ்தியாக வைத்துச்சென்றார். சிறு வயதில் டர்னர் துரையவர்கள் மனதை "டி' குவின்ஸி" என்னும் நூலாசிரியர் எழுதும் கம்பீர வாக்கியங்களே வெகுவாய்க் கவர்ந்தன. அதைப் படித்ததனால், நினைத்து வெளியிடற்கரிய வாசக நயத்திலபிமான முண்டாகி, காரியசித்திக்குரிய மனோபாவங்களுண்டாகாமற்போகவே, அது அவருடைய தன்மைக்கு பொருந்தவில்லை. ஆகவே அடுத்தபடி தனக்கு மிகவும் பிரியமாயிருந்த "மெகாலே" என்பவர் எழுதிய நூல்களை அடங்காக் களிப்புடன் வாசிக்கத் தொடங்கினர். அதனால் அதன்யர்களான கீழ்நாட்டு ஜனங்களின் விஷயத்தில் அவருக்கு ஒரு விதமான அனுதாப மேற்பட்டது. ஹிந்துஸ்தானத்தில் ஜனசஞ்சாரமற்ற பிரதேசங்களுக்காவது சீனதேசத்திலுள்ள தனிமையான விடங்களுக்காவது சென்று ஓர் பாதிரியாகத் தன் வாழ்நாளை அவர் கழிக்க நினைத்தாராயினும், "பொருளீட்டுவதெப்படி," என்ற உயர்ந்த புஸ்தகத்தை யியற்றிய அவர் தந்தை, செல்வத்திலும் பதவியிலும் ஆசைகொண்டவராய், மகனை "ஹோம் ஸிவில் ஸெர்விஸி"ல் வேலையி லமரும்படிக் கட்டாயப்படுத்தவே, டர்னர் துரை, இருவருக்கும் பொதுவாய், "இந்தியா ஸிவில் ஸெர்விஸே" சரியென்று தீர்மானித்தார். அச்செர்விஸார்

பெறும் உயர்ந்த சம்பளத்தை மனதி லெண்ணியே, அவர் அனுமதி கேட்டபொழுது, அவரது தந்தை கடைசியாக ஒப்புக்கொண்டிருக்கவேண்டு மென்று தோன்றுகிறது. இளம்பருவத்திற்கேற்ற உறுதியான தீர்மானங்க ளிருந்தும், பிள்ளைகள் பெற்றோர் சொற்படிக் கேட்டுநடக்கும் காலம் அக்காலம். பூர்வத்தில் நெடுங்காலம் சிறப்புடன் விளங்கியதா யிருந்ததென, சென்னை ராஜதானியைப்பற்றி "மெகாலே" என்னும் நூலாசிரியர் வெகு அழகாய் சிலாகித்து எழுதி யிருந்ததைப்படித்திருந்ததாலும், அது சமமான சீதோஷ்ண ஸ்திதியை யுடையதாயிருந்ததுமன்றி, அரிசியுணவால் வரும் புத்திநுட்பமும் கணிதசாஸ்திரப் பயிற்சியும் அங்கு நிரம்பி யிருந்ததாலும், சென்னை ராஜதானியே தனக்குத் தகுந்தவிட மென்று டர்னர் துரை கருதலானார். பரீக்ஷையில் தேறிய விதம், அவர் மனோபாவத்திற்கும், அவர் அடைந்த தேர்ச் சிக்கும் மாறாக விருப்பினும், டர்னர் துரையும் கணித சாஸ் திரத்தில் கூடியவரையில் தேர்ச்சிபெற்றவரே.

சென்னையில் அவர் வேலையி லமர்ந்து மூன்று வருஷமா வதற்குள், செங்கற்பட்டு, வட ஆற்காடு ஜில்லாக்களில் கடு மையான பஞ்ச முண்டாயிற்று. இந்தியர்களிடத்தில் அரு ளும், ஏழைகளிடத்தில் இரக்கமும் குடிகொண்டவரென மிஸ்டர். டர்னர் கவர்மெண்டில் பெயர் வாங்கியிருக்கவே, பஞ்சநிவர்த்திசெய்யும் ஏற்பாடுகளை கவனிக்கும்படி அவரே நியமிக்கப்பட்டார். அவ்வேலையில் அவருக்கும் நிரம்ப சிரத்தை யுண்டாக, பஞ்சத்திலடிபட்ட ஜனங்களின் கஷ் டத்தை யுணர்ந்து, அனுதாபம் மேலிட்டு அவர்கள்பொருட் டுப் பரிதவிக்கலானார். உலகில் கறுப்பு, வெளுப்பு முதலிய நிறமுடைய எல்லா வகுப்பினரும் ஒன்றே என்னும் தத்துவத்தையும் அறிந்து, ஜாதிவர்ணபேதங்களால் உண்

டாகும் விரோதங்களையும் மனதைவிட்டு அடியோடு நீக்கி விட்டார்.

பஞ்சநிவர்த்திக்காக ஓர் ஏரியின் அணைக்கரைமேல் ரஸ்தாவொன்று போடுவதாகத் தீர்மான மாயிற்று. இவ் வேலையினால் மூன்றுவித பிரயோஜனங்க ளுண்டாவதாயிருந் தன. அதாவது, ஏரி ஆழமாகவும், அணைக்கரை முன்னி லும் உறுதியாகவுமாவதுடன், முன்பு குறுகியதாயிருந்த பாதையை இப்பொழுது விசாலமாகச் செய்வதுமே. மேலும் அத்தீர்மானம் பஞ்சத்திலடிபட்ட, நூற்றுக்கணக்கான ஆண், பெண்களுக்கு வேலையளிப்பதற் கேற்றதாயுமிருந்தது. தனது சிறந்த அறிவிற்கெட்டிய யோசனைகளை யெடுத்துக் கூறி உத்திரவிடுவதோடு நில்லாமல், டர்னர் துரையவர்கள் நேரில் தானே சென்றும் கவனிக்கலானார்.

அவ்வாறு வேலை செய்துகொண்டிருந்தவருள், பதி னேழு வயதுள்ள யாதவச் சிறுமி யொருத்தி காணப்பட் டாள். உலகமெங்கும் ஆயர்குல மங்கையர் எழிலிற் சிறந்த வர்களாகவே யிருக்கின்றனரல்லவா? மேகத்தின் நடுவி லொளிரும் மின்னற்கொடிபோலும், பசும்புற்களின் மத்தி யில் மாசு மறு வற்றுத் தோன்றும் தும்பைமலர்போலும் விளங்கிய அச்சிறுமி, தலைமீது மண்கூடையைச் சுமந்து, புன்னகை பொலியும் முகத்துடன், அவ்வேலைக்கே பிறந்த வள்போல், நிதானமாய் ஏரிக்கரைமேல் ஏறிச்சென்று மண் ணைக் கொட்டிக்கொண்டிருந்தாள். அப்பொழுது அவளைப் பார்க்க வெகு அழகாயிருந்தது!

ஒரு ஆலமரத்து நிழலி லுட்கார்ந்து வேலையைக் கவ னித்துக்கொண்டிருந்த டர்னர் துரையவர்கள், பசும்புற்றரை யில் படமெடுத்தாடும் பாம்பென நின்ற, அவளது அழகில்

பதிந்த தன் கண்களை எடுக்கமுடியாதவரா யிருந்தார். அவர் மனதில், தனது உயர் குலத்தையும், கல்வி யறிவையும் பற்றிய யோசனைகள் பலவாறு தோன்றினும், அதிகாலையில் சூரியனது வெப்பத்தால் அழிவதற்குமுன், புல்நுனியி லிருக்கும் சிறு பனித்துளியானது தன் கீழுள்ள மற்றொரு துளியுடன் சேருவதற்கு மெல்லிய காற்றை யெதிர்நோக்கி யிருப்பதுபோல, விவாகமாகாத அவரது காதல் தனக் கென்று கடவுள் சங்கற்பித்திருக்கும் துணைவியுடன் சேரப் பேரவாவுற்றது.

வறுமையில் வருந்தும் சௌந்தரியமானது, கல்வியும் இளமையு முள்ளவர்களிடம் அடங்காக் காதலை யெழுப்பச் சக்திவாய்ந்ததன்றோ! தன்னை மறந்து தாபத்தைத் தணிக் கும் தருணத்தில், ஆசையானது ஜாதி, தேசம், வர்ணம், கௌரவம், பதவி முதலியவை யொன்றையும் பாராது, பள் ளத்தாக்கில் வந்து விழும் அருவிபோல், ஒருவராலும் தடைப்படுத்தமுடியாதல்லவா? அந்த இடைச் சிறுமி, பதினேழாம் நூற்றாண்டில் நல்ல செல்வாக்கிலிருந்த குடும் பத்தில் தோன்றியவள். இப்பொழுது ஏழ்மை ஸ்திதியி லிருப்பினும், பொன்போன்ற மேனியும், பூமகள் போன்ற முகமு முடையாள். அவளது மாந்தளிர் மேனியின் காந்தியே அழகுக்கெடுத்த நிறமென டர்னர் துரைக்குத் தோன் றிற்று. அப்பெண்ணின் காதலைப் பெற்று, அவளைச் சீக்கி ரத்தில் விவாஹம் செய்துகொண்டார். ஆனால், அவரினத் தார்கள் இதற்காக அவரை ஜாதிப்பிரஷ்டம் செய்துவிட் டார்கள்.

டர்னர்துரை அதைச் சிறிதும் பாராட்டாமல், தன் வேலையிலும் மனைவிமீதுமே தன் கருத்து முழுவதும் செலுத்தலானார். அவர் அவளுக்குக் கல்வி கற்றுக்கொடுக்க,

இயற்கையில் புத்திசாலியான அச்சிறுமியும் சுறுசுறுப்புடன் படித்துவந்ததுடன், கணவனிடம் பூர்ணப்பிரேமை செலுத்தி, அவன் மனதிற்கு விரோதமின்றி ஒழுகிவரலானுள். இருவரும் ஒருவரை யொருவர் மனதார நேசித்தனர். ஆனல், ஈசுவராதிகளுக்கு இத்தம்பதிகளின் பரிபூர்ணமான இல்லறவின்பம் சம்மதமாகாம லிருக்கவே, முதற்கனி தோன்றுமுன், இடியினல் தாக்குண்ட இளம் மரம்போல், அப்பெண் பிரஸவித்து உயிர் துறந்தாள். அக்குழந்தையும் பதினைந்து நாட்களுக்கெல்லாம் இவ்வுலகை நீத்துச் சென்றது.

மனைவியை யிழந்த பிறகு, டர்னர் துரை மனமுடைந்து தனிமையாய்க் காலம் கழிக்கலானுர். அறுப்பு சமயத்தில் பெரும் மழையடித்து முழுகிக்கிடக்கும் வயல்களை நோக்கித் தவிக்கும் குடியானவனைப்போல், உள்ளுக்குள்ளேயே பெருமூச்செறிந்து வாடுவாராயினர். எங்கிருந்தோ ஒரு புதிய புயற்காற்றுத் தோன்றி, கப்பலின் கொடிமரத்தை முறித்துப் பாய்மரத்தையும் ஜலத்தில் வீழ்த்தியது போலாயிற்று அவர் நிலைமை. ஆயினும் மிஸ்டர். டர்னர் துக்கத்திலும் கலங்காமல், கூட இருப்பவர்கள் ஒருவராவது தன்னிடம் நட்புபாராட்டாதிருந்தும், தனது கடமை யென்றெண்ணியே உத்தியோகத்தைவிட்டு நீங்காமலிருந்தார். அவருக்குப் பிரியமான கலெக்டர் வேலை, இனி, அவருக்கில்லை யென்ருய்விட்டது. தேவதைகளுடைய அனுக்கிரகத்திற்குப் பாத்திரமாயில்லாததுபோல, மனிதர்களுடைய கடாக்ஷத்திற்கும் அருகரில்லாத டர்னர்துரை, நியாயம் தீர்க்கும் துறையிலேயே அமரும்படியாய் நேர்ந்தது. அதிலும், ஹைகோர்ட்டு ஜட்ஜ் பதவிக்கு அவர் உரியவராயிருக்கும் பொழுது, ஒவ்வொரு சமயமும் அவரை யலக்ஷியம்செய்து,

மேலதிகாரிகள், இப்பதவியை வேறொருவருக்கே அளித்து வந்தனர். ஆயினும், மனைவி யிறந்தபொழுதே, புகழிலும் பதவியிலும் ஆசையற்ற டர்னர் துரை, இப்பொழுது, வேதாந்த புஸ்தகங்களைப் படிப்பதற்குப் பதிலாய்ச் சொந்த அனுபவத்தினாலேயே மிகவும் விரக்தி யடைந்துவிட்டார்.

குறித்த வயது நெருங்கி, துரையவர்கள் இரண்டொரு மாதத்தில் வேலையை விட்டு நீங்குவதற்காயிற்று. முருகனது விசாரணையே அவர் கடைசியாய் விசாரிக்கும் பெரிய விசாரணையா யிருந்தாலுமிருக்கலாம். ஆகவே, சற்றுக் கவலையுடன் கவனித்து, நியாயத்தைச் சரியாய்ச் செலுத்தவேண்டுமென்று தீர்மானித்த துரையவர்கள் வழக்கத்தைவிடப் பின்னும் அசைவற்றவராய், தெய்வ மூர்த்தியைப்போல், ஆசனத்தி லமர்ந்திருந்தார்.

இவ்விசாரணைக்குப் பட்டணத்திலிருந்து கேதாரி வருகிறானென்று கேட்டு, இன்னும் அதிகமாகவே கூட்டம் கூடலாயிற்று. வக்கீலாக வாதிப்பதில் மட்டுமல்ல,—ஜனசங்கத்தில் எழுந்துநின்று பேசுவதிலும் நன்கு திறமைவாய்ந்தவனென்னும் பெயர், யானையின் கழுத்திலிட்ட மணியோசைபோல், வெகுதூரம் முன்சென்று பரவியிருக்கவே, காவிரிக் கரையில் பிறந்த சிறுவர்கள் ஆங்கிலம் பேசிக் கேட்பதில் எப்பொழுதும் மிக்க பைத்தியம் கொண்டவர்களாதலால், பட்டணம் வக்கீல் பேசுவதைக் கேட்கவேண்டுமென்று திரள்திரளாய் வந்து கூடினார்கள்.

கேதாரியும் அவர்கள் எதிர்பார்த்ததற்கு மாறாக இல்லை. எழும்பிக் குதிக்கும் உயரத்துக்குத் தக்கபடி, அவனும் உயர்ந்து நிற்பவனா யிருந்தான். தலையி லணிந்திருந்த தலைப்பாகை நீங்கலாக, மற்றபடி வெள்ளைக்காரர்களைப்போலவே வெகு நாகரீகமாய் கேதாரி உடை யணிந்திருந்தான். அவன்

கழுத்திலிருந்த "காலரும்", "டையு"மே, அவன் கண்டத்தினின்றும் இங்கிலீஷ் வார்த்தைகளைச் சரமாரியாய்ப் பொழிந்தன போலும்! அங்கு திரண்டிருந்த ஜனங்களுள் கல்வியில் ஏற்றத்தாழ்வு வெகுவா யிருந்தபோதிலும், வசீகரமான தோற்றத்தைத் தேர்ந்தறிவதில் அவர்கள் சமமாகவே யிருந்தபடியால், கேதாரியினது இளமையையும் நடையுடை பாவனைகளையும் அனைவரும் வியந்து நோக்கலானார்கள்.

ஆனால், இவ்விஷயங்களில் டர்னர் துரையவர்களின் அபிப்பிராயம் வேறாயிருந்தது. தன் தயவை யெதிர்பார்ப்பவனாய் நிற்கும் கேதாரியை நோக்கியதும், அவனை முற்றும் ஏற்றுக்கொள்ளாதவர்போல், சற்று முகத்தைச் சுருக்கிக்கொண்டார். ஹிந்துக்கள் தங்களது ஆடம்பரமற்ற, அழகிய உடையையே யணியவேண்டுமென்பதுதான் டர்னர் துரையவர்களின் விருப்பம். மேலும், உள்ளூர் வக்கீல்களே அவர் மனதிற்குப் பிடித்ததுடன், பட்டணம் வக்கீல்களிடத்தில் மிகவும் வெறுப்புக்கொண்டவராயு மிருந்தார். உண்மை யாதெனில், ஹைகோர்ட்டையே அவர் உள்ளூர வெறுத்தாரென்று கூறலாம். ஆகவே, கேதாரியைப்பார்க்கும் பொழுதே அவருக்குப் பிடிக்கவில்லையாயினும், அதற்காகத் தன் வெறுப்பை அவர் விசாரணையில் காட்டக்கூடியவரல்லர்.

கைதிக்கூண்டில் முருகன் தலைசுற்ற, கால்கள் நடுங்க, மயக்கமுற்றுக் கீழே விழுந்துவிடுபவன்போல் நிற்க, தொப்பையோ நியாயஸ்தலத்தில் வந்து நின்றதும், நிரம்பத்தைரியமடைந்தவனாய், குசு குசுவென்று முருகன் காதில் நம்பிக்கையும், தேறுதலுமுண்டாக்கக் கூடிய சொற்களினால் அவனைத் திடப்படுத்தலானான்.

"முருகா, துரையைப்போலே உடுத்தியிருக்கும் பட்டணம் வக்கிலைப் பாரு. தைரியத்தை விடாதே! வில்லிலே

வைச்ச அம்புபோல, நம்ம எதிரிங்கமேலே பாயறதுக்கு எவ்வளவு தயாராயிருக்காரு, பார்த்தையா ? சீக்கிரத்திலே நமக்கு விடுதலை யாவும்! இப்பவே, என் காலிலிருந்து விலங்கு நழுவுதுபோலே தோணுது. நாம் விடுதலை யடைஞ் சோமின்னு கேக்கிறவரையுமாவது பிராணனை வைச்சுக் கொண்டிரு!" என்று, இவ்வாறு, தொப்பை மன்றாடிக் கூறும் வார்த்தைகளுக்கு ஒன்றும் பதிற் சொல்லாமல் முருகன், இவர்கள் மூலமாய் முடிவில் தன் கதியைத் தீர் மானிப்பவர் கடவுளே யென்று உணர்ந்தவன்போல், முதலில் கேதாரியையும், பிறகு ஜட்ஜையும், கடைசியாக அவ்வறையின் மேல்தளத்தையும் அண்ணாந்து நோக்கினான்.

நாட்கூலி பேசிவந்த கேதாரியும், வெளிஜனங்களும் எதிர்பார்த்தபடி, விசாரணை முடிய அதிகநாட் செல்ல வில்லை. கிரிமினல் கேஸ்களுக்குச் சற்று புதியவனாயிருந்த போதிலும், கேதாரி தன்னாலியன்றமட்டும் சிரமப்பட்டான். அவனது இனிய குரலும், வாக்கின் நயமும், ஓங்கியடித்துப் பேசும் திறமையும், கிரிமினல் கேஸில் அவனுக்கிருந்த தேர்ச்சிக் குறைவை அதிகமாய் வெளித்தெரியவொட் டாமற் செய்தன.

தொப்பைக்கு இங்கிலீஷ்பாஷை நன்றாய் விளங்காவிடி னும், கேதாரியிடம் பூர்ண மதிப்பு உண்டாய்விட்டது. அவன் புத்திசாலியாயிருந்ததுடன், நல்ல படையாச்சி யினத் தைச் சேர்ந்தவனாயுமிருந்ததால், அவனது வேட்டை நாய்க் குணம் சண்டைமோப்பம் பிடித்துக்கொண்டு கிளம்பலா யிற்று. யுத்தத்தில் அங்கஹீனனாய்ப்போன போர்வீரனைப் போல், நாம் ஒன்றும் செய்வதற்கில்லையே யென்று கைதிக் கூண்டில் தவித்தவண்ணம் நின்றான். போராடும் தொழில் களிலெல்லாம் வக்கீல் தொழிலே, இருதிறத்தாருக்கும்

நாசம் விளைப்பதில், வாட்போரைக் காட்டிலும், இன்னும் பெயர்பெற்றதன்றோ ?

தொப்பை புத்திசாலியாயும், சண்டையிடும் குண முள்ளவனாயு மிருந்ததால், கேதாரியிடம் தோன்றிய வியப்பில் தன்னையே மறந்துநின்றான். அடிக்கடி முருகனை முழங்கையாலிடித்து, வெளிப்படையான பரிகாசக்குரலில், "என்ன முருகா, இந்த சமயத்திலே தூக்கமா ? பட்டணம் வக்கீல் சிங்கம்போலே கர்ஜிப்பதைப் பார்த்தையா ? நமக்கு நிச்சயம் விடுதலை யாவும்! பாவம்! நம்ம உள்ளூர் வக்கீல் ஐயரு, அவர் பக்கத்திலே ஆட்டுக்குட்டியைப்போலே அடங்கி, ஒடுங்கி உக்காந்து, என்னமோ முணுமுணுத்துக்கொண்டிருக்காரு! அனுட்டானம் பாக்கி மந்திரமோ என்னமோ ! பட்டணம் வக்கீல் அவரைத் திரும்பிக் கூடப் பார்க்கல்லே! நல்ல வேளை,—நாம் பதஞ்சலி அய்யரையே முழுவதும் நம்பாதிருந்தோம் ! கேதாரி அய்யரு பேசறதையே எல்லாரும், வேறே நினைவில்லாமே கேட்டுக்கொண்டிருக்காங்க. முருகா, உன் தென்னந்தோப்பு போனாலும் போகட்டும் ; இதைப் பார்க்கக்கொடுத்துவைக்கணுமே! நமக்கு விடுதலையாவது நிச்சயம். அவர் விடாதே, மேலே மேலே எப்படிப் பேசுறாரு, பார்த்தையா, முருகா ? அவரோடே யாராவது நிற்கமுடியுமா ?" என, முருகன் பதிற் கூற இஷ்டமில்லாமலே மெதுவாய், "இருந்தாலும், தொப்பை, ஜட்ஜ் அவர் பேசறதைக் கவனிக்கல்லே. அடிக்கடி உதட்டை மடிச்சு, மீசையையும் முறுக்கிக் கொள்ளுறாரு, பார்த்தையா? அவருக்கு அலுப்பாயிருக்காப்போலே தோணுது. நீ எப்பொழுதும் செய்யறாப் போலே, நம்ம பட்டணம் வக்கீலும் மிதம் தெரியாமே இருக்காரு! நமக்கும் பாஷை தெரியல்லே. எல்லாம் வெறும் மிரட்டலா யிருந்தாலுமிருக்கும். நீ கொண்டாடுறவங்க

ளிடத்திலே எனக்கு இப்போ சந்தேகம் தோணத் தொடங்குது. கடவுளிருக்காரு! என் தப்பு எனக்கு நன்ரு தெரியும்! கேசுகட்டிலே யில்லாட்டாலும், என் மனசிலே எழுதிருப்போலே பதிஞ்சிருக்குது. அப்புறம் வருத்தப்படுறத்திலே,—'' என்று கூறும்பொழுது, சண்டையிடுபவன் போல் நின்று சதா குசுகுசுவென்று, ஏதோ பேசிக்கொண்டிருக்கும் தொப்பையைக் காணப்பொறுக்காத சேவகன், பின்புறமிருந்து, அவனைப் பிடித்திழுத்துச் சரியான நிலையில் நிறுத்தவே, முருகன் மேலே பேசப் பயந்தவனாய் வாயை மூடிக்கொண்டான்.

விசாரணை மூன்று நாள் நடந்தது. கேதாரி தன்னாலியன்றமட்டும் சிரமப்பட்டான். தூங்காமல் கவனித்துக் கொண்டிருக்கும் பொழுதே ஒன்றும் விளங்காதவர்களாய், இங்கிலீஷ் பாஷை சிறிதும் பரிசயமில்லாத ஜூரர்கள் கேதாரியின் வாக்கு சாதுர்யத்தி லீடுபட்டவர்க ளானார்கள். மூன்ருவது நாள் மாலை ஐந்துமணிக்கு விசாரணை முடிவு பெற்றது. தன் வழக்கத்திற்கு விரோதமாய், டர்னர் துரையவர்கள் தீர்ப்பை உடனே கூருமல் நிறுத்திக்கொண்டார்.

---

## அத்தியாயம் 35.

### அபாயகரமான பரிகாரங்கள்.

தனக்கு நேர்ந்த கதிக்காகத் தன்னையே கடிந்துகொண்டு முருகன், திருச்சிறைப்பள்ளி பெரிய ஜெயிலில் வாய்திறவாது பொறுமையாயிருக்க, தொப்பையோ, உலகமுழுவதையுமே பழிக்குப்பழி வாங்கிவிடுவதாகச் சபதம் கூறிக்கொண்டிருந்தான். மௌனமாய்ப் பொறுத்துக்கொண்டிருக்கும் சுபாவம் அவனுடையதல்ல. அவ்வாறு எதிர்த்துநிற்கும் இயல்பைச் சிறைவாசமானது மேன்மேலும் தூண்டி, விருத்தி செய்யக்கூடியதே யன்றோ! நல்ல காலமாய், அவனும் முருகனும் ஒருவரை யொருவர் அடிக்கடி பார்த்துப் பேசலாமென்றிருந்ததனால், நல்வார்த்தை சொல்லி முருகன் அவனது ஆத்திரத்தைச் சிறிது தணியச் செய்துகொண்டிருந்தான்.

"எந்திரத்திலே மாவு அரைப்பது ரொம்ப கஷ்டமாயிருக்கு," என்று முருகன் ஒரு நாள் தொப்பையினிடம் கூறினான். "ஓலை முடைவது, கயிறு திரிப்பது முதலிய கஷ்டமில்லாத வேலைகளைக்கூட கடைசிகாலத்திலே ஏற்பட்ட சௌக்கியத்திலே நான் மறந்துவிட்டேன். என் உள்ளங்கை யெல்லாம் கொப்பளிச்சுப்போயும், இன்னும் காச்சுப் போகல்லே. நாம் ஜெயிலுக்கு வந்து ஒரு மாசந்தானே ஆச்சு! பத்து வருஷமா வேலை செய்யாதே சுகமாயிருந்ததிலே, என்தேகத்துக்கு ரொம்ப சொகுசு உண்டாயிட்டது. எப்படியோ பொறுமையா நான் செய்துகொண்டு வந்தாலும், ஜெயில் காப்பாங்க சும்மா இருக்கிறதில்லே. ஒண்ணு

மில்லாத்துக்கெல்லாம் நமக்குத் தண்டனை விதிப்பது அவர் களுக்கு ஒரு சந்தோஷமாகவே யிருக்குது. முதல் மாசத்தி லேயே, என் மனசுக்கு, முன்னேவிட, இன்னும் ஒழிவு உண் டாயிட்டது. ஜெயில் ஏற்பாடே ரொம்ப கேவலமாயும், கொடியதாயுமிருக்கு; ஜனங்களை மிருகங்கபோலே அடிச் சுடறுங்க! மேஞ்ச குத்தத்துக்காக ஆடு மாடுங்களைப்பட்டி யிலே அடச்சு வைக்கிறதுபோலே, மனிசருங்களையும் சில் லரைத் தப்புக்கெல்லாம் ஜெயிலிலே அடச்சுவைப்பதா? உலகத்திலே எவ்வளவோ விஷயங்கள் தலைமாறிக்கிடக்குது! தொப்பை, நீ சொல்லறதிலே ரொம்ப நியாயமிருக்குன்னு எனக்குச் சில சமயங்களிலே தோணுது!''

அவன் பேசி முடியும் மட்டும் காத்திருந்து, பிறகு தொப்பை, என்றுமில்லாத அமைதியுடன், "இருந்தாலும், முருகா, நீ கோவமில்லாதே சொல்றே! வேலை செய்யச் செய்ய, எனக்கு ஆத்திரம் அதிகமாகவே கிளம்புது. பணம் சம்பாதிக்கப் பிரயத்தினப்பட்டதுக்காக நம்மை இப்படி ஜெயிலிலே அடைச்சிருக்காங்களல்லவா? அதுக்காக நான் ஊரையே பழிக்குப்பழி வாங்காதே போறேனு, பாரு! என் பிராணன் போறவரையும், நானும் சும்மா விருக்கமாட்டேன். அவங்களையும் இலேசிலே விடமாட்டேன். இங்கே என் னைப்போலே இன்னொருத்தனும் இம்மாதிரி கறுவிக்கொண் டிருக்கான். ஜெயில் காப்பாங்களுக்கெல்லாம் எங்கிட்டே பயம்,'' என்றான்.

"தொப்பை, பாறைங்கமேலே மோதி மோதி சமுத் திரம் ஓஞ்சுபோறாப் போலே, நீயும் களைச்சு ஓஞ்சுபோயி, முன்னினும் அதிகமா கஷ்டப்படும்படியாகும். முரட்டுத் தனமா கிளம்புறதிலே எப்பொழுதும் லாபமில்லே; ஜெயி லிலே அது ஒரு நாளும் வெல்லாதுன்னு தெரியாதா? நீ

பேராசைக்காரனும், அடங்காத மூர்க்கனுயு மிருக்கே! பேராசைப்படுவது எப்பொழுதும் பெரிய தோஷம்! என் எசமான், இருக்கிறவரையும், அதை யெடுத்துச் சொல்லி யிருந்தும், எனக்கு வயசான பிறகுதான் தெரிஞ்சுது. பாடு பட்டுழைக்கும் பண்ணையாளாயிருந்து, குத்தகை யெடுப் பவனாய், மற்றவங்களை வேலை செய்யவிட்டு, நான் சுகமா யிருக்கத் தொடங்கியவுடனேயே எனக்கு உற்சாகம் போயிட்டது. அப்போ, நான் தினம் என் கையாலே வேலை செய்துகொண்டு எவ்வளவோ திருப்தியாயும் ஆநந்தமாயு மிருந்தேன்!''—இவ்வாறு முருகன் பேசியதை யொத்துக் கொள்ளாமல், தொப்பை தலையை யசைக்க, "கெட்டவேளை யிலே உன் மூஞ்சியிலே முழிச்சேன் இன்னு, பொன்னி எப் பொழுதும் சொல்லுவா. அது சரிதான்! கள்ளுக்கடை வைச்சதுதான் நம்ம நாசத்துக்குக் காரணம்!'' என்றான்.

"இருந்தாலும், முருகா, நாம் ஒரு தப்பும் செய்யா திருக்கும்போதல்லவா நமக்குத் தண்டனை விதிச்சிருக் காங்க!'' என்றான் தொப்பை. "நடந்த கலகத்திலே நமக்கு ஏதாவது சம்பந்தமுண்டா? சண்டையிலே தைரியமா பின் வாங்காமே இருக்கவேணுமின்னு விரும்பி வந்தவங்களுக்கு நாம் கள்ளு விற்றோமேயொழிய, வேறென்ன செய்தோம்!''

"நாம் இன்ன தப்பு செய்தோமின்னு சொல்லமுடியா விட்டாலும், மூணு வருசத்திலே, ஏழைங்களை வயித்துக் கில்லாதே அடிச்சு, அவங்களை கள்ளுக் குடிக்கச் செய்து, குழந்தைங்க வயித்திலே மண்ணைப்போட்டு, ரகசியமா மிராசு தாருங்களுக்கும், குடியானவங்களுக்கும் கலகத்தையும் கிளப்பிவிட்டது நாம்தானே! ஒரு மொந்தை கள்ளு குடிச்ச பிறகு, இன்னொரு மொந்தை கள்ளை ஊற்றும் நேரத்திலே, மணிக்கணக்கா, உன் தத்துவோபதேசத்தை நீ பண்ணினே!

ஒரு பண்ணையாளாயிருந்து, பள்ளி படையாச்சிங்கெல்லாம் வயித்தெரிச்சப்பட, நான் பணக்காரனைதைக் காட்டி, நானும் கிளப்பிவிட்டேன். கட்டட மிடிஞ்சு விழுந்தா, அதி லிருக்கும் நல்லவங்க கெட்டவங்க எல்லாருக்கும் ஒண்ணுத் தானே கேடு வரும்?''

"முருகா, ஏழைங்களை சேற்றிலழுந்திக் கிடக்காமே, கரையேத்தறதுக்கு நாம் பிரயத்தனப்பட்டது தப்பான காரி யமா? அஞ்சு தலைமுறையா, பெரியசாமி அய்யரு பெரும் பாவி; வயித்துக்கில்லாதே நேர்ந்த சாவுக்கெல்லாம் அந்த மனுசன்தான் காரணம்! ஏழைங்க வயித்திலே மண்ணைப் போட்டு, அப்பணத்தைக்கொண்டு இஷ்டப்படி, சௌக் கியமா, வக்கீலுங்க, பாப்பாருங்க, மந்திரவாதிங்க, இவங்க ளுக் கெல்லாம் கொட்டிக்கொண்டு மிருந்தாரு. நம்மை சோதிச்ச கடவுள் அவரையாவது, அவருக்கு முந்தி இருந்த வங்களையாவது சோதிச்சாரா?''

"தொப்பை, அவசரப்படாதே! இதெல்லாம் வெகு காலத்திற்குமுன் ஏற்படுத்தின கட்டுப்பாடு. இப்போ சரியா யில்லாட்டாலும், அப்போ நல்லதாய்த்தா னிருந்திருக்கும்! அதனாலே, பெரியசாமி அய்யருக்கு எல்லா அதிகாரமும் செல்லுதுபோலே தோணுது. அதிலேயிருந்த நன்மையெல் லாம் இப்போ போயிட்டதனாலே, சீக்கிரத்திலே அந்த ஏற் பாடு முழுவதும் குலைஞ்சு போவும், பாரு! இப்பவே நம் கண்முன்னே அப்படித்தான் நடக்குது.—நாம் ஒருவரை வயித்திலடிச்சா, நம்மை இன்னொருவன் வயித்திலடிப்பான்! அது நிச்சயம். பெரியசாமி அய்யருக்கும் நிலமெல்லாம் போயி, இப்போ கஷ்டகாலந்தான். பெரிய கோர்ட்டிலே போட்ட வியாச்சியங்கூட தோத்துப்போயிட்டதுன்னு

சொல்றுங்க. அது உண்மையானு, அவர் வாழ்வு துலேஞ்சு துன்னுதான் சொல்லணும். நமக்குப் பக்கத்திலே யிருப்பது "ஸிவில்" ஜெயில். இப்பவே அவரு அதில்தானிருக்கிறுரோ என்னமோ! ஏழைக் குடியானவங்களே அவர் அபகரிச்சிருந்தா, அவரை, அதற்குப்பதில், சாவுகாருங்களும் வக்கீலுங்களும் போலேயுள்ளவங்க கொள்ளேயடிச்சு சாப்பிட்டு விட்டாங்க. சிலந்தி ஈயைக்கொண்ணு ஜீவிச்சா, பல்லி சிலந்தியைத் தின்னு பிழைக்குது. இப்படித்தான் லோகத்திலே எல்லாம் படிப்படியா நடக்குது! நமக்குமட்டும் எல்லாம் ஒரே சமயத்திலே கண்ணிலே படல்லே!"

"முருகா, நீ சொல்றது ரொம்ப சரி! ஆதியிலே ஏற்பட்ட கட்டுப்பாடுதான் எல்லாக் கெடுதலுக்கும் காரணம்! மனுசன், பெரிய எந்திரத்திலே யொரு சக்கிரம்போலே, சுத்திக்கொண்டிருக்கான். நாம் அதைத் திருத்தறது எப்படி? இப்போ இல்லாட்டா, இனி ஒரு நாளும் முடியாது! நீயும், நானும் அது சுத்தப் பிசகு இன்னு சொல்லிக் கிளம்பாதே போனு, வேறே யார் வருவாங்க?"

"அதற்காக, நாம் எதிர்த்துக் கிளம்புறது கொஞ்சம் கூட சரியானவழி யில்லே. அந்தப் பெரும் சுழல்காற்று உன்னேயும் அடிச்சுக்கொண்டு போயிடும்! அது எக்கேடு கெட்டுப் போகட்டு மின்னு விடவேண்டியதுதான். எரியும் நெருப்பில் செத்தையைப் போடுவதி லென்ன பிரயோசனம்? வேகமாய்ச் சுத்திக்கொண்டிருக்கும் எந்திரத்திலே கையை வைச்சா, நம்மையும் தூளாக்கி எறிஞ்சுவிடும். அப்புறம் அடியோடு துலேஞ்சுபோகவேண்டியதுதான். இப்போ நாம் அடைஞ்சிருக்கிற கதி போதாதா! எது எப்படியிருந்தாலும், தொப்பை, கள்ளுக்கடை வைச்சு, நாம் உலகத்

தைச் சீர்திருத்தம் செய்யக் கிளம்புறது சரியானவழி யில்லே.''

"அது ரொம்ப நல்ல வழி இன்னு இல்லாட்டாலும் முருகா, நாம் கொஞ்சம் நல்ல ஸ்திதிக்குவந்து, ஏழைங் களுக்கும் கொஞ்சம் உபகாரம் செய்யவேணுமின்னு, கள் ளுக்கடை வைக்கிறதைவிட லாபமானது வேறே ஏது? குக் கிராமத்திலே நம்மைப்போலே சாதாரண ஜனங்களாலே, அதைவிட்டா, வேறென்ன முடியும்? பணமும் ஜலத்தைப் போலே, ஒரேவழியாத்தான் பெருகும். முருகா, நீயும் நானும், நம்ம காலுங்களைக் குடுத்து, இந்த வழியைவிட்டு அதைத் திருப்பாட்டா, வேறு யார் அதைச்செய்ய இருக்காங்க?''

"தொப்பை, நாம் காலுங்களை மாத்திரம் குடுத்து, அதைத் தடுக்கல்லே! கைகளையும் ரொம்பதூரம் சேற்றிலே புதைய விட்டுவிட்டோம்!'' என்று முருகன், மிகவும் வருத் தத்துடன், ஒரு பெருமூச்செறிந்து சொன்னான். கோபத்தி னால் வேறொன்றும் செய்யமுடியாமல், தொப்பை தன் பற் களை நறநற வென்று கடித்துக்கொண்டான்.

"இருந்தாலும், முருகா, எப்பொழுதும் அப்படியே ஆகாது. பூமி, காத்து, சலம், சூரியன், சந்திரன், நச்சத் திரங்கள் இதுங்கெல்லாம் சேர்ந்து, நம்மை ஏதோ ஒரு வருஷத்துக்குக் கட்டிப்போட்டு வச்சாலும், எப்பொழு தும், அது முடியாது! மீசைமுளேச்ச ஆண்பிள்ளை இன்னு, நானும் மீசைமுளேச்ச ஆண்பிள்ளைதான்! முன் காலத் தைப்போலே, யாரோடே வேணுமின்னாலும், சண்டை போட நான் தயார். ஆனு, இப்போ பேச்சுக்குத்தான் கால மாயிருக்கு; பலத்திற்கில்லே! முருகா, தொப்பையையும் முருகனையும் ஜெயிலிலே ஒரு வருஷம் அடைச்சுவைக்க நினைச்சதுக்கு, இந்த உலகம் என்ன பாடு படப்போகிறது,

பாரு! பெரியசாமி அய்யரு அதன் பலனை நன்ா கண்டா யிட்டது! இனி மற்றவங்களும்,—''

"தொப்பை, சர்க்காருக்கு விரோதமா, ஒரு ஏழை படையாச்சி நீ, என்ன பண்ணமுடியும்?'' என்று முருகன், கஷ்டத்துடன் சற்று சிரித்துக்கொண்டே கேட்க,

"போகத் போகத் தெரியும்!'' என்று தொப்பை உறுமிவிட்டு மௌனமாயிருந்தான்.

"நமக்கு இன்னும் மேலே ஆபத்து உண்டாக்கும்படி யான, யோசனையில்லாத முரட்டுக் காரியமோ ?'' என்று முருகன் கேட்க,

"முருகா, நீ என்னை நம்பாதே போனா, போ! என் உயிரைக் காப்பாத்த, நீ எவ்வளவோ செஞ்சிருக்கே! அந்த உயிர் போவதா யிருந்தாலும், என்னாலே உனக்கு வந்த தீவினையை நான் தீர்த்துவைக்காதே போகமாட்டேன்!'' என்று கூறும்பொழுது மணியடிக்கவே, தொப்பை தன் னிருப்பிடத்திற்குச் சென்றான்.

அன்றிரவு முருகன் படுத்து நன்றாய்த் தூங்கிவிட் டான். நல்ல தூக்கத்தில், யாரோ மெதுவாய்த் தோளைத் தட்டி எழுப்புவதுபோல் தோன்ற விழித்துக்கொண்டு தொப்பையுடன் மற்றொருவனும் நின்றிருப்பதைப் பார்த் துக் கலவரத்துடன் எழுந்தான். தொப்பை மெதுவான குரலில் அவனைச் சமாதானப்படுத்தி, "இவருடைய ஒத் தாசையினாலே, நான் உன் உள்ளுக்கு வருவதற்குச் சுவற் றிலே வழி பண்ணி வந்தேன். நீ ஒத்துக்கொள்ளாமே தலை யசைக்கவேண்டாம்! உன்னை இங்கேவிட்டு, என்னாலே போக முடியாது. நான் கெட்டவனாயிருந்தாலும், விசுவாசமில் லாதவனாயும், நன்னியில்லாதவனாயு மிருக்கமாட்டேன். பல

சாலிகளெல்லாம் அப்படித்தா னிருப்பாங்க. நீ வரமாட்டே ன்னு சொன்ன, உன்னை என் தோளிலே தூக்கி வைச்சுக் கொண்டு போகணும்! அப்போ, ஒருத்தர் கண்ணிலும் படாதே தப்பிச்சுப் போறது இன்னும் கஷ்டந்தான். இருந் தாலும், உன்னை விட்டுப் போகமாட்டோம். இங்கே இனி ஒரு நிமிஷம் தங்க முடியாது. நல்ல தைரியசாலியான துலுக்கக் கைதி யொருவன் நமக்காகத் தன் உயிரையே கொடுக்கறதுக்குத் துணிஞ்சிருக்கான். அவன் தயவினலே இரண்டு காவற்காரங்களை வாயிலே துணியடைச்சுக் கட்டிப் போட்டுவிட்டோம். இன்னி ராத்திரி நாம் தப்பி யோடாட் டா, அப்புறம் நமக்கு என்னிக்கும் கஷ்டம்தான்! ஒரு வரு ஷம் ஜெயிலிலே இருக்கிறது மட்டுமில்லே. இங்கே யிருந்து தப்பிப்போறதுக்கு யத்தனம் பண்ணினதுக்காக, ஆயுசுமுழு வதும் இங்கே கிடக்கவேண்டியதுதான்! நாங்க வேண்டி யதைச் செய்தாச்சு. இப்போ ஒண்ணும் கேக்காதே! ஒரு மணி முந்தி, இங்கே இன்னும் பதினெரு மாச மிருக்க வேணுமேயின்னு நினைச்சேன். ஆனல், தைரியமாயும், புத்தி சாலியாயு மிருக்கிறவங்கமேலே சாமி பக்ஷமாய்த்தானிருக் காரு! மதிலேறிக் குதிக்கறதுக்கு இல்லாதே, பின் ஏதுக்குக் கால்களை அவரு நமக்குக் கொடுத்தது? இன்னி ராத்திரியே நாம் விடுதலை யடைஞ்சுவிடுவோம். நாகலாபுரம் மலையிலே நாமொரு ராஜ்யம் ஸ்தாபிச்சுவிடலாம். ஸ்வேச்சையா யிருக்கும் நம்முடைய கன்னக்கோலுக்கு முன்னே, சர்க்கார் முழுவதும் சீக்கிரத்திலே நடுங்காதே போறுங்களா, பார்ப் போம்!'' என்றான்.

அரைமணி நேரத்தில் அம்மூவரும் ஜெயிலைவிட்டு வெளியேறிவிட்டார்கள். ஒரு பர்லாங் தூரத்தில் ஓர் சிறு பிள்ளையார் கோவில் காணப்பட்டது. அதில் ஒரு விளக்கு,

அணையும் தருணமாய், மங்கலா யெரிந்துகொண்டிருந்தது. மூவரும் விக்கிரகத்தின் முன் விழுந்து நமஸ்கரித்தார்கள். அப்புதியவன் தொப்பையை நோக்கி, "தொப்பை, நான் ஒரு கள்வர் தலைவனாயினும், எங்களில் பல பெயர்களைவிட, உன்னிடமே அதிக தைரியமும், சமயோசித புத்தியும் பொருந்தியிருக்கக் கண்டேன். நான் இவ்விடமிருந்து தப்பியது உன்னால்தான்! ஏழு வயதுள்ள என் செல்வச் சிறுவனை நான் பார்த்து மூன்று வருஷ மாய்விட்டது. கடைசியாக நான் அகப்பட்டுக்கொள்ளப்போகும் அன்றிரவு வெளிக்கிளம்பியபொழுது, "அப்பா, நீ எப்போ திரும்பி வருவாய்?" என்று அவன் மழலைச்சொல்லில் கேட்டான். ஒரு மணி முன்பு, இனி நான் அவனைப்பார்க்கப் போவதில்லை யென்று நினைத்தேன். என் முன்னோர்கள் பரம்பரையாய்ச் செய்து வந்த தொழிலை நான் மேற்கொண்டதற்காக, இருபது வருஷம் ஜெயிலி லிருக்கவேண்டுமென்று என்னைத் தண்டித்து விட்டார்கள். அதற்கு இன்னும் பதினேழு வருஷங்கள் பாக்கியிருக்கின்றன. ஆனால், தொப்பை! தந்தையும், மகனும் ஒருவரை யொருவர் காணக்கிடைத்தது உன்னாலேயே! என் சரீரம், எனக்கிருப்பது யாவும் உன்னைச் சேர்ந்தவை!" என்று கூறி, ஒரு குழந்தையைப்போல் விம்மி யழுது, தொப்பையின் கைகளைப் பிடித்துக்கொண்டான். முருகனுக்கு எல்லாம் ஒரு கனவுபோ லிருந்தது. அவனுக்கு ஒன்றையும் நம்பமுடியவில்லை. திடீரென்று தூரத்தில் பேச்சுக்குரல்களும், கலவரமான அடிச்சத்தமும் கேட்பதுபோல் தோன்ற, அவர்கள் திடுக்கிட்டு, நடுநடுங்கி ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டதும், மறுநிமிஷம் அவ்விடத்தைவிட்டு ஓரே ஓட்டம் பிடித்தார்கள். அவ்வேகம் எப்படியென்பது தப்பித்தோடும் கைதிகளன்றி வேறு யார் அறிவர்!

"இங்கிருந்து நீங்களிருக்கும் நாகலாபுரம் மலைக்கு எவ்வளவு தூரம்?" என்று தொப்பை கேட்க,

"நூற்றைம்பது மைல். ஜனங்கள் நடக்கும் பாதையில் நாம் செல்லக்கூடாது. ரகசியமான வழியொன்றிருக்கிறது. அவ்வழியாய்ச் சென்றால்தான் நமக்குப் பயமில்லை. அது மிகவும் கரடுமுரடாய், கிழக்கு மலைத்தொடர்ச்சியின் அடிவாரத்திலுள்ள காட்டுமார்க்கமாய்ச் செல்லுகின்றது. அவ்வழியாய்ச் சென்றால் நாகலாபுரத்திற்குப் போய்ச்சேர மூன்று நாட்களாகும். ஆனால், வழியில் நமக்கு நண்பர்களிருக்கிறார்கள். நம் குலதெய்வங்கள் நம்மை ரக்ஷிக்கட்டும்!" என்று அக்கள்வர் தலைவன் கூறிப் பிரார்த்திக்க, முருகனும், தொப்பையும் அவ்வண்ணமே வேண்டிக்கொண்டார்கள்.

———

## அத்தியாயம் 36.

### அலையின் முடி.

நாம் மேற்கூறிய சம்பவங்கள் நிகழ்ந்த தினத்திற்கு மறுநாள் மாலை, கேதாரி சென்னை கடற்கரையில் மெதுவாய் உலாவிக்கொண்டிருந்தான். அவன் ஹிருதயம் அடங்காக் களிப்புடன் விம்மிக்கொண்டிருந்தது. ஏனெனில், அவன் மிகவும் சிரமமான வக்கீல் தொழிலில், பலவிஷயங்களிலும், வெகு சீக்கிரத்தில் அனைவருக்கும் மேற் சென்றுவிட்டானல்லவா? திருச்சியிலிருந்து சென்னை வந்ததினமே கேதாரி மோட்டார் வாங்கிவிட்டான். தாரடித்த ரோட்டில், சத்தம் செய்யாமல் வழுக்கியோடுவதுபோற் செல்லும் அம்மோட்டாரில் உட்கார்ந்து, சகல ஜனங்களும் திகைத்து நிற்க "ஆல்ப்ஸ்" மலைவழியாய் "இடலி"க்குள் பிரவேசித்த நெப்போலியனைப்போலவும், நதியில் உல்லாசமாய், அழகிய ஓடத்தில் சஞ்சரிக்கும்பொருட்டு "கிளியோ பாட்ரா"வை எதிர் நோக்கிநின்ற "ஆந்தனியை"ப் போலவும், உள்ளம் களிப் பெய்தினன். தேடித்தேடிப் பார்த்தாலும் இங்கிலாண்டில் கூட, தன்னைப்போல் இவ்வளவு சீக்கிரத்தில் வக்கீல் தொழிலில் முன்னுக்கு வந்தவனிருந்ததாக அவனுக்குத் தோன்றவில்லை. உலகி லுயர்ந்தோருடைய ஜீவிய சரித்திரங்களையும், அவர்கள் தம்மைப்பற்றியே எழுதிக்கொண்டவைகளையும், அவன் கொஞ்சம் நாட்களாய்ப் படித்துவந்ததில், அவர்களுள் அநேகர் ஆதியில் வெகு சாதாரண நிலைமையி லிருந்தவர்களேயென்றறிந்து மிகவும் தைரியமுற்றான். உலகில் மேம் பதவியை யடைவதற்கு எவ்விஷயங்கள் முக்கியமானவை யென்பது, இயல்பாகவே, அவனுக்கு நன்கு விளங்கி

யிருந்தன. மனவலிமை, சுறுசுறுப்பு, ஊக்கம், பின்வாங்காமை முதலிய சிறந்த குணங்களே மனிதனுக்கு அழியாப் புகழையும் செல்வத்தையும் அளிக்கவல்லவையென, தன் புத்தியால் தேர்ந்தறிந்து, அவன் கொண்டிருந்த கொள்கையும், படிக்கப்படிக்க மேன்மேலும் திடமாயிற்று.

உலகில் ஒருவனே முடியணிவதன்றி, பலபெயர்கள் எவ்வாறு அணியக்கூடும்? சிகரமென்றால், அநேகம் தாழ்ந்த மலைகளின் நடுவினின்றும் ஓங்கி யுயர்ந்துநிற்கும், கம்பீரமான ஒரே கற்குன்றல்லவா? ஒருவன் மேலேவருவதன் பொருட்டுப் பலபெயர்கள் கீழே தங்கி நிற்கவேண்டியதே! பக்ஷபாதமற்ற உலகியல் இவ்வாறுதான் ஏற்பட்டிருக்கின்றது.

மேன்மேலும் உயர்தர பதவிகளைத் தான் அடைவதற்கு ஒரே ஒரு தடையிருந்ததாக கேதாரி பலதடவைகளில் நினைக்கலானன். வெளிப்பார்வைக்குத் தோன்றியதல்லாமல், உண்மையில் அவன் மனைவியிடம் மிகவும் அன்புள்ளவனே யாயினும், விவாஹமானது தனது ஸ்வேச்சைக்குத் தடையாய், கழுத்தில் கல்லைக் கட்டியதுபோல் பாரமாயிருந்ததாக அவனால் நினைக்காமலிருக்க முடியவில்லை. ஒரு காக்கையின் கழுத்தில் கல்லைக்கட்டித் தொங்கவிட்டால், அதனை யக்காக்கை தனக்கு ஒரு அலங்காரமாகவே மதித்து, காகாவென்று கத்திக்கொண்டு, வீட்டுக்கு வீடு பறந்துசென்று கொண்டிருக்கும்! ஆனால் ஆகாயத்தை யளாவிப்பறந்து வட்டமிடும் கழுகுக்கு அது பாரமா யில்லாமலிருக்க முடியுமா?

கோகிலம் மாசற்றவளாயும், கணவன்பால் அதிப்பிரேமை கொண்டவளாயுமிருந்தது உண்மையே யாயினும், அவள் தனக்கு அவ்வளவு ஏற்ற மனைவி யல்லளென்றும், அன்றன்று பிராம்மணர்த்தத்தைப்பற்றியே நினைவாயிருக்

கும் அற்ப வைதிகனுடைய பெண்ணுய்ப்பிறந்ததற்குத் தக்க வாறு பயந்தவளாயும், கௌரவத்தி லாசையற்றவளாயு மிருந்ததுடன், மனோதர்மமற்று, எதையும் பிசகெனக் கொண்டு, அஞ்சும் சுபாவமு முடையவளென கேதாரி நினைக்கலானன். தனது உற்சாகத்தினுலும், சாகசத்தினு லும், சீக்கிரத்தில் தானடையப்போகும் பெரும் பதவியைத் தன் பிள்ளைகள், தாயைக்கொள்ளாமல், தன்னைக்கொண்டு பிறந்து, விளங்கச்செய்ய வேண்டுமென்பதே அவனது பெரும் கோரிக்கை!

இவ்வாறெல்லாம் தன்னைமறந்த யோசனைகளில் ஆழ்ந் தவனுய், கடற்கரையில், எதிரேவரும் இரண்டொருவர் மேல் மோதிக்கொண்ட பிறகுதான் அவனுக்குத் தன் ஞாப கமுண்டாயிற்று. இல்லாவிடில், ஏதாவது மோட்டாரின் கீழ கப்பட்டுப் பெரும் காயமடைந்து, ரணஜ்வரத்துடன் ஆஸ் பத்திரியில் கிடக்கும்படி யாகுமல்லவா ? ஆகவே, இப்பொ ழுது, அவன் அவ்வாறு யோசிப்பது ஆபத்திற் கிடமென் றுணர்ந்து, சமீபத்திலுள்ள கடையில் "ஹிந்து" பத்திரி கைப் பிரதியொன்றை விலைக்கு வாங்கிக்கொண்டு, கவலை யின்றித் தனது யோசனைகளில் மனதைச்செலுத்த ஜலக்கரை யை நோக்கிச் சென்றுன். எழும்பிமடியும் அலைகளின் காட்சி உற்சாகத்தை யூட்ட, கேதாரி "ஹிந்து" பத்திரிகையைப் பிரித்து, சமாசாரக் குறிப்பின் பக்கம் நோக்கினுன். அவன் கண்முன் பெரும் எழுத்துக்களில் பின் வருமாறு எழுதப் பட்டிருந்தது:—

(நமது நிருபரிடமிருந்து)

"திருச்சினுப்பள்ளி பெரிய ஜெயிலிலிருந்து தப்பி யோடிய கைதிகளின் துணிவு."

"நடுநிசியில் இரண்டரை மணிக்கு மூன்று கைதிகள் தைரியமாய்த் தப்பியோடிவிட்டார்கள். அவர்களி லொரு வன் பெயர் முருகன். சமீபத்தில் நடந்த கிராம கலகக் கேஸ் விசாரணையில் குற்றவாளியா யிருந்தவன். மற்றிருவர் களுடைய பெயர்களும் இன்னும் தெளிவாய்த் தெரிய வில்லை. காவற்காரர்களும், ஜெயில் காப்பாளர்களும் வாயில் துணியடைக்கப்பட்டுக் கட்டுண்டு கிடந்தனர். போலீஸில் அவர்களைக் கண்டுபிடிக்க பலத்த ஏற்பாடுகள் செய்யப்பட் டிருக்கின்றன. ஆயினும், தப்பியோடிய கைதிகளி லொரு வன் செங்கற்பட்டு ஜில்லாவிலிருக்கும் கொள்ளைக்கூட்டத் தலைவனு யிருக்கவேண்டுமென்று தோன்றுவதால், அவர் களைக் கண்டுபிடிக்கக்கூடுமென்பது சந்தேகமே."

இவ்விஷயத்தை வாசித்ததும், தற்பெருமை மேலிட்ட கேதாரிக்கு ஒரு விதமான சந்தோஷமும் பெருமையு முண் டாயின. தனது வாக்குசாதுர்யம் ஓர் வயதுசென்ற ஜட்ஜியின் செவிகளி லேறுவிடினும், ஈசுவரன் காதுகளுக்காவது எட்டிற்றே யென்ற எண்ணமுண்டாகவும், திருப்தியுடன் புன்னகை புரிந்துகொண்டான். தனக்குப் பின்னும் பணம் அனுப்பும்படிக் கேட்டுக்கொண்டு, சந்தோஷம் விசாரித்து ஒரு கடித மெழுதலாமென அவனுக்கு ஓர் யோசனை பிறந் தது! ஆனல், மறுநிமிஷமே, தப்பியோடிய ஒரு கைதி தன்னிருப்பிடத்தின் விலாசத்தைத் தன் வக்கீலிடமும் தெரி விக்கமுடியாதென்பதை ஞாபகப்படுத்திக்கொண்டான்.

அன்று மத்தியானம் கேதாரி ஹைகோர்ட்டில், ஒரு பெரிய வக்கீலுக்கு எதிர்க்கக்ஷியில் நின்று வாதித்து, அவரைத் தோற்கச் செய்துவிட்டான். அதைக்கண்டு அவன் நண்பர்கள் ஆநந்த மடைய, தான் முன்னுக்கு வரும் நிலைமை முன்னிலும் ஸ்திரமாகவே, கேதாரி களிப்பிலும்

பெருமையிலும் மெய் மறந்திருந்தான். பத்திரிகைக்கு எழுதுபவரிடம், அவனே அழகாய் எழுதிக்கொடுத்து வெளியிடும்படிக் கூறியிருந்த அக்கேஸ் வேறேரிடத்தில் போடப்பட்டிருந்ததைப் பார்ப்பதில்கூட அவனுக்கு ஆவலில்லை.

'பேப'ரைக் கீழே வைத்துவிட்டுக் கேதாரி அலைநுரையுடன்கூடிய கடலை நோக்கினன். காற்று சிறு ஜலத்துளிகளை மேலே வாரியிறைத்துக்கொண்டு வேகமாய் வீசிற்று. மிருதுவாய், முறுமுறு வென்றிருந்த சமுத்திர மணலோ, மெய்யன்புடன் தழுவுவதற் கிடங்கொடுப்பதுபோ லிருந்தது. தன் தாயின் மடியில் விழுந்து விளையாடும் சிறு குழந்தைக்கொப்ப, கடலின் அலைகளும், ஏறிவிழுந்து, கரையில் மோதிக்கொண்டிருந்தன. மணலிற் சாய்ந்திருந்த கேதாரி சிறிது யோசனையி லாழ்ந்தவண்ணம், கடலின் லீலையைக் கவனித்துக்கொண்டிருந்தான். உப்பங்காற்று, காதலுற்றது போல், அவன் கன்னத்தைக் கிள்ளியபடி வீசிக்கொண்டிருந்தது. இத்தன்மையான விடத்தில், சாதாரண மனேபாவமுடையவர்கள், அன்பும் அமைதியும் குடிகொண்ட சிந்தனையில் மனதைச் செலுத்துவார்கள். ஆனல் கேதாரியின் மனதோ, சதா சலித்துக்கொண்டு, இலேசான சிறு காற்று அடித்தாலும், பெரும் கொந்தளிப்புடன் கிளம்புவதற்கே எப்பொழுதும் ஆயத்தமாயிருக்கும் கடலைப்போன்றிருந்தது. தன்னைப்பற்றியே பெரும் மனேராஜ்யம் செய்யலானன்.

மொகலாய மன்னர்களின் சிம்மாசனத்தை அவன் அடையவேண்டுமோனலும், முடியாதா? ஓர் குதிரையையும், ஈட்டியையும் தவிர, பேபரிடம் வேறென்ன விருந்தன? காலபேதத்தினல் கருவிகள் மாறுபாடடைந்தனவே யன்றி

வேறு மாறுத லேதேனுமுண்டோ? மொகல் ராஜதானி முன்பிருந்த விடத்தில்தான் இப்பொழுது மிருக்கின்றது. காலத்திற் கேற்றவாறு புதிது புதிதாய்ப் பெயர் வைத்தாலும் வேருகாது. அதைப் பற்றிவிடுவதாகவே கேதாரி தீர்மானித்தான். இவ்வாறு ஒருமணி நேரம் அவ்விஷயத்தைப்பற்றி வெகுவாய்ச் சிந்தித்துவிட்டுப் பிறகு, உயரமாய் வளர்ந்த புற்புதரின் நடுவினின்றும் கிளம்பும் புலியைப்போல், அவ்விடத்தைவிட்டு ஒருபாய்ச்சலில் எழுந்துநின்முன். நேராக வீட்டிற்குச்சென்று, கைகளைக் கட்டிச் சாய்ந்தபடி தனது ஆவலை மனதிற்குள் போற்றிப் பாவித்துக்கொண்டு படுத்திராமல், வக்கீல் மார்க்கண்டம் அய்யருடைய வீட்டிற்குச் சென்முன். என்றும்போல் அவர் அதிகவேலை செய்த ஆயாசத்திலிருந்தார். காபிக்கென்று ஒரு துளியும் மீதியில்லாமல் பால் கறக்கப்பட, அதற்குப் பதில் வைக்கோலைக் கண்டு கட்டிய விடத்திலேயே உதைத்துக் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் பட்டண வாசத்திலுள்ள பசுங்கன்றுபோல், வழக்கப்படி அவர் மனதும் பணத்தைப்பற்றிய ஆவலில் வருந்திக்கொண்டிருந்தது.

"கேதாரி, உன் உற்சாகத்திற்கு என்றும் குறைவில்லை. இன்று அதிக குதூகலமாகவே காணப்படுகிருய்! புதிதாய் ஏதாவது வெற்றியுண்டோ?" என்று மார்க்கண்டம் அய்யர் கேட்க,

"அஃதெல்லா மொன்றுமில்லை. கழுகைப்போல் ஆகாரத்திற்காக வட்டமிட்டுக் காத்துக்கொண்டு, போலீஸ் வேலையையே வேறு விதமாகச்செய்யும் இவ்வக்கீல் பிழைப்பு எனக்கு மிகவும் அலுத்துப்போய்விட்டது. ஜனசமூகத்திற்குக் கடைசியாய் நம்மாலென்ன நன்மை? நம் தொழில், பணக்காரர்களுக்கு உதவிபுரிந்து, அபகரித்த பொருளைப்

பங்கிட்டுக்கொள்ளுவது; இல்லாவிடில், நாக்குப் புண்ணுகும் வரையும், துளிதசையில்லாமல், எலும்புத்துண்டை நாய் போல் நக்கித்தீர்ப்பது! இதைக்காட்டிலும் அற்பத்தனமும் இழிவும் வேறுண்டோ ? இதைவிட்டு ஒருநாள் வெளியேற வேண்டியதுதான். எனக்கு ஓர் பெரும்யோசனை தோன்றியிருக்கிறது. மெள்ள மெள்ள நான் இக்கேவலத் தொழிலை விட்டுவிடப்போகிறேன்,'' என்றுன் கேதாரி.

"என்ன அது, கேதாரி? என்னை மறந்துவிடாதே!"

"இல்லை! அது ஒருநாளுமில்லை! நீங்கள் முன்சென்ற பிறகே, நான் பின் தொடருவேன். மொகல் மன்னர்களுடைய சிம்மாசனம் உங்களுக்காகவும் எனக்காகவும் காத்துக்கொண்டிருக்கிறது. வேகமே வெற்றிதரும்! நாம் இப்பொழுதே முயற்சி செய்யவேண்டும்!''

"நீ கூறுவது எனக்கு விளங்கவில்லை. கேதாரி, என்றும் போலல்லாமல், இன்று வெகு உயர்வாகவும், மறைபொருளாகவுமன்றோ பேசுகிறுய்!''

"அப்படியா! ஒருவேளை, எண்ணம் பெரிதாயிருப்பதனுல் அவ்வாறிருக்கலாம். வருகிற "எலெக்ஷனுக்கு" நாம் நிற்கவேண்டும். நாளையே நமது பெயர்களைக்கொடுத்துவிட்டு, அதற்குவேண்டிய பிரயத்தனங்கள் செய்யத்தொடங்கலாமென்று நினைக்கிறேன். டெல்லி சட்ட நிரூபண சபைக்கு அங்கத்தினராக நீங்களும், இங்கே உள்ளூருக்கு நானும் நிற்கவேண்டும். சேர்ந்து வேலைசெய்தால், நமக்கு மிகவும் எளிதாகவே ஆய்விடும். ஒருவரும் நம்மை எதிர்க்கத் துணியமாட்டார்கள்.''

"டெல்லி சட்டநிரூபண சபைக்கா? அது எப்படி முடியும்? என் கேசுகளையெல்லாம் நான் இழந்துவிடும்படியாய்விடும். என் வக்கீல் தொழில் போய்விடுமே!''

"என்ன? பணம் சம்பாதிப்பதில் இன்னும் உங்களுக்குச் சலிப்புண்டாகவில்லையா? எனக்கே அலுத்துப்போய் விட்டதே! உங்களுக்குப்பதில் நான் சந்தோஷத்துடன் பிரயத்தனப்படுவேன். ஆனால், அது நன்றாயிராது. எனக்கு உரிமையல்லாததை நான் அபகரித்ததாகவும், அதிகப்பிரசங்கியென்றும் ஜனங்கள் என்னைச்சொல்லுவார்கள்!"

"டெல்லி சட்டநிரூபண சபைக்குப் பிரயத்தனப்படுவது முடியாது. நான் இன்னும் போதுமான பணம் சேர்க்கவில்லை. என் கையில் ரூபாய் ஜலம்போல் கரைந்துவிடுகின்றது. கேதாரி, எனக்கு மூன்று பிள்ளைகளும், ஐந்து பெண்களு மிருப்பது உனக்குத் தெரியாதா? உன் எண்ணம் சிறந்ததே. நீ தான் உயர்ந்த விஷயங்களுக்கு ஆசைப்படுகிறாய். நீயே அதற்கு நில்! உன் குணத்திற்கு அதுதான் தகுந்தது. உள்ளூருக்குப் பிரயத்தனப்படுவது எனக்குப்போதும். பிறர் நினைப்பதைப்பற்றி நீயா கவலைகொள்ளுபவன்? நீ சொல்லுவதுபோலவே, உலகத்தை பிரமிக்க அடித்துவிடு! நாமிருவரும் சேர்ந்து பிரயத்தினம் செய்வோம்."

"சரி, அப்படியே யிருக்கட்டும்; நானென்றும் பயப்படவில்லை!" என்று கூறி கேதாரி மார்க்கண்டம் அய்யரிடம் விடைபெற்றுச் சென்றான். போகும்பொழுது வழியில் "இதுவும் ஒரு பெரிய அதிருஷ்டம்தான். ஆயினும், இவ்வளவு நாட்களாய்ச் சிறிதும் பணம் சேர்க்கவில்லையே யென்று இப்பொழுது வருத்தமாயிருக்கிறது. கையில் இச்சமயம் இருபதினாயிரம் ரூபாய்மட்டுமிருந்தால், நெப்போலியனைப்போன்ற கீர்த்திமான்களி லொருவனாய் விடுவேன். ஆயினும், இதற்கெல்லாம் யோசித்துக்கொண்டிருக்கலாகாது. உடனே பிரயத்தனத்தைத் தொடங்கவேண்டும்," என்று தனக்குள்ளேயே யோசனை செய்துகொண்டு சென்றான்.

---

RM. MUTHIAH
ARTIST
KOTTAIYUR

## அத்தியாயம் 37.

### உண்மை நிலை !

கேதாரி அன்றிரவு வீட்டிற்குச் செல்லும்பொழுது, மணி அநேகமாய்ப் பதினொன்று அடித்துவிட்டது. கவலையுடன் காத்துக்கொண்டிருந்த கோகிலம், அவனைக் கண்டதும் கவலை நீங்கி, "ஏன் வரவர இவ்வளவு நேரம் பொறுத்து வந்து, எனக்கு விசாரத்தை யுண்டாக்குகின்றீர்கள் ? மோட்டார் வாங்கியது முதல் நீங்கள் சீக்கிரம் வீடு திரும்புவதேயில்லை. அன்று முதல் ஒன்றும் சரியாயில்லை," என,

"போடி, அசடே, குழந்தைகளெல்லாம் எங்கே ? இவ்வளவு சீக்கிரம் படுத்துத் தூங்கிவிட்டார்களா என்ன?" என்றான் கேதாரி.

"இவ்வளவு சீக்கிரமா ? மணி இப்பொழுது பதினொன்றல்லவா ?"

"பதினொன்றாய் விட்டதா ? இன்று மணியானதையே நான் கவனிக்கவில்லை!"

"இன்று மட்டுமென்ன ? என்றும்தான் !"

"ஸ்திரீகளுக்கு எப்பொழுதும் குறைதான் ! நாள்முழுவதும் வேலையில்லாமல், வீட்டில் சும்மா உட்கார்ந்துகொண்டிருந்தால், நீங்கள் குறைகூறுமலென்ன செய்வீர்கள்?"

"வீட்டில் சும்மாவிருக்கிறேனா? ஒரு வேலைக்காரன்,—சமையலுக்குக்கூட ஒரு ஆளில்லாமல், ஐந்து குழந்தைகளைப் பார்த்துக்கொண்டு இல்லையா ? அவர்கள்மேலுள்ள பாசத்தினாலல்லவா நான் வேலையை யொரு பொருட்டா

யெண்ணுமலிருக்கிறேன்! ஆயினும், இம்மைலாப்பூர் முழு வதும் தேடிப்பார்த்தாலும், இவ்வீட்டைப்போல் அதிசய மான வீடு இருக்காது! அகத்தில் ஒரு வேலேயாள் கிடை யாது; வண்ணன் வீட்டுக் கழுதைபோல் வீட்டெஜமானி தான் சகலவேலேயும் செய்யவேண்டும்! அவளேப் பார்த் தாலும் ரொம்ப அழகாயிருக்கிறது! இப்படியிருக்கும் பொழுது, வீட்டெஜமான் உயர்ந்த உடைக ளணிந்து, மோட்டாரில் இங்குமங்கும் செல்வதில்மட்டும் குறை வில்லே!''

''கோகிலம், நான் எவ்வளவு தடவை கூறினுலும், நீ ஏன் கேட்கமாட்டேனென்கிருய்? நம் வீட்டுத் தாழ்ந்த நிலேமையைப் பார்க்க எனக்கு வருத்தம் இவ்வளவு அவ்வள வென்றில்லே. உலகத்தின் கொடுமைக்குப் பயந்தல்லவா, இந்த ஆடம்பரம் செய்யவேண்டியிருக்கின்றது! வரும்படியை யதிகப்படுத்துவதற்காகவே மோட்டாரில் பணம் போட் டிருக்கிறேன். செல்வம் மிதமிஞ்சி யிருப்பதற்கு அடை யாளம் மோட்டாரென்று புத்தியில்லாதவர்கள் நினேத்துக் கொள்ளுகிருர்கள். ஆனல், சாமர்த்தியமாய் வேலேசெய்து இருட்டில் தங்கம் வெட்டியெடுப்பவனுக்கு, அது மண் வெட்டியும், கோடாரியும் போன்றதெனப் புத்தியுள்ளவர் கள் தெரிந்துகொள்ளுவார்கள். பொறு, கோகிலம்! இன் னும் ஒரே ஒரு வருஷம் பொறுத்துக்கொள்! உன் மூக்கு, காது, கழுத்து எங்கும் உயர்ந்த நகைகளேயணிந்து, அப் பாரம் தாங்காது உன் தேகம் துவளும்படிச் செய்துவிடு கின்றேன். கணக்கில்லாத வேலேயாட்கள் நீ இட்டவேலே யைச் செய்வதற் கிருப்பார்கள். நம் குழந்தைகளும் மன் னன் மக்கள்போலாய்விடுவார்கள்.''

''இனிமேல் வரப்போகும் உயர்வொன்றும் எனக்கு வேண்டியதில்லே. கைக்குழந்தை சற்றுமுன்புதான் பிஸ்

கோத்து வேண்டுமென்று அழுதுகொண்டே தூங்கிப் போயிற்று. பெரியவனுக்குப் பள்ளிக்கூடப் பாடப்புஸ்தகங்கள் இன்னும் வாங்கியாகவில்லை. அவனுக்கு அகத்தில் வந்து கற்றுக்கொடுக்கும் உபாத்தியாயர் சம்பளத்திற்காக நித்தியம் ஓயாது கேட்டுக்கொண்டிருக்கிறார். பள்ளிக்கூடத்தில் தன் வகுப்புக் குட்டிகள் அணிந்திருக்கும் தாவணிமாதிரி வேண்டுமென்று பெண்குழந்தைகள் கண்ணீர் வடிக்கின்றன. சென்ற இரண்டு மாதங்களாக ஒருவருக்கும் பணம் கொடுபடாமல் பாக்கி நிற்கின்றது. உங்கள் மோட்டார் எல்லாருடைய உயிர்களையும் விழுங்கிக் கொண்டிருக்கின்றது. உங்களுக்கு வரும்படி வராத முதல் வருஷம் கடனாகக்கொடுத்த ஆயிரம் ரூபாயைத் திருப்பிக் கொடுத்துவிடும்படி என் மாமா பிள்ளை இரண்டுதரம் லெட்டர் எழுதியாய்விட்டது. இம்மாதிரி காலக்ஷேபம் செய்தால்,—"

"ஒரு கெடுதலுமில்லை! சென்றமாதம் ஆயிரத்தைன்னூறு ரூபாய் வந்தது. இவ்வற்ப விஷயங்களிலெல்லாம் என் மனதைச் செலுத்தினேனாயின், ஒருநாளில் இச்சிறு தொந்திரவுகளைத் தீர்த்துவிடுவேன். நாம் பெரிய ஏற்பாடு செய்யும்பொழுது, முதல் நாலைந்து வருஷங்கள் சிறிது வீண் செலவைப் பார்க்கலாகாது. நதியை அணையிட்டுத் தடுத்த பிறகு, ஜலத்தைத் தேக்குவதற்குச் சிறிது நேரமாகுமேயொழிய, பாயத்தொடங்கி விட்டால், ஒரு நொடியில் வயல்கள் முழுவதும் நிரம்பிவிடுமென்றோ!"

"உங்கள் அலங்காரச் சொற்கள்,—உபமானங்கள் இவையெல்லாம், "சர்க்கரை" என்று காகிதத்தி லெழுதி ருசிபார்ப்பதுபோலத்தான்! எவ்வளவோ தடவை இம்மா

திரி வார்த்தைகளில் நான் திருப்தியடைந்தாயிற்று!"
என்றுகோகிலம் சிறிது கோபமாய்ச் சொன்னாள்.

"கோகிலம், உனக்கு உலகம் தெரியாது. செல்வ
மானது, நீர்வற்றிப்போன ஆற்றுமணலில் ஊறும் ஊற்றுப்
போலாம். நாம் எடுக்க எடுக்க மேன்மேலும் ஊறிக்கொண்
டேயிருக்கும். தைரியமற்றவர்கள்தான் தளர்ச்சியடை
வார்கள். நான் முன்னுக்கு வருவது நிச்சயம். சில மாதங்
கள் மட்டும் பொறுத்திரு. நான் அரசனுகாவிட்டாலும், நீ
அரசியாவாயென்பதில் தடையில்லை. இப்பொழுது என்
மனம், கடலில் அலைபோல், எழும்பிக் குதித்துக்கொண்
டிருக்கிறது. நீ கொஞ்சம் மந்தப் பிரகிருதி; தன் மனது,
பிறருடைய மனது இரண்டையும் நீ யறியாய்! ஆயினும்,
உன்மீது குற்றமில்லை. உனது மிருதுவான கைகள் அடுப்
பில் ஈரவிறகைத்தள்ளி எரியிட, வெகு நாட்களாய் உன்
னைக் கேவலம் அடுப்பங்கரைப் புகையிலேயே விட்டு வைத்து
விட்டேன். இன்னும் கொஞ்சம் காலம் பொறுத்திரு.
நீயும் பளீரென்று பிரகாசிக்கலாம். அற்பப்புழுவும் அழ
கிய பட்டுப்பூச்சியாக மாறிவிடும்!"—இவ்வாறு கேதாரி ஒரு
உபமானத்திற்குமேல் மற்றொரு உபமானத்தை அடுக்கிப்
பேசலானுன். ஆயினும், இறுதியில் அவனுக்குத் தன் வாக்கு
சாதுர்யத்திலும் நம்பிக்கை குறைந்து, யோசனை யுண்டா
யிற்று. அவனுடன் வாதாடுவதில் பயனில்லையென்று கோகி
லம் மௌனமா யிருந்துவிட்டாள்.

சட்ட நிரூபண சபையின் அங்கத்தினராகத் தான்
முயற்சிசெய்யத் தீர்மானித்ததை அவளிடம் கூறக் கேதாரிக்
குத் தைரியமில்லை. அப்பிரயத்தனத்தின்பொருட்டுச் செல
வாகும் பணம் எவ்வளவென்பது அவனுக்கே நன்றாய்த்
தெரியாது. நிசிவேளையினு லுண்டாகிய மனத்தளர்ச்சி,

கோகிலத்தின் வருத்தத்தினு லதிகரித்தது. சிறுவயதில் படிக்கும் நாட்களில், பெரிய விஷயங்களைப் பற்றிய யோசனையில்லாமல், கவலையற்று நிம்மதியாயிருந்தது கேதாரிக்கு இப்பொழுது நினைவுவந்தது. ராமுவின் சாந்தத்தன்மை பொலியும் முகம் மனக்கண்முன் தோன்றியதும், அவனது கவலை பின்னும் அதிகரிக்கலாயிற்று. ஆயினும், "வாடர்லு" சண்டைக்கு முதல் நாள், இனிப் பின்வாங்கமுடியாதாகையால், வெற்றியுண்டானாலும், அல்லது தோல்வியுற்று மடிவதாயினும், சண்டையிட்டுத்தா னுகவேண்டுமென்று தீர்மானித்த நெப்போலியனைப்போல், அவனும் ஒருவாறு தன் மனதைத் திடப்படுத்திக்கொண்டான்.

---

# அத்தியாயம் 38.

## உழவ ருவகை.

இவ்வாறு கேதாரி பெருத்த யோசனைகள் புரிந்து கொண்டிருக்க, பழனி, ராமேசுவரம் இவ்விரு க்ஷேத்திரங் களுக்கும் யாத்திரைசென்று ராமு ஊருக்குத் திரும்பினன். கூடுமானல் சீதையை ஒருமுறை கண்ணுல் நோக்கிவிட்டு, சென்ற பலவருஷங்களாக ஊரில் நிகழ்ந்த விசேஷங்களையும் விசாரிப்பதற்காகவாவது அலவந்தியில் ஒருநாள் தங்கலா மென முதலில் அவன் நினைத்தான். ஆனல் தூசியிலுள்ள ஏரிமராமத்து வேலையில், கடைசியாக, இரண்டொரு ஏற் பாடுகள் செய்யவேண்டியிருந்தமையால், அவசரமாக அவன் ஊருக்குத் திரும்பவேண்டியதாயிற்று. அவ்வேலை முடிவுபெறச் சில மாதங்கள் சென்றன. அது முடிவுபெற்ற தும், பாலாற்றில் வெள்ளம் பெருகி, ஏரியில் நீர் வந்து நிரம் புவதற்குச் சரியான சமயமா யிருந்தது.

பாலாறோ நிலையில்லாத ஒரு காட்டாறு. நந்திதுர்க்க மென்னும் மலையில் உற்பத்தியாகி, மைசூர் ராஜ்யத்தின் வழி யாய்ச் செல்லுகின்றது. இந்நந்திதுர்க்கமென்னும் மலையில், மழை பெய்வதாயிருந்தால், ஒருவாரம் விடாமல் பொழிந் துவிடும். உடனே பாலாற்றில், சமுத்திரம்போல், வெள்ள மும் பெருகிவிடும். பிறகு வருஷமுழுவதும் இவ்வாறு, அங்கங்கே வெட்டப்பட்டிருக்கும் ஊற்றுக்களைத் தவிர, வெறும் மணல் வெளியாகவே யிருக்கும். ஆகவே, தூசி-மாமந்தூர் ஏரியில் வருஷமுழுவதும் ஜல மிருக்கவேண்டு மானல், ஊருக்கு வேண்டிய ஜலம், பாலாற்றில் வெள்ளம் வடிவதற்குள் இவ்வேரியில் வந்து நிரம்புவதற்கு, ஆற்றி

லிருந்து ஏரிக்கு வரும் வாய்க்கால் செவ்வையா யிருப்பது முக்கியமாயிருந்தது.

தனது ஏற்பாடுகள் பயன் பெறுவதைத் தன் கண்ணாலேயே பார்க்க ராமு மிகவும் ஆவலோடிருந்தான். மழை நன்ருய்ப் பெய்யத்தொடங்கியதும், அவனதுள்ளம் மகிழ்வுற்றது. அவனது எண்ணப்படி, வாய்க்காலில் ஒரு குற்றம் குறையும் கூறுவதற்கில்லை. ஒரு இரவில், ஏரி பாதி நிரம்பிவிட்டது. இரண்டுநாள் கழித்துப் பார்க்கும் பொழுது, முற்றிலும் நிரம்பி வழிந்தோடிவிடும் போலாய் விட்டது. தங்கள் ஞாபகத்துக் கெட்டிய வரையில், இம் மாதிரி அவ்வூர் ஏழைக்குடிகள் கண்டவர்களல்லர். இதனல் இரண்டு வருஷத்திற்குச் சுற்றுவட்டத்திலுள்ள இருபத்து நான்கு கிராமங்களுடைய க்ஷேமத்திற்கு ஒரு குறைவுமில்லாதிருந்ததுடன், ஒருவாரம் முழுவதும், ஏரிக்கு அதிகமாயிருந்த ஜலம், வழிந்தோடிச்சென்று, அதனுடன், வயல்களுக்குப்பாயும் வேறு அநேகம் சிறு குளங்களையும் நிரப்பவே, ஒவ்வொருவர் முகத்திலும் சிரிப்பு காணப்பட்டது. நன்ருய் விளைந்து அறுப்பு அறுக்கும் சமயத்தை யெண்ணிப் பயிரிடுவோரடையும் மகிழ்ச்சியை,—மனவமைதியும், தூய்மை மிகுந்த இனிமையும் குடிகொண்ட அக் களிப்பை உலகிலெதற்கிணையாகக் கூறுவோம்! வக்கீல்கள், லேவாதேவிசெய்பவர்கள், ராஜ்யதந்திரிகள், யுத்தவீரர், தேச மந்திரிகள் இவர்களுடையது மட்டுமல்ல,—அரசனுடைய பெருமையைத்தான் அதற்கு நிகராகக் கூறமுடியுமா?

தான் ஏதோ வேடிக்கையாய்த் தன் மனதிற்குள் யோசித்து, ஆசைகொண்டு செய்யக்கிளம்பிய சாகசகாரியம் இத்தகைய லாபவிருத்தியை யளிப்பதாயிருப்பதைக் காண, ராமுவே அத்தியாச்சரிய மடைந்துவிட்டான். ஐம்பத்து

நான்கு கிராம குடிகளும் சேர்ந்து, குக்கிராமத்திற்கேற்ற, படாடோபமற்ற மரியாதைகளுடன் அவனை மனதார வாழ்த்தின. இதற்கு ஒரு வாரத்திற்கெல்லாம் நெருங்கிய தீபாவளிப் பண்டிகையை ராமு விசேஷமாய்க்கொண்டாடிய பொழுது, ராமேசுவர யாத்திரையும், பல ஜனங்களுடைய ஆசீர்வாதமும் நன்கு பலித்ததென, ஜானகியும் கர்ப்பவதி யானாள்.

"இது நிச்சயம் ஆண்குழந்தையே! சீதைக்குச் சகோதரன்தான் பிறப்பானென்று நினைக்கிறேன். ஏழை ஜனங்களுடைய ஆசீர்வாதமெல்லாம் வீண்போகுமா?" என்று ஜானகி சொல்ல, ராமு ஒன்றும் மறுமொழி கூறவறியாது மௌனமாயிருந்தான். அழிவற்ற நித்தியமானது மக்கட் பேறென்பது அவனது எண்ணம். இவ்விஷயமொன்றைப் பற்றித்தான் அவன் இன்னும் ஒரு சித்தாந்தத்திற்கும் வரவில்லை. ஆயினும் அவனதுள்ளம் மட்டும் மிக்கத் திருப்தியடைந்தது.

உறவினர்கள், நண்பர்கள், தன்னை யண்டியவர்கள் அனைவருக்கும் புதிய வஸ்திரமளித்து, ராமு தீபாவளிப்பண்டிகை கொண்டாடினான். குழந்தை சீதையின்பொருட்டு சீனு வெடிக்கட்டுகள் ஏராளமாய்ச் சுடப்பட்டன. காது, கண், மூக்கு வழியாய்ப் புகை உட்செல்ல, சீதைகைகொட்டி ஆநந்தக்கூத்தாடலானாள்! தன் கையாலே கொளுத்திவிட வேண்டுமென்றும் அவளுக்கு ஆசைதான்!

மறுநாட்காலை, கவர்னர் பங்களா முத்திரையுடன் ஒரு பெரிய கடிதம் ராமுவுக்கு வர, சிறிது ஆச்சரியத்துடனும், சந்தோஷத்துடனும் அதை ஆவலாய்ப் பிரித்து வாசிக்கலானான்.

"கவர்மெண்ட் ஹவுஸ், சென்னை,
டிசம்பர், 7"

"பிரியமுள்ள ராமச்சந்திரன்,

"தூசி-மாமண்டூர் ஏரியைச் சீர்படுத்துவதாகிய, உன் யோசனை எதிர்பார்த்ததற்குமேலேயே நன்கு பலித்திருக்கிறதென்பதை ஆபீஸ் மூலமாயும், சென்னை "மெயில்" பத்திரிகை மூலமாயும் படித்தறிந்து, மிகவும் களிப்பெய்துகிறேன். ஏரிமட்டுமென்று, அதனுடன் சேர்ந்த வேறு அநேகம் வயல்களுக்குப்பாயும் சிறு குளங்களும், ஏரிக்கு மிஞ்சியிருந்த ஜலத்தால் நிரம்பியிருப்பது கொண்டாடத்தக்கது. பக்கத்திலுள்ள, மலைவாசிகளான கொள்ளைக்கூட்டத்தாரும், மற்றும், திருட்டுத்தொழிலைக்கைக்கொண்ட, எளிய ஜனங்களும் தங்கள் தீச்செயலைத் துறந்து, சண்டை சச்சரவில்லாமல், சந்தோஷமாய்ப் பயிர்வேலையி லமர்ந்திருப்பதைக் கேட்கப் பின்னும் சந்தோஷமெய்துகிறேன். நீ செய்துமுடித்த காரியம் மிகவும் சிலாகிக்கத்தக்கதாகவே யிருக்கின்றது. முற்கால தேச சரித்திரத்தை நன்கு படித்தவரான, இந்திய நண்பரொருவர், பல்லவமன்னர்கள் ஆண்டுவந்த காலத்திலிருந்த செல்வமும் சௌக்கியமும், இப்பொழுது, உன்னால் இவ்வெளிய கிராமங்களுக்கு மீண்டும் வந்திருப்பதாக என்னிடம் கூறுகிறார். இப்பெருங்காரியம் நடந்தேறுவதற்கு நானும் ஏதோ சற்று உதவியாயிருந்ததை நினைக்க எனக்கு மிக்க சந்தோஷமே!"

"ஆயினும், இதை நீ சாதித்ததனால், உனக்கு இன்னும் கடினமான வேலையே ஏற்பட்டிருக்கின்றது! நீ செய்தவையனைத்தும் நன்குயறிந்த, கனம்தங்கிய கவர்னர் துரையவர்கள், கவர்மெண்டுக்கு நீ மிகவும் இன்றியமையாதவனாய் விட்டாயென்று சொல்லுகிறார். சென்ற மூன்று மாத காலமாய், சென்னை முழுவதும், மகாதைரியசாலிகளான ஒரு கொள்ளைக்கூட்டாத்தாரின் கையிலகப்பட்டுத் துன்பப்படுவதை ஒருக்கால் நீ யறிந்திருக்கலாம். நேற்றிரவு என் பங்க

ளாவிலும் புகுந்து, சில அரிய ஞாபகச் சின்னங்களையும், விலையுயர்ந்த குடும்பப் பொருள்களையும் அபகரித்துப் போய் விட்டார்கள். மூன்று மாதகாலமாய்ப் பிரத்தியேகமான போலீஸ்காவல் வைத்துப்பார்த்தாயிற்று. மிகத் திறமை வாய்ந்த போலீஸ் உத்தியோகஸ்தர்களும், "இப்படிச்செய்ய லாம், அப்படிச்செய்யலா"மென்று வாய்ப்பேச்சிற் கெட்டிக் காரர்களாயிருக்கின்றார்களே யொழிய, காரியத்திலொன்றும் காட்டவில்லை."

"ஜனங்களுடைய சம்ரக்ஷணை, போலீஸ் முதலிய விஷ யங்களைக் கவனிப்பவனாய், சட்ட நிர்வாக சபையின் பிரதம அங்கத்தினனாக நான் உத்தியோகம் வகிப்பது உனக்குத் தெரிந்திருக்கும். இக்கொள்ளைக்காரர்கள் கவர்னர் பங்களா வையும் ஒருகை பார்க்காமல் விடவில்லை! அவர்களைப்பற்றி இங்குள்ள போலீஸ்காரர்கள் என்னென்னவோ அதிசய மான கதைகள் கூறிக்கொண்டிருக்கின்றனர். உண்மை யில் இக்கொள்ளைக்காரர்கள், இங்கிலீஷ்காரர்கள்மேலும், "ஸிவில் ஸெர்விஸ்," "போலீஸ்" உத்தியோகஸ்தர்கள் மேலுந்தான் அதிகக் கண்ணாயிருக்கின்றார்கள். ஆகவே, வங்காளத்திலிருந்து, அராஜகத்தை யுண்டுபண்ண முயலும், ஜனவிரோதிகள் சிலரே இக்கூட்டத்திற்குத் தலைமை வகிப் பவர்களாயிருக்கவேண்டுமென்று கவர்மெண்டார் அபிப் பிராயப்படுகின்றார்கள். ஆயினும், அப்படியிருக்குமென்று எனக்குத் தோன்றவில்லை. போலீஸ்வேலையில் உனக்கு அனு பவமேயில்லை யென்பது எனக்குத் தெரியும். ஆயினும், மற்ற வர்களைவிட, பழைய வழிகளிலேயே செல்லாது, நூதனமான வழிகளில் முயலும் உன்போன்றவர்களிடத்தில் எனக்கு நம் பிக்கை யுண்டு. மூலகாரணங்களைக்கண்டுபிடித்து விசாரிக்கக் கூடியவன்தான் இவ்வேலைக்கு அவசியமானவன். அதற்கு உன்னைக்காட்டிலும் ஏற்றவன் வேறொருவரு மில்லை."

"இவ்வேலைக்கென்று பிரத்தியேகமாய் அமர்ந்து, அதை மேற்கொள்ள உனக்குச் சம்மதமிருக்குமா? போலீஸ் உதவி எவ்வளவு வேண்டுமாயினும், உனக்களிக்க ஆக்ஷேபணை யில்லை. இன்னும் எங்களாலியன்ற வுதவி யாவும் உனதே. எப்பொழுதும் சென்னைக்கு இன்னல் விளைத்துக்கொண்டிருக்கும், பெயர்போன நாகலாபுரம் கொள்ளைக்கூட்டத்தாரே இப்பொழுது தீர்க்க வைரத்துடன், கவர்மெண்டாரின்மேல் விரோதமாயிருக்கும் யாரோ ஒருவரால் இவ்வாறு கிளப்பப் பட்டிருக்கின்றனரென்பது எனது அபிப்பிராயம். பரம் பரையாயுள்ள அவர்கள் தலைவன் திருச்சி ஜெயிலிலிருந்து தப்பித்துச் சென்றது சமீபத்தில்தா னல்லவா? ஜெயிலில் ஒருவேளை அவன் கொடுமையாய் நடத்தப்பட்டிருக்கலாம். அதற்காகக் கவர்மெண்டின்மீது பழிக்குப் பழிவாங்க கிளம் பியிருக்கலாமன்றோ! நானும், உன்னைப்போலவே, இவ்விஷ யங்களை கவனிக்கத் தொடங்கிவிட்டேன். இவ்வுலகில் பாதித்துன்பங்கள் மனிதனால் ஏற்பட்டவையே!"

"இவ்வேலையை யேற்றுக்கொள்ள உனக்கு விருப்ப மிருந்தால், உடனே தந்திமூலமாய்த் தெரிவித்துத் திங்கட் கிழமையன்று வேலையை யொத்துக்கொள்ள சென்னைவந்து சேருவாய்."

"மிஸஸ். காடெலும், நானும் உன் க்ஷேமங்களைக் கோருகிறோம்.

இப்படிக்கு
உன் பிரியமுள்ள
ஹென்ரி காடெல்."

---

## அத்தியாயம் 39.

### ராமுவின் புதிய வுத்தியோகம்.

ஜானகிக்கு இப்புதிய வேலை சற்றும் சம்மதமேயில்லாததால், ராமு வெகுவாய் தயங்கிப் பின்பு ஒப்புக்கொண்டான். இனிச் சிலமாதங்கள் வரையும் ராமு தன்னைவிட்டு எங்கும் போகாமலிருக்கவேண்டுமென்பதே அவளது விருப்பம். அப்படியிருக்க, இப்புதிய உத்தியோகத்தினுல், அவர்கள் ஒருவரை யொருவர் பிரிய நேருவதுடன், ராமுவுக்கு ஓயாது அலைச்சலும், ஆபத்தும் நேரிடுவதா யிருந்தது. ஆனல், மரியாதையாய்க் கடிதமெழுதிவிடுத்த, காடெல் துரையின் உத்தரவை அவன் எவ்வாறு மறுக்கமுடியும்? காடெல் துரையின் திருப்திக்காக ஒருவார மிருந்து பார்த்துவிட்டுப், பிறகு எப்படியாவது திரும்பிவிடுவதாய் ஜானகிக்குத் தைரியம் கூறிக், கடைசியில், அவன் போவதென்றே தீர்மானித்தான்.

ராமுமட்டும் தனியாய்ச் சென்னைக்குப் புறப்பட்டு வந்து, திங்கட்கிழமை தினமே காடெல் துரையைப்போய்ப் பார்த்தான். அவ்வேலையில் சம்பந்தப்பட்ட உத்தியோகஸ்தர்களுடன் வெகுநேரம் கலந்து பேசியதில் யாவும் நன்ருய் விளங்கவே, உடனே அவனுக்கு அதில் பற்றுதலும் உண்டாய்விட்டது. என்னென்ன செய்யவேண்டு மென்பதையெல்லாம் தனக்குள்ளேயே யோசித்துத் தீர்மானித்துக்கொண்டு, நாகலாபுரம் மலையடிவாரத்திற்கே புறப்பட்டுச் சென்ருன். ஆனல், இதில் பழக்கமுள்ளவர்கள் அவன் செய்தது மதியீனமென்றும், மிக்க ஆபத்திற் கிடமென்றும் அபிப்பிராயப்பட்டனர். ராமுவோ,அக்கொள்ளைக்கூட்

டத்தாரி னிருப்பிடத்திற்கே சென்று, அவர்களைப்பற்றி யறிந்துகொள்ளுவதுதான் உத்தம மென்றெண்ணினான். திடீரென்று எதிர்பாராதவிதமாய்ச்சென்று வளைந்துகொண்டால், எதிர்க்கமாட்டாமல் அவர்களே தன்னடிபணிவார்கள்; அதன் பிறகு, அவர்களிடத்தில் அன்புபாராட்டி, சீர்திருத்திவிடலாமென்பது அவனது துணிபு. தேர்ந்தெடுத்த போலீஸ் காவலுடன், நாகலாபுரம் மலையடிவாரத்தில், வளைந்து வளைந்து மலையுச்சிக்குச் செல்லும் ஒரு செங்குத்தான ஒற்றையடிப் பாதை யடியில் வந்து சேர்ந்தான். மலை அதிக உயரமாயில்லாவிடினும், சிறு முட்புதர்களும் மரங்களு மடர்ந்து காணப்பட்டது. மலைமேற் செல்லும் வழியோ மிகவும் செங்குத்தாயிருக்க, நாற்புறமும் கரடு முரடான குன்றுகள் சூழ்ந்த, ஒரு பள்ளத்தில் வசித்துக்கொண்டிருக்கும் கொள்ளைக்கூட்டத்தாரை யணுக, மூன்று செங்குத்தான மலைகளை யேறி யிறங்க வேண்டியதாயிருந்தது. அவ்விடத்தில் அநேகம் காட்டுப் பன்றிகள், சிறுத்தைப்புலிகள், பலவகைப் பாம்புகள் முதலியன உண்டென்றும் சொல்லிக்கொண்டனர்.

ராமு மலையடிவாரத்தை யடைந்தபொழுது மாலை நேரமாயிற்று. இரவு அவ்விடத்திலேயே தங்குவதற்கு ஏற்பாடு செய்துகொண்டான். மலைப்புல்லை நன்றாய் மேய்ந்து, கொழுத்தவைகளாய்ப் பசுக்கள் யதேச்சையாய்ச் சஞ்சரித்துக்கொண்டிருந்தன. அவைகளை, மலைமேலிருந்த மனிதர்களைப்போல் திருடச் செல்லாமல், இருந்ததைக் கொண்டு சுகஜீவனம் செய்பவர்களான சில இடையர்கள் பாதுகாத்து வந்தனர். இதுவரையும் ராமு அவ்வகையான, ருசியுள்ள பாலைச் சாப்பிட்டதே யில்லை. அவ்வழகிய பசுக்களை மேய்த்துக்கொண்டு தானும் அவ்விடையர்களிலொருவனா யிருக்க விரும்பினான்.

எங்கும் பச்சென்று பசுமையாய் அழகாயிருக்க, மலைத் தாழ்வரைகள், மரங்களடர்ந்து, இருண்டிருந்தன. பக்கத்தில் ஒரு அருவி சலசலவென்று, இனிய சத்தமிட்டு ஓடிக்கொண்டிருந்தது. காட்டுப் பூக்களின் அடர்ந்த வாசனையுடன் காற்று வீசு, எங்கும் பார்க்க மிகவும் ரமணீயமாயிருந்தது. பேராசை பிடித்த மனிதன் எந்திரங்களை அவ்விடத்திற் கொண்டுவந்து வைத்து, அவைகளின் கரியினுலும் புகையினுலும், இயற்கையினழகை இன்னும் கெடுக்கத் தொடங்கவில்லை. ஸ்வயமாகவே யினிப்புள்ள பசும்பாலையும் மலைத்தேனையும் மட்டுமே யுண்டு, நல்ல தேகாரோக்கியத்தைப் பெற்று, அம்மலையடிவாரத்திலேயே தனியாய் எப்பொழுது மிருக்க ராமு விரும்பலானுன்.

இவ்வெண்ணங்களை விட்டுத் தான் வந்த வேலையைப் பற்றி நினைக்கும்பொழுது, அவனல் வருத்தத்துடன் சிந்திக்காமலிருக்க முடியவில்லை. அடிவாரத்திலிருக்கும் ஜனங்கள் ஒரு தீங்கு மறியாதவர்களாய், இவ்வளவு சாதுக்களாயிருக்கும் பொழுது, மலைமேலுள்ளவர்கள் மட்டும் அவ்வளவு கொடிய கொள்ளைக்காரர்களா யிருப்பானேன்? பரம்பரை வழக்கமும், இருப்பிடமுமே காரணமென்று தானே கூறிக்கொண்டான். பகலில் நாற்பது மைல் பிரயாணம் செய்த வனுகையால், சீக்கிரமே படுக்கச் சென்ற ராமு, பொழுது விடிவதற்குள் மலைமேலேறிக் கள்வர்கள் வசிக்கு மிடத்தைக் கண்டுபிடிக்கும் தீர்மானத்தோடிருந்தான். சத்தப்படாமற் சென்று, அவர்களை வளைந்துகொள்ளுவ தன்பொருட்டுக் கிளம்ப, இரவு இரண்டுமணிக்கெல்லாம் தயாரா யிருக்கவேண்டுமென்று தன் கூட்டத்தாருக்குச் சொல்லிய பின்பு, அவன் படுக்கச் சென்றதும், அரைமணி நேரத்திற்கெல்லாம் ஒரு பெரிய இரைச்சல் கேட்டது.

சாமர்த்தியசாலிகளான வேவுகாரர்களைக் கொண்டு, அவன் வரவை முன்பே எதிர்பார்த்திருந்த அக்கொள்ளைக்காரர்கள் பகலெல்லாம் பிரயாணம் செய்த அலுப்பினுல் யாவரும் களைத்துத் தூங்கிக்கொண்டிருக்கையில், சிறிதும் சத்தமில்லாமல், அவர்களிருக்கு மிடத்திற் புகுந்து, கத்திகள், துப்பாக்கிகள், வெடிமருந்துகள் உள்பட சகல சாமான்களையும் கவர்ந்துகொண்டு, அவர்களையும் கைதிகளாக்கிக் கொண்டு சென்றனர்.

மலைமேல் இவர்களை வரவேற்க, பெரும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. அக்கள்வர்கள் உட்கார்ந்திருந்த விடம், தெளிந்த நீரையுடைய, ஒரு ஓடையின் பக்கத்திலுள்ள விசாலமான கற்பாறை. வற்ருது, குமிழியிட்டுப் பெருகிக்கொண்டிருந்த அருவியொன்று அவ்வோடையில் வந்து விழுந்து, பிறகு அங்கிருந்து கீழே விழுந்து, ஆரணி நதி யென்னும் பெயருடன் ஓடிக்கொண்டிருந்தது. முருகனும், கள்வர் தலைவனை, ஜெயிலிலிருந்து தப்பித்துச் சென்ற மனிதனும், ஓர் பெரும் பட்டுத்திண்டின் மீது சாய்ந்து, உட்கார்ந்துகொண்டிருந்தனர். இதற்குள்ளாகவே முருகன் அம்மலைவாசிகளி லொருவனுய், அவர்களால் மதிக்கப்பெற்று, அவர்களுக்கோர் நண்பனுகவும், நல்வழி காட்டும் ஆசார்யனுகவு மாய்விட்டான். தோலுக்கு எண்ணெய்போலும் அத்தியாவசியமானதாயுள்ள, நகரத்தாருடைய நல்லறிவையும், நாகரீகத்தையும் அவனிடமிருந்து அம்முரட்டு மலைஜனங்கள் கற்றுக்கொண்டனர். இக்கூட்டத்தாரனைவருக்கும் சேனதிபதி தொப்பையே. கையில் நீண்ட சவுக்குடனும், அக்குளிலடங்கிய ஒரு பெரும் தடியுடனும் தொப்பை நின்றுகொண்டிருந்தான். பத்துப் பன்னிரண்டு தீவட்டிகள் எரிந்துகொண்டிருந்தன. அவைகளினின்றும் ஒருவிதமான மங்கிய வெளிச்சம் இருண்ட

மலைமீது படிய, தூரத்தில் ஓர் நரி ஊளையிடும் சத்தம் கேட்டுக்கொண்டிருந்தது.

வெகுகாலமாய், இப்பாறைமீதுதான் அவர்கள் தாம் திருடிவந்த சொத்துக்களைப் பங்கிட்டுக்கொள்ளுவது வழக்கம். ஒருபக்கத்தில் நீரோடையும், மற்றொரு பக்கத்தில் இருண்ட குகைபோல் விளங்கிய, ஒரு செங்குத்தான பாறையுங் காணப்பட்டன. இக்குகையில்தான் அக்கள்வர் தலைவன் தன் சொத்துக்களையெல்லாம் ஒளித்து வைத்திருந்தான். எரிந்துகொண்டிருந்த தீவட்டிகளும், நீண்டு வாய்திறந்திருந்தகுகையும், கையில் பிரம்புடன் நின்ற தொப்பை, அமைதியான தோற்றத்தையுடைய முருகன், ஓங்கியுயர்ந்த வலியதேகத்தினனான அக்கள்வர் தலைவன், அவன் பொருட்டுத் தம்முயிரை யிழக்கச் சித்தமானவர்களாயும், தம் குலத்தொழிலைப் பெருமையுடனும், களிப்புடனும் செய்பவர்களாயுமுள்ள, நூற்றுக்கணக்கான, எசமான விசுவாசம் பொருந்திய சுற்றத்தாருருவங்களும் ஸ்படிகம் போன்ற ஓடை நீரில் பிரதிபலித்துக்கொண்டிருந்தன.

திருடர்கள் கையிலகப்பட்டவுடன், ராமுவுக்குச் சற்றும் அச்சமுண்டாகவில்லை. தனது மனோதைரியத்தைக் காண அவனுக்கே ஆச்சரியமாயிருந்தது. முன்பே தன் வரவை அவர்களுக்குத் தெரிவித்து, இவ்வண்ணம் ஏற்பாடு செய்திருந்தவன்போல் குதூகலம் கொண்டான்.

“ஐயா, தாம்தான் இப்போலீஸ் மனிதர்களுக்குத் தலைவரென்று நினைக்கிறேன்,” என்றான் சிறுவயதினனாய்த் தோன்றிய ஒருவன் கட்டைக்குரலுடன். “எங்கள் மலைக்கு உங்களைச் சந்தோஷமாய் வரவேற்கின்றோம். நான் கள்வர் தலைவனின் மகன். உங்களுக்கு நல்லரவு கூற என்னை அனுப்பியிருக்கின்றார். பட்டணங்களிலுள்ள நாகரீக ஜனங்

களைத்தான் நாங்கள் உபத்திரவிப்பது வழக்கம். உங்களை வரையும் எங்களிருப்பிடத்திற்கு அழைத்து வந்து, எங்கள் பலம் முழுவதையும் காட்டியபின்பு அனுப்பும்படி எங்கள் தலைவர் உத்தரவளித்திருக்கின்றார். வந்து பார்த்த பிறகு, நிச்சயம் அபஜய மடையக்கூடிய வோர் சண்டையைப் போடாமலாவது, மீண்டும் இத்தகைய புத்தியற்ற காரியத்திற் பிரவேசிக்காமலாவது நீங்க ளிருக்கலாமல்லவா? எங்களிடமுள்ள பால், தேன் தினை இவைகளைக்கொண்டு உங்களுக்கு விருந்தளிப்போம். இம்மலைக்கு வருபவன், எங்களுக்குத் தீங்கு செய்பவனாயினும், எங்களது விருந்தினனே யாவன். மற்றவர் நடந்து வரும்பொழுது, உங்களை மட்டும் இந்த டோலியில் உட்காரவைத்துத் தூக்கிக் கொண்டு வரும்படி எங்கள் தலைவர் கட்டளையிட்டிருக்கிறார். மலை மிகவும் செங்குத்தாயும், கரடுமுரடாயு மிருப்பதால், ஏறி வழக்கமில்லாத உங்கள் கால் இடறக்கூடும். ஐயா, இதில் ஏறிக்கொள்ளுங்கள்!"

"நீ யார்? தயவுசெய்து சொல்!" என்று ராமு கேட்க,

"கள்வர் தலைவரது மூத்த மகனென்று சொன்னேனே!" என்றான் அவ்வாலிபன்.

"நீதான் பட்டத்து இளவரசன் போலும்! நல்லது! நான் உங்கள் உபசாரத்தை ஏற்றுக்கொள்ளத் தடையில்லை; விஷயங்கள் இவ்வாறு மாறிவிடுமென்று நான் எதிர்பார்க்கவில்லை! நீங்கள் இவ்வாறு பிரியமாய் வரவேற்பது சந்தோஷத்தையே யளிக்கின்றது. உங்களிஷ்டப்படியே நான் இந்த டோலியில் ஏறிக்கொள்ளுகிறேன்!" என்று ராமு அதிலேறிக்கொண்டான். அப்படிச் செல்லுவது அவனுக்கு மிகவும் உற்சாகமாகவே யிருந்தது. சிறைபிடிக்கப்பட்ட யுத்தவீரர்கள் போல், அவன் வேலையாட்கள், இப்புத்தியற்ற

காரியத்திற் பிரவேசித்ததின் பலனாய் மண்டை பிளவாமலி ருந்ததே யென்ற பேரானந்தத்துடன், அவன் பின் நடந்து சென்றனர்.

கள்வரிருப்பிடமாகிய, விசாலமான கற்பாறையை யடைந்து, அக்காட்சியைக் காணவும், ராமு அடைந்த ஆச்சரியத்திற்களவில்லை. அவன் முருகனை நோக்க, முருகன் அவனை நோக்கினான். தெரிந்த முகமாயிருந்தும், அடையாளம் கண்டுபிடிக்க முடியாமல் தொப்பை கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தான். அவர்களடைந்த ஆச்சரியம் அம் மூவரையும் ஒரு நிமிஷம் திக்பிரமையுற்றுக் கலங்கச்செய்ய, முருக னெழுந்து, யாவரும் திகைத்து நிற்க, ராமுவின் காலடியில் சாஷ்டாங்கமாய் விழுந்து கும்பிட்டான்.

"என்ன, முருகனா இது ? என் கண்களை நம்புவதா,— அல்லது, இது ஓர் பெரிய கனவோ? எனக்கொன்றும் தெரியவில்லையே !" என்றான் ராமு. "முருகா, நீதானா! ஏன், எப்படி, நீ இங்கு வந்தாயென்பதைச் சொல்! கட்டுக் கதைக்கும் மேல் அதிசயமாகவன்றோ தோன்றுகிறது ! ஆஹா ! எனக்கு இப்பொழுதுதான் விளங்குகின்றது.— கொள்ளைத்தலைவனொருவனுடனும், மற்றொரு மனிதனுடனும் ஜெயிலி லிருந்து தப்பித்துச் சென்ற முருகன் நீதான் போலும் ! ஜெயிலுக்கு நீ சென்ற காரணமென்ன?"

"சாமி நான்தான் முருகன்,—உங்க வேலைக்காரன்! உங்க காலிலே விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொள்றேன். நீங்க உங்க கையாலே விதிக்கிற தண்டனையை, வாய்திறவாமே, சந்தோஷமா நான் ஏற்றுக் கொள்ளுவேன். நான் செய்திருக்கிற அநேகம் குற்றங்களுக்கு மரண தண்டனைதான் சரி! ஆனா, என் கதையை முதலிலே கேளுங்க ! நிசமா, தப்பு செய்தது நானில்லே. ஊரிலே

இருக்கிறவங்க என்னை அம்மாதிரி செய்யும்படி அடிச்சுட்டாங்க! நான் பின்னாலே வருத்தப்பட்டு, நல்ல வழியிலே மறுபடியும் நடந்து பாக்கிறதுக்கு அவங்க இடமும் விடல்லே,'' என்றான் முருகன்.

"ஆயினும், முருகா! நல்ல தோட்டமொன்று உனக்களித்து, நீ நாணயமாய் வாழ்வதற்கான வழியையும் நான் உனக்குச் செய்துவைக்கவில்லையா? அவை யாவையும் விட்டு, நீ எவ்விதம் இத்தனிமையான விடத்தை யடைந்தாய்? உன் கதையை முழுவதும் என்னிடம் சொல். நான் தற்காலம் உங்கள் கையிலகப்பட்டிருந்தாலும், உனது எசமானன்! உன்னிடம் முன்பு மிகவும் பக்ஷமாக நடந்திருக்கிறேன்!''

"சாமி, நான் படிச்சவன் மாதிரி பேசறதைக் கொஞ்சம் பொறுத்துக் கொள்ளணும்! லோகமாகிற பள்ளிக்கூடத்திலே நான் நன்னா படிச்சுட்டேன்! என் அனுபோகத்திலேயிருந்து, எனக்கு அநேக விஷயங்கள் தெரிந்துவிட்டது. எந்தவிதமான புதிய காரியத்திலும், முதலிலாரம்பிச்சவங்களை, மற்றவங்க செய்த தப்பை யெல்லாம் அவங்க செய்ததாக வைச்சு, தண்டிச்சுடறாங்க! ரொம்ப வருஷங்களுக்கு முன்னே, நீங்க என்னைவிட்டுப் போனதிலேயிருந்து நடந்த சமாசாரத்தைச் சொல்றேன், கேளுங்க! தென்னந்தோப்பை நீங்க எனக்கே சொந்தமாக்கினவுடனே, தாங்க முடியாத சந்தோஷத்தோடே நான் வீட்டுக்குப் போனேன். நீங்க தோப்பை எனக்குக் கொடுத்தது, எனக்குத் தேவையானதுக்குமேல் எவ்வளவோ அதிகம். ஒரு பிச்சைக்காரப் பையனுக்கு ரொம்ப நீளமான துணியைக் கொடுத்தா, அதன் பாரமே அவன் மூச்சைத் திணரச் செய்யாதா? மெள்ள மெள்ள நான் சுகமாயிருக்க ஆரம்பிச்சேன். என் தலைவிதி! சர்க்காரிலே விற்கிற சாராயத்தைக் குடிச்சு ருசி

கண்டுவிட்டேன்! அதோ நிக்கிற தொப்பைதான் எனக்குக் கெட்டபுத்தி போதிச்ச குரு! அப்போ நம்மஊரிலே கள்ளுக் கடையில்லே யென்கிறது உங்களுக்குத் தெரியும். ஒண்ணு வைக்கலாமின்னு சர்க்காரிலே நினைச்சது, தொப்பையின் யோசனைக்கும், என் பேராசைக்கும் நன்னு ஒத்திருந்தது. என் தென்னந்தோப்பிலிருந்து பணம் சம்பாதிச்சு, ஸர்க்கா ருக்குப் பணம்கட்டிக், கள்ளுக்கடை வச்சேன். இத னுலே ஏழைங்களுடைய சாபமும், பணக்காரங்களுடைய, பழிவாங்கவேண்டுமென்ற கோபமும் என் தலையிலே வந்து விடிஞ்சுது! சாதாரண ஏழை படையாச்சியான நான், இவ் வழகான தென்னந்தோப்புக்குச் சொந்தக்காரனுயி, பங்களா விலே துரைபோல யிருந்துவந்ததை அவங்களாலே பொறுக்க முடியவேயில்லே. நான் கள்ளுகடை வச்சது தான்,—உடனே ஊரிலே பேர் துலேஞ்சுது. நாளடைவிலே, பணம், குணம், மனச்சாக்ஷி, சுறுசுறுப்பு, செட்டு, நாணயம், கவலையற்றிருப்பது முதலிய, நகரவாழ்க்கைக்கு முக்கியமான யாவும் தொலைய, கடைசியா, கொடிய மிருகங்களுக்குமேல் கொடியவங்களாயிருக்கும் உங்க மனிதர்களுக்குப் பயந்து, காட்டு ஜனங்களா யிருந்தாலும், ரொம்ப நல்லவங்களான இம்மலைவாசிகளிடம் வந்து சேர்ந்தேன்! கடவுளிடமும், மனிதர்களிடமும் ஒவ்வொரு நிமிஷமும் பயந்து, கடைசி யிலே வேறே வழியில்லாமலே, நம்ம கையாலானதைப்பார்க்க லாமின்னு துணிஞ்சிருக்கிற ஸ்திதியிலே நாங்க இருக்கோம்! சாமி, சாமி! முந்தி என்னைக் காப்பாத்தினுப் போலே, இப்ப வும் எங்களைக் காப்பாத்துங்க! நாங்க ஒண்ணும் கெட்ட வங்க இல்லே; நல்லவங்களாத்தான் இருக்க ஆசைப்படு ருேம்! வேட்டை நாய் முயலைத் துரத்திப் போறுப்போலே, எங்களைத் துரத்திப் பிடித்து ஜெயிலுக்கு அனுப்பாமே,

நல்லவங்களாவுற வழியைக் காட்டுங்க! எங்களைக் காப்பாத்தணும், சாமி! இந்த விடிகால புண்ய வேளையிலே, எங்களுடைய நலத்துக்காகத்தான் கடவுள் உங்களை இங்கே அனுப்பியிருக்காரு!''

''முருகா, கொள்ளைக்கூட்டத்தாரில் முதல்வனாய், நீ எவ்வித மானுயென்பது எனக்கு இன்னும் விளங்கவில்லை. கள்ளுக்கடை வைப்பவர்கள் கள்வர் தலைவர்களாக முற்ற வேண்டுமென்பது அவசியமில்லையே!''

''சாமி, நான் என் கதையைச் சுருக்கிச் சொல்ல வேணுமின்னு அப்படிச் சொன்னேன். பிறரைக் குற்றம்கூற வேண்டாமின்னுதான், கள்ளுக்கடை வச்சு ஜெயிலுக்குப் போன வயத்தெரிச்சலைச் சொல்லாதுவிட்டேன். எல்லோரும் உல்லாசமாயிருக்கிற இடம், கள்ளுக்கடை. கள்ளுக்கடை வைக்கிறவனுக்குத்தான் அங்கே வரவங்களுடைய ரகசியங்களும் தெரியும். நிலவிஷயமா நம்ம ஊருங்கிட்டே பெரிய கலகம் நடந்தது. அதிலே சில போலீஸ்காரங்களைக் கூட கொலைபண்ணிவிட்டாங்க. கலகம் நடக்கப்போவதுன்னு எனக்கு முன்னுலேயே தெரிஞ்சிருந்தாலும், நான் அதிலே சேரவேயில்லே. ஆனு, என்னைப் பிடிச்சு விசாரணைக்குக் கொண்டுபோய் நிறுத்தினுங்க! தன்னை என் ஸ்திதியிலே வச்சு, என்னையும் என் கேஸையும் தெரிஞ்சுகொள்ளும்படி அவ்வளவு தயவுகாட்ட ஜட்ஜியவங்களுக்குப் பொறுமையில்லே. எனக்குள்ளதையெல்லாம் எனக்கு வேண்டியவங்க, வக்கீலுங்க, போலீஸ்காரருங்கமுதலியவங்களுக்குக்கொடுத்துச் செலவழித்த பிறகு, ஒரு வருஷம் ஜெயிலிலிருக்க வேணுமின்னு எனக்கு தண்டனை விதிச்சாங்க! நான் ஒரு தப்பும் செய்யல்லே. ஆனு, கடவுள் முன்னிலையிலே நான் குற்றம் செய்தவன்தான்! ஏழைங்களுக்குக் கள்ளை விலைக்குக்

கொடுத்து, அவங்க தினசரிச் சம்பளத்தைக் கொள்ளை கொண்டேனல்லவா? கடவுளுக்கு எல்லாம் தெரியும்! அவருக்குப் பக்ஷபாதமில்லை யென்கிறது எனக்கு இப்போ தான் தெரியுது!"

"முருகா, கடவுள் உன் ஸ்தோத்திரத்திற்கு இப்பொழுது காத்துக்கொண்டிருக்கவில்லை. நீ ஏன் திரும்பி ஊருக்குப் போகாமல் இங்கு வந்தாய்? இக்கூட்டத்தாருள் நீ முக்கியமானவனான விதமென்ன?"

"ஊருக்கு நான் எப்படி திரும்பிப் போக முடியும்? நான் வேறே எங்கே போவது? ஜெயிலிலிருந்து தப்பிப் போனவனை யாராவது கிட்டே சேர்ப்பாங்களா? பொறுக்கமுடியாமே தொப்பை மீறிக்கொண்டு கிளம்ப, நானும் இக்கொள்ளைக்கூட்டத்தலைவனும், அவன் ஒத்தாசை யினாலே வெளியேறினோம். எங்க உயிர் அந்தரத்திலே கிடந்து தவிக்கிறபோது, இவருதான் எங்களுக்கு இருக்க இடமுதவினார். என் வரலாற்றைக் கேட்டு தயவுண்டாயி, அவர் நாங்க இம்மலையிலே நிர்ப்பயமா யிருக்கலாமின்னு சொன்னார். ஓரிடத்திலும் இருக்கவொட்டாமே, நீங்க துரத்தியடிக்கும் இந்த ஜனங்க, நாகரீகமில்லாத முரட்டு மனிதர்களா யிருந்தாலும், உண்மை, இரக்கம், நல் நடத்தை இதுகளில், நாகரீகமுள்ள தொழில்க ளிலிருப்பதாக உங்க பட்டணங்களிலே கூடிக்கிடக்கும் ஜனங்களைவிட, மேலாக விருக்கிறாங்க! இதுவரையும் ஏழைங்களை நாங்க கொள்ளை யடிச்சதே யில்லை. எங்க வயதுக்கு நாங்க எப்படிச் சம்பாதிப்பதென்பதைக் காட்டிக் கொடுத்தா, இம்மலையை விட்டு சந்தோஷமா வந்துவிடுவோம்!"

"நல்லது, முருகா; நீ என்றும்போல் நன்கு யோசித்து உண்மையே பேசுகிறாய். கொஞ்சம் பிசகியது, உன்னை அடியோடு துலைத்துவிட்டது. தொப்பையின் பேராசையும்,

நீ வைத்த கள்ளுக்கடையுமே உன் நாசத்திற்குக் காரணம். இம்மலையில் நீங்கள் எவ்வளவு பெயர் களிருக்கிறீர்கள்?''

"மொத்தம் முன்னூறா குடும்பம் இருக்கு, சாமி! ஏராளமான பணம், மூணு லக்ஷ ரூபாய்க்குமேலே எங்க ளண்டே இருக்குது. எல்லாத்தையும் எடுத்துக்கொள் ளுங்க! எங்க ஒவ்வொத்தர் தலை மேலும் குறைஞ்சது ஒரு "வாரண்டா''வது இல்லாமலில்லை. அதை எடுத்து விடுங்க! பயிர்வேலையிலே எங்களைப் போட்டு, எல்லாரையும் சண்டை சச்சரவில்லாத குடிங்களாகச் செய்யுங்க! ஒவ் வொத்தருக்கும் மூணு ஏக்கர் நிலமும் ஒரு பசுவும் கொடுத் தா, லோகத்திலே உண்மையான செல்வம் எதுவோ, அதைச் சம்பாதிக்க அல்லும் பகலும் வேலை செய்வோம். நிலக்கடலை, பஞ்சு, சோளம் இவைகளைப் பயிரிட்டுப் பட்டணத்திலே யிருக்கிறவங்களுக்குச் சௌக்கியமுண்டாக் குவோம். எங்களாலே பிரபுக்களுக்குப் பழம், புஷ்பம் முதலிய அநேகம் அருமையான பொருளுங்க கிட்டும். ஜெயிலிலே மட்டும் எங்களை அடைச்சு வைக்காதிங்க! அதனாலே ஒத்தருக்கும் லாபமில்லே!''——மேலே கூற முடியாமல், முருகன் ராமுவின் காலில் மறுபடியும் விழுந்து நமஸ்கரித்தான்.

ஒரு நிமிஷம் யோசித்து விட்டுப் பிறகு ராமு மெது வாய், "எழுந்திரு, முருகா! பயப்படாதே! எனக்கொரு எண்ணம் தோன்றுகிறது. உன்னைப் பார்த்தவுடன் என் பழைய மனோபாவங்களும், எணணங்களும் எனக்கு மீண்டும் உண்டாகின்றன. மழைக்காலத்தில் இவ்வாரணி நதியில் வேண்டிய ஜலம் ஓடுகின்றது. ஆயினும், அவ்வள வும் ஒரே நாளில் சமுத்திரத்தில் போய் விழுந்து வீணுகின் றது. நான் கவர்மெண்டாரிடம் சொல்லி, மலைப்பள்ளத் தாக்கிலிருந்து சமநிலத்தில் அது பெருகுமிடத்தில், உங்கள்

பணத்திலிருந்து உங்களைக்கொண்டே ஓர் அணைக்கட்டு கட்ட ஏற்பாடு செய்கிறேன். புதர்களும் பூண்டுகளும் வளர்ந்து கிடக்கும், அநேகம் மைல் விஸ்தீர்ணமுள்ள இந் நிலமுழுவதும் உங்களுக்குச் செழிப்பான நஞ்சை பூமி யாய் விடும். நீங்கள் வேலை யாரம்பிக்கும் அன்று, உங்கள் ஒவ்வொருவருக்கும் சொந்தமாய், உழுவதற்கு ஓர் கலப்பை இனுமாக அளிக்கின்றேன்!''

தொப்பையின் புத்திக்கு எல்லாம் ஒரே கலக்கமா யிருந்தது. அவனுக்குத் தன் கண்களையே நம்பமுடிய வில்லை. தெய்வீகத்தன்மை பொலியும் முகத்தையுடைய இப்புதியவர் வேருெருவருமல்ல,—முருகனுடைய எசமா ஞகிய ராமுவே யென்று அவனுக்கு மெதுவாய் விளங்கத் தொடங்கிற்று. ராமுவின் கண்களை நோக்கி, அவன் குரலை யும் கேட்டவுடன், கோடைகாலத்தில் சிறுமழை பெய்யும் பொழுது, இலையொடுங்கி அசைவற்று நிற்கும் வெருன்றிய மரம்போல், தொப்பையும் அப்படியே நின்றுவிட்டான்!

முருகனுடன் பழக்கமானது முதலே, கள்வர் தலைவன் வேறு மனிதனுய் மாறிவிட்டான். குடியானவனுடைய நிம்மதியான வாழ்வை எப்பொழுதும் விரும்பிய முருகனைக் கண்டவுடன், அவனுக்கும் அத்தகைய வாழ்விலேயே ஆவல் தோன்றிவிட்டதாகையால், தலைமை வகிக்கும் திறமை யுடைய தொப்பையினிடம் தன் செங்கோலை யளித்துவிட்டு, கவலையற்றிருக்கத் தொடங்கினுன். முருகன் அவனுக்குக் குருவா யமைய, ஒவ்வொன்றிலும் அவனையே பின்பற்றி யொழுகிவந்த கள்வர்தலைவனுக்கு, இப்பொழுது நூதன மாய் ஏற்பட்ட விஷயங்கள் ஒரு ஆச்சரியத்தையு மளிக்க வில்லை. தனக்கு உண்மையை விளக்கவந்த மெய்த்தெய்வ மென்றே ராமுவைப் பாவிக்கலானுன்.

---

## அத்தியாயம் 40.

### "மறைந்து கிடக்கும் மணல் திட்டு."

சட்ட சபைக்கு அங்கத்தினர்க ளாகவேண்டுமென்று முற்பட்டவர்களில், முழு வெற்றியுடன் கேதாரியே தேர்ந்தெடுக்கப்பட்டான். பல பிரிவுகளாயும், பெரும் சட்டதிட்டமுமுடைய ஜனசமூகத்தின்கண் கேதாரி யடைந்த வெற்றி அவனது தைரியம், புத்தி, முன்யோசனை, குன்றா உழைப்பு, ஊக்கம் இவைகளுக்கு முற்றிலும் ஏற்ற கைம்மாறென்றே கூறவேண்டும். எடுத்த காரியத்தைச் சாதிக்கும் உறுதியை யுடையவர் அதைச் சாதிக்காமல் விடார்களல்லவா ? அவன் மீதுள்ள பொறாமையால், இதுவரையும் ரகசியத்தில் அவனைப்பற்றி அவதூறுசெய்துவந்த சில நண்பர்கள், இனி யொன்றும் பலிக்காது என்று கண்டுகொண்டு, யாவரையும் விட அதிகமாகவே அவனைப் புகழ்ந்துகொண்டு கிளம்பினார்கள். எங்கு பார்க்கினும், இப்பொழுது, கேதாரிக்கு நண்பர்கள் ஏற்பட்டுவிட்டனர். பணமுள்ளவர், பணமற்றவர் அனைவரும், ஒருவரைவிட ஒருவர் மேலாக, அவனுக்கு விருந்தளித்து உபசரிக்க, அவையெல்லாம் பெற்று கேதாரி சந்தோஷமாய் டில்லிக்குச் செல்லும்பொழுது, தக்கசமயம் வாய்க்குங்கால், தங்கள் ஞாபகம் சிறிதுண்டாகலா மென்றே ஒவ்வொருவர் மனதிலும் ஆசையும், நம்பிக்கையும் குடிகொண்டிருந்தன. இப்பெரும் பதவியை யடையும் முயற்சியில், தான் திவாலாய் விட்டதும், வீட்டில் தன் சாமர்த்தியத்தினாலேயே பிறருக்கு வெளியாகாமலிருந்த, தன் மனைவி மக்களின் எளிய நிலைமையையுங்கூட கேதாரி சிறிது மறந்து விட்டான்.

மார்க்கண்டம் அய்யரும் உள்ளூர் சட்டசபைக்கு அங்கத்தினரான போதிலும், கேதாரியைப்போல் அவ்வளவு பெயர்கள் ஒன்றுசேர்ந்து அவரைத் தேர்ந்தெடுக்கவில்லை. வக்கீல் தொழிலில் அதிவிரைவாய்க் கேதாரி முன்னுக்கு வந்துகொண்டிருப்பதைப் பார்க்க, அவர் சிறிது அச்ச முற்றாராயினும், டில்லி சட்டசபைக்கு அங்கத்தினனாகும் படி இவ்வளவு சீக்கிரம் மேற்சென்றுவிடுவானென்று, அவர் கனவிலும் நினைத்தவரல்ல. அவன், ஓடும் வேகத்தால் இடறி, சீக்கிரத்தில் காலை ஒடித்துக்கொள்வானென்று, உண்மையில் அவருக்கு உள்ளுக்குள் சந்தோஷமே! இருவரையும் கொண்டாடி ஊரிலுள்ளோர் உபசரித்தபோதிலும், எல்லா விஷயங்களிலும், வெகு சுலபமாய் டில்லி சென்னைக்கு மேம் பட்டிருந்ததுபோல், கேதாரியும் ஒரு சிரமமு மில்லாமலே, எல்லா விருந்துகளிலும், பிரதானமானவனானான். அவன் தம்மைத் தொட்டுக் கைகுலுக்கினாலும் போதுமென்று திரளான ஜனங்கள் அவனை நெருங்கி முன்வரலானார்கள். நெப்போலியனுக்கு வாய்த்ததுபோன்ற பேரதிருஷ்டத் தையே உலகோர் பெரிதும் கொண்டாடுகின்றார்களல்லவா? எல்லாரும் கொண்டாடும்பொழுது தன் மனத்துள் எழுந்த கலக்கங்களைப் பிறரறியாமலிருக்கும்வண்ணம், எல்லாருக் கும் மேலாக, மார்க்கண்டம் அய்யர் கேதாரியைப் புகழ வேண்டியதாயிற்று. அதிகார ஸ்தானத்தி லிருப்பவரைக் கண்டால், காரணமின்றி களிப்படைவதும் அவருக் கடிமைத் தொழில் புரிவதும் மனிதர் இயற்கையன்றோ?

மார்க்கண்டம் அய்யரைக் காட்டிலும், கேதாரிக்கே அதிக விருந்துகளும், மரியாதைகளும் செய்யப்பட்டன. திடீரென்று அவனிடம் நட்பு பாராட்டிய அநேகம் வாலிபர் களும், வயதுசென்றவர்களும் அவனைச்சுற்றிலுங் கூடி, அவன் பெரும்பதவியுற்றுப் பெருமையடைவதில் சந்தேக

மற்றவர்கள் போல் பேசலாயினர். முக்கிய பட்டணமாகிய டில்லி, இவ்வாறு, யாவர் மனதையும் கவருவதாயிருந்தது! தன்னைப் பின்பற்றுவோரும், தன் நண்பர்களுமே, திடீ ரென்று, கேதாரியைத் தன்னிலும் மேலாக மதித்ததும், கேதாரி அதை எடுத்துக் காட்டியதும் மார்க்கண்டம் அய்ய ரின் செருக்கைச் சிறிது சிதைத்தது. டில்லி சட்டசபைக்கு அபேக்ஷகனாக் கேதாரியை நிற்கும்படி அவர் கூறியபொழுது அவரது உள்ளத்திலாழ்ந்த முக்கிய கருத்தென்னவெனில், நிச்சயம் அவன் தோல்வி யடைவானென்பதே.

எலெக்ஷன்கள் முடிவடைந்து ஒருமாதமாயிற்று. கடைசியாய் தாகுர்தாஸ் என்னும் ஓர் பெரும் குஜராத்தி வியாபாரியினுடைய மாளிகையில் பெரும் விருந்து நடந்தது. நிலவு பொழியு மிரவில், சென்னையிலுள்ள சிறியதோர் டாஜ் மகாலென்றே எண்ணும்படியான அம்மாளிகை, பெரும் பட்டணமாகிய சென்னையின் எல்லையில், தனியே வெகு நேர்த்தியாய்க் கட்டப்பட்டுக் குடியிருப்பாரில்லாமல், ஓர் மகுதியைப்போல் விளங்கிற்று. அன்று மாலை விருந்துக்கு வந்திருந்தவர்கள் யாவரும் அநேகமாய்ச் சென்றுவிட்டார் கள். சிலர் மட்டுமே நிலவை ஆவலுடன் அனுபவிக்கின்ற வர்களாய், சலவைக்கற்களினால் கட்டப்பட்ட கூடங்களிலும் மாளிகையின் உப்பரிகையிலும் மெதுவாய் உலாவிக் கொண்டு நின்றார்கள். சுகமாய்க் காற்று வீச, எங்கும் பால் வெள்ளம்போல் பரந்து நின்ற நிலவின் காட்சியைக் கண் டானந்தித்துக் கொண்டு, மார்க்கண்டம் அய்யரும், கேதாரி யும் மேல் உப்பரிகையில் உட்கார்ந்திருந்தனர். மெத்தை வைத்துத் தைத்த ஓர் பெரும் நாற்காலியில் மார்க்கண்டம் அய்யருடைய மெலிந்த சிறிய தேகம் புதைந்து கிடக்க, சுறுசுறுப்பும், தேகலாகவமு மமைந்த கேதாரியோ, நான்கு

கால்களும் சமமா யில்லாமையால் அவ்வழவழப்பான தரை யில் நன்ருய்ப் பதியாது, ஏற்றக்குறைவாய் ஆடிக் கொண்டி ருந்த ஓர் பிரம்பு நாற்காலியி லுட்கார்ந்திருந்தான். நல்ல நாற்காலிகள் யாவையும்விட்டு, அதைப் பார்த்து பொறுக்கிய தின் காரணம் அவனுக்கே தெரியாது. எழுந்து, வேறென் றில் போயுட்காரவும் அவனுக்குச் சம்மதமில்லை. அதன் காரணமும் அவனறியான்! புதிய விதமான வோர் அடக்க முடைமை அவனை இப்பொழுது பற்றியிருந்தது. இவ் வளவு பெருமையும் தன்பால் மிகவும் சகஜமாய்க் காணப் படவேண்டுமென விரும்பினன்.

சென்னை முழுவதிலும் இவ்வளவு உயர்ந்த, மேல் உப்பரிகையையுடைய மாளிகை கிடையாது. அங்கு உட்கார்ந்து நோக்கினல், ரமணீயமான காட்சிகளே கண் ணெதிற்படும். திரையிட்டது போன்ற விருட்ச வரிசை களுக்கும், ஆங்காங்கிருந்த தோட்டங்களுக்கும் அப்பால், புகைவண்டிப்பாதை கண்ணுக்குத் தெரியலாயிற்று. சிறிது பொழுதிற்கெல்லாம், இஞ்சின் ஊதும் சப்தம் கேட்க, நகர மாட்டாமல் ரயில் மெதுவாய்க் கிளம்பி, காஸ்மீரம் முதல் அஸ்ஸாம் வரையிலு மிருந்து வந்துள்ள ஸ்தல யாத்திரிகர் களுடன், நாற்புறமும் கடல் சூழ்ந்து, நிம்மதியும் பரி சுத்தமு மமைந்த ராமேசுவரத்தை நோக்கிச் செல்லத் தொடங்கிற்று. பச்சென்று அடர்ந்து தெரிந்த மரங்களின் வழியாய், கேதாரி, பிரகாசிக்கும் மின்சார விளக்குகளு டன் ரெயில் சென்றுகொண்டிருப்பதைக் கண்டான். "மஸால்ஜி" வேலை செய்துவரும் ஒரு வகுப்பினர் இருந்த விடம் தெரியாமல் சென்றுவிடுமாறு, அவ்வருஷம் தான் ரெயில் வண்டிகளுக்கு மின்சார விளக்குகள் போடப் பட்டன. நிலாவெளிச்சத்தில் அவைகளின் பிரகாசம் சிறிது குறைய, பழைய நினைவுக ளுண்டாய், கேதாரியின் முகத் தில் விசனக்குறி தோன்றிற்று. ஓடும் ரெயில் வண்டியின்

அழுந்திய ஓசையில், புதியதோ ரின்னிசை தோன்ற, வெகு வருஷங்களுக்குமுன் முகர்ந்ததோர் புஷ்பத்தை இப்பொழுது முகர்ந்ததுபோல் அவன் மனம் பழைய ஞாபகங்களிற் பாய்ந்தது.

"அதோ செல்லும் ரெயிலை நோக்கும் பொழுது அநேக விஷயங்கள் எனக்கு ஞாபகம் வருகின்றன!" என்றான் கேதாரி தாழ்ந்த குரலில். "நான் காலேஜில் படித்துக்கொண்டிருந்த நாட்களை எனக்கு அது நினைவு மூட்டுகின்றது. அப்பொழுது இதே ரோட்டில், இங்கிருந்து வெகு தூரம் தள்ளிக் கோடியில், ஓர் சிறிய வீட்டில் நான் குடியிருந்தேன். நான் மேலேறுவதற்கு முதற்படி போன்றது அதுவே. ரெயில் வண்டியின் ஓசையைக் கவனிக்க, எனது நண்பன் ராமு எனக்குக் கற்றுக்கொடுத்தான். அதிலொரு தாத்பரியமும் விசேஷமு மிருந்தாக எங்களுக்குத் தோன்றும். வியப்புடன் தத்துவ விசாரணை செய்துகொண்டே, ரெயில் வண்டியை நோக்கிக்கொண்டிருப்போம். அப்பொழுது நான் கனவிலும்,—." கேதாரி நிறுத்தி மிக்க அடக்கத்தோடு,மறுபடியும், "மேம்பதவிக்குச் செல்லச் செல்ல, கவலையும் விருத்தியடையு மென்று ராமு அப்பொழுது கூறுவது வழக்கம். 'முடியணி மன்னருக் கின்னலே யியற்கை,' என்னும் பழமொழி உலகத்தை வஞ்சிப்பதற்காகக் கூறப்படும் மொழியென, நானும் அப்பொழுது பரிகசிப்பதுண்டு. மேலேறிச் சென்றவர் கண்களுக்கே யாவும் நன்கு புலப்படுமென்று நான் வாதிப்பேன். இப்பொழுது, அவன் கூறியதை நான் ஒப்புக்கொள்ளவேண்டியதாயிருக்கிறது. ராமு எனது சிறந்த நண்பர்களி லொருவன். நிதானமும் பெருந்தன்மையும் வாய்ந்து, தத்துவ விசாரமும ஆழ்ந்தயோசனையும் குடிகொண்டவன். ஒருதடவை உங்கள் மோட்டாரில் செல்லும் வேகத்தில் ஒரு க்ஷணம்

நோக்கியதைத் தவிர, இவ்வளவு வருஷகாலமாக நான் அவனைக் காணவேயில்லை. அவனுடன் உறவாடாமலொழிந்தது என் தப்பிதமே!" என,

"அவன் இப்பொழுது என்ன செய்துகொண்டிருக்கிறான்?" என்று மார்க்கண்டம் அய்யர் பேச்சுக்காகக் கேட்டார்.

"தற்காலம் கவர்னருடைய நிர்வாக சபையின் அங்கத்தினராயிருக்கும் காடெல் துரையினிடம் முன்பு "காம்ப் கிளார்க்" உத்தியோகத்தி லிருந்தான். இப்பொழுது ஒருக்கால் அவ்விடத்திலேயே ஹெட் கிளார்க்காக விருக்கலாம்."

"காம்ப் கிளார்க்கா? நீ கூறுபவன் வேறொருவனுயில்லாவிட்டால், அந்த ராமுவென்பவன் இப்பொழுது சர்க்கார் உத்தியோகத்தில் அதிக கௌரவமும் மதிப்புமடைந்திருக்கிறான். நான் அவனைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவனை ஓர் தெய்வமாகவே மதித்து, காடெல் துரை கொண்டாடுகிறார். கவர்னர் துரையவர்களுக்கும் அவனைத் தெரியும். உத்தியோகஸ்தனென்றால் இப்படியல்லவோ இருக்கவேண்டுமென அவரும் அவனை மிக்க உயர்வாகக் கருதுகின்றார். கொஞ்சம் நாட்களாய்த் தொந்திரவு கொடுக்கும் ராஜாங்கக் கொள்ளைக்காரர்களைப் பிடித்து அடக்கும் தொழிலில் அவன் பிரத்தியேகமாய் இப்பொழுது நியமிக்கப்பட்டிருக்கிறான். சீக்கிரத்தில் அவன் ஜில்லா கலெக்டர் உத்தியோகம் அளிக்கப்பெற்றாலும் எனக்கு ஆச்சரியமில்லை. நாளை கவர்னர் நிர்வாக சபை அங்கத்தினனாகவும் வருவானென்று தெரிந்தோரனைவரும் நினைக்கின்றனர். தான் வேலையை விட்டு நீங்குவதற்கு முன்னால் காடெல் துரை அவனைத் தன்னாசனத்தில் அமர்த்திவிட்டுச் செல்வாரென்பதில் ஐயமில்லை. நீ கூறும் ராமு அவனுய்த்

தானிருக்கவேண்டும். உன்னுடன் சேர்ந்து அவன் ஒரே வகுப்பிற் படித்தவனா?''

"ஆம், எனக்கு நெருங்கிய நண்பனாகவு மிருந்தான். பரம சாதுவான ராமுவா கவர்னர் நிர்வாகசபையின் அங்கத்தினனாக வரப்போகிறான்! அவன் இவ்வளவு சீக்கிரம் மேம்பதவிக்கு வந்திருப்பானென நான் நினைக்கவேயில்லை.'' கேதாரி உண்மையாய் பிரமித்துவிட்டான். "தான் முன்னுக்கு வந்துகொண்டிருப்பதை ராமு எனக்குத் தெரிவிக்கவேயில்லை. அவனுடன் பழக்கம் விட்டுப்போய்விட்டதேயென்று எனக்கு இப்பொழுது வருத்தமாயிருக்கிறது. ராமுதான் அவனென்று உங்களுக்கு நிச்சயந்தானா?''

"ஆம்! கவர்மெண்டாரும், காடெல் துரையும் வியந்து கொண்டாடும் 'காம்ப் கிளார்க்' ராமுவென்பவன் ஒருவனே ஒருவன்தான்!''

இச்சமாசாரம் சுக்குப்பொடி தூவியது போல் வேலை செய்ய, கேதாரி யோசனையி லாழ்ந்தான். மார்க்கண்டம் அய்யர் அவனை அரைக்கண்ணால் நோக்கிக்கொண்டே உட்கார்ந்திருந்தார். ராமுவின் அதிருஷ்டத்தை யெண்ணிப் பலவாறான எண்ணங்களில் முழுகிய கேதாரியின் மனது, வாழ்வில் முன்னுக்கு வரும்விஷயமாய்த் தான் கொண்டிருந்த கொள்கைகளைப்பற்றி எண்ணமிடாமலிருக்க முடியவில்லை. அவனுக்கு யாவும் முற்றிலும் அசம்பாவிதமாகவே தோன்றலாயின.

"உமக்குச் சந்தேகமில்லையே!'' என்று அவன் மீண்டும் கேட்க,

"உனது நண்பன் "காம்ப் கிளார்க்'' காயிருந்தவன் தானென்றால், எனக்கு அணுவளவும் சந்தேகமில்லை.

அவனது சிநேகிதர்கள், இப்பொழுதும், அவனைக் "காம்ப் ளார்க்" ராமுவென்றே தங்கள் அபிமானத்தில் அழைக் கின்றனர்," என்றார் மார்க்கண்டம் அய்யர்.

"நீங்கள் அவனை எப்பொழுதாவது பார்த்திருக்கின் றீர்களோ?"

"இல்லை."

கேதாரி மீண்டும் யோசனையி லாழ்ந்தான். மார்க்கண் டம் அய்யரும் தன்னெண்ணங்களி லாழ்ந்தவராய் உட்கார்ந் திருந்தார். சென்ற வாரத்தில் கேதாரியின் சம்பந்தமாய்ச் சில விஷயங்கள் தாமாகவோ, அல்லது பிறர் தூண்டுதலினு லேயோ மாறுதலடைந்து வந்தன. கழுகுக்கு மூக்கில் வியர்ப்பது போல், பிறருக்கு வரும் கேடு மார்க்கண்டம் அய்யருக்கு வெகு சீக்கிரமே விளங்கிவிடும். மெதுவாய் நெருங்கும் ஆபத்து வேகமாகவே வரட்டுமென்று, அவர் சில சமயம் அதற்குத் தன்னுலியன்ற உதவியைச் செய்வது முண்டு! குயவன் சக்கிரத்தை ஒரு முறை சுழற்றவும், களி மண் உருட்சியடைவது போல், "எலெக்ஷனு"க்குப் பிறகு மார்க்கண்டம் அய்யர் இனிய நகையாலும், கனிந்த மொழி யாலும் கேதாரியின் வாழ்க்கையில் ஓர் வேற்றுமையை யுண் டாக்கிவிட்டார்.

புண்ணில் கோலிடுவதற்கு இதுதான் தகுந்த சமய மென்று அவர் எண்ணமிட்டுக்கொண்டிருக்கும்பொழுது, ஆகாயத்தில் சந்திரனை மேகமொன்று மறைத்து, ஒரே நிமி ஷத்தில் மிருதுவாய்ப் படிந்திருந்த நிலவை யழித்துவிட் டது. தன் உள்ளத்தி லேற்பட்ட சஞ்சலத்திற்குச் சரியாய்க் கெட்டகாலத்திற் கறிகுறி போலும் இருள் மூடிக்கொண்ட தைப்பார்க்க, கேதாரி சிறிது நடுக்கங்கொண்டான்.

ROJA MUTHIAH
47, HOSPITAL STREET
KOTTAIYUR—623 106

"மேகத்தால் மறைப்புண்ட இச்சந்திரன் நம்மிரு வருக்கு மேற்பட்ட நிலைமையை நினைவு மூட்டுவது போலி ருக்கின்றது !" என்று மார்க்கண்டம் அய்யர் சிறிது அலங் காரமாய்ப் பேசலானார். "இவ்"வெலெக்ஷன்" விஷயமாய் நாம் பணத்தை ஜலப்பிராயமாக வல்லவோ செலவழித் தோம் !"

"என் விஷயத்தில் அவ்வாறென்று நான் இப்பொ ழுதுதான் நினைத்தேன்! உங்களிடம் தாராளமாய் வெளியிட் டுச் சொல்வதற் கென்ன ? என் கையில் இப்பொழுது அரைக்காசில்லை. சந்திரனற்ற அவ்வாகாயம் போல், இனி என் நிலைமையும் இருண்டே தோன்றுகின்றது. நீங்கள்தான் இச்சமயம் எனக்கு உதவிசெய்யவேண்டும்!" என்று கேதாரி என்றுமில்லாதவண்ணம், இரங்கிய குரலில் கூறினான். பிரதிமாதமும் கேதாரிக்குப் பணத்தொந்திரவு விருத்தி யாகிக்கொண்டுவந்தது மார்க்கண்டம் அய்யருக்கு நன்றாய்த் தெரியும்.—"கேதாரி, நமது தொழில் பணம் நில்லாத தொழில். இவ்வளவு வருஷகாலமாயும் நானே அதிகமா யொன்றும் சேர்க்கவில்லை. என் வீடு அரண்மனைபோலாகிய துடன், யாரும் வந்து தங்கும் சத்திரம்போலு மாகிவிட் டது. எனது சம்பாத்தியத்தில் அதுவே பாதியும் விழுங்கி விட்டதென்று கூறலாம்!"

"முற்றிலும் வாஸ்தவமே! பிறரை நாம் கொள்ளை யிட்டால், நம்மைப் பிறர் கொள்ளையடிப்பார்களென்று ராமு கூறுவான். ஒரு "அபிடெவிட்டில்" மூன்று வரிகள் கிறுக்கி எறிவதற்கு நாம் நூறு ரூபாய் கேட்டு வாங்கினால், மோட்டார் டயர்கள் படீரென்று வெடிக்கும்படியாய்ச் செய்யப்படுகின்றன! நம்மைச் சுற்றிலுமுள்ள, எண்ணெய்க் கம்பெனி வைத்திருப்பவர்கள், கண்ட்ராக்டர்கள், கட்டடம்

கட்டுவோரனைவரும் நமது இரத்தத்தை உறிஞ்சிவிடுகின்றார்கள். இல்வாழ்க்கை மிகவும் சிக்கலுடையது. தத்துவ விசாரம் செய்பவனுக்கு மிகக் கொடியதாயும், காரியமே பிரதானமாயுள்ளவனுக்கு, அவிழ்க்கமுடியாத சிக்கலுள்ள, நீண்ட நூற்பந்து போலுமிருக்கின்றது!"

"நீ கூறுவது முற்றிலும் உண்மையே, கேதாரி!" என்று மார்க்கண்டம் அய்யர் ஒத்துக்கொண்டார்.

"என் வீட்டுக் குடித்தனத்தை ஒழுங்குபண்ண வேண்டும். அதற்கு முதன்முதல் குறைந்தது இருபதினாயிரம் வேண்டியதாயிருக்கின்றது. எனது யஜமானரும், நண்பரும், எனக்கு வழிகாட்டும் உபதேசகராயுமுள்ள தாங்கள் இப்பொழுது எனக்கு உதவிபுரியாவிட்டால், வேறு யார் செய்வார்கள்? இரண்டு வருஷத்தில் தங்களுக்குத் திருப்பிக் கொடுத்துவிடுவேன். எனக்கு நல்ல வரும்படி வருகின்றது. டில்லியில் எனக்கேற்படும் செல்வாக்கைக் கொண்டு அதை விருத்திசெய்துகொள்ளவும் முடியும்."

"கேதாரி, உனக்குச் சமயத்தில் உதவிசெய்யவேண்டுமென்றுதான் எனது உண்மையான விருப்பம். ஆயினும், நீ செல்லும் மார்க்கத்தில் மறைந்துகிடக்கும் மணல் திட்டொன்றிருப்பதாய்த் தோன்றுகிறது. அதை நீ முதலில் கடக்கவேண்டுமென்றெண்ணுகிறேன். உன்னைப் போன்ற சக்தியுள்ளவர்களுக்கு அஃது ஒரு பொருட்டல்ல. ஒருவாரத்திற்கு முன்பு உன் விரோதிகள் உனக்கு விரோதமாய் இவ்விஷயத்தில் முயன்றபொழுது நான் வெகுவாய்த் தடுத்தேன். உனக்கு முன்பே எச்சரிக்கை செய்ய விரும்பினேனாயினும், உனக்கு வாய்த்த பதவியின் நிமித்தம் குதூகலத்துடன் நடந்த மரியாதைகளைக் கெடுக்க எனக்கிஷ்டமில்லை. நீ தேர்ந்தெடுக்கப்பட்டதை இல்லை யென்றாக்குவதற்குச் செட்டி

பிராது செய்யப்போகிறான்.'' மார்க்கண்டம் அய்யர் வெகு ஜாக்கிரதையாய் இவ்வார்த்தைகளைத் துக்கமான குரலுடன் கூற, அவரது கண்கள் பாம்பின்மீது கண்ணுயிருக்கும் பூனையினுடையவை போல் விளங்கின. தற்காலம் வெளியி லிழுக்கப்படாம லிருப்பினும், பாம்பின் படத்தின்மீது பாய்வதற்கு அப்பூனையின் நகங்கள் உள்ளுக்குள் சித்தமா யிருப்பது போல், அவரும் எதிர்பார்த்தவண்ண மிருந்தார்.

"எனது "எலெக்ஷனை"த்தடுத்து விடுவதற்கா?" என்றான், மறைவிலிருந்து பின்புறம் கழுத்தில் சுடப்பட்ட போர்வீரன்போல் வெகுண்ட கேதாரி.

"ஆம், ஆம்! கஷ்டமான யுத்தமாகவே முடியுமென்று தோன்றுகிறது. உன் நண்பர்களிற்கூடச் சிலர் எதிர்ப் பக்கம் சென்றுவிடப் போகின்றார்களாம்!"

"எனக்கு இது கொஞ்சங்கூடத் தெரியாமற் போயிற்றே! ஒரு மாதமாக இந்த விருந்துகளில் மயங்கியவனாய், காபியின் மணத்தில் இம்மோப்பத்தை யிழந்து விட்டேனல்லவா? புகைந்து கிளம்புவதற்கு முன், இந்நெருப்பைக் காலால் தேய்த்து அணைத்திருக்கவேண்டும். ஏன் முன்பே நீங்கள் இதை எனக்குத் தெரிவிக்கவில்லை? என்ன பரிதாபம்!"

"உன் பொருட்டு நானே அந்நெருப்பைக் காலால் தேய்த்தணைத்துவிட்டு, உன் சந்தோஷ சமயத்திற்குத் தடையான கவலைகளேதுமில்லாமற் செய்துவிடலாமென்று பார்த்தேன். ஒன்றும் கெடுதலாகி விடாதென்று எனக்கு இன்னும் தைரியமிருக்கின்றது. நாமிருவருமாய்ச் சேர்ந்து அதை அடக்கிவிடலாம். பிராது செய்தாய் விட்டால் பிறகு கஷ்டமாய்விடும். ஏனெனில்,—"

"ஏன்?" என்று கேதாரி கேட்க,

"லஞ்சம் கொடுத்து ஜனங்களைக் கெடுத்துத், தன் பக்கம் சேர்த்துக்கொண்டதாகச் சாட்டப்பட்ட குற்றங்கள் உண்மையில் செய்திருப்பதால், ருசுவாய்விடுமென்று தோன்றுகிறது. "எலெக்ஷ"னென்றால் ஒரு தப்புமில்லாமல் எப்படி யிருக்கமுடியும் ?" என்று மார்க்கண்டம் அய்யர் அஞ்சாமல் கூறினர்.

"நீங்கள் செய்ததைப் பார்த்து, உங்கள் யோசனையின் பேரில்தானே நான் நடந்தேன் ! நாமிருவரும் சேர்ந்து எல்லாரும் செய்ததைச் செய்தோமே யொழிய, வேறல்ல!" என்றான் கேதாரி, கோபமும் துக்கமும் குடிகொண்டவனாய்.

"உலகம் இப்படித்தான், கேதாரி ! அதற்கென்ன செய்யலாம்! எவ்வளவோ பெயர்கள் கொள்ளையடித்தாலும், சிலர்மட்டுந்தானே அகப்பட்டுக்கொள்ளுகிறார்கள் ! தான் தூக்கக்கூடியதற்கு மேல் அதிகமா யெடுத்துச் செல்லுபவன் தான், சாதாரணமாய், அகப்பட்டுக்கொள்ளுவது வழக்கம்." மார்க்கண்டம் அய்யர் சிறிதும் இரக்கமில்லாமற் பேசினர் : "டில்லி சட்டசபைக்கு நிற்பது பெரிய விஷயம். உள்ளூர் சபையை யார் லக்ஷ்யம் செய்கின்றார்கள் ? இவ் விஷயத்தில் நீ தளராமல் முன்னின்று எதிர்க்கவேண்டும். எனக்குள்ள செல்வாக்கினல் உனக்கு உதவி செய்யத் தடையில்லை. அபாயம் வரும் சமயத்தில் உன்னைத் தனியே விடமாட்டேன் !"

தன் மனதைப் பிறரறியாமல் மறைத்துக்கொள்ளுவதில் இருபத்தைந்து வருஷகால அனுபவமும், தேர்ச்சியுமுள்ள, பழம் பெருச்சாளியான மார்க்கண்டம் அய்யரும், தன்னுள்ளெழுந்த சந்தோஷத்தை வெளிக்கிளம்ப வொட்டாமல் முற்றிலும் உள்ளேயே அடக்கிக்கொள்ளமாட்டாதவரானர். கேதாரி அதை யறியாமற்போகவில்லை. எல்லா

ரும் கைகொட்டி வேடிக்கை பார்க்க,வேண்டியவர் வேண்டாதோ ரனைவராலும் ஒன்று சேர்ந்து, கயிறுகொண்டு கட்டப்பட்டு, கசாப்புக்கடைக்கு இழுத்துச் செல்லுவதற்கென்று கொழுக்கவைக்கப்பட்ட பன்றி போலத், தான் ஆய்விட்டதாக அவனுக்குத் தோன்றியது. மேலே சம்பாஷணையை வளர்த்த அவனுக்கு விருப்பமில்லை. மிகவும் புத்திமானுகையால், யாவும் ஒரு க்ஷணத்தில் அவனுக்கு விளங்கிவிட்டது. மனிதனது உயர்வும் அற்பமுமாகிய இயல்பு,—அதாவது, மிருகத்தின் வலிமை, பறவைகளினுடைய லாகவம், மானிடப் பிறப்பிலமைந்த புத்தி நுட்பம் இவையாவும் ஒற்றுமைப்பட்டு, பந்தை எல்லைக்குக் கொண்டுசெல்லுவதற்கொப்பான சாமர்த்தியத்துடன், மார்க்கண்டம் அய்யர் பெரும் வேலை செய்துகொண்டிருப்பதைக் கேதாரி சந்தேகமறக் கண்டுகொண்டான்.

———

# அத்தியாயம் 41.

## கனவு.

ஆறு மட்டுமல்ல, ஏரி, குளங்களைக் கண்டாலும், கேதாரிக்கு இயற்கையாய்ப் பெரும் மோகமுண்டு. குளக் கரையாயினும், கடற்கரையாயினும், வித்தியாசமில்லாமல், மழை பெய்யும் பொழுது காற்று அசைவற்றிருப்பதுபோல், மணிக்கணக்காய் அமைதியுடன் நின்று பார்த்துக்கொண்டிருப்பான். ஓய்வொழிவில்லாமற் சலிக்கும் கடலின் அழகை யனுபவிக்க ராமு அவனுக்குக் கற்றுக்கொடுத்திருந்தானுயினும், இயற்கையாகவே கேதாரிக்கு உள்ளூர அதிலாசையுண்டு. இருப்பினும், அதன் ஆழத்தை ராமுதான் அவனுக்கு அறிவித்து, அதை வெளியிட வேண்டியதாயிருந்தது.

ஓசையொழிந்த, அசைவற்ற கடலில் தோன்றிப்பரவிக், கரையை யணுகி மடியும் மரகதம் போன்ற சுழிகளையும், சிறு அலைகளையுமே ராமு எப்பொழுதும் கண்டானந்திப்பான். ஆனல், கேதாரியோ, பெரும் புயலில், மலைபோல் உருண்டு புரண்டெழும் பெரும் அலைகளைக் காண்பதிலேயே பேராவலுடையவன். அவர்களிருவரின் தன்மையை இதே நன்கு வெளியாக்குகின்றதல்லவா? ஒரு பிரம்மாண்டமான அலை, பெரும் சர்ப்பம்போல், தன் முழுச்சக்தியுடனும் எழும்பி, வெகு அழகாய்த் திரண்டு நிற்கும் சமயத்தில் தலைசாய்வதைப் போல், பரிதாபகரமானதும், கம்பீரமானதுமான காட்சி வேறில்லை! ஓர் வெண்ணிற வொளி அந்நீலமலை யுச்சியினூடே மின்னல் போல் பாய்ந்து, அதை முழுவதும் நீர்த்திவிலைகளாகச் சின்னு பின்னமாய்ச் சிதறச் செய்து, ஒரே நுரைமய மாக்கிவிடுகின்றது. கடலுக்கு மேல் ஓங்கி

உயர்ந்து கிளம்ப முயலும் அலை, கண்ணுக்கு மிக்க ரமணீய மாயிருப்பினும், நிச்சயம் மாய்ந்து போகும் தன்மையுடையதே! பெருங்காற்றி லகப்பட்ட கடலில், ஓங்கியெழும்பி, ஒடுங்கும் அவ்வலை போன்றதே பேராசை!

இவ்வாறு, கடலை யமைத்துக் கூறப்படும் ரூபகாலங்காரங்கள் ஏராளமாய்க் கேதாரியின் மனதிற் பதிந்துகிடக்க, அவைகளே அவனைத் தூண்டுகோலிட்டுக் கற்பித்து, வழிகாட்டுபவைபாயு மிருந்தன. கடலினிடத்தில் ஓர்வித மயக்கமும், உறவும் கேதாரி காட்டியபோதிலும், அலையுச்சியில் விளங்கும் வெண்ணிற வொளியின் தத்துவம் அவன் மனதிற்கு ஒருநாளும் எட்டியதேயில்லை. இப்பொழுது அதன் மெய்ப்பொருள் அவனுக்கு விளங்க, அவ்வலை மோதுண்டு மாய்வதை யெதிர் பார்க்கலானான்.

தாகுர்தாஸ் தோட்டத்தில் தனக்கு நடந்த மரியாதை முடிந்து, வீடுதிரும்பிய கேதாரி தன் மனைவியிடம் ஒரு வார்த்தையும் பேசவில்லை. கோகிலமும் அவன் வருவதற்குள்ளேயே, தாய் என்பதற்கேற்றபடி, தன் குழந்தைகளின் நடுவில் அமைதியா யுறங்கிக்கொண்டிருந்தாள். கேதாரி தூங்கச் செல்லாமலே, பின் விளையப்போவதைப் பற்றி நிதானமாய்த் தன் மனதிற்குள் விசாரணை செய்யலானான். தன் ஸ்திதியையும், மனப்போக்கையும் பற்றி யோசிக்கும் பொழுது, தவளையைப்போல் இருதயமொடுங்கி, அற்பமாய்க் கவலையற்றிருக்கும் வாழ்வை வெறுத்ததினாலேயே, தான் முன்னுக்கு வந்ததாய்த் தோன்றிற்று. ஆயினும், தன்னைக் குத்திவிட்டு வேடிக்கை பார்க்கவேண்டுமென்ற ஆவலில் மார்க்கண்டம் அய்யர் பொய்யாகக் கற்பிற்பித்துக் கூறவில்லையென்று வைத்துக்கொண்டால், ராமுவும் முன்னுக்கு வந்தவன் தானே.

என்றைக்காவது ஒரு நாள், தனக்கும் மார்க்கண்டம் அய்யருக்கும் பெரும் மனஸ்தாபம் நேரிடாமற் போகாதென்று கேதாரிக்குத் தெரியும். ஆயினும், அது இவ்வளவு சீக்கிரத்திலேயே யுண்டாய்விடுமென்று அவன் எதிர்பாராதுடன், தான் சாமர்த்தியமாய் நடப்பதனால் அவ்வாறு நேராமலே பார்த்துக்கொண்டுவிடலாமென்றும் நம்பியிருந்தான். இப்பொழுது அவன் டில்லி சட்டசபையின் அங்கத்தினர்களி லொருவன்! அவன் வயதை யெண்ணும்பொழுது, அநேக விஷயங்களில் யாவருக்கும் முற்பட்டுச் சென்றவனென்றே சொல்லவேண்டும். ஓர் அபாயகரமான மலைமுகட்டினின்றும், முதலில், அவன் தாண்டி அப்பால் குதித்துப், பயங்காளிகளான மற்ற வாலிபர்களுக்கு வழி காட்ட வேண்டியதாயிற்று. ஒருவன் தலைப்பட்டு யாவருக்கும் முன் செல்லுவதில் பெரும் புகழேற்படினும், அவ் வைசாரத்திற்குரிய சிக்ஷைகளு முண்டல்லவா ?

தனக்கியற்கையான சாமர்த்தியத்துடனும், துணிவுடனும் கேதாரி அப்பெரும் பள்ளத்தைத் தாண்டிக் குதித்துவிட்டான். ஆயினும், எதிர்ப்புற மிருந்த கற்பாறையோ, கால் வைத்து ஊன்றி நிற்கமுடியாதபடி செங்குத்தாயும், வழவழப்பாயு மிருந்தது. இப்பொழுது, அவனது விரோதிகளும் நண்பர்களும் இப்பக்கத்திலிருந்து அவன் மேல் கற்களை விட்டெறிய உத்தேசித்திருக்கிறார்கள்! நல்லது ! அவர்கள் அப்படியே எறியட்டும்! நான்கு பக்கமும் இரைந்து கிடக்கும் அந்நிந்தைமொழிகளாகிய கற்களைப் பொறுமையுடன் ஒன்றுசேர்த்து, அவைகளைக்கொண்டு, அவர்கள் கண்முன்பே, அவன் ஓர் மாளிகை கட்டிவிடக்கூடுமென்றோ ! மற்றவர்களைப்போல், குட்டையில் வாழும் தவளைக்குச் சமானமாய், ஒரு நாளும் அவன் காலத்தைக் கழிக்க மாட்டான்.—இவ்வாறெல்லாம் கேதாரி யோசித்துக்

கொண்டிருக்கும்பொழுது, கோகிலம் படுக்கையிற் புரண்ட படியே தூக்கத்தில் என்னவோ முணுமுணுக்க, அவன் எழுந்துட்கார்ந்து கவனிக்கலானுன். காற்று, மேகமொன்று மில்லாமல், சந்திரன் வானத்தில் நிஷ்களங்கமாய்ப் பிரகாசித்துக்கொண்டிருந்தான். தான் பேரானந்தமுற்றிருக்கும் சமயத்தில், தீங்கின்னதென்று தெளிவா யறியாமலே பயம் கொள்ளவேண்டியிருப்பதை யெண்ணிக் கேதாரி கோபம் கொண்டான். எல்லாம், பொருமையினுல், மார்க்கண்டம் அய்யர் செய்த விஷமவேலையே யொழிய வேறல்ல! கேதாரியை அலக்ஷியமாயெண்ணி விளேயாடமுடியா தென்பதைச் சீக்கிரமே அவரும் அறிந்துகொள்ளட்டும்!—இவ்வண்ணம் யோசித்துவிட்டுக் கேதாரி இனித் தூங்குவோமென்று அமைதியாய்ப் படுத்துக்கொண்டான். ஆயினும், அவனுல் தூங்க முடியவில்லே. ஏனெனில், அன்றுமாலே நடந்த விருந்தில் சாப்பாடு பலமாயிருந்ததுடன், அவன் உள்ளத்திலும் சிந்தை குடிகொண்டிருந்தது. போதாக் குறைக்கு மார்க்கண்டம் அய்யர் வஞ்சகமாய் அவன் மனதில் பெரும் கலக்கத்தை யுண்டுபண்ணி விட்டார்.

கெட்ட கனவு கண்டவள்போல் கோகிலம் மீண்டும் உறக்கத்தில் ஏதோ முணுமுணுக்க, இனியும் பேசாமலிருக்க முடியாதவனுய்க் கேதாரி அவள் சமீபம் நெருங்கி, "கோகிலம் தூக்கத்தில் பிதற்றுவது வழக்கமில்லே. பாவம்! மோட்டார் வாங்கிய பெருமையிலும், சட்ட சபைக்குத்தேர்ந்தெடுக்கப்பட்ட சந்தோஷத்திலும் நான் இவ்வளவு மாதகாலமாக அவளேயும் மறந்து, குழந்தைகளேயும் கவனிக்காதிருந்துவிட்டேன். கிழிந்து அழுக்கடைந்த படுக்கையில் அவர்கள் எவ்வளவு கேவலமாய்த் தோன்றுகின்றனர்! கோகிலம் பாபந்தவள். தனக்குரியவைகளே இன்னும் சற்றுத்தைரியமாய் வெளியிடலாம்! ஆயினும், இன்னும் ஒன்றும் கெட்டுப்

போகவில்லை. என் செலவைக் குறைத்து இனிக் கணக்காய்ச் செலவழித்து, எப்படியாவது சிறிது பணம் சேர்ப்பேன்.— கோகிலம், கண்ணே! உனக்கு உடம்பு என்ன செய்கின்றது?'' என்று கேட்க,

"நீங்கள் வந்துவிட்டீர்களா? இப்பொழுது இரவு மணி என்ன? இப்பொழுதுதான் நான் ஒரு பயங்கரமான கனவு கண்டேன். பொழுதுவிடிய ஜாம நேரமாயிருந்தால், அது பலித்துவிடு மென்பார்கள்! உங்களைப் பற்றித்தான்! ஐயோ! என்ன கொடிய கனவு! ஜாக்கிரதையாயிருங்கள்!'' என்றாள் கோகிலம்.

"என்ன கனவு அது? என்னிடம்சொல், கோகிலம்! நான் பயங்காளியல்ல.''—கேதாரி அவள் தலையைத் தன் மடிமீது வைத்து, அவளது, கண்ணீரால் நனைந்த கண்களையும் துடைத்தான்.

"அது ரொம்பவும் பயங்கரமாயிருந்தது. ஒரு செங்குத்தான மலைமீது ஏறும்படி கூறப்பட்டு, நீங்கள் ஏறியதும், அங்கிருந்து சிறுநதியோடுகூடிய பெரும் பள்ளத்தைத் தாண்டி அப்பால் உங்களைக் குதித்துச்செல்லும்படி கூறுகின்றார்கள். முதலில் பல ஜனங்கள் கும்பலாய் ஒன்றுகூடி, இரைச்சலிட்டு உங்களைக் குதூகலப் படுத்த, நீங்களும் ஓர் பறவைபோல் வெகுலாகவமாய்க் குதித்து எதிர்ப்பக்கம் செல்லுகின்றீர்கள்! உங்களுடன் போட்டியாக நின்றவர்கள், அவ்வாறு, அவ்வளவு நன்றாய்த் தாண்டிக் குதிக்கவில்லை யாதலால், பரிசு உங்களுடையதே யாயிற்று. ஆயினும், களைத்துப் போய் உங்கள் தலை சிறிது சுற்ற, செங்குத்தாயும், வழுக்கலாயுமிருக்கும் கற்பாறையில் உங்கள் கால் பதியாது சிறிது பிறழவும்,—என்ன ஆச்சரியம்! உங்களுடன் போட்டியாக

நின்றவர்கள் அதை ஊன்றியவிடத்தினின்றும் பெயர்க்கவே, வேடிக்கை பார்த்திருந்த ஜனங்களும் உங்கள் முதுகில் கற்களை விட்டெறிகின்றார்கள்! பிடித்துத் தள்ளப்பட்டு, தலை கீழாய் நீங்கள் ஓவென்று கத்திக்கொண்டு, மலைத்தாழ் வரைகளில் அடர்ந்து வளர்ந்திருக்கும் மரங்களுக் கிடையில் மறைந்திருக்கும் நதியில் விழும் சப்தம்மட்டும் எனக்குக் கேட்கின்றது! உங்களை யப்புறம் காணவில்லை! உடனே நான் அலறி விழித்துக்கொண்டதும், உங்களைக் கண்டு, கேவலம் கனவென்று தேறுதலடைகின்றேன்!'' என்று கூறிக், கண்ணீர் வடிக்கும் வழக்கமற்ற கோகிலம் சிறு குழந்தையைப்போல் விம்மி விம்மி அழலானாள்.

''ஒன்றுமில்லை! கோகிலம், பயப்படாதே! வெறும் கனவுதானே!'' என்றான் கேதாரி. ஆயினும் அவனுடம்பு நடுங்கிற்று.

''இப்பொழுது மணி என்ன?''

''மூன்று மணி. பொழுதுவிடிய இன்னும் இரண்டு மணி நேரமிருக்கின்றது.''

''ஐயோ! அப்படியாயின் அது நிச்சயம் பலித்து விடும்! ஜாக்கிரதையாயிருங்கள்! ஏதோ ஒரு பெரும் ஆபத்து,—என்ன மானக்குறைவோ, இழிவோ, அல்லது உயிருக்கு அபாயமோ உங்களுக்கு நேரிடப்போகின்றது. இது நிச்சயம்! நான் ஜோசிய மறிந்தவருடைய பெண்ணாய்ப் பிறந்தது வீணல்ல!''

''அப்படியெல்லாம் ஒன்றும் வராது! வயிற்றுக் கோளாறினால் நீ கண்ட ஓர் கெட்ட கனவே யொழிய, அது வேறல்ல. கொஞ்சம் நாட்களாக உனக்கு உடம்பு சரியாயில்லை. உன்னைப் பார்க்கும்பொழுதே எனக்குத் தெரிந்தது. உனக்கு வேண்டியவைகளை நீ தைரியமாய்ச் செய்து

கொள்ளவேண்டும்! நாளையதினம் டாக்டரைக் கூப்பிட்டு உன்னைப்பார்க்கச் சொல்லுகிறேன். தற்கால நாகரீகமானது இல்லற வாழ்க்கையை இனிது நடத்த, இதுகாறும், எனக்குப் போதில்லாமற் செய்துவிட்டது. இனி நான் அவ்வண்ணமில்லாமல் உன் பக்கத்திலேயே இருப்பேன்!''

"என் வலதுகண் எவ்வாறு துடிக்கின்றது, பாருங்கள்! அது கெடுதலுக்கு அறிகுறியே. தெய்வமே! குழந்தைகளையும் எங்களையும் காப்பாற்று!'' கோகிலத்தின் கண்களினின்றும் தாரை தாரையாய்க் கண்ணீர் பெருக, பொய்த்தேறுதல்கள் கூறிக்கொண்டிருக்க கேதாரியால் இனி முடியவில்லை. உள்ளுக்குள் அவன் இருதயமும் அழுது நைந்துகொண்டிருந்தது. மனவுறுதி யுள்ளவர்களுக்குக் கண்ணால் நீர்வடிப்பது அதிகப்படியே யாயினும், உள்ளத்தில் ஊற்றுப்போல் மிதமிஞ்சிப் பெருகிய நீர் கரையுடைத்துச் செல்லாதபடி வற்றடிக்க, கேதாரி கண்மடை திறந்தான். கண்ணீர் வடிப்பதுபோல் மனிதனை ஆறுதலுறச் செய்வது இவ்வுலகில் வேறொன்றுமில்லை. ஒருவரை யொருவர் அன்புடன் தழுவியதால் வரும் மனோதிடத்தையும், தேறுதலையும் பெற்று, அவர்கள் அணைந்தவாறே அரைமணி நேரத்தில் ஆழ்ந்து உறங்கிவிட்டனர்.

---

## அத்தியாயம் 42.

### அணையும் விளக்கு.

நாகலாபுரம் மலையில் வாழ்ந்துவந்த நூற்றுக்கணக்கான கள்வர்களைச் சாதாரணக் குடிகளாகச் செய்வதும், அவர்கள் வயிற்றுப் பிழைப்புக்கு வழி ஏற்படுத்துவதுமான கடின வேலையை மேற்கொண்டு, ராமு சென்னைக்குத் திரும்பினன். கவர்மெண்டார் தனது நூதனமான யோசனையை ஏற்றுக்கொள்வார்களென்று அவனுக்கு அதிக நம்பிக்கையில்லை. ஆயினும், தெய்வாதீனமாய்க் காடெல் துரைக்கு அவ்விடமிருந்த பூர்ணமதிப்பினலும், விசுவாசத்தினலும் அவன் காரியம் ஜயமடைந்துவிட்டது. பொதுஜனசமூகமும், பத்திரிகைகளும் அவனது லோகோபகாரச் செயல்களை இனிது பாராட்டலாயின. கனம்பொருந்திய கவர்னர் துரையவர்களும், கேவலம் பேராசை பிடித்தோர், பணம் படைத்தோர், மேல்விழுந்து பிடுங்குபவர் இவர்களின் பொருட்டு அரசியல் நடத்துவதற்குப் பதிலாக, எளிய ஜனங்களுக்கு நீடித்த வோர் நன்மை புரிந்து, தனது முறையான ஐந்து வருஷகாலத்தைச் சிறப்படையச்செய்ய நேர்ந்ததை யெண்ணிக் களிப்புற்றார்.

ஒருநாள் ராமு கடற்கரையில் நடந்து சென்று கொண்டிருக்கும்பொழுது, வக்கீலைப்போல் தோன்றிய ஒரு வாலிபன், பக்கத்திலிருப்பவனிடம், "கேதாரியை நினைத்தால் மிகவும் பரிதாபமா யிருக்கின்றது. ஓர் பாணம்போல் சீறி உயரக்கிளம்பியவன் ஒரே நாளில் கீழே விழுந்துவிட்டான்! எரிந்துபோன குச்சி கூடப் பாக்கி இல்லை. அரண்மனை போன்ற வீட்டையும் மனைவிமக்களையும் துறந்து சென்னை

யைவிட்டு ஓடிவிட்டான்!'' என்று கூறிக்கொண்டிருந்தது அகஸ்மாத்தாய் அவன் காதுகளில் விழுந்தது. தன் சொந்த வேலையில் முழுகியிருக்கும்பொழுதும், நிதான மற்ற வாழ்வையுடைய கேதாரி, ஆற்றின் நடுச்சுழலிற் பாய்ந்ததுபோல், இப்பொழுது துன்பத்தி லடிபட்டிருக் கிறனென்று அவனுக்குத் தெரியும். சட்ட சபையின் அங் கத்தினர்களி லொருவனய் அவன் தேர்ந்தெடுக்கப்பட் டதையும், அதற்குப்பின் அவனைக் கௌரவிக்கும்பொருட்டு நடந்த மரியாதைகளையும் பத்திரிகைகளினின்றும் ராமு படித்தறிந்துகொண்டான். பிறகு அவனது "எலெக் ஷன்'' இல்லை யென்றுக்குவதற்குப் பிராது செய்யப்பட் டதும் அவனுக்குத் தெரியவர, கேதாரியின் துரதிருஷ்ட டத்தை யெண்ணிப் பரிதபித்தானயினும், முடிவில் அவனே வெற்றியடைந்துவிடுவானென்று நம்பினன். அவன் சென்னையினின்றும் ஓடிவிட்டானென்ற செய்தி இப் பொழுது காதிற்படவே, கோகிலத்தைப் பற்றியும், அவள் குழந்தைகளைப் பற்றியும் அவனுக்கு எண்ணமுண்டாயிற்று. உடனே அவர்களைப் போய்ப்பார்த்து வருவதென்று தீர் மானித்துக்கொண்டான். அச்சமயம் சமாசாரப் பத்திரிகை கள் விற்கும் பையனெருவன் அன்றுமாலை வெளிவந்த "ஹிந்து'' பத்திரிகையைக் கையில் வைத்துக்கொண்டு உரத்த குரலில் கூவ, அவனிடம் ராமு ஓரணு காசை விட் டெறிந்து, தனிப்பிரதி யொன்றை வாங்கிக்கொண்டான். பத்திரிகையில் உள்ளூர்ச் செய்திகளாயினும், வெளிநாட்டுச் செய்திகளாயினும் அவன் படிக்கும் வழக்கமில்லை. மற்றவை களிலிருந்து எடுத்துப் போடப்பட்டிருக்கும் நல்ல விஷயங் களைமட்டுந்தான் வாசிப்பதிற் பிரியமுள்ளவன். ஆனல், இப்பொழுது, தலைமையான பெரும் எழுத்துக்களில், "டில்லி சட்டசபைக்குக் கேதாரியின் "எலெக்ஷன்'' தள்

ளப்பட்டது. நியாயத்தவருக ஜனங்களைக் கெடுத்துப் பணம் கொடுத்துத் தன்பக்கம் சேரச்செய்த பெருங்குற்றங்கள் அவர்மீது சாட்டப்பட்டிருக்கின்றன!'' என்றிருந்ததைக் காணவும், அதனடியில் விவரமாய்க் கண்ட விஷயங்களை மேலே படிக்க மனமொப்பாமல், மைலாப்பூர் மாடவீதியி லிருந்த கேதாரியின் வீட்டை நோக்கி விரைந்துசென்றான்.

கடற்கரையில் கேட்ட வம்பு பொய்யாகவில்லை. தனக்கு விரோதமாகச் செய்யப்பட்ட பிராதில், என்ன தீர்ப்பாகு மென்பதை கேதாரி முதலிலேயே எதிர்பார்த்துவிட்டான். ஏனெனில் கோர்ட்டினுள்ளாவது, அல்லது கோர்ட்டுக்கு வெளியிலாவது, வேறு மேல்யோசனைகள் ஏதாவது அவன் செய்யக் கிளம்பும் ஒவ்வொரு சமயமும் அவனுக்கு அப ஜயமே யுண்டாயிற்று. ஆனல், அவனைத் தோற்கடித்தவர் கள், தங்கள் புத்தியின் பிரபாவத்தாலும், சீலத்தின் பெரு மையாலு மின்றி, ஏராளமான பொருளுதவியினலேயே அவ்வாறு வெற்றிபெற்றவராயினர். அவன் கையிலிருந் தாலும், அல்லது அவன் உழைப்பையும், இனி வரப் போகும் வரும்படியையும் நம்பிப்பதினயிரம் ரூபாய் கடனக யாராவது கொடுப்பார்களாகில், இனியும் அவன் வெற்றி யடைந்து, இவ்வபவாதத்தினின்றும் மீண்டு, தன் நன்னடக் கையை நிலைநாட்டியதற்காக, மீண்டும், புதிதாய் விருந்து களும் பெறுவது நிச்சயமன்றோ! கேவலம் தன் சாமர்த் தியத்தினலும், தைரியத்தினலும், எளியவனெருவன் செல்வ வந்தனகலாம். ஆயினும், அவ்வாறு ஐசுவரியமுள்ளவர் களி லொருவனகியதும், தான் இதுகாறும் முயன்றுவந்த வழிகளை அவன் மாற்றிவிடவேண்டும். வெற்றிக்குப் பணமே இவ்வுலகில் அவசியம்! தைரியமும் புத்தியும் இரண் டாம் பக்ஷம்தான்!

அன்றிரவு தாகுர்தாஸ் மாளிகையின் மேலுப்பரிகையிற் படிந்த நிலவு, கேதாரியின் மனதை மௌனமான தத்துவ விசாரணையிற் திருப்பிவிட்டது. மார்க்கண்டம் அய்யர் கூறியது உண்மையானால், தனக்கு நேர் விரோதமான வழியைப் பின்பற்றி ராமுவும் முன்னுக்கு வந்தே யிருக்க வேண்டும்! சிலவற்றிற்காக நாம் நமது முழுபலத்துடனும், ஆங்கிரகத்துடனும், வருஷக் கணக்காகப் பாடுபடுகின்றோம். நமது விருப்பம் அனேகமாய் நிறைவேறும் தருணத்தில், விதிவசத்தால், மேகத்தால் மறைப்புண்டதுபோல், நமது மகிழ்ச்சி யாவும் கண்ணீரில் கரைந்துபோக, இதுபரியந்தம் நாம் பாடுபட்டது உள்பட அனைத்தும் சாரமற்றதாகின்றது! தங்கமானது அளவுக்குமிஞ்சி செம்புகலக்கப் பெற்றதுபோல் ஆக, வெகு காம்பீர்யத்துடன் எழுந்த அலையும், அதிகமாய் மேலெழும்பியதால், கரையில் மோதிச் சிதறுண்டுபோகவேண்டியதேயல்லவா?

இவ்வாறான தத்துவ விசாரணையும் மனச்சோர்வும் ஒருபக்கமிருக்க, அவை யாவற்றிற்கும் அடியில் இருபதினாயிரம் ரூபாய் கடன், களிப்பாறைபோல் பெயர்க்கமுடியாமல் கிடப்பதைக் கேதாரி கண்டான். மேல் மண்ணினுடைய வளத்தினால் செடி சீக்கிரத்திலேயே மலரெடுத்திருப்பினும், அடியிலிருந்த களிமண்ணைப் பெயர்த்தாலொழிய, வேர் அதிக ஆழம் கீழே இறங்குவதற்கில்லை. அதைப் பெயர்த்துவிடலாமென்று அவன் எண்ணியிருக்கும் பொழுது, அவனது மண்வெட்டியும், கோடாரியும் அவன் நண்பர்களால் அபகரிக்கப்பட்டுப்போயின! வெறுங் கைகளைக்கொண்டு வேலை செய்வது முற்றிலும் அசாத்தியமாகவே, கேதாரியின் மனது ஓர் உண்மைத் தோழனை நாடி ஆவல்கொள்ளத் தொடங்கிற்று. இந்நிலையில் திடீரென்று ஓர் உறுதி பிறக்க, கேதாரி ராமுவைப் போய்க்கண்டு அவன் காலடியில் சரண

மடைவதென்று நிச்சயித்துக்கொண்டான். முன்பொரு தரம் சென்னை கிரிஸ்டியன் காலேஜில் சேரும்பொருட்டு இருவரும் சென்றபொழுது, வகுப்பிற்கு வெளியே துணை யற்றுத் தனியாய் நின்ற கேதாரி தன் வரலாற்றை ராமு விடம் கூறியவாறே, இப்பொழுதும் எடுத்துரைத்து அவன் மன்னிப்பைப் பெற வேண்டினான். ஆகவே, தன் நண்பன் சென்னையிலேயே யிருப்பதை யறியாமல் கேதாரி அவனைத் தேடிச் செல்லலானான்.

வெகு நேர்த்தியான கேதாரியின் வீட்டை யணுகி, ராமு படியேறும்பொழுது மாலை ஆறுமணி யாயிருந்தது. சாயங்காலத்து மிருதுவான மஞ்சள் வெயிலில், கோவில், குளம், தெரு யாவும் முழுகிக்கிடந்தன. கபாலீசுவரரின் தீபாராதனை மணி அடித்துக்கொண்டிருந்தது. கோவிலும், குளமும் நடுவில் விளங்க, நான்கு பக்கமும் வீதிகள் காணப் பட்டன. மேனி முழுவதும் வைரத்தினால் அலங்கரிக்கப் பெற்றவர்களாய், விதவிதமான வர்ணப்பட்டாடைகளணி ந்து சீமாட்டிகள், விலையுயர்ந்த பெரும் மோட்டார்களில், ஆயாசத்துடன் உல்லாசமாய்ச் சாய்ந்து, இங்கு மங்கும் சென்றுகொண்டிருந்தனர். அங்குள்ள கல்லிலும் மண்ணி லுங்கூடச் செல்வத்தின் வைபவம் தோன்றலாயிற்று. ஆறு போல, இருபத்தைந்து ஜில்லாக்களினின்றும், கக்ஷிக்காரர் கள் காலபேதமற்று வந்துவிழும், வக்கீல்களிருப்பிடமாகிய மாடவீதி அதுவே! அரை நூற்றாண்டுக்கு முன், கோவில் அர்ச்சகர்களான சில குருக்களைத் தவிர, வேறு ஜனங் களற்று அவ்விடம் ஓர் காடுபோன்றிருந்தது.

பளீரென்று சுண்ணும்பு தீற்றப்பட்டு, சலவைக் கல் லுக்குமேல் வெளுப்பாயும் வழவழப்பாயும் விளங்கிய கேதாரியின் வீடு, அங்கிருந்த மிக்க நேர்த்தியான வீடுகளி

லொன்றாய்க் காணப்பட்டது. படியேறியதும், கேதாரியைப் பற்றித் தான் கேள்விப்பட்டது தவறோ, அல்லது அவன் வீடென்றெண்ணி வேறு வீட்டில் நுழைந்தோமோ வென்று ராமுவுக்குச் சந்தேக முதித்தது. ஆனல், வீட்டு வாயிலில் கேதாரியின் பெயர் பித்தளை எழுத்துக்களில் பளபளவென்று பிரகாசித்துக்கொண்டிருக்க, அவன் உட்கார்ந்து வேலைசெய்யும் அறையும், கருங்காலி மரத்தில் செய்யப்பட்ட அநேகவித நாற்காலி மேஜைகளும், உயர்ந்த புஸ்தக வரிசைகளடர்ந்த பீரோக்களும் நிறைந்து, தொழிலபிவிருத்தி அதிக முள்ளவனென்பதை நன்கு விளக்கிற்று.பாதி திறந்திருந்த முன் கதவின் வழியாய் ராமு உள்ளே உற்று நோக்கிப் பிறகு தன்னையும் நோக்கிக்கொண்டான். தான் அணிந்திருந்த உடை அவ்வளவு உயர்ந்ததா யில்லாமலிருக்கவே, அப்படிப்பட்ட விடத்திற் காணப்படுவதற்குத் தகுதியற்றவனென எண்ணலானன். கொடிபோல் மெல்லிய உயர்ந்த உருவமும், அன்பு தழைத்த உள்ளத்தை வெளியிடும் இனிய கண்களுமுடைய ஓர் பெண்மணி பத்து வயதுள்ள ஒரு சிறு பெண்ணுக்குத் தலைவாரிப் பின்னிக்கொண்டிருந்தாள். இரண்டு, மூன்று அழகிய சிறுவர்கள் அவளைச் சுற்றி உட்கார்ந்திருக்க, யாவரினும் சிறியதாய்க் காணப்பட்ட ஒரு பெண்குழந்தை, தான் சொல்வதைக் கேட்கவேண்டுமென்று, பின்புறம் நின்று அவள் முதுகிலடித்துக்கொண்டு மிருந்தது. அவ்வாறு உட்கார்ந்திருந்தது வேறொருவருமல்ல,—அவ்வீட்டின் தலைவி கோகிலமே. அநேக வருஷங்களுக்கு முன்பு அவளது விவாஹதினத்தன்று, ஒரே ஒரு தடவையே ராமு அவளைப் பார்த்திருந்தான். அப்பொழுதும் வெட்கத்தினல் அவன் நேரே பார்க்கவில்லை யாயினும், அச்சிறுவயதிலும் அவள் மிகவும் அழகுடையவளாயிருந்தாகவே அவனுக்குத் தோன்றிற்று.

ஆயினும், நெடு நாட்களாய்விட்டதால், அத்தெளிவற்ற ஞாபகம் முற்றிலும் அழிந்துபோக, இப்பொழுது அவளைப் பார்த்ததும், வசந்த காலத்தில், காய்ந்தபுல் மறுபடியும் பசுமையாய்க் கிளம்புவதுபோல், அவனுள்ளத்தில் அந் நினைவு மீண்டும் தெளிவுகொண்டு பிறந்தது. இவ்வளவு ஆடம்பரத்தின் மத்தியிலும் அவள் சாதாரணமான ஆடையணிந்து, சாதாரண வேலையே செய்துகொண்டிருந்ததைக் காண, ராமுவுக்குச் சந்தோஷமுண்டாயிற்று. ஏனெனில், கேதாரியின் மனைவி, பருத்த சரீரமுடையவளாய், உயர்ந்த பச்சைப் பட்டாடை யணிந்து,சோர்ந்த விழிகளுடன் புஸ்தகமும் கையுமாய், சாய்வு நாற்காலியில் படுத்திருப்பாளென்று அவன் எண்ணியிருந்தான். தனது யோசனைகளிலும், தன் குழந்தைகளின் மீதுமே முற்றிலும் கவனம் செலுத்திய கோகிலம், வேற்றுருவமொன்று வாயிற்படியில் நின்று மறைப்பதை உணரவில்லை. மாதர்களி னெதிரில், எப்பொழுதும், ஆழ்ந்த, இனிமை துவனிக்கும் அரிய குரல் படைத்த ராமு, "கேதாரி, வீட்டிலிருக்கிறாரா ?" என்று கேட்க, தலைநிமிராமலே கோகிலம், "இல்லை!" யென்று பதிலுரைத்தாள். அவளது வனப்பு வாய்ந்த தோற்றத்தையும், தாழ்ந்த கண்ணிமைகளின் அழகையுங் கண்டு சிறிது மயங்கியவனாய் ராமு ஒரு நிமிஷம் நின்றான். அவன் போய்விட்டானா வென்றறிய கோகிலத்தின் தலை தானாகவே சற்று நிமிர, அவர்களிருவர் கண்களும் ஒன்றுபட்டன. உடனே ராமு திரும்பி வீதியி லிறங்கினான். சூரியனது செங்கதிர்களினால் ஸ்பரிசிக்கப்பட்ட தாமரை போலும், திரண்டு வடிவுகொண்ட கனவுபோலும் ஓர் அறிவுணர்ச்சி கோகிலத்தின் சரீரத்தினுள் பரவியது. அநேக வருஷங்களுக்கு முன் தன் விவாஹதினத்தன்று, அச்சந்தடியில் ஒரே ஒரு தடவை கடைக்கண்ணால் ராமுவை அவள் பார்த்திருந்தா

ளாகையால், அவன் முகம் அவளுக்குச் சரியாய் ஞாபக மில்லை. சுவற்றில் மாட்டப்பட்டுத் தொங்கிக்கொண் டிருந்த ராமுவின் படத்தை நோக்கினுள். தனது கணவ னுக்கு அவன் செய்த பேருதவிகளுக்காக, நன்றி யறித லுடன், தன் கண்மலர்கொண்டு அப்படத்தை அவள் அர்ச் சிக்காத நாளில்லை! அவ்வுருவமும் அவள் மனதில் நன் ருய்ப் பதிந்திருந்தது. ஸ்திரீகளின் இயற்கைப்படி ராமுவை ஒரு க்ஷணத்தில் அடையாளம் கண்டுகொண்ட கோகிலம், உடனே எழுந்து, "இப்பொழுது வந்துவிட்டுப் போனுரே, அந்த மாமாவை ஓடிப்போய் இங்கு அழைத்து வா!" என்று தன் மூத்த மகளை ஏவினுள். அவ்வாறே அப்பெண் போய்க் கூப்பிட, சிறிது ஆச்சரியமுற்ற ராமுவும் மகிழ்வு பூத்த உள்ளத்துடன் திரும்பி வந்தான். கோகிலம் அவன் முன் வந்து நமஸ்கரித்தாள். அவள் செய்கையைக் காண வியப்பினுல் அவனுக்குத் தன் கண்களையே நம்பமுடியவில்லை.

"நான் லஜ்ஜை யற்றவளாகத் தங்களுக்குத் தோன்றி னுல், மன்னிக்க வேண்டுகிறேன்!" என்றுள் கோகிலம். "எங்களுக்குற்றிருக்கும் இக்கஷ்ட காலத்தில், உடன் பிறந்த சகோதரன் போன்ற, ஓர் உண்மை நண்பரைக் கபா லீசுவரர் எங்கள்பொருட்டு அனுப்பியிருக்கிறு ரென்று தோன்றுகிறது! என் கணவர் இவ்விடம் விட்டுச் சென்று மூன்று நாட்களாகின்றன. எங்கு சென்றிருக்கிறுரென்று எனக்குத் தெரியாது. இக்குழந்தைகள்,—"

"கோகிலம், எழுந்திரு! என்னை இன்னுனென எவ் வண்ணம் அறிந்து கொண்டாய்!"

"அதோ சுவற்றில் தொங்கும் தங்கள் உருவப்படம் என் இருதயத்தில் எழுதப்பெற்றதுபோல் பதிந்து கிடக் கின்றது. இவ்வளவு வருஷங்களாக என் கணவர் தங்கள்

விஷயத்தில் மிகவும் நன்றிமறந்தவரா யிருந்தார். ஆனால், இப்பொழுது,—''

"உங்களுக்குற்ற இடர் யாது, கோகிலம்? நான்சென்ற தடவை சென்னைக்கு வந்திருந்தபொழுது, கேதாரியின் பெயர், பிரதானமாய், மிகவும் செல்வாக்குப் பெற்றல்லவோ விளங்கிக்கொண்டிருந்தது! சட்ட சபைக்கு அபேக்ஷக னாக நின்றதுதான் அவனை நேர்வழியினின்றும் பிறழச் செய்து, பெரும் கேடும் விளைத்ததென்று நினைக்கின்றேன்!''

"வெகு நாட்களுக்கு முன் உங்களை விட்டுப் பிரிந்த தோஷமே, முற்றி, இவ்வண்ண மாயிற்றேயொழிய வேறல்ல. மேம்பதவியிற் பேராசையுற்று, எதற்கும் துணிந்தவராய், வந்த வரும்படியை யெல்லாம் செலவழித்ததுடன், அதைச் சரியெனக் கூறுவதற்கு வேண்டிய நியாயங்களும் கற்பிப் பவரானார்!''—கோகிலத்தின் மொழிகள் கல்வியறிவு சிறந்து விளங்குவது ராமுவின் மனதில் பதிந்தது.

"எங்களுக்குப் பேருபகாரியான தங்களிடம் முழு வரலாற்றையும் எடுத்துக்கூறி, என் மனம், உள்ளம் இரண் டிற்கும் சற்று நிம்மதியளிக்க விரும்புகிறேன். உடன் பிறந்த சகோதரன்போல் என்னிடம் அன்பு பாராட்ட வேண்டும்! இன்றிரவு இவ்விடமே யிருங்கள்! என் கணவர் வந்தவர்களை யுபசரிக்கும் மனதுடையவராதலால், நமக்குத் தெரியாத தெய்வீக சக்தியொன்று அவரிடம் இச்செய்தி யைக் கூறி, ஒருமணி நேரத்திற்குள் அவரை இங்கு ஒரு வேளை திரும்பிவரச் செய்தாலும் செய்யலாம்!''

"நீ கூறுவதை யறிந்தேன், கோகிலம்! இவ்விடருற்ற காலத்திலும் உன் குழந்தைகளுடன் நீ இவ்வளவு வீறுடம் பரமின்றி யிருப்பதைக் காண, எனக்கு எவ்வளவோ பெரு மையும் சந்தோஷமு முண்டாகின்றது. ஒருவேளை உனக்

குத் தெரியாதிருக்கலாம். உன் ஜாதகத்தைக் கண்டதும், ஏதோ ஒரு சூக்ஷ்மதிருஷ்டி பெற்றவனாய், நான்தான் உன்னைத் தேர்ந்தெடுக்கும்படி கேதாரியிடம் கூறியவன்.''

"அது எனக்குத் தெரியும்!'' என்று கோகிலம் சிறிது வெட்கத்துடன் கூறினாள். "இன்றிரவு, என்னை மதித்து, இங்கேயே சாப்பிடவேண்டும். அவரில்லையே யென்று நீங்கள் யோசிக்கவேண்டாம். நான்,—''

"இல்லை! கோகிலம்! அந்த யோசனை யொன்றுமில்லை. நாளைக்காலை ஜானகியையும் அழைத்துக்கொண்டு இங்கு வருகின்றேன். உன்னுடன் அநேக விஷயங்கள் பேசவேண்டும். ஜானகி இன்றிரவு இவ்வூருக்கு வந்துவிடுவாள். அவளை யழைத்துவர ஆளனுப்பியிருக்கிறேன். இங்கு ஒரு மாதம்போல் இருப்பாள். ஏழுமணி ரயிலில்,—''

"அப்படியானால், மோட்டாரை ஸ்டேஷனுக்கு அனுப்பி, அவளை நேராக இங்கழைத்து வந்துவிடச் சொல்லுகிறேன்!''

"அம்மாமிக்கு எத்தனை குழந்தைகளென்று மாமாவைக் கேள், அம்மா!'' என்று ராமுவைப் போய் அழைத்து வந்த சிறுமி கேட்க,

"நான் கேட்க எண்ணியதை அவள் கேட்டுவிட்டாள்!'' என்றாள் கோகிலம்.

"ஒரு பெண்ணும், ஒரு பிள்ளையும்,'' என்றான் ராமு, அச்சிறுமியின் கன்னத்தில் வேடிக்கையாய்க் கிள்ளிக்கொண்டே. குழந்தைகளனைவரும் அதைக் கேட்டுக் கை கொட்டிச் சந்தோஷித்தனர்.

"மோட்டாரா? வேண்டவே வேண்டாம்! யாராவது ஒரு ஆளை ஸ்டேஷனுக் கனுப்பி, அவளை இங்கு வந்து

விடும்படி கூறினால், ஜட்கா வைத்துக்கொண்டு வந்துவிடு வாள். எங்களுக்கு வழக்கந்தான்!—''

"மோட்டாரிருக்கும்பொழுது ஏன் கூடாது? அது வும் அதிக நாட்கள் இங்கிருக்கப் போவதில்லை! இதுவே கடைசி முறையாக ஒருவேளை இருந்தாலும், ஓர் நல்ல காரி யத்தின்பொருட்டுச் சென்றதாக ஏனிருக்கலாகாது?''

"நீ கூறுவது மிகவும் பரிதாபத்தை யுண்டுபண்ணு கிறதே, கோகிலம்!''

"சீக்கிரத்தில் யாவற்றையும் அறிந்துகொள்ளுவீர்கள்; எங்களுக் கெல்லாம் போய்விட்டது! "எலெக்ஷனை''யும் தள்ளிவிட்டால், அவருக்கு அப்புறம் தலைகிளப்ப வழி யில்லை''—தான் கடைசியாகக் கேட்ட சமாசாரத்தை ராமு அவளிடம் கூறவில்லை.

"சாமான்யமான துக்கங்களும், சந்தோஷங்களு முள்ள சாந்தமான கிராமவாழ்க்கையைப்போலெதுவு மில்லை. சென்னையில் யாவும் வீண் டம்பமே. என் கணவரது பேராசைக்கும் முடிவில்லை. அதுவே எங்கள் நாசத்திற்குக் காரணமாயிற்று. ஒருநாளும் அமைதியென்பதையே அவர் அறியாதவராய் விட்டார்!''

"கிராமவாழ்க்கையே சிறந்ததென்று நான் மனதி லெண்ணியதுடன், அவ்வாறே வெளியிட்டுக் கூறியுமிருக் கின்றேன். ஆயினும், கோகிலம், நீ மனந்தளரவேண்டாம்! கேதாரி இயற்கையில் உயர்ந்த குணமுடையவன். இவ்வூ ரன்றோ அவனைக் கெடுத்துவிட்டது! சீக்கிரத்தில் நேராகி விடுவான்.''

"அதற்குக் காலம் கடந்துவிட்டது. ஒன்றிரண்டு வரு ஷங்களுக்கு முன்பு நீங்கள் இங்கு வந்திருந்தால்,—'' என்று கோகிலம் தனக்குள்ளேயே மெதுவாய்ச் சொல்லிக்கொண் டாள். இவ்வாறு அவர்கள் எட்டுமணிவரையும்பேசிக்கொண்

டிருக்கும்பொழுது, வெளியில் மோட்டார் வந்து நிற்க, ஜானகியும் அவள் குழந்தைகளும் மட்டுமின்றி, கேதாரியும் வண்டியிலிருந்து இறங்கினன். மோட்டாரிலிருந்து ஓரே குதியாய்க் குதித்து, கேதாரி ராமுவின் கால்களில் விழுந்து நமஸ்கரித்து, பச்சாத்தாபமும் விசனமும் குடிகொண்ட குரலில், "என் தோஷங்களை யெல்லாம் மன்னிப்பாய், ராமு! காலேஜில் படிக்கும்பொழுது நம்மிருவருக்குள்ளும் ஏற்பட்ட அன்பின்பொருட்டாவது நீ க்ஷமிக்கவேண்டும். என் நன்றியற்றதனத்திற்காக நான் ஏற்கெனவே அதிகமாய் அனுபவித்தாய்விட்டது! இப்பொழுதுதான் எனக்கு எல்லாம் விளங்குகின்றது. ஆயினும், அந்தோ! இனி யென்ன பிரயோஜனம்?" என்று துக்கிக்க,

"கேதாரி, உன் செய்கை மிகவும் நன்ருயிருக்கிறது! நண்பர்களுள் இக்காலத்தில் இவ்வாருன வழக்கமில்லையே!" என்ருன் ராமு.

"ராமு, நான் உன்னைவிட வயதில் சிறியவன். ஒவ் வொன்றிற்கும் உனக்கே கடமைப்பட்டவனு யிருக்கிறேன். உன் காலில் விழுந்து நமஸ்கரிக்காவிடில், என் மனம் திருப்தி யடையாது. நான் முற்றிலும் மாறிவிட்டேனென்பதற்கு அதுவே ஓர் அறிகுறியாகும். இதற்காகத்தான், உன்னைத் தேடி, மூன்று நாட்களுக்கு முன் ஊரை விட்டுச் சென்ற வன், ஜானகியைத் தூசியில் கண்டு அவளுடன் புறப்பட்டு இங்கு வந்து சேர்ந்தேன்."

"நல்ல யோசனை செய்தாய்! அதுவே சுபமாய்த் தோன்றுகிறது!"

"இந்நிமிஷம் முதல் நான் வேறு மனிதனுகிவிட்டேன். ராமு, என்னை உன் அடியனுய் ஏற்றுக்கொள்!"

"அல்ல,—முன்போல் நண்பனுகவென்று சொல்!" என்றான் ராமு. ஒரு நிமிஷம் பொறுத்து, மீண்டும், "கேதாரி, உனது "எலெக்ஷன்" அக்கிரமமென்று தள்ளப்பட்டதில் எனக்கு வருத்தமில்லை. மேம்பதவியில் பேராசைகொண்டு வாழ்வது மிகவும் வெறுக்கத்தக்கது," என,

"ஆஹா! அவ்வாறு தீர்ப்பாய் விட்டதா? ஆனல் இப்படியாகுமென்று எனக்கு முன்பே தெரியுமாகையால் நான் ஆச்சரியப்படவில்லை," என்றான் கேதாரி.

"ஆம், அவ்வாறுதான் சாயந்திரப் பத்திரிகைகளில் வெளியாயிருந்தது."

"நல்லது, அப்படியே யிருக்கட்டும்! மார்க்கண்டம் அய்யரும் மகிழ்வெய்துவதில் எனக்கு ஆக்ஷேபணை யில்லை. ராமு! உன்னிடம் எவ்வளவோ சமாசாரங்கள் சொல்ல வேண்டியிருக்கின்றன. வா! நாம் வெளியே போய்வருவோம். அதற்குள் ஜானகியும் கோகிலமும் ஒருவரை யொருவர் நன்று யறிந்துகொள்ளட்டும். வெண்தாமரை பூத்ததுபோல், ஆகாயத்தில் சந்திரன் பிரகாசிக்க, இன்றிரவு மிகவும் ரமணீயமா யிருக்கிறது. முன்போல் கடற்கரையில் சிறிது நேரமிருந்துவிட்டு வருவோம். எனது வாழ்நாட்கள் இனி எவ்வண்ண மாவதென்பதை நீ மறுபடியும் புதிதா யமைக்கவேண்டும். இனி இவ்வக்கீல் தொழிலை விட்டு, ஓர் துறவியாக உன் வழியைப் பின்பற்றுவேன்!"

"என் வழியா? நான் துறவியா அதற்கு? எவ்வளவோ காரியங்களை மேலேற்றுக்கொண்டிருக்கும், சட்டையும் தலைப்பாகையுமணிந்த, ஓர் புத்தியற்ற உத்தியோகஸ்தனன்றோ!"

"ஆயினும், இவ்வேலையின் மத்தியில் நீ ஓர் துறவியைப் போலவே நடந்துகொள்ளுகிருய். இம்மூன்று நாட்களில்

உன் வாழ்வின் தாத்பரியத்தையும், அதிலிருந்து வெளியாகும் உபதேசத்தையும் நான் அறிந்துவிட்டேன். இது வரையும் எனக்கு அவைகள் விளங்கவில்லை. எனது லக்ஷ்யங்கள் இப்பொழுது மாறிவிட்டன!''

''சரி, கேதாரி! சாப்பிட்ட பிறகு நாம் கடற்கரைக்குச் சென்றுவிட்டு வருவோம். நிலவுபொழியும் இரவே தத்துவ விசாரணையையும், பெரிய மனச்சமாதானத்தையும் அளிக்கவல்லதாம்!'' என்றான் ராமு.

---

## அத்தியாயம் 43.

### சம்பாஷணை.

எப்பொழுதும், கேதாரி பல யோசனைகளி லாழ்ந்த மனத்தினனாய், இலையைக் கவனிக்காமலே, வாய் பேசாது சாப்பிடுவது வழக்கம். ஆனால், கோகிலமோ, ஏழை, பணக்காரர்களென்ற பேதம் பாராட்டாமல், வந்தவர்களை எப்பொழுதும் இனிமையா யுபசரிப்பாள். ராமுவின் வரவானது உணர்த்தவரியதோர் களிப்பை அவள் ஹிருதயத்தி லூட்ட, தன் வீட்டில் அவன் தங்கியது, ஓர் தேவதையே அங்கெழுந்தருளியிருப்பதுபோல் அவளுக்குத் தோன்றிற்று. இப்புதிய பக்தியின் காரணமாக எழுந்த களிப்பில், அவளது கால்கள் பூமியில் பதியாது, பறப்பன போலும் தோன்ற, கோகிலம் தானே சிரத்தையுடன் ராமுவுக்குப் பரிமாறலானாள். விருந்தினர்களிடம் தான் சாதாரணமாய் நடந்துகொள்ளும் விதமும், தனது ஆகாரக் கிரமமுமே திடீரென்று மாறுதலடைந்துவிட்டதென, கூடப் புசித்துக்கொண்டிருந்த கேதாரியும் எண்ணினான். உண்பதி லுண்டாகு முள்ளக்கிளர்ச்சியை உணர்ந்தவனாய், உணவே யாவற்றிற்கும் ஆதாரபூதமாயிருப்பதால், அதை வெகுபக்தி சிரத்தையுடன் உட்கொள்ளவேண்டுமென்று கண்டு கொண்டான். மௌனமாய்ப் புசிப்பதே பார்ப்பதற்கு அழகென்று தனவந்தர்கள் மதிக்க, ராமு, எப்பொழுதும், அதற்கு ஓர் பரிசுத்தமான, உயர்ந்த அர்த்தத்தைக் கல்பித்துக் கொண்டாடுவது வழக்கம். போஜனம் முடிந்தது. கோகிலத்தின் இனிய உபசாரத்தினால், இன்னவிதமென்று கூறமுடியாதவோர் ருசி அதற்குண்டாக, ராமுவும் ஒவ்வொன்றையும்

திருப்தியுடன் உட்கொண்டான். சாப்பிட்டபிறகு, இரு வரும் கடற்கரை சென்றனர்.

சிறுவயதிலிருந்த குழந்தைத்தனமான வியப்பு ஜானகி யினிடம் இப்பொழுதும் விளங்கிற்று. முத்து முதலித் தெரு 15-ம் நம்பர் வீட்டிலிருக்கும்பொழுதே, அவள் மைலாப்பூரின் செல்வத்தையும், போகங்களையும்பற்றிக் கேள்விப்பட்டிருந்தாளாயினும், கேதாரியின் வீட்டினழகை யும்,வைபவத்தையும் கண்டவுடன் முதலில் சிறிது பிரமித்து நின்றாள். கோகிலத்தைக் காண, அவளுக்குப் பின்னும் வியப்பு மேலிட்டது. அவளது துவண்ட, உயர்ந்த உருவத் தினழகும், அவயவங்களின் வடிவும், முகக்களையும், அவ ளது இயற்கையான இனிமையும், தயக்கமற்ற மொழிகளின் தெளிவும் ஜானகிக்கு மிகவும் புதிதாகவே தோன்றின. அங்கிருந்த மின்சார விளக்கின் ஒளியைச் சீதை கண்டு திகைத்ததுபோலவே, அவளும் கோகிலத்தைக் களங்கமற்ற வியப்புடன் நோக்கலானாள்.

போஜனம் முடிந்ததும், வெற்றிலை போட்டுக்கொண் டே, கோகிலம், அதுவே பேச்சைக் கிளப்பிவிட்டது போல் சம்பாஷணையைத் தொடங்கினாள். "இரண்டுமணி நேரத் திற்கு முன்பு, எங்களுடைய கஷ்டகாலத்தில், கடவுள் ஒரு அருமைத்தோழியை எனக்கு அளிப்பாரென்று நான் கனவி லும் கருதவில்லை!" என,

"மரத்தின்மேலிருந்து, இனியகுரலுடன் பாடும் பறவையாகிய உனக்கு என்ன கஷ்டங்கள், கோகிலம்?" என்றாள் ஜானகி. "நீ கூறுவது எனக்கு விளங்கவில்லை. கேதாரியும் இவ்வாறுதான் பேசுகிறான். இவ்வரண்மனை போன்ற வீட்டில், செல்வமும் பெருமையும் தவிர வேறொன் றும் என் கண்ணெதிர்ப்படவில்லை! அவைகளை நாகரிகமற்று

வியப்புடன் நோக்க எனக்கு வெட்கமாயிருக்கின்றது. கட்டழகமைந்த ஓர் அரசிபோல் நீ விளங்குகிறாய்! கோகிலம், உனக்கு என்ன குறைவு? இவ்விசனகரமான குரலும், பார்வையும் நீ மேற்கொள்ளவேண்டிய அவசியமே காணவில்லையே! நான் பார்த்த வீடுகளில், செல்வமும், செல்வச் சிறு மக்களும் நிறைந்து, ஒளிபொருந்திய வீடு இதுவே! கேதாரி பெரும் பாக்கியசாலி!''

"ஆயினும், ஜானகி! இப்பிரகாசமெல்லாம், மேல் பூச்சே! உள்ளே அநேக கோரமான விஷயங்களை வெளித் தெரியவொட்டாமல் மறைத்துக்கொண்டிருக்கின்றது. நகர வாழ்க்கையை நீ யறியாய்! இவ்வெளிவேஷமும், டம்பமும், உள்ளுக்குள் புஷ்பத்தை பூச்சி யரிப்பது போல், அரித்துக்கொண்டிருக்கின்றது. நான் எல்லாவற்றையும் கூறுகிறேன், கேள்!''

"எனக்கு அக்கதை யெல்லாம் வேண்டாம்! உன்னுடனிருப்பது எனக்கு எவ்வளவோ ஆநந்தமாயிருக்கிறது. வீண் வருத்தம் பாராட்டும், துக்ககரமான விஷயங்களைக் கூறி, அவ்வாநந்தத்தைக் கெடுக்காதே! நான் கேதாரிக்கு உறவினளென்பது உனக்குத் தெரியுமல்லவா?''

"தெரியும்!—''

"என் தாயும் நானும், திக்கற்றுத் தனியாய், எளிய நிலைமையில் வருந்திக்கொண்டிருக்கும்பொழுது, கேதாரியின் முயற்சியினலேயே எனக்கு விவாஹம் நிறைவேறிற்றென்பதையு மறிவாயா?''

"அச்சங்கதியும் எனக்குத் தெரியும். அது உன் கணவர் செய்த வுதவிக்குப் பதிற் செய்ததேயொழிய, வேறன்று. அவர்தான் என் கணவருக்கு என்னைத் தேர்ந்தெடுத்தவர்!''

"ஆயினும், அதற்காக அவரே முன் நின்று முயற்சி செய்ய வில்லையே!"

இச்சமயத்தில் சீதை தன் தாயினிடம் ஓடிவந்து, "அம்மா, இவ்வீடு எவ்வளவு அழகாயிருக்கிறது! நாம் இங்கேயேயிருந்துவிட்டாலென்ன? அவர்களெல்லாரும் நிறைய பொம்மைகள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அம்மா! தம்பிக்கு ஒரு பொம்மை மோட்டார் வாங்கக்கூடாதா? அவன் அது வேண்டுமென்று அழுகிறானே!" என,

"உன் தந்தை பணக்காரரல்லர், சீதா! நம்மால் அவை எல்லாம் வாங்கமுடியாது!" என்றாள் ஜானகி.

"ஏன் அப்பா பணக்காரராயில்லை? அவருக்குமட்டும் ஆட்களில்லையா? ஷர்ட்டு, கோட்டு, கைத்தடி எல்லாம் தானிருக்கின்றனவே! எவ்வளவோ பெயர்கள் அவருக்கும் சலாம் வைக்கின்றார்கள்!"

"அப்பா வந்தவுடன் கேள்!"

"சீதா, இவையெல்லாம் உன்னுடையவைதான்! உனக்கு வேண்டியதை யெடுத்துக்கொள். உன் அம்மா கூறுவதை நம்பாதே. இவ்வுலகில் உன் தந்தையைப்போல் செல்வமுள்ளவர் கிடையாது!" என்று கூறும்பொழுது கோகிலத்தின் தொண்டை தழதழத்தது.

"ஆம், அவரைப்போல் நல்ல அப்பா இருக்கமாட்டார். அம்மாதான் எப்பொழுதும் என்னைக் கோபித்துக் கொள்ளுகிறாள். அவள் என்னைக் கிள்ளும்போதெல்லாம், நான் அழுதுகொண்டு அப்பாவிடம் ஓடிப்போய்விடுவேன். அவர் முகத்தைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே, அவர் தலை கழுத்து எங்கும் முத்தமிடும் வரையும், அவர் என்னை முதுகில் தட்டிக்கொடுத்துக்கொண்டே யிருப்பார்."

இவ்வாறு வெகுநேரம் பலவிஷயங்களையும்பற்றி ஜானகியும் கோகிலமும் பேசிக்கொண்டிருந்தனர். கடைசியாக ஜானகிக்கு இனிப் பேசுவதற்கு விஷயங்களற்றுப்போக, நித்திரையும் அவள் கண்ணைச் சுற்றத் தொடங்கிற்று. அவளைப் போல் கள்ளம் கபடற்றவளும், இனிமையும், அழகும் பொருந்தியவள் ஒருவருமில்லை யென்று கோகிலம் நினைக்க, அவளைப்பற்றியாவது, அவள் சுற்றுவட்டத்தைப்பற்றியாவது ஜானகி முற்றிலும் அறியமாட்டாதவளாயிருந்தும், அவளிடம் பிறரைக் கவரும் ஏதோ ஒரு அரிய சக்தியிருக்கிறதென்று மட்டும் உணரலானுள். ராமுவையும் கேதாரியையும் எதிர்பார்த்துக்கொண்டு கோகிலம், ஜானகி உறங்கிய பிறகு சற்றுநேரம் விழித்துக்கொண்டிருந்தாள். ஆயினும், அவர்கள் வருவதை எதிர்பார்த்தவண்ணமே, மெதுவாய் அவள் நித்திரையி லாழ்ந்துவிட்டாள்.

---

## அத்தியாயம் 44

### நிலவொளியும் தத்துவ விசாரணையும்.

தத்துவ விசாரணையினால் உண்மையைக் கண்டறிய முயலுவோருக்கு, கடற்கரையிலுள்ள மணற் குன்றுகளானது இயற்கையி லேற்பட்ட, அதிமிருதுவான படுக்கை போன்றவை யென்னலாம். கரையில் எங்கு பார்த்தாலும் புதிது புதிதாய்க் குவிந்துகொண்டேயிருக்கும் இக்குன்றுகளி லொன்றின்மீது ராமுவும் கேதாரியும் சாய்ந்து உட்கார்ந்துகொண்டிருந்தனர். இரவு சமீபித்து நேரமாகி விட்டதால், கடற்காற்றை யனுபவிக்க வந்திருந்தோரின் வண்டிகளி னொலி மெதுவாய் அடங்கிக்கொண்டிருந்தது. எங்கும் அமைதியாய், தேகத்திற்குக் குளிர்ச்சியைத் தருவதாயிருக்க, கடலும், ஓசை யொழிந்து, குளம்போல் அமரிக்கையா யிருந்தது. அலைகள் சப்தம் செய்யாமல் வெகு மெதுவாய்க் கரையி லடித்துச் சென்று கொண்டிருந்தன. இதுவே கடலும் பூமியும் வெகுவாயுறவாடும் சமயமென்று கூறலாம். ஆகாயத்தில் சந்திரனும், சுக்கிரனும், தாயும் மகளும்போல் காணப்பட, அவைகளுக்குச் சற்று பின்புறமாக பிருகஸ்பதியானது, நிலவு படர்ந்த வானத்தின் வெண்மையினாலும் சந்திரனுடைய காந்தியாலும் நீலப்புகருள்ள வைரம்போல் பிரகாசித்தது. மணலில் கால்களை நீட்டி மல்லாந்து படுத்திருந்த ராமுவின் பக்கத்தில் கேதாரி, தலையைக் கைத்தலத்திற்றாங்கி, ஒரு பக்கமாய்த் திரும்பிப் படுத்துக் கொண்டிருந்தான். பூமி, கடல், ஆகாயம் எங்கும் அமைதி குடிகொண்டு விளங்கிற்று.

"கேதாரி, அதோ பார்! வாழ்வின் சிறப்பிற்கு அதிபதியாயும், கௌரவமும் புகழும் அளிக்கவல்லதாயுமுள்ள குரு ஆகாயத்தில் ஜ்வலித்துக்கொண்டிருக்கிறது!" என்று ராமு சந்திரனை நோக்கியவண்ணங் கூற,

"அப்படியாயின், எனது ஜன்மகாலத்தில் அது மிகவும் வலியற்றதாயிருந்திருக்கவேண்டும். ராமு, நீ ஒரு ஜோதிஷனுயிற்றே! என் ஜாதகத்திலுள்ள தோஷங்களென்ன? குரு என் ஜாதகத்திற்கு மிகவும் கெட்ட கிரகமா!" என்ருன் கேதாரி.

"நானு ஜோதிஷன்? அல்ல, கேதாரி! ஜாதகத்திலொரு தோஷமுமில்லை; எல்லாக் குற்றமும் நம்மிடமேயிருக்கின்றது! பட்டணவாசத்தில் வக்கீல் தொழிலிலிருப்பவனுக்கு, குரு சிறந்த ஆதிபத்தியம் பெற்றிருந்தாலும், ஓர் சிட்டிகை பொடிக்காக நொண்டிக்கொண்டே மயில் கணக்காய் யாசித்துச் செல்லவேண்டியதாயிருக்கும். சகலமும் சகவாசத்தைப் பொறுத்தது. கேதாரி! மனிதன் கேவலம் குயவன்கைச் சக்கிரத்திலகப்பட்ட களிமண்போன்றவனே!"

"ஆயினும், ராமு! எனக்கு இப்படிப்பட்ட யோகபங்கமுண்டாகுமென்று நான் கனவிலும் கருதவில்லை. சகல ஜீவராசிகளையும் துகளாக்கிவிடும் இடியைவிட வேகமாயன்றே அது நேர்ந்தது! மேலும், இவ்வுலகில், தண்டனை பக்ஷபாதமற்று வருவதில்லையென்றும் தோன்றுகிறது. நூற்றுக் கணக்காய் எவ்வளவோ பெயர்கள் என்னைப்போல் முன்பும் செய்திருக்கிருர்கள்! இப்பொழுதும் செய்பவர்களே! அவர்களெல்லாரும் எங்கு சென்ருர்கள்? உயர்ந்த பீடத்தில் ஏறி நின்றுகொண்டு உலகோருக்குச் சீரிய வொழுக்கத்தைப் போதித்துக்கொண்டிருக்கின்றனர்! ஏன், தன் யோசனைகளின் மூலமாயும், நடவடிக்கைகளாலும்

இக்கெட்ட வழக்கங்களை எனக்குக் கற்பித்த, இம்மார்க் கண்டம் அய்யரே, வசையற்றவராய், தேச நலத்தையும், பொதுவாக உலக நன்மையையும் பற்றி வெகுவாய்ப் பேசிக் கொண்டு, சட்டசபையி லுட்கார்ந்திருக்கவில்லையா ? இவ் வுலகம் மிகக்கொடியது ! இம்மனிதன் கேவலம் பேராசையும் பொறாமையும் குடிகொண்டவனாய், வயதிற் சிறியவனானது பற்றி, அவன் எதிர்பார்த்ததற்குமேல் பெரும் போட்டி யாய் நான் கிளம்பியதைக் கண்டு, என்னைத் தன் வழியினின் றும் அகற்றுவதற்கு, எனக்கு விரோதமாய், எலெக்ஷன் முடிந்ததும், என் பணக் கஷ்டத்தை என் வாயிலிருந்தே கேட்டறிந்த பின்பு, சூழ்ச்சிசெய்தான். அப்பொழுது என் கையில் பதினாயிரம் ரூபாய் இருந்தாலும், அல்லது கடனாகக் கிடைத்திருந்தாலும், "தன்வினை தன்னைச் சுடும்," என்ற படி, அவரை யனுபவிக்கச் செய்வதுடன், சக்கிரவர்த்தியின் இராஜதானியாகிய டில்லியி லிருந்துகொண்டு, இராஜ்ய தந்திர விஷயத்தில், இன்னும் பால்ய தசையிலேயே யிருக்கு மிவர்க ளனைவரையும் அடக்கி யாண்டுகொண்டு மிருப்பே னல்லவா ?"

இப்பேச்சை யங்கீகரிக்காது, ராமு சந்திரனைப் பார்த்து முகம் சுளிக்க, கேதாரி தந்நிலைமை யடைந்து, மாறிய குர லோடு அமரிக்கையாய், "கோபமும் அகங்காரமும் என்னுள் ளத்தில் மீண்டும் வளர நான் இடம் கொடுப்பானேன் ! நானே அவ்விஷயங்களில் இனிப் பிரவேசிப்பதில்லை. பழிக் குப் பழி வாங்குவதில்லை யென்றும் நான் சபதம் செய்து கொண்டிருக்கிறேன். மார்க்கண்டம் அய்யரே தன் வெற்றி யின் பயனை யனுபவிக்கட்டும் ! இனி நான் அவரைப் பற்றி நினைக்கமாட்டேன். செல்வாக்கும் அதிகாரமும் பெற்றுள் ளவர்களுக்கும் எனக்கும், இப்பொழுது, என்ன சம்பந்த

மிருக்கிறது? ஆயினும், ராமு! தற்கால நிலையை யோசிக்குங் கால், எனக்குற்ற இழிவை நீ எவ்வாறு நியாயமெனக் கூற முடியும்?" என,

"அன்புள்ள கேதாரி! நானொன்றையும் சரியென்று கூறவில்லை. கூறவும் சக்தியற்றவன். இது உனக்குத் தெரியும். நற்காரியத்தின் பயனும், தீமையின் பொருட்டு விளையும் கஷ்டமும் இவ்வுலகில் மூலகாரணமாயுள்ளவை. அவைகள் நம் சக்திக்குட்பட்டவையல்ல. எவரும் அவைகளை யறிந்திலர். அவை நம்மால் அறியக்கூடியவையுமன்று. ஆயினும், நமக்கிருக்கும் சொற்ப அறிவே, சம்சாரமாகிய ஓடத்தை இக்கரைக்குள்பட்டிருக்கும் ஆற்றில் செலுத்தப் போதுமானது. கரைகாணுக்கடலை நாம் அணுகலாகாது. பிறரின் செயல்களைக் கண்டிக்காதிருப்பதே சிறந்த நீதியும், பேரானந்தத்தை யளிக்கும் வழியுமாம். பிறருடன் நம்மை யொப்பிட்டுக்கொள்வதும், அவர்களை தூஷிப்பதும் துன்பத்தையும், தீமையையும் நாம் வலியவேண்டி நிற்பதாகும். ஒழுக்கமானது மனிதனால் வரையறுக்கப்பட்டதென்பதில் ஐயமில்லையாயினும், இவ்வுலகம் ஒழுங்குநிலை பெற வேண்டி, என்றும் அழிவற்ற மெய்ப்பொருள் கண்டோரால் இக்கிரமங்கள் விதிக்கப்பெற்றிருக்கின்றன. இரு கரைகளின் நடுவில் அடங்கிக் குறுகியதாய்ச் செல்லும் நதியொன்றே, அழியாக் கடலை யணுகுகின்றதல்லவா? இஷ்டப்படி இங்குமங்கும் சலிக்கும் நீர்த்திவிலையானது, தான் சென்ற ஈரக்கசிவுள்ள பூமியிலேயே அற்பமா யழிந்துவிடுமன்றோ! கேதாரி! நீயோ கரையை யுடைத்து உன் பேராசையைப் பெருகவிட்டாய். அதுவும் பெருவெள்ளம்போல் அதிவேகமாய்க் கிளம்பி, எதிர்ப்பட்ட மணற் குன்றுகளையும், சமப்பிரதேசங்களையும் ஆக்கிரமித்துச் சென்று, பெரும்

கொந்தளிப்புடன், இறுதியில், உன்னை, வெளியேற வழியில்லாவண்ணம், ஓர் பெரும் பள்ளத்தில் ஆழ்த்திவிட்டது. கேதாரி! களவிலும், வெற்றியிலுங்கூட ஒழுக்க முறைகளுண்டு. அவைகளை நீ கவனியாது தள்ளிவிட்டாய். சுண்ணும்புக்காரை உறுதியாய்ப் பிடித்துக்கொள்ளுவதற்குள், நீ செங்கற்களை மேன்மேலும் அதிவேகமாய் அடுக்கிச்சென்றதால், கைபட்ட மாத்திரத்தில் கட்டடம் விழுந்துவிட்டது!" என்று ராமு கூறும்பொழுது, ஆகாயத்தில் சந்திரனை இலேசான சிறு மேகமொன்று மறைக்க, அதனின்றும் விடுபட்டு சந்திரன் மீண்டும் பிரகாசிக்கும்வரையும் பேசாதிருந்து, ராமு மறுபடியும் கூறத்தொடங்கினன். "கேதாரி! தற்காலம் உலகம் முழுவதுமே, நிலைமாறி யிருக்கின்றது. எவ்வளவோ விஷயங்கள் பொருத்தமின்றி யிருக்கின்றன. வேறு புதிய ரூபமும் அமைப்பும் பெறவேண்டி, அவைகள் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளுகின்றன போலும்! யாவும் உலைக்குகையில் உருகிக்கொண்டிருக்கின்றன. அவைகளை வார்க்கும் அச்சும், இன்னும், தயாராகவில்லை. நெருப்போ உலையில் எரிந்து அணையும் சமயமாக, சுற்றிலும் கரியும், புகையும் சூழ்ந்து, அங்கு வேலைசெய்பவர்களைக் களைப்படையச் செய்கின்றது. மாந்தர்களைத் தன் வசப்படுத்தி, நன்னெறியிற் செலுத்தக்கூடிய, சிறந்த புத்திமானுகியவன் இனிப் பிறக்கவேண்டும்! சாந்தமும், ஜீவகாருண்யமும் வாய்ந்து, ஈசுவராம்சம்பெற்ற அவதார புருஷன் தோன்றுவதற்கு வேண்டிய சாதனங்கள் உலகில் இன்னும் சித்தமாகவில்லை."—ராமு சிறிது பெருமூச்செறிந்தான். "உதாரணமாக, நான் உன்னை யொன்று கேட்கின்றேன். எவனும் தனக்கு அன்றன்று வேண்டிய வளவிற்குமேல், அதிகமாக அடைவானேன்? ஒரு வக்கீல் செய்யும் வேலை, நூறு குடி

யானவர்களுடைய வேலைக்குச் சமமென்ற கணக்கின்படி, உனக்குக் கீழ்ப்பட்டவர்களுடைய ஆத்மா, ஜீவியம், உழைப்பு இவை யாவையும் உனக்குச் சொந்தமாக்கிக் கொண்டு, நீ வக்கீல் தொழில் நடத்திவந்தாய். முடிவில், இவ்வுலகில், உன்னால் விளைந்த காரியங்களே உன்னையும், அவ்வாறே, தம் வசமாக்கிவிட்டன !''

"அப்படியாயின், பேரறிவுள்ள ராமு! செயலற்றுக் கிடப்பதே நலமெனக் கூறுகிறாயா ?'' என்றான் கேதாரி. சந்திரன்மேல் விட்டெறிபவன்போல், ஆயாயத்தை நோக்கிக் கூறும் ராமுவினது இப்புதிய எண்ணங்களின் வேர்நிலைகளைவையென்று அதிநுட்ப புத்திவாய்ந்த கேதாரிக்கு உடனே விளங்கிவிட்டது.

"நீ கூறுவது சரி, கேதாரி! மாயாதீதமான இவ்வுலகின்கண் இருக்கவேண்டிய விதம் அதுவே யென்பதில் அணுவளவும் ஐயமில்லை. ஓய்வற்ற வினையிலும், அதினால் வரும் துன்பத்திலுங்கூட, மனிதன் ஆழ்ந்த மனச்சமாதானத்தையும், சிந்தையை யடக்கிச் சும்மாவிருக்கும் திறத்தையும் பெறவேண்டியே பாடுபடுகின்றான். கண்ணைப் பெற்றதினால் நாம் சலனசக்தியையும் பெற்றோம். அபாயகரமான இப்பெரும் பேற்றை வளர்ப்பதற்குப் பலவிதமான விஷயங்கள் வேண்டியதாயிருக்கின்றன. தன் வயிற்றுக்குத் தானே தேடியலைய விதிக்கப்பட்டிருக்கும் ஜீவன் உழைத்துப் பாடுபடவேண்டியதே! கருமமென்பது தனக்கும் பிறருக்கும் துன்பத்தையே தரும். ஏனெனில், அஃதிருக்குமிடத்தில் சண்டையும், இருந்தே தீரும். புகையின்றி நெருப்பிராதன்றோ? ஆயினும், வேதனை, துன்பம், உழைப்பு, மிதமிஞ்சிய தேகப்பாடு, பிறரால் வருங்கேடு, கஷ்டம், நஷ்டம் இவைகளினுழன்று கொண்டே, மனிதன் பரிபக்குவ நிலைமையை யடை

யும் வரையும், மாறிக்கொண்டிருக்கும் இவ்வுலகில் செயலற்றிருப்பது முடியாது. ஆனால், பிறர் பொருளைக் கவராமலும், தன் விஷயவாசையை வளர்ப்பதற்காக, பிறர் வாழ்வையும் ஆத்மாவையும் அழிக்காமலும் நடந்துகொள்ளவேண்டும். தனக்குக் கிடைத்த சலனசக்தியையும், அதனால் வரும் பயன்களையும், தற்காலம், தன் வயிற்றுக்கு உணவுதேடும் அற்ப விஷயத்தில் உபயோகிக்கும் மனிதன், முக்திஞானத்தையும், ஆத்மாநந்தத்தையும் பெறுவதற்கும், நிச்சலமான நக்ஷத்திரங்களின் மத்தியில், ஞானஸ்வரூபமான பெருஞ்சோதியாய், இவ்வுலகெல்லாம் தன்மயமாய் நின்றும், அவற்றினின்றும் வேறாகி அகண்டாநந்தத்தின் பிரவாகத்தைப் பருகவும், தனது சக்திகளை உபயோகிக்குங்காலம் வரும். அப்படிப்பட்ட ஓர் புண்ணியாத்மா, ககனமார்க்கத்தில் உலாவும் பொழுதே, ஜகதாதாரமான சூரியரச்மியினின்றும் நீருண்ட மேகத்தினின்றும் அன்னபானாதிகளைக் கிரகித்துச் செல்லுமேயன்றி, அதற்காக நெற்றிவியர்வை நிலத்தில் விழப் பாடுபடாது! உலகில் எல்லா மேன்மையும் நக்ஷத்திர பதவியையடைவதை நோக்கியே நிற்கின்றன.''

''அப்படியாயின், ராமு! ஒரு இலைகூட அசையாமல், நின்றபடி ஆகாரத்தைக் கிரகித்துக்கொள்ளும் உயர்வும், அருமையும் பொருந்திய, ஆகாயத்தில் பறக்கக் கூடியவோர் செடியாக மனிதன் ஆவானென்றும், ஆகவேண்டுமென்றே கூறுகிறாய்!'' என்றான், ராமுவின் கற்பனைச் சொற்களையொருவாறு அறிந்துகொண்ட கேதாரி.

''நீ அவ்வாறு கூறுவது சிறிதும் பிசகல்ல. நீ விஷயங்களை கவனிக்கும் முறை மாத்திரம் வேறாயிருக்கின்றது, கேதாரி! உன்னுடைய கூரிய புத்தியும், நுட்பமான இயற்கை

யறிவும், சொற்களாகிய திரையைக் கிழித்து, உள்ளாழ்ந்து கிடக்கும் விஷயத்தைக் கண்டுகொள்ளுகின்றன. அச் சாமர்த்தியம் எனக்கில்லை. செடியானது நாம் அலக்ஷ்யமாய்க் கருதக்கூடிய, அற்ப வஸ்துவல்ல. அநேக விதத்தில் நமக்கு மேம்பட்டதே! அது குற்றமற்றது! தன் வயிற்றுக்குச் சிரமப்பட்டுத் தேடி யலையாததுடன், தன் சமீபத்திலிருப் பவைகளைக் கொன்று ஜீவிக்கவில்லை. நீயும், நானும் நாள் தோறும் செய்வதுபோல், தனக்கு வேண்டியவற்றிற்காகப் பிறரை அது கொள்ளையிடுவதில்லை. சூரியன் மிருதுவாய்ப் பிரகாசிக்கும்பொழுதும், பூமி செழிக்குமாறு குளிர்ந்த மேகம் தன் நீரைப் பொழியும்பொழுதும், அது நறுமணம் கமழும் பூக்களுடன் மலர்ந்து நிற்கின்றது!"

"ஆயினும், அது சலனமற்று மந்தமாயன்றோ தோன்றுகின்றது, ராமு! அத்தகைய வாழ்வினின்றும் சகல ஜீவராசிகளும் தப்பியோட விரும்பவில்லையா? மனிதனோ, இன்னும் எவ்வளவோ பெறவேண்டுகிறான். யோசிப்பதை யும், செய்வதையும், சலிப்பதையும் அவன் நாடுகின்றான். சலனசக்தியின் பெருமையி லீடுபட்டு, தனக்கு ஆதியில் வாய்த்திருந்த சுகத்தையும் நிம்மதியையு மிழந்தவனாய், அவன் இன்னும் மேலான ஆநந்தங்களைத் தேடுகின்றவனாய் விட்டான். அதிலென்ன பிசகு?"

"அது காரணமாக அவனடைந்திருக்கும் நஷ்ட மெவ் வளவென்பது உனக்குத் தெரியுமா? அச்சலன சக்தியைப் பெறவேண்டி, ஸ்தாவரங்களைப்போல், நின்றபடியே, காற்று, பூமி, ஜலம் முதலியவற்றினின்றும் கிடைத்த குற்றமற்ற உணவினால் தன்னைப் போஷித்துக்கொள்ளும் அரிய சக்தி யையன்றோ இழந்துவிட்டான்! ஒருவித பாக்கியம் கிட்டி னால், மற்றொன்றை நாமிழக்க நேருகின்றது!"

"அப்படியாயின், அவ்வாழ்வையே ஏன் மீண்டும் கைக்கொள்ளலாகாது?"

"ஆம், அதுவே நான் கூறுவது! கேதாரி! வேறொரு உயர்ந்த விதமாக எல்லாப் பிராணிகளும் அம்மரம் செடிகளுடைய வாழ்வைப்பெறவே பேரவாக்கொண்டிருக்கின்றன. கலிமுடிவில் எல்லா ஸித்திகளும் நம்முடையதாய்விடும். மானிடவர்க்கமுழுவதும், பிறஉயிர்களை ஹிம்சித்துச் சிரமப்பட்டுத்தேடியதல்லாமல், சூரியரச்மிகள்போல், இயற்கையினின்றும் அநாயாசமாய்க் கிடைத்த உணவையுண்டு வாழ்வார்கள். அஹிம்சையே சகல சாஸ்திரங்களின் தத்துவமாகும். அதுதான் துக்கம், தேகசிரமம், கொடுந்தன்மை முதலியவைகளிலிருந்து சகல ஜீவன்களையும் விடுவிக்கக்கூடியது. சாஸ்திரவிசாரத்தால் வரும் ஞானமும், தெய்வபக்தியாலடைவதும் சமானமானவையே! கேவலம் சங்கல்பமே ஒருநாள் பெரும் சக்தியாய்விடும்! இப்பொழுதுள்ள ஆகாய விமானங்கள், கடைசியாய்ப், பறக்கும் ஜோடுகளாக முடிவடைய வேண்டுமல்லவா? அப்பொழுது இப்பறக்கும் ஜோடுகளுமின்றி, பூர்ணமான அறிவும் உயிரும் பெற்றவர்களாய், இச்சாமாத்திரத்தில் நக்ஷத்திரமண்டலங்களின் நடுவே, அவைகளின் தேஜோவெள்ளத்தால் போஷிக்கப்பெற்றவர்களாக, குழந்தைகள் கண்கட்டி விளையாடுவதுபோல், உலகமெங்கும் சஞ்சரித்துக்கொண்டிருப்போம்!"

"நீ கூறுவது, இந்நிலவுபொழியும் இரவைக் காட்டிலும், அருமையான ஓர் சிறந்த கனவுபோன்றிருக்கிறது! ராமு! நமது ஜாக்கிருதாவஸ்தையில் தோன்றும் இவ்வழகிய கனவுகளில்லாவிடில், நாம் ஸ்வேச்சையின்றி, கேவலம் சம்சாரபந்தத்திற் கட்டுண்டவர்களாவோ மல்லவா?

"ஆம், கேதாரி! இவ்வாழ்க்கையானது துக்க பரம்பரை போன்று முடிவற்றதாயிருக்கிறது. நாம் மாறிமாறிச் செய்துகொண்டிருப்பதென்னவெனில்,—வேலை செய்வதற்காக உண்கிறோம்; உண்பதற்காக மீண்டும் வேலைசெய்கிறோம். ஒவ்வொரு சமயமும் இக்காரியங்களில் மிதமிஞ்சியே நடக்கின்றோம். ஆனால், உத்தம நிலையை யடையவேண்டுமெனில், எவ்விதமான கருமத்தையும் துறந்து ஒழிவுபெறவேண்டும். ஆகவேதான், பாக்கியவந்தர்கள் வயிற்றுக்கென்று உழைக்காமல், யதேச்சையாய் சகலகலைகளிலும் பயின்றுபாடி, சுகமாய், உலகில் தலைமைபெற்று விளங்குகின்றனர். நமது நாகரீகம், இப்பொழுது, மிகவும் தாழ்ந்த நிலைமையிலிருக்கின்றது. கேவலம் சிலந்தி வலைபின்னுவதுபோல், நாமும், ஏதோ ஒன்றைப் பின்னிக்கொண்டிருக்கிறோம்! ஆனால், பொழுது விடிவதற்குள், அதுவும் இரவு வீசிய காற்றால் அழிந்துவிடுகின்றது! ஈசுவரேச்சையில், நாளை வரப்போகும் உயர் காலத்தைப்பற்றி ஒரு சந்தேகமுமில்லை. ஆனால், நமது காம குரோதங்களினால் அறிவழிந்து, அக்காலத்தை தாமதப்படுத்திவிடுகிறோம். இனி எக்காலத்தும் ஒரே லக்ஷ்யங்களை உறுதியுடன் போற்றவேண்டும். அதற்கேற்பட்ட தெய்வீகமார்க்கத்தில் ஓர் அடி எடுத்துவைத்தாலும் எனக்குப் போதும்!"

"ராமு, நீ சொல்வதும் ஓர் தத்துவம்தான்! ஆயினும், காலக்கிரமத்தை யோசிக்கும்பொழுது, இந்த யுகத்தின் அந்தத்தில் அது ஒருவேளை நன்மையைத் தருவதாயிருக்கலாம்! நீ கூறியது எனக்கு முழுமையும் விளங்கவில்லை. ஆயினும், உன் கருத்தை ஒருவாறு அறிந்துகொண்டேன். தற்காலஸ்திதியில்,பலவிதத்தில் சிக்கலாயுள்ள இந்நாகரீக வாழ்க்கைக்கு ஹானியில்லாமல், அதன் துன்பங்களையும் தீர்க்க நீ கூறும் வழிகள் எவ்வாறு பிரயோஜனப்படும்?"

"அதைவிடச் சுலபமானது வேறொன்றுமில்லை! கேதாரி! இப்பொழுது சிக்கலாயிருக்கும் நூல்களின் முடிச்சுகளை கவனித்துப், பொறுமையோடு நிதானமாய் அவிழ்த்துவிட்டு நாம் வேறுவிதமாய் ஆரம்பிக்கவேண்டும். அன்றன்று வேண்டிய உணவுக்குமேல் விரும்பிப் பாடுபட்டாதே! உனக்கு வேண்டியது கொஞ்சமே. அதை நீயே உண்டாக்கிக்கொள்! உன் உள்ளம் மகிழ, உன் கைகளினாலேயே ஆக்கப்படாதவை களை யனுபவிக்க உனக்கு உரிமையில்லை. இவ்வரிய நீதி உன் துன்பத்திலும் பாரத்திலும் பாதி யொழித்து, உன்னைக் கடவுளி னடியை யணுகச் செய்யும். பிறருக்காகவும் பாடுபட வேண்டாம். ஆத்ம லாபத்தையே குறிப்பாயுடைய இந்நீதி, லோகோபகாரமான பயன்களை யளிக்கும். அப்பொழுது நிர்துஷ்டமான ஆநந்தங்களையும், சிறந்த மனோராஜ்யங்களை யும் பெற உனக்கு அவகாசமுண்டாகும். உயர்நிலையை அடைவதற்கு, இதுவே முதற்படியாகும். அவ்வாறு மேற் செல்லுவதற்கு, நாம் கடக்க வேண்டிய ஏழு மலைகளில் இது தான் முதலினுள்ளது. அவைகளுக்கப்பால் தேவதைகளுக் குச் சமானமாய், அகங்காரம், துக்கம், பசி இவைகளற்று, சாந்தமும், அன்பும், ஞானமுமாகிய மூன்றுவித ஒளி நிறைந்தவர்களாய், மாந்தர்வாழும் பிரதேச மிருக்கின்றது!"

ராமு கூறியது கேதாரிக்கு விளங்கவில்லையாயினும், அவ்வெண்ணிலவுக்குச் சரியாய்ப் பெருகிய, ராமுவின் சொற்களி லீடுபட்டு, அவன் மனம் மயங்கிற்று. நடுவிற் றடுக்க அவன் துணியவில்லை.

"கேதாரி! நாம் அனுபவிக்கும் துன்பத்திற் பாதி நாமே விளைவித்துக்கொண்டதேயாகும்! மனோவாக்குக்காயம் இம்மூன்றிலும் சத்தியத்தையே விளக்கத் தைரியமில்லா

மையினால் இத்துன்பமுண்டாகின்றது. அதிகார பதவியில் ஒருவரும் இருக்கலாகாது. பிறரை யடக்கி யாண்டு, தன் சொல்லாலும் செயலாலும் அவர்களுடைய ஸ்வேச்சை, சுபாவம், மனது இவைகளைக் கட்டுப்படுத்துவது ஒருவருக்கும் நியாயமன்று. பிறரைக் கட்டாயப்படுத்தாமலிருப்பதைப்போன்ற சிறந்த, பரிசுத்தமான கருமம் வேறில்லை. பலாபேக்ஷையின்றி கர்மத்தைச் செய்வதுமட்டும் பக்குவ நிலைமையடைவதற்குப் போதாது! அப்படிச் செய்வதாயிருப்பினும், தனக்காவது, பிறருக்காவது அக்கருமத்தின் பலன்களொன்றும் தங்காவண்ணம், அதைச் செய்யவேண்டும். அப்பொழுது, நீரில் தாமரையும், நிலத்தில் மல்லிகையும் போல மனிதன், பரிசுத்தனாய், அழகு பொலிந்து, ஸ்வேச்சையுடன் வளர்வான். நம் போன்ற ஓர் மனிதனை நம் வசமாக்கக் கருதாமல், நம்முள்ளிருக்கும் பிரகாச வஸ்துவின் மீதே கண்ணாய், இவ்வாறு நடப்போமாயின், ஈசுவரனது பாதாரவிந்தத்தைச் சேர்வது திண்ணம்.''

"இது ஓர் புதிய உபதேசம், ராமு! சாதாரண ஜனங்களுக்கும் எனக்கும் ஒருவேளை அதைப் பின்பற்றும் வழிகள் முற்றிலும் தெளிவாய் விளங்காதிருக்கலாம். அத்தியந்தம் புதிதாயும் துறவறமார்க்கமாயுமிருப்பதுடன், ஆத்ம நிக்கிரகம் செய்வோருக்கே எளியதாயு மிருக்கின்றது. இது சாத்தியமானதா? அதிகாரமு மாக்ஷியும் பெற்றவர்கள் இத்தத்துவோபதேசத்தைக் காதுகொடுத்து கேட்பார்களா?''

கேதாரியின் கேள்விக்கு ராமு பதிற்கூறவில்லை. அசைவற்று மணலில் கால்களை நீட்டிப் படுத்துக்கொண்டு, தன் கண்ணுக்கு நேராக வானத்தினுச்சியை யடைந்த சந்திரனையே நோக்கிக்கொண்டிருந்தான். வேறு, புதிய எண்ணங்

கள் மனதி லுதிப்பதற்குக், கடலின் அடங்கிய ஓசையை அவன் உற்றுக் கேட்டுக்கொண்டிருப்பதுபோல் தோன்றிற்று. அவன் மீண்டும் பேசத் தொடங்குவானென்று மௌனமாய்க் கேதாரி எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஆனால், கடலின் இன்னிசை யொலிமட்டுமே அவன் செவிகளில் விழுந்துகொண்டிருந்தது.

---

## அத்தியாயம் 45.

### கேதாரியின் அயல் வீட்டார்.

இவ்வளவு வருஷகாலமாக அறிந்திராத அமைதியும் ஆநந்தமும் கேதாரியின் வீட்டில் விளங்க, மறுநாள் பொழுது புலர்ந்தது. ஆத்மசக்தி வாய்ந்த ராமுவின் எதிரில் கேதாரி தன் மனச்சஞ்சலம் தீர்ந்து, பெரும் நிம்மதிபெற்ருன். குழந்தை போன்ற ஜானகியின் கபடமற்ற சிரிப்பும், குதூகலமும், கோகிலத்திற்கு வாழ்வில் இதுவரையுமில்லாத வோர் அபிருசியை யளித்தன. அழகிய பிரதேசமான அடையாற்றைச் சுற்றி, அதிகாலை சிறிது தூரம் நடந்து விட்டு வர, ராமுவும் கேதாரியும் சென்றனர். வீதியில் நிறைந்துசெல்லும் ஜனங்களைப் பார்த்துக்கொண்டிருப்பதில், இயற்கையாயுள்ள ஜானகியின் பேராவல் பழையபடி கிளம்பவே, கோகிலத்துடன், மாடவீதியின் செல்வப்பெருக்கையும், பெருமையையும் நோக்கிக்கொண்டு வீட்டின் முன்குறட்டில் நிற்கலானுள். அச்சமயம் அடுத்த வீட்டினெதிரில் ஓர் மோட்டார் கம்பீரமாய் வந்து நிற்க, "கோகிலம், இம்மைலாப்பூரில், ஒவ்வொருவருக்கும் மோட்டாரிருப்பது போல் தோன்றுகிறது. எல்லாரும் நல்ல சீமான்களாயிருக்கிறீர்கள் !" என்ருள்.

"அதெல்லாம் வெறும் வெளிவேஷம், ஜானகி! இப் பளபள வென்றிருக்கும் மோட்டார்களைக் கண்டு, மோசம் போகாதே! அவைகளிலேறிச்செல்லுபவர்கள் மனதில் சமாதான மென்பதே யறியார்கள்!" என்ருள் கோகிலம்.

"பக்கத்து வீட்டிலிருப்பவர்கள் யாவர்? பெரிய மனிதர்கள் போல் தோன்றுகின்றனரே !"

"ஆம்! அவ்வீட்டு யஜமானன் இச்சாக்கடைத் தண்ணீரை யெல்லாம் ஊருக்கு வெளியே கொண்டுபோய் சேர்ப்பதற்காக, ஆயிரம் ரூபாய் சம்பளம் பெற்றுக்கொண்டு, "முனிஸிபல் கார்ப்பொரேஷனில்" இஞ்சினீயராக விருக்கிறான். ஆனால், நம்மகத்து முற்றத்தை யலம்புவதற்குக் கூட குழாயில் தண்ணீர் வருவதில்லை! சென்னையில், நூதனமான யோசனையற்ற காரியங்கள் எவ்வளவோ நடக்கின்றன. பட்டணவாசமானது, அர்த்தமின்றி கெட்டுக் கிடக்கின்றது! பார்வைக்கு அலங்காரமாயும், குதூகலமாயும் காணப்படுகின்றதேயொழிய, விஷக்கனிபோல்,—"

"இவ்விஞ்சினியர் பணக்காரர் போலும்!"

"ஜானகி ! அதிருஷ்டமாயினும், துரதிருஷ்டமாயினும், இவ்வுலகில் தனியே ஒருபோதும் வராது. அவர் பணக்காரராயிருப்பதுடன், அவரைக்காட்டிலும் அதிகச் செல்வம் பொருந்திய சகோதரி யொருத்தி யிருக்கின்றாள். காவிரியாற்றின் கரையிலுள்ள, ஓர் அழகிய கிராமம் முழுவதும் அவளுக்கே சொந்தமாம். இங்கு தன் மகனைப் பள்ளியில் சேர்க்க இப்பொழுது வந்திருக்கிறாள்," என்று கூறிய கோகிலம், ஒரு நிமிஷத்திற்கெல்லாம் நினைவுவந்தவள் போல், "எனக்கென்ன மறதி! ராமுவினுடைய கிராமமாகிய அலவந்தியினின்றும் அவள் வந்திருப்பதால் உனக்கு அவளைத் தெரிந்திருக்கவேண்டுமே!" என்றாள்.

"அவள் பெயரென்ன ? சீதையா ?"

"ஆம், சீதைதான் ! என் வரலாற்றிலேயே நான் ஆழ்ந்திராவிட்டால், நேற்றே அவளைப்பற்றி உன்னிடம் கூறியிருப்பேன் !"

"அப்படியானால் அவளைப் பார்க்கவேண்டும்! நாங்களிருவரும் முன்பு தோழிகளாயிருந்தோம்!" என்று ஜானகி

கூறி முடியுமுன், பக்கத்துவீட்டில், சீதை தன் மகனுடன் ரோட்டில் நிற்கும் மோட்டாரி லேறிக்கொள்ளுவதற்கு உள் ளேயிருந்து வெளிவர,

"என்ன! சீதை கைம்பெண் கோலத்திலல்லவோ இருக்கின்றாள்! அவள் கணவ னிறந்துவிட்டானா? எப் பொழுது?" என்று கேட்டுவிட்டு, யோசிக்காமல் உடனே களங்கமற்ற குரலில், "சீதா, இப்படிச் சற்று திரும்பிப் பார்! எங்கே,—உன் பழைய தோழியை யடையாளம் கண்டு கொள்ளுகிறாயோ, பார்ப்போம்!" என்று கூப்பிடலானாள்.

"நீயா, ஜானகீ!" என்று அடங்காக் களிப்புடன் கூறிச் சீதை உடனே அவளிருக்குமிடம் வந்தாள். வெளியே மோட்டார் சும்மா நிற்க, ஓட்டுபவனும் சும்மா உட்கார்ந் திருக்கமுடியாமல், மோட்டார் திருப்பும் சக்கரத்தினின்றும் கையை யெடுத்து வாயைமூடிக் கொட்டாவி விடலானான். ஒருமணி நேரத்திற்கு மேலாயிற்று. காலத்தில் மழை பெய்தவுடன், காட்டில் கொடிகள் ஒன்றோடொன்று பின்னிக்கொள்ளுவதுபோல், சீதை, கோகிலம், ஜானகீ மூவரும் பேச்சு மயக்கத்தில் கூடி நின்றார்கள். இதற்குள் சீதையின் மகனும், ஜானகியின் பெண் சீதையும் தோழர் களாய், காதலர்களுக்கும் குழந்தைகளுக்கும் ஏற்றபடி, கன்னத்தைக் கிள்ளி விளையாடத் தொடங்கிவிட்டனர்.

முதல் நாளிரவு சந்திரிகையில் பேசியவாறே, காலையி லுலாவச்சென்று, பிற்காலத்தைப்பற்றிப் பலவிதமாய் யோசித்து முடிவுசெய்துகொண்ட ராமுவும், கேதாரியும் இதற்குள் திரும்பி வந்து சேர்ந்தனர். அவ்வீட்டில் அன்று அறியவொண்ணு வாநந்தம் பெருகியது.

ஆகாயத்தையளாவிய ஓர் உன்னதமான மலையினின் றும், கரடு முரடான பாறைகளைத் தாண்டிக் கணக்கற்ற சிறு

அழகிய அருவிகளாய்த், தாறுமாருய்க் கீழே விழும் ஓர் பெரும் அருவிபோல், அவர்கள் சம்பாஷணை ஒன்றைப்பற்றி யதா யிராமல் பலவாருயிருந்தது. ஒருவரும் ஒரே துறையில் அதைத் திருப்ப முடியாதவர்களாக, ஒருவர் கூறுவது மற்றவருக்கு விளங்காதிருப்பினும், அனைவரும் எல்லையற்ற மகிழ்ச்சியுடன் பேசலாயினர்.

ஒரே ஒரு குரல் மட்டும் யாவரையும் விட்டு மேலெழும்பிக் கேட்டது. அது ராமுவென்று நாம் கூறவேண்டுமா? ஜானகியிடம் ஒருபுறமாய் ராமு, "எவ்வளவு தூய மனதுடையவள் சீதை! எப்பொழுதும்போல் சாந்தம், அடக்கம், பெருந்தன்மை இவைகள் வாய்ந்தவளாய், துன்பமுற்றவர்களிடம் தயை குடிகொண்டவளாயு மிருக்கிருள். அவளது கைம்பெண் கோலத்தில், முன்னிலும் பரிசுத்தமான காந்தியொன்று அவளைச் சூழ்ந்து, பேரமைதியையும், பொலிவையுமன்ரே அவளுக் களித்திருக்கின்றது! மகா உத்தமி!" என,

"ஆம்! அலவந்திக் கிராமம் முழுவதும் இப்பொழுது அவளுக்குச் சொந்தமாயிருப்பினும், என்றும் போல் வெகு சாதாரணமாயும் நல்லவளாயும் விளங்குகிருள்!" என்று ஜானகி தனதியல்பிற் கேற்றபடி, கபடமின்றிக் கூறிஞள். வேருென்றும் பேசாமல் ராமுவும் தனதெண்ணங்களிலாழ்ந்தவனு யிருந்தான்.

———

## அத்தியாயம் 46.

### மலே வளம்.

நாகலாபுரம் மலேயடிவாரத்தில், ஆரணி நதியானது சமநிலத்தில் பாயுமிடத்தில், விசாலமாய், அநேகம் ஏகர் கொண்ட தரிசு நிலம் காணப்பட்டது. மஞ்சளும், வெண்மையுமான சிறு புஷ்பங்கள் நிறைந்த, பசும் புதர்களடர்ந்து அவ்விடம் மிகவும் ரமணீயமாய்த் தோன்ற, சுற்றிலும் சூழ்ந்த மலேகள் அதிக உயர்வாயில்லாவிடினும், மலர்ச்செடிகளும், மரங்களும் ஏராளமாய் நிறைந்து விளங்கின. சிறந்த மாளிகை கட்டுவதற்குரிய விருட்சங்கள் முதல், தேகத்திற்கு ஆரோக்கியமளிக்கும் அரிய மூலிகைகள் வரையிலுமுள்ள அநேகம் மரம், செடிவகைகள் அம்மலேகளில், காடுபோல், செழித்தடர்ந்திருந்தன.

கணக்கற்ற சிறு வெண்மையான மலர்களுடன், காற்றினுலும், பனித்துளியுடன் கலந்த தேனேப் பருகும் வண்டின் பாரத்தாலும் சிறிது வளேந்து காணப்படும் தும்பைச் செடியானது ஏராளமாய் வளர்ந்திருந்தது. துளசியோ, பரிசுத்தமான மணத்துடன், புதர்போலடர்ந்திருக்க, "குமுதா" வென்னும் செடியிலிருந்து, ஆயாசத்தை யகற்றுதற்கு அருமருந்தான ரசம் நிறைந்த, மஞ்சள் வர்ணமுள்ள ஜாதிப்பழங்கள் எங்கும் கணக்கில்லாமல் இரைந்து கிடந்தன. மாந்தர்களுக்கு மட்டுமல்ல, தேவதைகளுக்கும் நல்லுணவாகும் வேர்க்கிழங்குகளேயுடைய அசுவகந்தியானது அங்கங்கே செழிப்பாய் வளர்ந்திருக்க, மனிதற்கு காடுகளாலன்புடனளிக்கப்பட்ட, மருந்து போன்ற, மணம் வீசும் மஞ்சள்

நிறமான ஆவாரம் மலர்கள், அப்பசுமையின் நடுவில் புள்ளியிட்டது போல் விளங்கின.

அங்கங்கே, மிகவும் ஓங்கி யுயர்ந்த விருட்சங்களின் கிளைகளிலும், செங்குத்தான குன்றுகளின் பக்கங்களிலும், தேனீக்கள் கூடுகள் கட்டியிருக்க, ஆரணி நதியும் கடலை மணம்புரியச் செல்லும் வழியில், தேன் அடையைத் தன் மீது தொங்கவிடும் களிகொண்ட தேனீக்களின் பொருட்டும், அம்மலைப் பிரதேசத்தின் பொருட்டும் கானம் செய்வது போல், இனிய சத்தமிட்டுச் சலசலவென் றோடிக்கொண்டிருந்தது.

பசுமையா யடர்ந்து வளர்ந்திருக்கும் புற்களோ, மிருகங்கள் வெகு இலகுவாயடையும் இப்புஷ்டியான ஆகாரத்தைக் கண்டு மனிதன்கூடப் பொருமை கொள்ளுமாறு கண்ணைக் கவர்ந்தது. ஆடுகளும், மாடுகளும் யதேச்சையாய்த் திரிந்துகொண்டிருந்தன. மனிதன் அவைகளின் பொருட்டுத் தத்துவசாஸ்திரமுறை பிசகாமல் ஓர் சிறைக் கூடத்தைக் கட்டி அதற்கு ஆரோக்கியப்பிரதானமான தொழுவமென்று இன்னும் பெயர்வைக்கத் தொடங்கவில்லையாதலால், இயற்கையிலேற்பட்ட ஆரோக்கியத்துடன் கொழுத்திருந்தன. சாக்கடை ஜலத்தை நதியிற் கொண்டு போய் வடிய வைப்பதைப்போன்ற நாகரீக வாழ்க்கையின் பாக்கிய விசேஷங்களாவது, காபி, டீ முதலியவைகளாவது அம்மலைத் தாழ்வரைகளில் இன்னும் ஏற்படவில்லை!

நாகலாபுரம் குன்றுகளின் அடிவாரத்தில், இயற்கையானது நிர்ப்பயமாய், பரிசுத்த தோற்றத்துடன் விளங்கிற்று. ஆயினும், அதனழகு ஒன்றிலும் சேராது, கம்பீரமாய், தனியே வளர்ந்து தன்னந்தனியே வாட்டமுறுவதற்கு ஏற்பட்டது போலல்லாமல், மடலில் மறைந்திருக்கும் இனிய

உணவளிக்கும் பூங்கொத்துக்களையுடைய புதிய வாழைப் பூவைப்போல், ஏதோ ஒரு நோக்கத்துடன் கூடியதாகவே விளங்கிற்று. மணமகனை வேண்டி நின்ற ஆரணி நதியும், பருவகாலத்தில் உடைந்த குரலோடு, வருந்தியதுபோல் சத்தமிட்டுச் செல்ல, தூரத்தில் கேட்கும் மலையருவிகளி னோசையானது, புதிய தின்பண்டத்தைக் கையில் வைத்துக் கொண்டு தன்மக்களை யழைக்கும் தாயினுடையது போல் செவிகளில் விழுந்தது. பலவர்ணமான சிறகுகளையுடைய பறவைகள் ஓங்கியுயர்ந்த மரங்களின்மீதுட்கார்ந்து, கிளை யிலும், புதரிலும் மறைந்திருக்கும் துணைகளைக் குரலெடுத்து இனிமையாய்ப் பாடியழைத்தன. ஒவ்வொரு நாளும் காலை யில் யாரையோ எதிர்பார்த்தவை போலும் மலர்ந்த புஷ்பங் கள், காத்துக் காத்துச் சலிப்படைந்தவை போல், மாலை யில் வாட்டமுற்று விளங்கின. தேன் கூட்டினுடைய மதுரமான வாசனை எங்கும் வீச, மலர்களின் மணம் தாங் காது காற்றும் அசைவற்றிருந்தது. கார்கால மேகங்கள் அங்கு தம் நன்னீரைப் பொழிந்ததாயினும், அவ்வளவு ஜலமும் பயன்படாது வீணாய்க் கடலில் சேருவதை யெண்ணி வாட்டமுற்று, நிற்காமல் ஓடிப்போயின. மழை யிலடிபட்ட காற்றுப்போல், இயற்கையானது, கண்ணோடு செவியும் கவனமுற்றிருக்கும் காமுகர் தன்மையை யடைந்து, அசைவற்றிருந்தது. ஈசுவர சங்கல்பத்தில் அவ் வழகிய பிரதேசம் எதற்காக அமைக்கப்பட்டதென விளங்க வில்லையாயினும், ஒருவாறு அவரது எண்ணம் பல அறிகுறி களால் புலப்படாமலு மிருக்கவில்லை.

வாழ்வில் மிகவும் முக்கியமான விஷயங்கள் ஊழ்வினை யால் விளைபவையே. "டென்னிஸ், கிரிக்கெட்," இவைகள் ஆடுவதற்கும், அப்பொழுது ஒழிந்த நேரத்தில் நம் நகங் களைக் கிள்ளி யெறிவதற்குமே நாம் நம்மிஷ்டம்போல் கால

வரை ஏற்படுத்திக்கொள்ளக்கூடுமேயன்றி, உலகில் நேரும் மகத்தான சம்பவங்கள் சாயாபதத்தில் ஜ்வலிக்கும் நக்ஷத்திரங்கள் போல், விதித்த வழியையே பின்பற்றி நிற்கின்றன. நாகலாபுரத்தின் மலையடிவாரத்திற்கு அத்தெய்வசங்கல்பமே ராமுவைக் கொண்டுபோய்ச் சேர்த்ததல்லவா? ஆயினும், தாமரை நூலினும் அதிநுட்பமான சில காரணங்களே, இப்பொழுது, தன்னுடையவையென்று, தான் பெருமை பாராட்டிக்கொள்ளும் இப்பெரிய காரியத்திற்கு ஹேதுவாய் நேர்ந்தனவென்று ராமு சிந்திக்கலானான். நீர் பாயும் பொருட்டு வாய்க்கால்கள் வெட்டுவதற்கும், அப்பிரதேசத்தில் புதிதாய்க் குடியேற்றுவதற்கும் முக்கிய உத்தியோகஸ்தனாக நியமிக்கப்பட்டு, அவன் அவ்வாரணி நதிக்கரையில் நிற்கும் பொழுது, முருகன், மீனாக்ஷி இவ்விருவருடைய நினைவும், அலவந்தியில் வெள்ளம் பெருகி நிலங்களை யழித்ததும் அவன் ஞாபகத்திற்றோன்றின.

கவர்மெண்டார் அவனது உத்தேசத்தை முற்றிலும் அங்கீகாரம் செய்ததுமன்றி, அவனுக் கிஷ்டமானவர்களை அவ்வேலையில் நியமித்துக்கொள்ளவும் அவனுக்கு அதிகாரம் அளித்தனர். மிக்க சிரத்தையுடனும், சுறுசுறுப்புடனும் ராமு தன் தொழிலை மேற்கொண்டான். ஆயினும், உலகத்தையும், மனிதனது வருங்கால நிலைமையையும் பற்றிய சிந்தையிலாழ்ந்தவனாய் விளங்கினான். பூமியில் கலப்பையை முதலில் நாட்டியது முருகனே. உழத்தொடங்குவதற்கு முன், சம்பிரதாயப்படி, தேங்காய், பழம், அரிசி முதலியவைகள், அங்கு சுற்றிலும் கைகூப்பி நின்ற எளிய ஜனங்களுக்குமட்டுமின்றி, மிருகங்களுக்கும், பறவைகளுக்கும் அளிக்கப்பட்டன. ஒவ்வொருவரும் உற்சாகத்துடனும், ஆசையுடனும் வேலையிற் புகலானார்கள்.

இனி, வகாலத்துகளை யொருநாளும் தொடுவதில்லை யென்று பிரதிஞ்ஞை செய்து கேதாரி, அரண்மனைபோன்ற மாளிகைகளிலும், அழகிய மோட்டார்களிலுமுள்ள ஆவலை யும், அழியாப் புகழை யடைவதிலுள்ள கொடிய பேராசை யையும் துறந்து இங்கு வந்துவிட்டான். வீடு, சாமான்கள் யாவற்றையும் விற்று, அப்படியே கடன்காரர்களுக்குக் கொடுக்கும்பொழுது, கோகிலமும் சந்தோஷத்துடனேயே தன் நகைகளை, ஒன்று பாக்கி யில்லாமல், கடனின்பொ ருட்டு அளித்தாள். கேதாரி இப்பொழுது முற்றிலும் மாறிவிட்டான். அவன் கண்ணை மறைத்திருந்த திரை விலகிவிட்டது. மேற்பார்வை பார்ப்பது மட்டுமன்றி, மற்ற ஆட்களுடன் சேர்ந்து செய்வதாகிய சாதாரண வேலையை யும் அவன் மிக்க பக்திசிரத்தையுடன் செய்யலானான். ராமு அவனை விட்டு அப்பாற் செல்லுவதில்லை. புதியதோர் வழியில், அவர்களது பால்ய சிநேகம் திரும்பிற்று. நெடுங் காலம் பிரிந்ததனால், முன்னிலும் உண்மையான நண்பர்க ளானார்கள்.

மிக்க வயது சென்ற போதிலும், புதிய கொழுவடித்த கலப்பைபோல், முகமலர்ச்சியுடன் முருகன் விளங்கினான். அவனே அங்கு பயிரிடுபவர்களுள் நன்றாய் வேலை தெரிந்த வன். தொப்பையோ அன்று தீவட்டி வெளிச்சத்தில் ராமுவைக் கண்டது முதல், வேறுமனித னாய்விட்டான்; அவனறியாமலே கடவுளினருள் அவனுக்கு வாய்த்து விட்டது. அணைக்கட்டில் கலகமின்றி வேலை செய்யும் ஆட்களுக்கு அவனே இப்பொழுது மேஸ்திரியானான்.

ஆயினும், கள்வர் தலைவனது முயற்சி யில்லாவிடில், இவ்வளவு காரியங்களும் இலகுவாய் நடைபெறுவது சிரம மென்றே கூறவேண்டும். தன் கூட்டத்தாருள் மிகவும்

அடங்காதவர்களும் ஏகோபித்துச் சேருவதற்குப் பெரும் பிரயத்தனங்கள் செய்தவன் அவனே. குகைக்குள் ஒளித்து வைத்திருந்த பொருளையெல்லாம், மிக்க பெருந்தன்மை யுடன் அவன் ராமுவிடம் கொண்டுவந்து வைக்க, தங்கம், வெள்ளி நாணயங்களாக மூன்று லக்ஷரூபாய் இருப்பது கண்டு, ராமு, மேன்மேலும் யோசனைகள் புரிந்து, தன் உத் தேசத்தைப் பெரிது செய்யலானன்.

நிலத்திற்கு ஜலம் பாய்ச்சும் வேலையில் சீதையின் தமை யன் இஞ்சினீயராக நியமிக்கப்பட்டான். தண்ணீரில்லாத விடத்திற் சாக்கடையோட்ட பெரிய குழாய்களை வைத்து வேலை செய்வதைக் காட்டிலும், இதுவே மிகச் சிறந்ததும், அத்தியாவசியமானதாயு மிருப்பதுடன், ஒரு இஞ்சினீயர் கவனிக்கவேண்டிய உண்மையான வேலை இதுவே யென்று அவன் சந்தோஷமாய் ஒப்புக்கொண்டான்.

இவர்கள் இப்படியிருக்க, சீதை, ஜானகி, கோகிலம் இம்மூவரும் இன்னும் அதிக ஆநந்தத்தி லீடுபட்டிருந் தனர். சீதையின் மகன், ராமுவின் பெண்ணை விட்டு அரைக்ஷணங்கூடப் பிரிவதில்லை. ஜானகியும் சீதையை வேலைநடக்குமிடத்தையும், சுற்றுப் பிரதேசங்களையும் பார்க் கத் தங்களுடன் வரும்படி யழைத்தாள். கோகிலத்திற்கோ ஆடம்பரமற்று, நிம்மதி குடிகொண்ட இப்புதிய வாழ்க்கை தெய்வீகமாய்த் தோன்றிற்று. அலவந்தியில், குழந்தை களுடன் தன்னுதரவிலிருந்த பொன்னியைச் சீதை அங்கு வரவழைக்க, முருகன் அவர்களைக்கண்டு ஆநந்தக் கண்ணீர் வடித்தான். பிரிந்த தன் மக்களைத் திரும்பிக் காணும் பொழுது, ஓர் வயது சென்ற தந்தைக்குண்டாகும் சந்தோ ஷம் இவ்வண்ண மென்பதை வேறெவர் அறிவார்! ராமு வின் நிலங்களை முருகன் குத்தகை யெடுத்த அன்று, அவ

னுக்கு மிக்க அதிருஷ்டத்துடன் பிறந்த மகள் இப்பொழுது நல்ல பருவம் வாய்ந்த பெண்ணாயிருந்தாள். அவளிடம் தொப்பைக்கு நாட்ட முண்டாயிற்று. திருச்சி ஜெயிலிலிருந்து அவர்கள் தப்புவதற்குத், தன்னை யொருபொருட்டாக நினையாமல், உதவிசெய்த அப்துல்லா வென்னும் துலுக்கப்பையனையும் தொப்பை மறக்கவில்லை. ஜெயிலிலிருந்து அவன் விடுதலையாயிருந்தும், அவனிருப்பிடத்தைக் கண்டு பிடிப்பது சிரமமாயிருந்தது. ஆனால், ராமு சும்மாயிருப்பதாயில்லை. அவ்விடத்தில் அப்துல்லா இல்லாத குறைவைப் பெருங் குறைவாகவே எண்ணலானான். அநேக மாதங்கள் தேடியலைந்தபிறகு, கொடைக்கானல் ஸ்டேஷனில் ஏழு ரூபாய் சம்பளத்தில், அவன் ஓர் "மோடார் பஸ்" துடைப்பவனாக ஓய்வொழிவில்லாது வேலை செய்து கொண்டு கிடப்பதாகத் தெரியவந்தது.

அவனும் வந்து சேரவே, அக்குறை வொழிந்து, யாவரும் மகிழ்வுற்றனர். மாலையில், பறவைகளின் இனிய குரலோசையுடன், மனிதர்களுடைய கானமும் ஒன்று சேர்ந்து எங்கும் நிரம்ப, உச்சிக்காலத்தில், ஆற்றங்கரை யோரமாயுள்ள மரங்களின் நிழல் வெகு சுகமாயிருந்தது. ஒவ்வொருவரும் உற்சாகத்தோடு விளங்கினர். ஆண், பெண் அனைவரும் அணிப்பிள்ளைகளைப்போல் சுறுசுறுப்பாய் வேலை செய்யலானார்கள். எங்கும், களிப்பும் குதூகலமுமே காணப்பட, வேலை செய்வதே அவர்களுக்கு இனிய சிரமபரிகாரமாய்த் தோன்றிற்று. ஒவ்வொருவரும் தன் வயிற்றுக்குத் தானே யுழைக்கும் சந்தோஷத்திற்காகவே, வேலை செய்யலாயினர். பிறரின்பொருட்டு அடிமைத் தொழில் செய்பவன் அவ்விடமில்லை. தேகத்தில் ஓர் புதிய உற்சாகம் பிறக்கவும், கூலிக்காக உழைப்பதனாலுண்டாகும் சரீர அலுப்பை எவரும் அங்கு அறிந்தவரல்லர். ஆரணி நதி

தன் விவாஹ நிமித்தம், இடுப்பில் ஒட்டியாணம் போல், அமைந்த அணைக்கட்டைக் களிப்புடன் ஏற்றுக்கொண்டதென, மலை மேலிருந்து நூற்றுக் கணக்கான கற்கள், வெள்ளத்துடன் அடித்துக்கொண்டுவர, அவைகள் கட்டடத்திற்கு மிகவும் ஏற்றவை யென்று, இஞ்சினீயராகிய சீதையின் சகோதரன் மிகவும் மகிழ்ச்சியடைந்தான்.

---

## அத்தியாயம் 47.

### அற்புதக் காட்சி !

ஏறக்குறைய மூன்று வருஷகாலம் மழையிலும், வெய்யிலிலும் சிரமப்பட்டு வேலை செய்த பிறகு, அணைக்கட்டு அநேகமாய்க் கட்டி முடிந்து, குடிகளும் தம் தொழிலிலமர்ந்தனர். கூடுகட்டும் பறவைகள்போல், முன்னூறு குடும்பங்கள் சந்தோஷத்துடன் சுறுசுறுப்பாய் வேலை செய்யத் தொடங்கின. எல்லாரையும்போல் ராமுவுக்கும் இவ்வாழ்க்கை இனியதாகத் தோன்றவே, அனைவருடனும் கலந்துறவாடி, எவ்வித வேலையிலும் தானும் புகுந்துழைத்தான். இவ்வாறு, தனது பெருத்த எண்ணங்கள் நடைபெறுவதற்குப் பூர்வாங்கமா யுள்ளவைகள் ஒருவாறு முற்றுப்பெற, மேற்செய்ய வேண்டிய விஷயங்களைப்பற்றி அவனுள்ளத்தில் கவலை யெழுந்தது. ஆற்று மணலைத் தாண்டி வெகு தூரத்தில் பசுமையான மலைகளையும், அப்பால் காவற்காரர்களைப்போல் நிமிர்ந்து நின்ற பனைமரங்களையும் நோக்கினான். அம்மலை யடிவாரத்திலுள்ள இயற்கை யழகு அவனதுள்ளத்தைப் பலமாய்க் கவர்ந்தது. அச்சிறு பிரதேசத்தைச் சிறப்புவாய்ந்த ஓர் குடியரசாக என்றும் விளங்கச் செய்வதற்கு ஆவல்கொண்டான். இம்மூன்று வருஷகாலத்தில் அவனதெண்ணங்களெல்லாம் மெதுவாய் உருவுகொண்டு தெளிவுபெறலாயின. கேதாரியுடன் கலந்து யோசிக்கலானான்.

ஆற்றுமணலில் உலாவிக்கொண்டே மாலைச் சூரியனால் மெதுவாய்த் தூண்டப்பெற்ற ராமு கேதாரியை நோக்கிக்

கூறத் தொடங்கினான். "கேதாரி, நாம் இவ்வுலகத்தை நீத்துச் செல்லும் முன், அதன் நிலைமையை மேன்மைப்படுத்த வேண்டுவதவசிய மென்பதும், அடுத்த தலைமுறையில் நற்புத்தி நல்லொழுக்கம் வாய்ந்தவர்களுக்கு உதவியாக நமது வேலையினடையாளங்களை நிலைபெறச் செய்வதுமே நாம் அனுபவத்தால் அறிந்துகொள்ளவேண்டிய முக்கிய விஷயமாகும். யௌவனபருவத்தில் பிடிக்கும் பணவாசையாகிய பேயினின்றும் மனிதனைப் பாதுகாத்தல் அத்தியாவசியமென்று தோன்றுகிறது. பொருள்தேடும் வழியிலேயே பழகிப்பயின்று, ஆசையா லறிவழிந்து சூதிற்கும் வாதிற்கும் இரையாகாதபடி மனிதனைக் காப்பதன்றோ அரசாங்கத்தின் கடமை!"

"ஆம், ராமு! அடங்காப் பேராசைக் கிடங்கொடுத்ததற்கு நானே ஓர் பெரும் அத்தாட்சியல்லவா? எனக்கும் என் சுற்றத்தாருக்கும் எவ்வளவு நாசத்தை அது விளைவித்துவிட்டது!"

"உண்மையே! முருகனுடைய வாழ்வைப் பார்! பிறரின்பொருட்டு உழைத்துப் பாடுபடுவதற்கென்றே பிறந்த அவன், ஏதோ காலபலத்தினாலும், தன் தேக சிரமத்தினாலும் சிறிது பொருள் தேடிக்கொண்டான். அவன் உயிருள்ளமட்டும் கவலையற்று திருப்தியாயும், கௌரவமாயும் வாழ்வதற்கு அது போதுமானதா யிருந்தது. ஆனால், அத்துடன் அவன் தான் திருப்தியடைய வில்லையோ, அல்லது அவனைச் சேர்ந்தவர்களுடைய அதிருப்திதான் காரணமோ, —தெரியவில்லை. மேன்மேலும் ஆசைகொண்டு, நிலைமையை மீறி நடக்கவே, புதுவெள்ளம் பெருகிப் பழைய வெள்ளத்தையும் அடித்துச் சென்றுவிட்டது. இப்பொழுது அவன் இம்மலைப் பிரதேசத்தில் வந்து சேர்ந்திருக்கிறான். அது எதனால், கேதாரி?"

"ஆம், அதற்கென்ன காரணமென்று நினைக்கிருய் ?" என்முன் கேதாரி, சற்று பொறுமையற்றவனுய். ஏனெனில் விவகாரம் பேசுங்கால் அலங்காரமொழிகளில் அவனுக்கு நம்பிக்கை யில்லே.

"கேதாரி! தத்துவ விசாரமும், அவைகளைப் பழகிப் பரிசோதிப்பது மில்லாவிடில், உலகம் விருத்தியாகாது. இடையூறின்றி வளர்ச்சி யில்லே! இவ்வளவு துன்பங் களின் மத்தியிலும், தன் நிலே தவருமல் மனிதன் ஒழுக் கத்தை மேற்கொள்ளவும், அம்மூலமாய் அவனது அனுபவ விசேஷத்தை நன்முய் விளங்கச்செய்யவும் வேண்டுமானல், உடைகப்பலில் உயிர்காக்க வைத்திருக்கும் தெப்பம் போல் இடருற்ற காலத்தில், அவனுக்கு உதவ சொற்பப் பொருள் அவன் கைவசமிருக்குமாறு நாம் செய்யவேண்டும்!"

கேதாரி மாறி மாறிக் கேட்கும் கேள்விகளுக்கு ராமு கைக்குறிப்பினின்றும் படித்துப் பதிலுரைப்பது போலவே தோன்றிற்று. நெடு நாட்களுக்கு முன்னமேயே இத்தகைய கேள்விகளுக்குத் தயக்கமற்ற மறுமொழிகளாகும்படி தன் னெண்ணங்களையும் வாசகங்களேயும் அவன் மனப்பாடம் பண்ணி வைத்திருந்தான்.

"பிறகு ?"

"வாழ்நாட்களை ஆடம்பரமற்ற, எளிய நிலேமையில் கழிக்காவிடில், ஜீவியம் துன்பத்திற்கே ஹேதுவாகும்! தற் காலம் அதுவே அத்தியாவசியமா யுள்ளது! புத்திப்பயிற்சி மட்டும் பிரயோஜன மில்லே. கேவலம் புத்திவன்மை கொண்டவன் தீங்கிற்கே காரணமாவான். அவ்வாறிருப் பதை உலேப்பாணேயின்றி எரியும் அடுப்பிற்கு ஒப்பிடவேண் டும். அதனல் புகையும், கரியும் சூழ்ந்து அக்கினி வீணே யாகுமன்றே ! இக்காலத்தில் புத்தியானது இஷ்டதெய்வம்

போல் தொழப்பட்டுவர, நல்லொழுக்கமும், உலகிற்கு ஹிதத்தை யளிக்கக்கூடிய மனோபாவங்களும், சாமர்த்திய மற்றவர்கள் கைவசந்தான் இருக்கத்தகுந்தவை யென அசட்டை செய்யப்பட்டிருக்கின்றன! இப்பிறரைக் கொள்ளையிடும் மனோநிலை மாறவேண்டும்! நன்னெறியும் நன்மையும் பயக்கும் மனோபாவங்களிலும், அமரிக்கையான குணங்களிலும் வேருன்றாத புத்திவன்மையானது, குபீரென்று பற்றியெரிந்து தனக்குத் தானே அழிவைத் தேடிக் கொள்ளக்கூடியது! பிறரையும் தன்னையும் ஒருங்கே நாசப் படுத்தும் தீப்போலாகும். இவையெல்லாம் மாற வேண்டும்!—''

"ராமு! தற்காலத்தின் ரீதிக்கு இது முற்றிலும் விரோதமா யில்லையா? உலகத்தின் விருத்திக்கும் விரோத மென்றே கூறலாம். மனிதன், உலகத்தைத் திருத்துவதற் காக, புத்தியாகிய உளியை கூராக்குவதிலேயே முயன்று, மற்றவை யாவையும் மறந்து கைவிட்டானெனத் தோன்று கிறது.''

"இது இருமுனைகளுள்ள கருவியென்று நீ கூறவேண்டும்! எல்லாம் அதை உபயோகிக்கும் தன்மையைப்பொருத்தது. கேதாரி, நீ தற்செயலாய்க் கூறிய உபமானத்தையே, நான் பின்னும் உபயோகப்படுத்துவேன். அதாவது, புத்திவன்மையானது கேவலம் ஓர் உளிக் கருவியே! நன்றாய்த் தெரிந்தவர்களாலேயே அது கையாளப்பட வேண்டும். அது ஓர் சாதனமாகவே யிருப்பதுடன், பிறரா லன்றி தானே வேலை செய்யும் திறமையு மற்றது; கருமத்திற்குரிய சிரத்தையோ வெளியிலிருந்தே வரவேண்டும். அது வருமிடத்தை நற்குணமென்றோ, நல்லொழுக்கமென்றோ, தெய்வபக்தியென்றோ, ஈசுவரனென்றோ, பேரின்பமென்றோ, பரம் பொருளென்றோ, எவ்வாறு கூறினும் ஒன்றே! வரம்

பில்லாததும், கேட்டிற்கெல்லாம் காரணமா யிருக்கும் இம்மூளையின் மகிமையைக் கடவுளாக வழிபடுவது ஒழிய வேண்டும்! நமது மனோபாவங்களே முற்றும் மாறினாலன்றி, தற்கால நாகரீகமானது,—''

''அவ்வாறாயின், ஜனங்களுடைய மனோபாவங்களும், கருமங்களும், வெகுகாலமாய் நம்மைப் பற்றியிருக்கும் அநேக வழக்கங்களு மன்றோ அடியோடு மாறவேண்டியதா கும்!'' என்றான் கேதாரி.

''யாருக்கு எப்படி யிருப்பினும், கேதாரி! நமக்கு அம் மாறுதலும் பெரிதல்ல,—அப் பழக்கங்களும் பழையவை யல்ல. நாம் கொண்டிருக்கும் மேனாட்டாரது மிக்க நூதன மான நடவடிக்கைகளை விட்டு, நமது புராதனமான வழக்கங் களை மேற்கொள்ளும் மாறுதலே யன்றி வேறில்லை. பிறரழி யப் பெருஞ் செல்வமெய்த முயல்வது நமக்கு சுமார் ஐம்பது வருஷத்திற்குள் ஏற்பட்ட புதிய வழக்கமே! உபயோக மற்ற கொடிகள் அதி சீக்கிரம் படர்ந்து, வெகு சிரமப்பட்டு வளர்ந்திருக்கும் ஜாதி மரத்தையும், காற்றோட்டமில்லாமற் செய்து அழித்துவிடுவது போலவே, தீமையானது பரவி, அரிய நலங்களின் வளர்ச்சியையுங் கெடுத்துவிடுகின்றது! இக் கெட்ட புற் பூண்டுகளனைய தீவினைக் கூட்டத்தை நம் மூரில் களைந்தெறிவதுடன், இப்பிரதேசத்தை தேவதைகள் போன்ற மனிதர்களுக்குரிய வாசஸ்தலமாகச் செய்யவேண் டும். பிறரைக் கொள்ளையிடுவதையும், சண்டை சச்சரவுகளை யும் அகற்றிவிடவேண்டும். தன் போன்ற ஒருவனை வஞ்சித்து, அவனுக்குரிய செல்வத்தையும் மனிதன் தானே யடைய முயற்சிக்கலாகாது! மலையடிவாரத்திலுள்ள இப்புதிய வூரில் பசி, பிணி இரண்டையும் நாமறியாதவர்களா யிருக்க வேண்டும்! ஏனெனில், நமக்கு இங்கு வேண்டியிருப்பது

மிகவும் சொற்பமா யிருப்பதுடன், அச்சொற்பமும் இயற்கையிலேயே நமக்குக் கிடைப்பதா யிருக்கின்றது. தன் பொருட்டு வேலை செய்வதன்றி, ஒருவர் பிறர்பொருட்டுப் பாடுபடுவது கூடாது. அப்படி மற்றவருக்காக உழைப்பவன் தன் சந்தோஷத்திற்காகவே உழைப்பவனுவனே யன்றி, பிறருடைய பலவந்தத்திற்காகவும், தனது பேராசைக்காகவும் சிரமப்படுபவனுகமாட்டான். எல்லாரும் மலையிலும் நதியிலும் என்றும் உற்சாகமாய் ஆடிப்பாடவும் இஷ்டம் போல் சஞ்சரிக்கவும் எல்லையற்ற ஸ்வேச்சையையே பெறுவார்கள் !—''

"ஆயினும், ராமு! உன் மனோ ராஜ்யத்தை நீ எப்படி ஏற்படுத்துவாய்? மனிதனோ இன்னும் ஓர் ஸ்திரமில்லாதவனுயிருக்கிறுன்!''

"இவ்வாறெல்லாமிருக்கவேண்டுமெனக் குறிப்பு எழுதி வைத்துக்கொள்வதற்கு கஷ்டமில்லையே! கேதாரி, நீ கூறுவதை நான் ஒத்துக்கொள்ளுகிறேன். இம்மனோராஜ்யம் நடைபெறுவதற்குரிய ஆத்ம சக்தியையும், குணங்களையும் வளரச்செய்வது, சம்பங்கிக்கொடியை வைத்துப் பயிராக்குவதைக் காட்டிலும், அரிய வேலையாகும். ஆயினும், எனக்குத் தைரியமில்லாமலில்லை! உன் போன்ற தீர நண்பர்களுடன்,—''

"இந்த மனோராஜ்ய மெத்தன்மையது?''

"ஒவ்வொரு ஆண், பெண்ணுக்கும், அவர்கள் எப்பருவத்தினராயினும், மூன்று ஏக்கர் நிலமும், ஒரு வீடு கட்டிக்கொள்ளச்சிறியதோர் தோட்டமும் அளிப்பேன். எவ்வளவு கஷ்டகாலத்திலும், இவ்விரண்டும் அவர்கள் கைவிட்டகலா. இச்சொத்தை விபாகம் பண்ணவாவது, பராதீனம் செய்யவாவது கூடாததுடன், தந்தைக்குப் பின் ஜ்யேஷ்ட

புத்திரனே அதற்குரியவனுகவேண்டும். இதனுல், ஒவ்வொருவருக்கும் ஏதோ சொற்ப பொருள்ஸ்வாதந்திரியம் சித்தமாயிருப்பதன்றி, கல்வியறிவிற்கும் மனவமைதிக்கும் அது ஆதாரமாகி, வாழ்க்கையைப் பெருமைவாய்ந்த உண்மையான மார்க்கத்தில் கழிக்கச் செய்வதுமாகும்! வயிற்றுப்பாட்டிற்கு வழி கூறமுடியாது, சூழ்ந்து கிடக்கும் பல துன்பங்களையும் அது நீக்கிவிடும். செல்வ மிகுதியினுல் சீமான்கள் காட்டும் இரக்கம், எளியவர்களுக்கு, அப்பொழுது, அவசியமில்லை! "என் வயிற்றிற்கு அன்னமிடுங்கள்! நான் உங்களுக்குக் குற்றேவல் புரிகின்றேன்," என்று மற்றவரை வேண்டாமல், கண்ணியமாய் அமர்ந்த வாழ்வில் அவர்கள் என்றும் தம் காலத்தைக் கழிப்பவர்களாவார்கள்!"

"ஆயினும், ராமு! உன் யோசனை ஒரு தலைமுறைக்கு மட்டுமே நன்மையிற் சிறந்ததாயிருக்கலாம். அடுத்த தலைமுறையில், ஜனத்தொகை யதிகமாகும்பொழுது என்ன செய்வாய்?"

"வேறொரு நதியின்மேல் அணையிட ஏற்பாடு செய்து, பயிரிடும் நிலங்களையும் அதிகமாக்குவேன்! கடவுள் சிருஷ்டித்த உலகம் சிறியதன்றே! கேதாரி, எங்கு செழிப்பும், வளமையும் இயற்கையில் காணப்படுகின்றனவோ, அங்கெல்லாம் ஜனங்களை நிபந்தனையின்றிக் குடியேறச் செய்வேன். உண்டுயிர்தாங்கும் பிராணியாய் மனிதன் இருக்குமளவும், அவனது பிற்கால நிலைமை யதேச்சையாய்க் குடியேறி வருவதைப் பொறுத்ததேயாகும். சிறு கூட்டங்களை ஒன்று சேர்ப்பதில், தன் தேசமென்றும், தம்மினத்தவரென்றும் எழும் அபிமானமானது முன்பு ஓர் சிறந்த குணமாகக் கருதப்பட்டிருக்கலாம். ஆனுல், மானிடர்களனைவரும் சகோதரர்களே யென்னும் பாவத்திற்கு அது இப்பொழுது

இடையூறுகின்றது. தன்தேசம் மட்டுமின்றி, பொதுவாக உலகத்தைப்பற்றிய திருஷ்டியே தற்காலம் மனிதனுக்கிருக்க வேண்டும்!"

"ராமு! இச்சிறந்த மனோபாவங்களை யெல்லாம் நாம் உண்மையாய் உள்ளத்திலுணர்ந்து கூறுகின்றோ மென்பதில் ஐயமில்லையாயினும், செல்வமும் அதிகாரமும் பெற்று உயர் பதவியி லிருப்பவர்களுக்கு, முற்றிலும் அசம்பாவிதமான கனவுகண்டு நாம் பிதற்றுவதாக வல்லவோ தோன்றும்! ஏனெனில், இதை யங்கீகரிப்பதனால், தங்களுக்குள்ளவை யனைத்தையும் அவர்கள் துறக்கவேண்டியதாகு மல்லவா? தற்காலரீதியை நீ எவ்வண்ணம் மாற்றுவாய்? ஆயிரம் ஏக்கர் நிலத்தை வைத்துக்கொண்டு, அதை நன்றாய்ப் பயிரிடாதது டன், பிறரையும் அதை யனுபவிக்க வொட்டாமற் செய்து, எளியவர்களைப் பரிகசித்துக்கொண்டு, சோம்பேறிகளாய்க் காலம் கழிப்பாரு மிருக்கின்றனரே!"

"அந்நிலங்களுக்கு மேன்மேலும் அதிக வரியை ஏற் படுத்தி வருவதனால், அவைகளை வைத்துக்கொண்டு பாடு படாமலிருப்பவனுக்கு அவைகளினின்றும் வரும்படி சிறிது மில்லாம லடித்துவிடுவேன்! அப்பொழுது தானாகவே அவைகள் ஒருவன் கைவசமே யிருப்பதொழிந்து, பிரிந்து பிரிந்து, நிரந்தரமான மூன்று ஏக்கர் பட்டயத்திற்கு வந்து விடும்! இம்மூன்று ஏக்கர் நிலத்தைத் தந்தைக்குப் பின் மக னும், தாய்க்குப் பின் மகளும் பெறுவார்கள். பாகம் பண்ண முடியாமலும், ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு மாற்றக் கூடாமலும் இருப்பதனால், உழுதுண்பவனாய் மனிதனிருக்கு மளவும், ஒருவரும் அதை வரம்பு மீறிச் செலவழித்துக் கை சோர விட முடியாது!"

"மூன்று ஏக்கருக்கு மேற்பட்ட நிலம் ஒருவனுக்குச் சொந்தமாயிருந்தால்?" என்று கேதாரி கேட்க,

"அதற்கு அவன் அதிகவரி செலுத்தாமலிருக்க முடியாது!" என்றான் ராமு. "அரசாட்சி என்பதிருந்தால், இவ்வாறான ஓர் ஒழுக்கமுறையை, அல்லது தர்மநியாயத்தைச் செல்வமும் பதவியும் பெற்றுள்ளவர்களுக்கு விதித்து அதனால் எளியவர்களை ரக்ஷிப்பதற் கென்றே இருக்க வேண்டும்! ஆளுகையினின்றும் ஏற்படும் நன்மை அதொன்றே! நிரந்தரமான இம்மூன்று ஏக்கருக்கு வரும்மட்டும், ஒருவருடைய சொந்த நிலமானது பாகம் பண்ணக் கூடுமானதாயும், கைமாறத்தக்கதாயு மிருக்கவேண்டும். இவ்வேற்பாட்டை நாமின்று தொடங்கினால் நாளையே இவ்வுலகம் முன்னிலும் நல்ல ஸ்திதி யடையாவிடினும், ஒரு நூற்றாண்டில் அவ்விதமாகலாம். நாளடைவிலேற்படும் உலக விருத்தியாகும் கற்பகாலத்தில், இந்நூறுவருஷம் ஓர் சிறு நாழிகை போன்றதன்றோ? நெற்றி வியர்வை நிலத்தில் விழ நூறுபெயர்கள் பாடுபட்டுழைப்பதைக்கொண்டு, தற்காலம் பத்து பெயர்கள் சௌக்கிய மனுபவிக்க, அப்பொழுது ஆயிரக்கணக்காய் மாந்தர்கள் முன்னிலும் அதிக மானிகளாயும், மானிடவர்க்கத்திற்குப் பெருமையை விளைவிப்பவர்களாயுமிருப்பதுடன், பிறருக்காக வன்றி, தம்பொருட்டுத் தாமே உழைத்ததைக்கொண்டு ஆநந்தமுறுவர்!"

"ராமு! உன் யோசனை மிகவும் உன்னதமாய், ஓர் கனவுநிலையை யொத்திருப்பினும், முற்றிலும் அசம்பாவிதமாய்த் தோன்றவில்லை. ஆயினும், ஒருவர் வசமிருந்து மற்றொருவர் வசம் மாற்றக்கூடாத நிபந்தனையுடன், மூன்று ஏக்கர் நிலம்மட்டுமே ஒருவருக் கிருப்பதானால், ஏதாவது பஞ்சகாலம் நேரும்பொழுது எதை நம்பி அவனுக்குப்பிறர் பொருளுதவி செய்வார்கள்?"

"ஆஹா! கேதாரி! நீயும் என் உள்ளத்திலிருப்பதை, இன்னும், அறிந்துகொள்ளவில்லையே! நாணயம் புரளுவ

தென்பது துன்பமேயல்லவா? நான் கூறுவதற்கு அது வன்றோ அடிப்படையாகும்! நான் ஸ்தாபிக்கவிரும்பும் குடியரசில், கடன் கொடுப்பவரும் கடன் வாங்குபவரும் இருக்கலாகாது. அன்றன்று,—அவ்வாரம்,—அவ்வருஷம் தேவையாயிருப்பதற்குமேல் சொற்பம் அதிகமாயுள்ளவன், அதிக நாட்கள் நில்லாத பொருட்களை வைத்துக்கொண்டிருப்பதைக்காட்டிலும், அயலிலுள்ள எளியவனுக்குக் கொடுத்து ஆநந்த முறுவான்!"

"ராமு! அதல்ல நான் கூறுவது. சேகரித்து வைத்த பொருளில்லையெனில், பஞ்சகாலத்தில் குடிகள் என்ன செய்வார்கள்?"

"எனது ஏற்பாடு நடைபெறுமாயின், அந்நிலையில் பஞ்சம் விளைவதே மிக்க அருமை! வேலைசெய்யும் இயல்பும், சாமர்த்தியமுமுடைய மனிதன், கிணற்றினின்றும் நீரிறைத்துத் தன் பயிர்களை அழியாது பார்த்துக்கொள்வான். ஆயினும், மிகவும் கொடியதான ஓர் பஞ்சத்தைக் கடவுள் விதிக்க, அதனின்றும் உயிர்களைக் காப்பாற்ற, நன்றாய் விளையும் மற்றொரு பிரதேசத்தார் முயற்சி யெடுத்துக்கொள்ள விரும்பவில்லை யென்றும் வைத்துக்கொண்டால், கோட்டைக்குள்ளேயே முற்றுகையிடப்பட்ட போர்வீரனுக்கு நிகராக, உணவற்று உயிர் துறப்பதே மிக்க பெருமைவாய்ந்ததாயும், சந்தோஷகரமானதாயு மிருக்கும்!" என்றிவ்வாறு கூறிக்கொண்டுவந்த ராமு, உயரப் பறந்துகொண்டிருக்கும் தன் சிறகுகளில் ஓர் ஊசி தைத்ததுபோல், திடீரென்று நிறுத்தி, ஒரு நிமிஷம் பொறுத்து, மறுபடியும், "கேதாரி! மனிதனுடைய புத்திவன்மையை நீ நன்குமதியாது பேசுகின்றாய்! இல்லாக் கொடுமையை யனுபவிப்பவன், காற்று மழையாகிய பெரும் இடையூறுகளையும் ஜயித்துத், தானே ஒரு ராஜ

யத்தை வேண்டுமாயினும் இயற்றிக்கொள்ளுவான். சம்சார மாகிய இப்பொங்கும் பெருங்கடலில் நீந்திச்செல்ல மனிதன் வெகு சமர்த்தன். அவன் களைப்புற்றிருக்குங்காலே, அமிழ்ந்து போகாமல் மிதந்து செல்லுமாறு ஓர் மரப்பலகையை அவனுக்களித்தாற் போதுமென்றே நான் கேட்டுக்கொள்ளுவது! இம்மூன்று ஏக்கர்நிலம் ஒருநாளும் முழுகிப்போகாதல்லவா ?'' என்றான்.

''நல்லது,—நிலவிஷயத்தைப்பற்றிக் கூறியாயிற்று ! கையிற் பணமுடையோரைத் தீங்கு விளையாமல் கவனித்துக் கொள்ளும் ஏற்பாடுகளேதேனுமுண்டோ ?'' என்று கேதாரி, அப்பேச்சை மாற்ற விரும்பியவனாயினும், ராமுவின் மனோராஜ்யங்களைச் சிதைக்க அஞ்சியவனாய் வினவினான்.

''அற்ப நாணயங்களை வைத்தும் காப்பாற்றுவதா ? நான் அவைகளுக்கு ஒருகாவலும் விதிக்கமாட்டேன்! அது செல்வமன்று; அதன் சின்னமேயாகும்! பணம் இன்றைக்கிருந்து நாளை யழிந்துபோகக்கூடியது. அதை ஓர் சிறந்த பொருளாக,—''

''உண்மையே! ராமு! உனது ஏற்பாட்டின் முக்கிய தாத்பரியங்களை நான் கண்டுகொண்டேன். அவைகள் சிறந்தவையே. நாளடைவில் ஜனங்களின் வறுமையை முற்றிலும் தீர்க்கும் மார்க்கத்தை அவைக ளுண்டாக்கிவிடுமென்று நினைக்கிறேன். சாவுகார்கள் வட்டிக்குமேல் வட்டிபோடுவதுபோல், மேன்மேலும் விருத்தியாகிக் கொண்டிருக்கும் இவ்வறுமையின் கொடுமையை நிவர்த்திக்க ஜனசமூகமானது இவவாறான வழிகளேதேனும் செய்யத்தான் வேண்டும்!''

இவ்வாறு அக்குடியரசின் ஜீவிதார்த்தமான ஆகாராதி விஷயங்களுடன் அவர்கள் சம்பாஷணை ஓய்ந்து விடும்போல்

தோன்றிற்று. ஆனால், தன் கேள்வியினால் அதை மீண்டும் கிளப்பத்தொடங்கிய கேதாரி, "குடிகளின் கல்வியைப் பற்றிய யோசனை யென்ன?'' என்று கேட்டான்.

"கேதாரி! எவ்வாறு இலைகளினின்று முண்டாகும் மலர்கள் குணத்தில் வேறுபட்டிருக்கின்றனவோ, அவ்வாறே புஸ்தகப்படிப்பும் கல்விப்பயிற்சியும் ஒன்றுக்கொன்று வேறுபட்டுள்ளது. கல்விப்பயிற்சி யதிநுட்பமானது. தலைமுறையாய்ப் போற்றிவரும் எண்ணங்களும், இருப்பிடத்தின் தன்மையும், காலநிலையுமே அதற்கு முக்கிய ஆதாரங்களாயுள்ளவை.''

"ஆயினும், படிப்பில்லாமலு மிருக்கமுடியாதல்லவா?''

"உண்மையே! அதை நான் முற்றிலும் ஒப்புக்கொள்ளுகிறேன். மலைத்தாழ்வரையில் வளர்ந்திருக்கும் விருட்சங்களின் பசுமையான இலைகளினாலாகிய மேற்கூரையுடன் ஓர் கூடம் அமைத்து, அதற்கு வெளியே கூடிச் சம்பாஷித்தும், விளையாடியும், மாணாக்கர்களுக்குப் போதித்துவருவேன். மலைகள், நக்ஷத்திரங்கள், அழகிய பள்ளத்தாக்குகள், விருட்சங்கள்மேலிருந்து தேன் சொட்டிக்கொண்டிருக்கும் தேன் அடைகள் முதலியவைகளை அவர்களுக்குக் காட்டுவதன்றி, ஆரணிநதியில் மிதந்துகொண்டு, அதில் தோன்றும் ஒவ்வொரு அழகிய சுழியையும் முத்தமிட்டுச் செல்லும் கானமலர்களுக்கொப்ப, அவர்களை யதேச்சையாய்த் திரியும்படியும் விடுவேன்! மாலை நேரங்களில், நானும், கல்விகற்கும் சிறுவர்களும் மலையுச்சியில் ஏறிச் சென்று வந்த உற்சாகம் மேலிட்டவர்களா யிருக்கும் பொழுது, அவர்களுக்கு நம்மைச் சுற்றிலுமுள்ள இவ்வுலகைக் காண்பித்து, சிறு சம்பாஷணைகளின் வாயிலாகவே உபன்னியாசம் செய்வதுடன், நன்றாய்ப் படிப்புவரக்கூடிய

பையன்களை ஜாக்கிரதையாய்த் தேர்ந்தெடுத்து, இப் பொழுது தொட்டிலிற் படுத்திருக்கும் மக்களுக்குப் பிற் காலம் கற்பிக்கவல்லவர்களாயும் செய்துவிடுவேன்!''

“புஸ்தகங்கள் வேண்டுமென்று நினைக்கின்றாயா ?''

“புஸ்தகங்களா? அவைகள் பெரும் வீணே! பசுமை யான காட்டுச்செடிகளை யழித்து அரைத்துக் குழம்பாக்கிக் காகிதமாகச் செய்தபின், அவைகள்சுருட்டி மடித்துக் கிழிக் கப்பட்டு புஸ்தகரூபத்தில் விளங்குகின்றன! உலகிலுள்ள உண்மைகளைக் கண்டறியக் கண்ணில்லாதவனுக்கு அவைகள் ஓர் மங்கிய வெளிச்சமேயாகும். ஆயினும், கேதாரி! மனித னால் இயற்றப்பட்ட இவ்வுலகில் புஸ்தகங்களே, மாந்தர் களுக்கு ஏற்பட்டிருக்கும் துன்பங்கள் யாவற்றினும் இலே சான துன்பமாகும். உலகில் அனைவரும் பெரியோராகி, ஒருவர் உபன்னியாசம் செய்ய மற்றவர் கேட்டுக்கொண் டிருப்பதன்பொருட்டு புஸ்தகங்களை அபேக்ஷிக்காத நாள் கிட்டுமளவும், மேலோருடைய எண்ணங்களைப்பற்றி நாம் அறிந்துகொள்ளவேண்டியது அவசியந்தான்!''

“நான் உன்னை இன்னும் சில கேள்விகள் கேட்கப் போகின்றேன். இவ்விஷயத்தில் எனக்கும் உற்சாகமுண் டாகின்றது! நாம் முடியச் சுற்றிச்சென்று எல்லாப் பக் கங்களிலிருந்தும் மலைநிலையை யறிவோம்!''

“நல்லது!—''

“குடிகள் உடுக்கத் துணிகள்வேண்டுமே! அதற் கென்ன செய்வாய்?''

“வீட்டைச் சுற்றி அங்கங்கே ஒன்றிரண்டு பருத்திச் செடிகளிருந்தால், அதனின்றும் பஞ்சையெடுத்து மெல்லிய நூலாக நூற்று, வஸ்திரம் நெய்துகொள்ளலாமல்லவா ? கேதாரி? இத்தகைய உஷ்ண பிரதேசத்தில், நாகரீகமென்று

வீண்பேச்சு பேசிக்கொண்டு நாம், பாவிலும் உண்டையிலும் பிணியடைந்திருக்கும் துணிகளை நமதுதேகம் தாங்குவதற்கு மேல் அதிகம் வாரிப்போட்டுக்கொண்டிருக்கிறோமென்றே நான் உறுதியாய் நம்புகிறேன். நமது ஆடைகளையும் முற்றிலும் குறைத்துவிடவேண்டும்!'' ராமு கூறுவதை ஒத்துக்கொண்டவன்போலும், ஒத்துக்கொள்ளாதவன்போலும் கேதாரி அரைகுறையாய் ஏதோ முணுமுணுக்க,

"உன் அபிப்பிராயத்தை நான் அறிந்துகொண்டேன், கேதாரி'' என்று ராமு வருத்தத்துடன் கூறினன். "இன்னும் நெடுங்காலம் மனிதன், இவ்வாறு, சந்தையிற்கூடி, வாங்கி விற்று வியாபாரம் செய்து தனக்கும் பிறருக்கும் அடிமையாய்க் காலங்கழிக்க வேண்டியதுதான். ஆயினும், நான் விரும்புவது அக்காலத்தைக் குறுக்கவேண்டுமென்பதே. நமது ஆசைகளையும், பராதீனத்தையும், எவ்வளவு குறைத்துக்கொள்ளக் கூடுமோ, அவ்வளவு குறைத்துக்கொள்ள வேண்டும். இவ்வுபதேசம் ஒருக்கால், முற்காலத்து அநாகரீக நிலையையே மேற்கொள்ளும்படி நமக்குப் போதிப்பதாயிருக்கலாம். ஆனல் உண்மையாய், நாகரீகத்தாற் சிறந்த மனிதன், பலவிஷயங்களில் நாகரீகம்போன்ற அநாகரீக நிலைக்கே திரும்பிச் செல்லுகிறனென்று நான் கருதுகின்றேன். தற்கால நாகரீகமானது சரீரத்தைப் பற்றியதேயொழிய, ஆத்மாவைப் பற்றியதல்ல. தம்போன்ற மாந்தர்கள்பால்; முற்காலத்தைவிட இப்பொழுது இன்னும் குரூரநிலையை யடைந்திருக்கும் நமது சித்தத்தையும் எண்ணங்களையுமன்றே நாகரீகமானது செவ்வைப்படுத்துவதற்கென்றிருக்கவேண்டும்! மற்றெருருவருடைய சரீரம், உழைப்பு, அவ்வுழைப்பின் பயன் முதலியவை யாவையும் தானே ஆக்கிரமித்துக்கொள்ளாமல், ஒவ்வொருவரும் தன் தன் அமைப்பிற் கேற்றவாறு தான் தோன்றிய விடத்தி

லேயே தடையின்றி வளர்ச்சி பெறட்டும்! வனத்திலிருக்கும் விருட்சங்கள் யாவும் ஒன்றுபோலிருக்க வேண்டுமென்று நான் கூறவில்லை. பிறர் கண்ணுக்குத் தோன்ருத நிறமும் அழகும் ஒவ்வொன்றிற்கு முண்டு. ஆயினும், எதுவும் மற்றொன்றைக்கொண்டு ஜீவிக்காமலும், மற்றொன்றை வேரோடு களைந்தெறிய முயலாமலு மிருக்கவேண்டும். இச்செல்வமும் ஸ்வேச்சையும் பொருந்திய, பரந்த உலகில் எல்லாரும் குடியிருக்க இடமிருக்கின்றது!''—தன்னுள் பொங்கியெழுந்த துக்கத்தை ராமு இனி அடக்கமுடியாதவனுனன்.

"நீ கூறுவதவ்வளவும் உண்மையே, ராமு! ஆயினும் உன்னை முழுவதும் காதுகொடுத்துக் கேட்கவாவது, முடிவில் உனது முக்கிய நோக்கத்தை யறிந்து கொள்ளவாவது உலகோருக்குப் பொறுமையிருக்குமா?'' என்று கேதாரி கேட்க,

"நீ முன்பொருதரம் இத்தகைய கேள்வியே கேட்டாய். கேதாரி! அதற்கு நான் அப்பொழுது பதிற் கூறவில்லை. இப்பொழுது சொல்லுகிறேன், கேள்! உடைந்துபோன சங்கா யிருப்பினும், அதை ஊதிவிட்டு, உதயகாலத்தைப் பொறுமையுடன் எதிர்பார்த்திருப்பதைவிட நாம் வேறென்ன செய்யமுடியும்?'' என்ருன் ராமு.

"இவ்விஷயத்தைப்பற்றி இன்னும் வேறேதாவது யோசனைகளுண்டா?''

"இனி வேறொன்று மில்லை. கேதாரி, இப்பொழுது நீ இதைப்பற்றி முழுவதும் அறிவாய். காடெல் துரையிடமும் நான் யாவற்றையும்பற்றிப் பேசியிருக்கிறேன். இம்மூன்று ஏக்கர் நிலமாகிய சிறிய பட்டயத்தை பாகம் பண்ணவாவது, பராதீனஞ் செய்யவாவது கூடாததாய்,

தந்தைக்குப் பின் மூத்த மகனும், தாய்க்குப் பின் மகளும் அடைந்தனுபவிக்குமாறு செய்வதாய் அவர் ஒப்புக்கொண் டிருக்கிறார். மனிதன் தன் இழிவான ஆதி நிலைமையை விட்டு, மெதுவாய் விருத்தியாகும் வழியில் வெகுசிரமப் பட்டுப் பொறுமையாய் வேலை செய்து பெற்றது இராஜாங் கம். எவ்வளவோ அருமையாய் வாய்த்தபோதிலும், இதிலும் ஏதோ ஓர் நன்மையில்லாமற் போகவில்லை. அதிகப் பேரா சைக்கிடம் தராமல் பொதுநன்மையை நிலைக்கச்செய்வதே அது. வேலி பயிரை யழிப்பது போல இராஜாங்கம் அநேகம் சமயங்களில் கெடுதலைச் செய்வதாயிருப்பினும், தற்காலம் எல்லா தேசங்களிலும் அது, தனக்கு வாய்ப்பதாயிருக்கும் முழு அதிகாரத்தையும் பெற்று விளங்குகின்றது. நன்மைக் காக அவதரித்தது போன்ற துரைத்தனமானது தான் வந்த காரியத்தை முடித்துக்கொண்டு உடனே சென்றுவிட வேண்டியதே! ஒரு தேசத்திற்கேயன்றி உலகமுழுவதற் கும் நன்மையையும் ஆத்மலாபத்தையும் உண்டாக்கக் கூடிய காரியங்களைச் செய்து, ஒவ்வொருவனும் பரிசுத்த நிலையை யடைய, மாந்தர்களனைவரையும் தேவதைகளுக் கொப்பாகச் செய்து பிறகு இராஜாங்கம் அனுவசிய மென்று கலைந்துவிடு வதற்கு முன்னால்,—''

"உனது மனோபாவங்கள் மிகவும் சிறந்தவையாயிருக் கின்றன, ராமு! உன்னைப்போலவே உலகோரும் அவை களைக்கண்டுகொள்ள வேண்டுமென்று நான் விரும்புகிறேன். அதிருக்கட்டும்? நீ யென்ன செய்யப் போகிறாய்? டிப்டி கலெக்டர் உத்தியோகத்திலல்லவா நீ இப்பொழு திருக் கிறாய்!''

"என்னை இச்சிறந்த வழியிற் செலுத்திய இச்சனங்களு டனும் உன்னுடனும் சேர்ந்திருப்பதன்பொருட்டு, வேலை

யை விட்டு விடுவதுமன்றி, உங்கள் அனைவரிடமிருந்து மூன்று ஏக்கர் நிலத்தை யாசித்துப் பெற்றுக்கொள்ளு வேன்! நமது வாழ்வில் ஏதோ ஒருவிதமாய்ச் சம்பந்த முற்று, அவர்களறியாமலே, நமக்கு வாய்திறந்து போதிக் காத ஆசிரியர்களா யமைந்த சிலருக்கும் இவ்வாறு மூன்று ஏக்கர் நிலம் தனித்தனியே யளிக்க விரும்புகிறேன்!''

"அவர்கள் யாவர் ?''

"காடெல் துரை, அவர் மனைவி, மிஸ்டர். கிரேக், டர்னர் துரையவர்கள்,—''

"மார்க்கண்டம் அய்யருக்கும் அவ்வாறே யளிக்கக் கேட்டுக் கொள்ளலாமா ? அவரே எனக்கு அரிய புத்தி புகட்டியவர். அவரில்லாவிடில்,—''

"நீ கேட்பது முற்றிலும் நியாயமே. ஆயினும் அவர் ஏற்றுக் கொள்ளுவாரா ?''

"கொடுத்துப் பார்ப்போம் ! முன்போல் அவ்வளவு உயர்ந்த தசை இப்பொழுது அவருக் கடிக்கவில்லையென்று கேள்விப்பட்டேன். துன்பத்திற்கு மேல் துன்பமாய்ச் சூழ்ந்து, இவ்வளவு காலத்திற்குப் பிறகு அவருக்கு நற் புத்தி புகட்டிக்கொண்டிருப்பதாய் என் செவிகளில் விழுந் தது. மறுபிறப்பிலன்றி, இப்பிறப்பில் அவர் ஒருநாளும் உணரப்போவதில்லை யென்றே நான் எண்ணியிருந்தேன்.''

"கேதாரி ! காவிரியில் புதிதாய் வெள்ளம் வரும் பொழுது, மேலாக மிதந்து வரும் நுரைக்கொப்ப, தீச் செயல்களினாலேயே செழித்தோங்குபவர்கள் இவ்வுலகில் சிலரிருக்கிறார்கள் ; என்று மிருந்துகொண்டுதானிருப்பார் கள்! அவர்களை நாம் கவனிக்க வேண்டாம்! இவ்வுலகம் உயர் நிலையையடையப் புரியும் பிரயத்தனத்தில் அவர்கள் ஒரு

பொருட்டாக மாட்டார்கள்! ஆயினும், முன்போ, பின்போ, ஒருநாள் தலையிறங்கித் தாழ்மையுடன் திரும்பி வந்து, தாம் செய்தவைகளுக்குப் பச்சாத்தாபத்துடன் தம் வயிற்றுக்கு உணவை வேண்டி நிற்போரும் அநேகம் பெயர்களுண்டு. நாம் அவர்களை நிராகரிக்கலாகாது. கடலை நோக்கியோடும் நதிபோல் நாமும் செல்வோம்! அவ்வுப்புக்கடலைச் சேருவதே அதற்கு முடிவாயிருப்பினும், அக்கடல் அவ்வாற்றின் காதலுக்கு உரியதாயுமிருக்கின்றதன்றோ !''

---

## அத்தியாயம் 48.

### மங்கள நாள்.

ஆரணி நதியில் அணை கட்டிமுடிந்ததும், அம்மலைத் தாழ்வரையில் அழகிய ஏரியாய், நீர் நிரம்பி விளங்கிற்று. இவ்வேரிக்கும் ஆற்றுக்கும் எதிரிலிருந்த மலைச்சாரலில் புதியதோர் கிராமம் தோன்ற, வயல்களுக்குப் பாயும் பொருட்டு மைல் கணக்காக நீண்ட வாய்க்கால்கள் வெட்டப் பட்டு, அவைகளின் இருகரைகளிலும் பழ விருட்சங்களும் பனைமரங்களும் வைத்துப்பயிராக்கப்பட்டன. கிராமத் தின் நான்கு பக்கங்களிலும் வாய்க்கால்கள் ஓடியதால் அது ஒரு செழிப்புள்ள சதுரமாயிருந்தது. நான்கு பக்கங் களிலிருந்தும் வாய்க்கால்கள் உள்ளே சென்று கூடி ஓர் குளமாய் அமையவும், அக்குளத்திற்குக் கிழக்கே அழகிய சிறு கோவிலொன்றும் கட்டப்பட்டுப் பிரதிஷ்டைசெய்யப் பெற்றது.

அச்சிறு பிரதேசமெங்கும் உத்தியானவனமாகவே விளங்கிற்று. அதற்காகவே வளர்க்கப்பட்டவைபோல் தோன்றிய, அடர்ந்த பெரிய விருட்சங்களின் நடுவில், ஒவ் வொரு வீடும் மறைந்து கிடந்தது. அம்முன்னூறு குடும் பத்தைச் சார்ந்த ஒவ்வொருவரும் மூன்று ஏக்கர் நிலத் துடன் ஓர் வீடும் தோட்டமும் அடைந்தனர். யாவருக் கும் கொடுத்தது போக மிஞ்சியிருந்த நிலத்தை, அதற்குத் தகுந்தவர்களை வரவழைத்துக் கொடுப்பதைப்பற்றி ராமு கேதாரியுடன் யோசிக்கலானான்.

இன்னும் ஒரு மாதத்தில் மாரிக்காலம் தொடங்கி விடும். அதற்கு முன் பெய்த சிறுமழையிலேயே, புதிதாயுண்டான

ஏரி பாதி நிரம்பிவிட்டது. காலத்தில் பயிர் செய்யத் தவக்கப்படாதபடி, அடைமழை பெய்யத்தொடங்கு முன்னமேயே, கிராமப் பிரவேசம் செய்யவேண்டுமென்று முருகன் நினைத்ததை ராமுவும் கேதாரியும் ஒத்துக்கொண்டனர். காடெல் துரையும் சென்னையில் இப்பொழுது "ஆக்டிங்" கவர்னராக இருக்கவே, அவரும், அவர் மனைவியும் அங்கு வந்து அப்புதிய குடிகளை வேலையிற் புகுத்தவேண்டுமென அழைத்தார்கள்.

ஆயிரக்கணக்காய் பத்திரிகைக ளனுப்பப்பட்டன. மிஸ்டர். கிரேக் துரைக்கும், வேலையினின்றும் நீங்கி இப்பொழுது பெங்களூரில் வசித்துவந்த டர்னர் துரையவர்களுக்கும், மார்க்கண்டம் அய்யருக்கும், பிரத்தியேகமான கடிதங்கள் சென்றன. ராமுவைப்பற்றி வெகுவாய்க் கேள்விப்பட்டிருந்ததனால், மார்க்கண்டம் அய்யர் அவனைக் காண பேரவாக் கொண்டிருந்தார்.

யாவும் வெகு சிறப்புடன், அங்குள்ளோர் நினைவை விட்டகலாவண்ணம் நடந்தேறிற்று. கரடு முரடான அந் நாகலாபுரம் மலைகள், அப்பிரதேசத்தின் நினைத்தற்கரிய நிம்மதி, அவ்வழகிய ஏரி, அப்புதிய கிராமம், முற்றிலும் மாறுதலடைந்து தோன்றிய கேதாரி, ராமுவினிடத்தும் அங்குள்ள பெண்மக்களிடத்தும் விளங்கிய ஓர் மனவமைதி, இவையாவும் மார்க்கண்டம் அய்யரின் உள்ளத்தில் ஊடுருவிப்பாய்ந்தன. பயிரிடும் வேலைதொடங்கி, வயல்கள் செழிப்படைவதற்குமுன், வக்கீல்களுள் முதன்மையாகவிருந்த மார்க்கண்டம் அய்யர் அரிய விவேகம் பெற்றவராய்விட்டார். கேதாரியின் கையைத் தன்னிரு கைகளினாலும் சேர்த்துப் பிடித்துக்கொண்டு, "என்னை மன்னிப்பாய், கேதாரி! நான் உனக்கு ஓர் கொடிய தீங்கிழைத்துவிட்டேன். பொறுமை,

கோபம், ஆத்திரம், பேராசை இவையாவும் என் கண்களை மூடி, மனிதனுக்கியற்கையாயுள்ள நல்லுணர்வுகளுமின்றி, என்னைப் பணந்தேடும் வழியிலேயே செல்லும்படி செய்து விட்டன. ஆயினும், நான் புரிந்த துரோகமும் உனக்கு ஒரு வித நன்மையையே அளித்திருக்கின்றது. கடவுளின் செயலை யார் அறிவார்?'' என்றார்.

''மன்னிப்பதற் கொன்றுமில்லை! உங்கள் மன்னிப்பை யல்லவோ நான் வேண்டிக்கொள்ளவேண்டும்?'' என்றான் கேதாரி.—''என்னுடைய தகாத செயல்களுக்கும், நன்றி யில்லாமல் உங்களை மீறிச்செல்ல நான் முயன்றதற்கும் இது தக்க தண்டனையே! என்னிடம் எவ்வளவோ பக்ஷம் காட்டிய துடன், எனது தாழ்ந்த எளிய நிலைமையினின்றும் என்னை மேலேற்றியதும் நீங்களல்லவா?''

''கேதாரி! நீ என்னை விட்டுச் சென்றது முதல் எனக்கு நற்காலமாயில்லை. என் கதை சற்றுப் பெரியதாய்த் தோன்றி னும், கவனித்துக் கேள்! நீ சென்றது முதல், என் சரீரம் மனம், அதிருஷ்டம் யாவற்றிற்கும் வாட்ட முண்டாகி விட்டது. நான் எதிர்பார்த்ததற்குமேல் விரைவாகவே எனக்கு எல்லாம் நேர்ந்துவிட்டன. நான் விரும்பி விதைத்த வினையின் பயனை இப்பொழுது அனுபவிக்கின் றேன். இவ்வயது காலத்தில் எனது பூர்ண வாஞ்சைக்குப் பாத்திரமான என் கடைசிக்குமாரி இறந்துபோய்விட்டாள். மிகவும் தேர்ச்சிபெற்ற ஒரு டாக்டரைக் கொண்டுதான் அவளுக்குச் சிகிச்சை செய்தேன். எப்பொழுதும் தேக அசௌக்கிய முள்ளவனுயினும், மருந்தின்பொருட்டு அரைக்காசேனும் செலவழித்திராத நான் அவன் கேட்ட பணத்தை யெல்லாம் சந்தோஷமாய்க் கொடுத்தேன். அமெரிக்காவிலிருந்து புதிதாய் வந்திருந்த அந்த டாக்டர்

பணம் கேட்ட விதம், வரும்படிக்குத் தகுந்த வரி வாங்கும் நியாயத்தை யொத்திருந்தது. ஆயினும், ஐயோ ! ஒரு பயனு மில்லாதுபோயிற்றே !"

"இது மிகவும் பரிதபிக்கத் தக்கதே! அச்சிறுமி தன் தாயின் சாயலாயிருந்தாள். அவள்தான் உங்கள் குழந்தை களனைவரிலும் மிகவும் சுறுசுறுப்பாயும், குதூகலமாயும், விளங்கியதாய்த் தோன்றிற்று," என்றான் கேதாரி.

"அவளை யிழந்த பிறகு, பணத்தை யிழந்தது எனக்கு அதிக வருத்தத்தை யளிக்கவில்லை. கேதாரி! உன்னிடம் யாவற்றையும் கூறி என் மனதிலிருக்கும் பாரத்தைக் கழித்து விடுகிறேன். பம்பாய் ஷேர்கள், ரப்பர், சணல், பஞ்சு இவ் வியாபாரங்களில் போட்ட பணம் யாவும் நஷ்டமாக, அதில் ஒரு லக்ஷம் முழுகிப்போய்விட்டது. பாங்கியில் ஓர் ஐம்பதினாயிரம் நஷ்டம்! இவையெல்லாம் ஒருவாறு மடிந்து போன துக்கங்களென்றே கூறவேண்டும். மற்றொரு பெரிய துக்கமென்னவெனில், எனது மூத்த பையன் கெட்ட வழியிற் சென்றுவிட்டான். ஓய்வொழிவில்லாமல் பணப் பேராசை பிடித்தாட்டும் இவ்வக்கீல் தொழிலிலிருந்ததனால், அவனுடைய கல்வியைப்பற்றிக் கவனிக்க எனக்கு நேர மில்லாமற் போய்விட்டது. அவன்நிமித்தம் தோன்றிய புண்தான், எனக்கு மேன்மேலும் 'விருத்தியாகிக் கொண் டிருக்கிறது!"

"அவன் சகவாசம் சரியாயில்லை யென்று நான் முன்பே ஒருதரம் உங்களிடம் எச்சரிகை செய்திருக்கிறே னல்லவா?"

"ஆம், எனக்கு ஞாபக மிருக்கின்றது, கேதாரி! ஆயினும், ஒரு வக்கீலுக்குத் தன் குடும்ப சந்தோஷம், அபிமானம் இவைகளைப்பற்றி யெல்லாம் கவனிக்க நேர

மெங்கே? பிறரிடம் அவன் அடைமானம் வைக்கப்பட்டவ னன்ருே! நூற்றுக்கு முப்பத்தாறு வட்டி வீதம் இரு பதினுயிரம் ரூபாய் கடனுக்கு என் மகன் மார்வாரிகளிடம் பத்திரம் எழுதிக் கொடுத்து விட்டான். பாபம்! அவன் கைக்கு வந்தது ஐயாயிரம் ரூபாய்கூட இல்லை! கோர்ட்டுக் குப் போய் நிற்கும்படியாகுமே யென்று பயந்து அந்த இருபதினுயிரத்தையும் கொடுத்துத் தொலைத்தேன். பல பெயர்களை நான் கொள்ளை யடித்ததற்குப் பதில், இப்பொ ழுது மார்வாரிகள் என்னைக் கொள்ளையடிக்கின்ருர்கள். எனக்குச் சம்சாரத்திலேயே வெறுப்புண்டாய்விட்டது. கேதாரி! கொஞ்சகாலமாவது வேலையின்றி அமைதியா யிருக்க என் மனம் ஆவலுற்றிருக்கிறது.''

"இந்த நஷ்டங்களெல்லாம் தங்களுக்கு ஒரு பொருட் டல்லவே! நீங்கள் விரும்பினுல், ஒரு வருஷத்தில் ஒன்றி ரண்டு லக்ஷம் சம்பாதித்துச் சேர்த்துவிடமாட்டீர்களா?''

"அக்கதையும் இப்பொழுது பொய்யாய்ப் போய் விட்டது. கேதாரி, இப்பொழுதாயினும் உண்மையைக் கூற வேண்டாமா? நீ சென்னையை விட்டுச் சென்றபொழுது தான், புது "சீப் ஜட்ஜ்'' வந்தாரல்லவா? தான் வந்த முதல் வாரத்திலேயே அவர் எவ்வளவோ காரியங்கள் செய்துவிட்டார். அவருக்கும் எனக்கும் அவ்வளவு ஒத்துக்கொள்ளவில்லை. கக்ஷிக்காரர்களோ, ஆட்டு மந்தை யைப் போன்றவரென்பது உனக்கு நன்ருய்த் தெரியும்.''

"ஏன், என்ன சமாசாரம்?''

"ஒன்றும் முன்போலில்லை. இப்பொழுது எல்லாம் மாறிவிட்டன. இப்புது ஆட்டத்தின் துருப்புக்கள், இனி, என்னுடையவை யல்ல. தற்கால புதிய நாகரீகங்களைக் கற்றுக்கொள்ள எனக்கு வயதுமாய்விட்டது. புது "சீப்

ஜட்ஜோ'' புதுமை புதுமையாய்த் தேடிப் பார்ப்பவர். ஹாஸ்யம், விகடம், வீண்டம்பம், மேன்மினுக்கு, ஒய்யாரம் முதலியவற்றையே அவர் விரும்புபவரா யிருக்கிறார். விஷயத்தைக் காட்டிலும், சொல்லும் தன்மையையே முக்கியமாகக் கவனிக்கிறார். நானோ பழங்காலத்து மனிதன்; வேறு விதமான கொள்கைகளில் வளர்ந்தவன்! என்றால் இனி மாற முடியுமா? இத்துடன் என் காலம் முடிந்து விட்டது என்றுதான் கூறவேண்டும். நீ இப்பொழுது வக்கீல் தொழிலிலில்லையே யென்று வருத்தமாயிருக்கிறது. உனது புத்தி சாதுர்யமும், கல்வியறிவும், பேச்சினழகும் நானிருந்த ஸ்திதியில் உன்னை இப்பொழுது கொண்டுபோய் வைத்துவிடும். உனது வெற்றியையும் நான் என்னுடையதுபோல் பாவிப்பேன்! ஆனால், அந்தோ! அச்சந்தோஷமும் இல்லை யென்றாய் விட்டது!''

''நீங்கள் இவ்வாறு அடியோடு மாறியிருப்பதைக் காண எனக்கு மிகவும் ஆச்சரியமாகவே யிருக்கிறது. மூன்று வருஷகாலத்தில் உங்களுக்கு இவ்வண்ணம் நேர்ந்து விடுமென்று நான் எதிர்பார்க்கவே யில்லை.''

''கேதாரி! விஷயங்களையும் மனிதர்களையும் உள்ளபடி அறியுந்திற முடையவனான நீயும் என்னைப்பற்றி ஆழ்ந்து ஆராய்ந்தறியாது போய்விட்டாயே! உன்னுடன் பழக்கமுண்டான நாள் முதலே நான் மாறியவன்தான். உள்ளூர வேலை செய்தபடியே அது என் ஹிருதயத்தையும் மனதையும் மாற்றிக்கொண்டிருந்தது. நான் வெளியிட்டுப் பேசுவதை பொறுத்துக்கொள்! என் முக விகாரத்தை நான் பார்த்தறிந்து கொள்ளுவதற்கு நீயே எனக்கு ஒரு கண்ணாடி போன்றிருந்தாய். உனது எண்ணங்களும், செயல்களும் என்னுடையவை போலவே விளங்க,

எப்படியாவது மேம்பதவிக்கு வந்துவிடவேண்டு மென்று நீயும் ஆவல் கொண்டாய்! உனது துணிவுகரமான காரி யங்களைக் காணும்பொழுது, என்னுடைய அற்பத்தனம் எனக்கு விளங்கிற்று. பிறரைக் கரும்புபிழிவது போல் பிழிந்தெடுத்து, ரசத்தை எவ்வாறு கவலையின்றி சுகமாய் அருந்தினேன்! கேதாரி! உன்னிடம் என் ரூபத்தைக் காணும்பொழுது, எனது கர்வமெல்லாம் ஒடுங்கி, புத்தி விளக்கமடைந்தது. ஆயினும், நான் இதுகாறும் புரிந்து வந்த வியவகாரத்தை விட்டுவிட முடியுமா! ஆகவே, முகத் தில் வாசனைப் பொடியைத் தூவிக்கொண்டு, நாடகவரங்கில் நடிப்பதை விடாது தொடர்ந்துவந்தேன். ஆனால், நீயும் நானும் எதிர்பார்த்ததைக்காட்டிலும் விரைவாகவே, நாட கத்தின் சோக பாகமானது என்னைச் சேர்ந்துவிட்டது.''

"மொத்தத்தில், இவ்வாறு நேர்ந்ததைக் குறித்து நான் அதிகமாய் வருந்தவில்லை. மறுபிறப்பில் ஓர் கஷ்டவாழ் வைக் கோரிக் காத்திருப்பதைக்காட்டிலும், இப்பொழுதே, செய்த பாபத்தின் பயனையனுபவித்துத் தீருவது மேலல் லவா?''—இவ்வண்ணம் மார்க்கண்டம் அய்யர் பேசுவதைக் காண, ஆச்சரியத்தினால் கேதாரி பேச்சற்றுப்போய் விட்டான்.

"நான் சம்பாதித்து இழந்த லக்ஷங்கள் யாவற்றையும் விட, இத்தோட்டத்திலும், வயல்களிலும் அன்றன்று உற் சாகமாய் வேலை செய்யும் எளிய வாழ்வே எனக்கிப்பொ ழுது எவ்வளவோ உயர்வாய்த் தோன்றுகிறது!'' என்றார் மார்க்கண்டம் அய்யர் மிகவும் வருத்தத்துடன். "கேதாரி, இங்கு எனக்கும் சிறிது இடமுதவும்படி ராமுவிடம்சொல். பிரசாந்தமான இம்மலையடிவாரத்தில் நான் சுகமாயிருந்து விடுகிறேன்!''

———

## அத்தியாயம் 49.

### அலவந்தி யாற்றங்கரை.

அலவந்தியில் காவேரி என்றும்போல் கம்பீரமாய்ப் பெருகிச் சென்றுகொண்டிருப்பினும், கிராமத்தின் களை போய்விட்டது. ஊரின் குதூகலம் ஓய்ந்துபோக, அதன் ஒளியும் அழகும் பறந்து போயின. இப்பொழுது அலவந்தி ஓர் பாழடைந்த கிராமமாய் விளங்கிற்று. ஜனங்கள் குடியிருக்கு மிடத்தில், முக்கியமாய்ப் பிராம்மணர்கள் வசிக்கும் அக்கிரகாரத்தில் மூன்று நூற்றாண்டுகளா யிருந்துவந்த தன்மையும் ஒற்றுமையும் இப்பொழுது காணப்படவில்லை. பெரியசாமி ஐயர் படுத்துப்போனவுடன் திடீரென யாவும் கலைந்து சிக்கலாய்விட்டது. அங்கங்கே சிலர் சிதறி வசித்து வந்தார்கள். நாதனை யிழந்த கைம்பெண்போல் ஊர் ஒளிகுன்றி யிருக்க, ஆற்றங்கரையோ இன்னும் அதிகமாய்க் களையழிந்து தோன்றிற்று. உற்சாகமாய்ப் பேசிக்கொண்டு கூட்டமாய் ஸ்நாநத்திற்குச் செல்வோரின் எண்ணிக்கை இப்பொழுது ஐந்தாறு பெயர்களி லடங்க, அவர்களுக்கும் பேச்சில் முன்பிருந்த குதூகலம் அற்றுப் போயிற்று.

"அலவந்திக்கும் இந்த கதி வருமா!" என்று பிரலாபிக்கத் தொடங்கினள், குற்றங்கூறமுடியாத சீலமுடையவள் என்று நாம் முற்கூறிய ஆசாரக்காரியான கிழவி. "ஐம்பது வருஷத்திற்கு முன்பு கலியாணமாய் நான் முதன் முதல் இங்கு வந்தபொழுது, நிதயோத்சவத்துடன் மகாராஜாவின் பட்டணம் போலன்றோ இவ்வூர் விளங்கிற்று!

அக்கிரகாரத்தில் ஐம்பது வீடுகளிருந்தன. பள்ளி படையாச்சிகள் தேன்கூட்டிலிருக்கும் தேனீக்கள்போல், ஒற்றுமையா யிருந்தனர். பெரியசாமி ஐயர் வயதில் சிறியவரா யிருந்தும், ஓர் அரசனைப்போல் ஊரில் ராஜ்யபாரம் செலுத்திக் கொண்டிருந்தார். அவருக்கு விரோதமாக ஒரு வார்த்தையேனும் கூற ஒருவருக்கும் தைரிய மிருக்காது. நடு நிசியிற் கூட அவரது வேலையாட்களும், நண்பர்களும் தெருவில் சென்றவண்ணமா யிருப்பார்கள். அப்பொழுது ஊரில் செல்வாக்கும் பெருமையும் குடிகொண்டிருந்தன. இப்பொழுதோ, அஸ்தமித்தால் நரிகள் தெருவில் ஊளையிட, எசமானிறந்து, வெளிச்சமும் உணவுமில்லாமல் கூட்டிலடைபட்டிருக்கும் வயது சென்ற பறவைகள்போல் நாம் வீட்டிற்குள்ளேயே அடைத்துக் கிடக்கின்றோம்!'' என்று இவ்வண்ணம் துக்கித்து, கிழவி ஒரு வழியாய் அடங்கினாள். இப்பிரலாபத்தைக் கேட்டு, சேர்ந்து வருத்தப்படவும் அங்கிருந்தவர்களுக்கு மனதில்லை. கேவலம் அலுப்பினால் பேசாமலிருந்து விடுவதா வென்று ஒருத்தி மட்டும் தாழ்ந்த குரலில் கூறத் தொடங்கினாள். "ஒரு பெரிய குடும்பம் நசித்துப் போனால் இக்கதிதான்! உயிருடனிருக்கும் பொழுது பெரியசாமி ஐயர் எவ்வளவு கொடியவராய்க் கண்டபடி நடப்பவரா யிருந்தும், கிராமம் அவரால் கலகலப்பாயிருந்தது. ஐயோ ! அநியாயமாய் மானமிழந்து ஜெயிலில் பிராணனை விட்டாரே! கிராமத்திற்கே அது ஓர் பெரிய அவமானமென்று சொல்லவேண்டும். அவர் தற்கொலை செய்துகொண்டுவிட்டாரென ஜனங்கள் சொல்லிக் கொள்ளுகிறார்கள். அதில் எனக்கு நம்பிக்கை யில்லை. அவமானம் பொறுக்கமுடியாமல் அவர் உயிர் தானாகவே பிரிந்துவிட்டதென்று நினைக்கிறேன். ரோஷம் அதிகமாய் உள்ளவர்கள் தற்கொலை செய்துகொள்ளவேண்டியதில்லை!''

"அவர் மனைவிமக்கள் சாப்பிடச் சாதமில்லாமலு மாய்விட்டனர்!" என்றாள் வயதிற் சிறியவளாயும், அவ் வூருக்குச் சற்றுப் புதியவளாயுமுள்ள ஒருத்தி.

"ஆம், ரொம்ப பரிதாபமாயிருக்கிறது!" என்றாள் ஏற்கெனவே பெரியசாமி ஐயரைப்பற்றி அநுதாபத்துடன் பேசியவள். "சீதை பெரியசாமி ஐயரின் நிலங்களை யெல்லாம் வாங்கியபொழுது நம்மனைவருக்கும் ஏதோ வெகு பெரிய நன்மை செய்வாளென்று நம்பியிருந்தோமே. பட்டணவாசத்திலிருக்கக் கட்டுமென்றிருக்கும்பொழுது, இந் நாளில் கிராமத்தில் யார் வசிப்பார்கள்? பிள்ளை படிக்க வேண்டுமென்று அவள் சென்னைக்குச் சென்றுவிட்டாள்!"

"இல்லை, இல்லை! ராமுவைத் தேடிக்கொண்டு என்று சொல்!" என்று கூறிக்கொண்டே, நாம் முற்கூறிய நடு வயது அம்மாள் அங்குவந்து சேர்ந்தாள். இப்பொழுது அவளுக்குக் கொஞ்சம் வயதாகிவிட்டது. ஆயினும் அவள் வம்புமட்டும் சிறிதும் குறையவில்லை. "உங்களுக்குச் சமாசாரம் தெரியாதா? சீதையின் தமையன் நேற்றிரவு இங்கு வந்திருக்கிறானே! ஏதோ நம்மெல்லாருடைய நலத்திற்காக வுந்தான் வந்திருக்கிறானும்! எங்கேயோ ஒருமலைப் பிரதேசத்தில் புதிதாய் ஒரு அலவந்தி கிராமம் உண்டுபண்ணி, ராமு அங்கு ஒரு ஏரி வெட்டப் போகிறானென்றும் சொல்லிக் கொள்ளுகிறார்கள். அதற்குச் சீதையின் தமையன்தான் இஞ்சினீயராம். ராமு இப்பொழுது ரொம்ப பெரியவனாய் விட்டானென்றும், அவர்களெல்லாரும் சேர்ந்து ஒரு பெரிய மலையடிவாரத்தில் புதிய கிராமமொன்று உண்டு பண்ணிக் கொண்டிருப்பதாகவும் சொல்லுகிறான்."

"இங்கு சீதையின் நிலத்தையெல்லாம் மேற்பார்வையிட வந்திருக்கிறானோ? இந்த ஏஜெண்டுகளின் கொடுமை

யையும், அவர்களால் நிலங்கள் சீரழிந்திருப்பதையும் அவன் தடுத்தால் நல்லது. போனாற் போகிறதென்று சீதை இரக்கப்பட்டு இனாமாக வளித்த அச்சொற்பமான நிலத்தையும் பெரியசாமி அய்யர் மனவிமக்களிடமிருந்து அவர்கள் பிடுங்கிக்கொண்டுவிட்டனர். சொந்தக்காரனில்லாத கிராமம் குடியில்லாத வீட்டைப்போல் வீணாய்த்தான் போகும். பள்ளி படையாச்சிகள் ஒருவர் பாக்கியில்லாமல் நேடாலெங்கே, சிங்கப்பூரெங்கே யென்று ஓடிவிட்டார்கள். சீதையின் நிலங்களிற்பாதி, பயிரிடுவாரில்லாமல் வீணாய்க் கிடக்கின்றது. தனது சொந்தக் கிராமமாகிய அலவந்தி இவ்வண்ணம் பாழடைந்து கிடக்கும்பொழுது, எங்கேயோ ஒரு மலைப் பிரதேசத்தில், தெரியாத ஜனங்களின் மத்தியில் புதிதாய் ஓர் கிராமம் ஸ்தாபிக்கப்படுவதை சீதை எதற்குப் பார்த்துக்கொண்டிருக்கிறாள்?'' என்று அச்சிறு கூட்டத்தில் ஸ்நானம்செய்துகரையேறிய ஒருத்தி விடாதுபேசினாள்.

"சீதையின் தமையன் வேறேதோ காரியமாய் இங்கு வந்திருக்கிறானாம்!'' என்றாள் நடுவயது அம்மாள். "கேட்க கேட்க நம்பிக்கை வரமாட்டே னென்கிறது. தன் நிலத்தையெல்லாம் சீதை ஏதோ ஒரு நூதனவழியில் தானம்செய்து விடப்போகிறாளாம்! தனக்கும் தன் பிள்ளைக்கும், பெயருக்கு மூன்று ஏக்கர் நிலமும், ஓர்வீடும் வைத்துக்கொண்டு பாக்கியைக் கொடுத்துவிடப்போகிறாளென்று காதில் விழுந்தது. அவ்விஷயமாய் நிலத்தைப் பார்த்துப் பிரிப்பதற்காகத் தான் அவள் தமையன் வந்திருக்கிறானென்கிறார்கள். பிராம்மணர்கள், பள்ளி படையாச்சிகளென்ற வித்தியாசமில்லாமல், ஒவ்வொரு ஆண், பெண், சிறுவன், சிறுமி, அனைவருக்கும் தனித்தனியே மூன்று ஏக்கர் நிலம் இனாமாக, என்றைக்கு மிருக்கும்படி கொடுக்கப் போகிறாளாம். இத்துன்பங்களின் மத்தியிலும் கிராமத்தைவிட்டுப் போகாதிருந்த

வர்களுக்கு முதலில் கொடுத்துவிட்டுப் பிறகு மிஞ்சியிருக்கும் நிலத்தை ஊரைவிட்டுச் சென்றவர்களைக் கூப்பிட்டுக் கொடுக்கப்போவதாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள்.''

"கொடுத்த நிலத்தைப் பற்றி ஏதாவது நிபந்தனைகளுண்டோ?'' என்று வினவினாள், அப்பொழுதுதான் அங்கு வந்த ஒருத்தி. இவள் சீதையின் ஏஜெண்டுகளிலொருவனுடைய மனைவி.

"அதை விற்கவாவது அடைமானம் வைக்கவாவது முடியாதாம். கிராமத்திலேயே யிருந்து நிலத்தைப் பார்த்துக்கொண்டிருக்கவேண்டும். இல்லாவிடில், நிலமில்லாமலிருக்கப்பட்ட மற்றொருவரிடம் அது சேர்ந்துவிடுமாம்.''

"என்னவோ, ஒரு அழகான கனவுபோலிருந்தாலும், பைத்தியக்காரத்தனமாகத்தான் எனக்குப் படுகின்றது. ஏதோ மனதில் தோன்றிற்றென்று, பெயருக்காகத் தன் நிலங்களையெல்லாம் யார் கொடுத்துவிடச் சம்மதிப்பார்கள்?'' என்றாள் ஒருத்தி. அவளுக்கு இச்சமாசாரத்தை நம்பமுடியாவிட்டாலும், இது உண்மையாக விருக்கலாகாதா வென்றும் ஒருபுறம் ஆவலாயிருந்தது.

"இது ராமுவினுடைய யோசனை யென்று கேள்வி. அவனுக்குத் தோன்றுவதெல்லாம் சீதைக்கும் தோன்ற வேண்டாமா? இருவரும் ஒன்றாகவே யிருக்கிறார்கள்,'' என்றாள் நடுவயதினளாகிய காமு. அலவந்தியில் இவ்வளவு பிரதானமாயிருந்த ஒருத்தியின் பெயரை நாம் இனியும் கூறாமலிருக்கமுடியுமா?

"அப்படியானால், அலவந்தி பழையபடியாய்விடுமென்று சொல்.''

"ஆம். காவேரி ஸ்நாநமும் எப்பொழுதும்போல் இனிக் குதூகலமாய் நடக்கும். ஆற்றங்கரைக்குப் பக்கத்

தில் புதையலகப்பட்டதுபோல், நான் இவ்வண்ணமே நேற்றிரவு கனவு கண்டேன். அது பொய்யாகுமா? காவேரியம்மன் பெரிய தெய்வமன்றோ? ஆயினும் நமக்கு வயதாய் விட்டது. நம்மை யறியாமலே காலம் செல்லுகிறது. நாம் எவ்வளவு குதூகலமாய் வம்பளந்துகொண்டு, நதியில் விளையாடி ஸநாநம் செய்தாலும், சீதையினல் ஊரில் வருவாரும் போவாரும் ஏற்பட்டு எவ்வளவு கொண்டாட்டமாய் விளங்கினும், இனிப் பால்யமென்பது அவளுக்குமில்லை, எனக்குமில்லை. ஆஹா! பெரியசாமி ஐயர் நன்றுயிருந்த பொழுதிருந்த சந்தோஷகரமான நாட்கள் போயே போய்விட்டனவே!'' என்று காமு, இன்னும் இளமையின் கட்டமைந்த தன் தேகத்தை ஒருவரு மறியாமல் ஒருதரம் குனிந்து நோக்கிவிட்டுப் பிரலாபிக்கலாஞள்.

---

# அத்தியாயம் 50.

## முருகன்—கடவுள் நியமித்த குடி.

வசந்த காலத்தில் மழை பெய்தவுடன் தோன்றும் பசும்புற்றரைபோல், நாகலாபுரம் மலையடிவாரமும் புதிய தோர் களிப்புடன் விளங்கிற்று. பள்ளி படையாச்சிகளையும் திக்கற்ற அநேகமாயிரம் ஜனங்களையும் உத்தாரணம் செய்யும் வழி தேடிய, அரிய கல்வியறிவு பெற்றவர்களின் நடுவில் மங்கி மறைப்புண்டானாயினும் முருகனே, குழந்தைப் பருவம் முதல் ராமுவை இந்நல்வழியிற் புகுத்தியவனென்று கூறவேண்டும். நம்பிக்கையும் விசுவாசமும் பொருந்திய முருகனுடைய குழிவிழுந்த கண்களைப் பார்த்தே, ராமு பசியால் வருந்திய லக்ஷக்கணக்கான ஜனங்களின் எளிய நிலைமையை யுணர்ந்துகொண்டான்.

கட்டிலடங்காக் குணமுடைய தொப்பையோ, நீர் நிரம்பிய ஏரியினின்றும் என்றும் வற்றாத வாய்க்கால் பாய்ச்சலுள்ள மூன்று ஏக்கர் நிலம் தனக்குச் சொந்தமாய்விடுமென்ற எண்ணத்தினாலும், அப்புதிய சகவாசத்தினாலும் பெரும்பான்மையும் அடங்கிய வியல்புள்ளவனாய்விட்டான். அவனது துணிவுகரமானது வேறோர் வழியில் பாய்ந்தது. தன்னிடமிருந்தே இப்பரோபகாரச் செயல் தோன்றியதென அவன் எங்கும் சொல்லிக்கொண்டு திரிய, ராமுவும் அதை ஒருவாறு அங்கீகரிக்கலானான். ஏனெனில், தனது மனோபாவங்கள் ஒருபுறமிருக்க, இப்பெரும் காரியத்தில் மீனாக்ஷி, தொப்பை முதலியவர்

களுக்கும் சம்பந்தமில்லாமற் போகவில்லையென்று அவனுள்ளத்தில் ஏற்கெனவே தோன்றிக்கொண்டிருந்தது. தைரியமும், காரியாவேசமும் தம்வழியில் ஜீவர்களுக்கு ஊக்கமளித்து, பலசிக்கலுடைய இவ்வுலகின்கண் நன்மைக்கு ஹேதுவான காரண பரம்பரையில் பலவற்றை யமைக்கின்றன.

மேற்கே, சூரியன் அஸ்தமிக்கும் தேஜோமயமான காட்சி ஆரணிநதியில் பிரதிபலித்துக்கொண்டிருந்தது. மணலில் உருண்டுகிடக்கும் சிறு கற்களோ, பொன்மணிகளென ஜ்வலித்துக்கொண்டிருந்தன. கிழக்குத் திசையின் மறைவிலிருந்து பூர்ண சந்திரன் நாணத்துடன் எட்டிப் பார்த்துக்கொண்டிருப்பதுபோல் விளங்க, மாலையும், மதியினொளியும் ஒன்றோடொன்று கூடிக் கலந்தன. தயங்கித் தயங்கி மெதுவாய் இருள் சிறிது பரவவும், தேவர்கள் விழாவிற்காக ஆகாயத்தில் தொங்கவிட்ட விளக்கெனவே சிவந்தவொளியுடன் சந்திரனும் விரைவில் வானி லெழும்பினன்.

கீழே நிலவினும் வெண்மையான ஆற்றுமணற் பரப்பு, ஆங்காங்கு துள்ளிவிளையாடும் மீன்களுள்ள சிறு ஊற்றுக் குழிகளுடன் பிரகாசித்தது. எல்லா ஜாதிகளிலும் சிறுவர், சிறுமியர்கள் ஆங்கு எண்ணிறந்தவர்களாயிருந்தனர். அவர்கள், மணலில் அடிச்சுவடுகள் கூட்டங்கூட்டமாய்ப் பதியுமாறு யதேச்சையாய்த் திரிந்துகொண்டிருந்தார்கள். சிலர் கண்கட்டி விளையாடுவதும், ஈரமணலில் கிளிக்கூடு கட்டுவதுமாயிருக்க, இன்னும் சற்றுச்சாமர்த்தியம் வாய்ந்த சிறுவர்கள் ஆற்றில் ஓடிக்கொண்டிருக்கும் சிறு நீர்க்கால்களில், மணல் குச்சி முதலியவைகளைக்கொண்டு அணையிட்டு அந்நீரைத் திருப்பி, ஜலம் அணுகாதவிடத்தில் மற்றவர்கள்

கட்டியிருக்கும் கிளிக்கூடுகள் முழுகும்படிச் செய்தனர். சிறுவர்களுக்குத் தோன்றும் விளையாட்டுக்களும், அவர்கள் செய்யும் வேலைகளும் அதிகமல்லவா? அவர்களது குற்ற மற்ற பரிசுத்தமான கைகளுக்கு, பூமி, காற்று, ஜலம் முதலிய வைகளும் வசியமாகின்றன.

ஆரணி நதியின்மேல் புதிதாயிடப்பட்ட அகன்ற அணைக்கட்டின் பிரதேசத்தில் ராமுவும் கேதாரியும் உட்கார்ந்துகொண்டு, பூமியில் சிறந்ததாயுள்ள இடங்களில் வேடிக்கையாய் இறங்கிவந்து சஞ்சரிக்கும் தேவதைகளி னிருப்பிடம்போன்று விளங்கும் அப்புதிய கிராமத்தையும், ஏரி, மலை இவைகளையும் கண்டானந்தித்துக்கொண்டிருந் தனர்.

"ராமு! நீ உன் மனோசங்கல்பத்திற்கு உருவளித்து முடிவுபெறச் செய்தாய். இது சாமான்யமல்ல; உன் ஞாபகார்த்தமாக என்றும் விளங்கக்கூடியதாம். இக்கிராமத் திற்கு நீ என்ன பெயரிடப்போகிறாய்? உன் பெயரைக் கொண்டே அழைக்கவேண்டுமென்பது எனது ஆசை," என்று கேதாரி சொல்ல,

"இல்லை. கேதாரி! அது ஒருக்காலுங்கூடாது," என்றான் ராமு. "முருகன் கையிலிருக்கும் மண்வெட்டியைப் போல், நான் ஓர் கருவியே யொழிய வேறல்ல. ஆயினும் இதில் சம்பந்தமுற்றவர் ஒருவருடைய பெயரையே இதற் கிடவேண்டுமென்று நீ விரும்பினால், எல்லாவிஷயங்களை யும், அவற்றின் மூலகாரணங்களாயுள்ளவர்களையும் பற்றி யோசிக்கும்பொழுது, மீனாக்ஷியின் பெயரைக்கொண்டு அழைப்பதுதான் சரியென்று தோன்றுகிறது. தனது

ஊக்கமும், முயற்சியும் இவ்வாறு நூதனமான வழியில் பலித்திருப்பதைக் காண அவள் இப்பொழுது உயிருடனில்லாமற் போயினும், நாம் அவள் பெயரைக்கொண்டு இக்கிராமத்தை மீனாக்ஷிபுரமென்றே அழைப்போம்.''

"அது நல்ல யோசனையே. ஆயினும்,—'' என்று கேதாரி மேலே கூறுவதற்குள், ஆளொருவன் அவனிடம் கடிதமொன்றை யளிக்க, அவன் அதைப் பிரித்துப் பார்த்துவிட்டு மகிழ்ச்சியுடன் ராமுவிடம் கொடுத்தான்.

"கவர்மெண்ட் ஹவுஸ்
சென்னை
அக்டோபர், 20.

"பிரியமுள்ள ராமு,

"உன் செல்வப் பெயரைக்கொண்டு அழைக்கும் ஸ்வாதந்திரியத்தை நான் இப்பொழுது கைக்கொள்ளுகிறேன். நானும், எனது அங்கத்தினர்களும் நீ இயற்றிய பெரும் நற்காரியங்களைப்பற்றிக் கலந்து யோசித்ததில், வழக்கத்தை மீற முடியாமல் இப்பொழுது சில மாதங்களுக்கு உன்னைத் திருநெல்வேலி ஜில்லாவிற்குக் கலெக்டராக நியமித்திருக்கிறோம். இனி, எனது அங்கத்தினர்களி லொருவர் நீங்கும் பொழுது, உனக்கே அவ்வுத்தியோகம் அளிக்கப்படும். கவர்மெண்டிற்கும், உனது தேசத்திற்கும் நீ செய்த அரிய நன்மைகள், கலெக்டர் வேலைக்கு உன்னை மிகவும் தகுதியுள்ளவனாகச் செய்கின்றன. தற்காலம் நீ செய்யும் வேலையிலிருந்தும் நீங்கி, கபடமற்றவர்களாயினும் மனவலிமையுடைய நண்பர்களை விட்டுப் பிரிந்து வருவது உனக்கு மிகவும் வருத்தத்தை யளிப்பதாயிருப்பினும், இன்னும்

மேலான விஷயங்களில், தேசத்திற்கு உன் உதவி வேண்டிய தாயிருக்கிறது.

"என் மனைவியும் இக்கடிதத்தின் மூலமாய்த் தன் சந்தோஷத்தைத் தெரிவிக்கின்றாள்.

இப்படிக்கு
உன்னிடத்தில் அபிமானமும்
கௌரவமும் பாராட்டும்,
ஹென்ரி காடெல்."

"கவர்னர் துரையே நேரி லெழுதியிருப்பதுடன், எத் தகைய உத்தியோக மளித்து அழைத்திருக்கின்றார்!" என் றான் கேதாரி, கடிதத்தைப் படித்தவுடனிருந்த பரப்பரப்பில். ராமு ஒன்றும் பதிற் சொல்லவில்லை.

"நீ ஒத்துக்கொள்ளுவாயோ?" என்று கேதாரி கவலை குடிகொண்ட பார்வையுடன் வினவ,

"ஒருநாளுமில்லை. அதிற் சந்தேகமா? கேதாரி! நீ கவலைப்படாதே. இப்பொழுது ராஜப்பிரதிநிதி உத்தி யோக மளித்தாலும் நான் அங்கீகரிப்பதாயில்லை," என்றான் ராமு சற்று சிரித்துக்கொண்டே. "உங்களனைவருடனும் இவ்விடத்திலேயே என்றுமிருந்துவிடுவதாயல்லவோ நான் தீர்மானித்திருக்கிறேன்! நான் உன்னிடம் பலமுறைகள் கூறியிருக்கவில்லையா? அதோ, சீதை, கோகிலம், ஜானகி மூவரும் நம்மை நோக்கி வருகிறார்கள். அவர்களிடம் இச் சங்கதியைக் கூறாதே. இவ்வாறான விஷயங்களில்,—பெரிய அதிருஷ்டம் வரும்பொழுது, அவர்கள் மனது எப்படி யிருக்குமென்பது நமக்குத் தெரியாது. பதவியையும், டம் பத்தையும் அவர்கள் கண்டால் விடமாட்டார்கள்."

இதற்குள், சீதை, ஜானகி, கோகிலம் மூவரும் அவ்விடம் வந்து சேர்ந்தனர்.

"அங்கே பாருங்கள், குழந்தைகள் மணலில் குதூகலமாயிருப்பதை," என்று கோகிலம் ராமுவை நோக்கி இனிய குரலில் சகஜமாய்க் கூறத் தொடங்கினாள். "என்ன சுறு சுறுப்புடனும் உற்சாகத்துடனும் அவர்கள் காணப்படுகிறார்கள்! என்ன திவ்விய க்ஷேத்திரம் உங்களால் ஏற்பட்டிருக்கின்றது! உங்கள் பெண்ணைப் பாருங்கள்! சீதையின் பிள்ளையும் அவளும் இதற்குள் நெருங்கிய தோழர்களாய் விட்டனர்."

மாசு மறுவற்ற சிவந்த மேனியுடன், குளிர்ந்த சந்திர கலைபோல் பிரகாசிக்கும் தன் மகளும், நன்றாய் வளர்ந்து கம்பீரக் களையுடன் விளங்கும் சீதையின் மகனும் ஒருவரோடொருவர் ஆவலாய்ச் சம்பாஷித்துக்கொண்டிருப்பதைச் சிறிதுநேரம் உற்றுப்பார்த்துவிட்டு ராமு அவ்வாறே அன்பு கனிந்த பார்வையுடன் திரும்பி சீதையை நோக்க, அவளது கண்களிலும் அத்தகைய பார்வையே விளங்கக் கண்டான். இருவரும் உணர்த்தற் கரியதோர் சிறந்த ஆறுதலைப் பெற்றனர். தம்மிருவருடைய ஆவிகளும் தம் சரீரத்தைவிட்டுப் பிரிந்து வேறு வடிவங்கொண்டு, அந்நிலவு பொழியும் இரவில் ஒன்றுகூடி விளையாடிக்கொண்டிருக்கும் காட்சியைக் கண்குளிரக் கண்டு அவர்கள் திருப்தியடைந்தனர். அதிகாலையில் ஒன்றையொன்று சேரும் இரு பனித்துளிகளென, அவ்விருவருடைய ஆசையும் ஒன்றுபட்டன. தங்கள் மனோரதம் பலித்ததென்ற உணர்ச்சியும், நித்தியத்துவநிலையும் சாந்தியும் அவர்கள் தேகமுழுவதும் வியாபித்தன. குழந்தை போன்ற ஜானகியும் தெரிந்தும் தெரியாததுமாய்,

ஆநந்தத்தால் மெய் மறந்திருக்கும் சீதையையும் ராமு வையும் நோக்கி, "நமது செல்வியை சீதையின் குமார னுக்குக் கொடுத்துவிடுவதென்று நெடுநாட்களுக்கு முன்பே நாங்களிருவரும் தீர்மானித்து விட்டோம்," என்றாள். சீதை "ஆம்" என்று தலையசைக்க, கோகிலமும், தன் சம்மதத் தைச் சந்தோஷத்துடன் வெளியிட்டாள்.

அச்சமயத்தில் முருகனும் தொப்பையும் அவ்விடத்தை யணுக, "சுபமான கலியாண விஷயங்களைப் பற்றி நாங் கள் பேசிக்கொண்டிருக்கிறோம். முருகா ! ஏதாவது சமா சாரமுண்டோ ?" என்றான் கேதாரி. தொப்பை வாய் பேசாது ராமுவின் காலடியில் சாஷ்டாங்கமாய் விழுந்து "சாமி, உத்தரவு கொடுக்கவேணும் !—" என்றான். அவ னால் மேலே கூறமுடியவில்லை.

"சாமி! தொப்பை என் மருமகனாவுறதுக்கு நீங்க ஆசீர்வாதம் பண்ண வேணுமின்னு வந்திருக்கான்," என்றான் முருகன்.

"தொப்பை, எழுந்திரு ! நீயே முருகன் மகளை மணம் புரியத் தக்கவன். கடவுள் உன்னை ஆசீர்வதிப்பார் ! நமது ஏற்பாடுகளுக்கு மூலாதாரமாயுள்ளவன் உன்னைத் தவிர வேறொருவருமில்லை. எழுந்திரு, தொப்பை!" என்று கூறி ராமு அவனை மனதார ஆசீர்வதிக்க, அச்சமயம் சந்திரிகை முன்னிலும் ஒளியுடன் வீசிற்று.

ராமுவும் கேதாரியும் இரட்டைப்பிள்ளைகள் போலிருந் தார்கள். முருகனும், கள்வர் தலைவனும் பழைய விஷயங்களை யும், நெடுநாட்களுக்கு முன் இயற்றிய அபூர்வச் செயல்

களையும் பற்றிப் பேசிக்கொண்டிருக்க, அப்துல்லா, தொப்பை, கள்வர் தலைவனது மகன் இம்மூவரும் எப்பொழுதும் ஒன்றுசேர்ந்திருந்தனர்.

சீதை, கோகிலம், ஜானகி இம்மூவருமோ, வடத்தின் மூன்று நூற்பிரிகள் போன்று இணைந்திருக்க, சிறுவர்களனைவரும் சாதிபேதமின்றி, கபடமற்றுக் களிப்புடன் மலைத்தாழ்வரைகளிலும், ஆற்றுமணலிலும் ஓடியாடி ஒன்றாய் விழுந்தெழுந்தும் விளையாடினர். புதர்களுக்கிடையில் மறைந்திருக்கும் பறவைகளுடைய சத்தம்போல், எப்பக்கத்திலும் அவர்களது பேச்சுக் குரல் கேட்டுக்கொண்டிருந்தது. ராமு சந்திரனை நோக்கிய வண்ணம் உட்கார்ந்திருக்கும் அச்சமயம், அவனைச் சுற்றிலும் இவ்வாறு ஆநந்தமாய் விளங்க, சிறிது நேரத்திற்குள், ஆகாயத்தில் ஓட்டகம் போல் ஓடிய, ஓர் சிறு மேகத்தினால் சந்திரிகை சற்று ஒளி குன்றியது. இன்னும் சிறிது பொழுதிற்கெல்லாம், ஈசானிய திக்கு முன்னிலும் கறுத்துத் தோன்றவும், பலமான மழை பெய்யுமென்று தெளிவாய்விட்டது. ஒரு மணி நேரமாவதற்குள் காற்று எழும்பி, மின்னலும் இடியும், வெகு காலமாய் எதிர்பார்த்திருந்த மழையின் வரவைத் தெரிவிக்கலாயின. ஆகாயம் முழுவதும் கரிய மேகங்கள் சூழ, முதன் முதல் முத்துக்கள் போன்ற பூமியின்மீது விழுந்த நீர்த்திவலைகள் சிறுதூறலாகிப் பிறகு, நல்ல மழையாயிற்று. பிறகு பெருங்காற்று மழையாகி, ஒரு வாரம் விடாமற் கொட்டிற்று. இரண்டு வாரத்திற்குப் பிறகு பெய்யவேண்டியதெல்லாம் பெய்து ஓய்ந்தவுடன் சூரியன் பிரகாசமாய்க் கிளம்பவே, பிரகிருதியும், மனிதனும் இப்பொழுதுதான் முதல் தடவை புதிதாயுண்டானது போலாயினர்.

இரண்டொரு நாட்களில் உழுவதற்குத் தக்கப்படி பூமி சிறிது உலர்ந்ததும், தான் கொடுப்பதாய்ச் சொல்லியிருந்த வாறு ராமு ஒவ்வொருவருக்கும் ஓர் கலப்பை இனுமாக அளித்தான். தனக்கு என்றும் சொந்தமான மூன்று ஏக்கர் நிலத்தில், தன் கலப்பையை வைத்து அப்புதுமண்ணை ஒருதடவை கிளறியதும், முருகனுக்குப் பேரானந்தத்தால் மெய் சிலிர்த்தது. அவ்வனுபவம் குடியானவனன்றி வேறொருவர் அறியக்கூடுமோ? முருகனே கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட குடியானவனுனன். அவன் அந்தத் தரிசு நிலத்தை உழுதபின், படைச்சாலானது சிவந்த நிறமாய், மெய்க் காதலியின் விரிந்த இதழ்களோவெனத் தோன்றிற்று. அக்காட்சியைக் காண முருகனது கண்கள் பேரானந்தமும், சாந்தமுமுற்றுப் பிரகாசித்தன. அங்கு குடியேறிய ஜனங்களுக்கும் மற்றவர்களுக்கும் அவனே வழிகாட்டுபவனுனன்.

ராமுவும் கேதாரியும் சும்மாவிருக்க வில்லை. அவ்விருவரும் தம்தம் நிலத்தில வளர்ந்திருந்த புற் பூண்டுகளையும், கோரைகளையும் தம் கைகளினுலேயே களைந்தெறியலானுர்கள். இருவரும் தனித்தனியே ஓர் சிறு அழகிய தோட்டம் பயிரிடுவதாய்த் தீர்மானித்து, அதைச் சுற்றிலும் வேலியாக முதலில் “கிளுவை” க்கன்றுகளை நட்டு, அவற்றின் பின் பில்வமரங்களையும், அவற்றின் பின் தென்னம்பிள்ளைகளையும் வைத்தார்கள். உள்ளே, மாமரம் முதல் வேப்பமரம் வரையிலுமுள்ள பழவகைச் செடிகள் வைத்துப் பயிராக்கினுர்கள். சிறு தென்னம்பிள்ளைகள் தங்களுக்குற்ற புதிய வாழ்வின் வரவைத் தம் கிளைகளை யசைத்து வரவேற்பதுபோல் காணப்பட்டன.

அப்பிரதேசத்தில் வேலையும், விளையாட்டைப்போல் சிரமமின்றி உற்சாகத்தைத் தருவதா யிருந்தது. ஏனெனில்,

ஒருவரும் பிறருக்கு அடிமையா யிராது, தம் திருப்திக்கா கவே பாடுபடுபவர்களல்லவா? அவர்கள் செய்யும் தொழி லும், ஆவியுடல் இரண்டிற்கும் ஹிதத்தையளிப்பதாயிருக்க, எங்கும் படாடோபமின்மையும், சந்தோஷமும்குடிகொண்டு விளங்கின. தாயினிடம் பால் குடிக்கும் குழந்தைக் கொப்ப, மனிதனும் பிரகிருதியின் மடியில் இனிது மகிழ்வுற்று விளங்கினான்.

சீதை, கோகிலம், ஜானகி மூவரும் ஒரு வேரில் உற் பத்தியான மூன்றிளங்கொடிகளென இணைபிரியாதிருந்தனர். ஆண், பெண் அனைவரும் சிறுசிறு கும்பலாய்க் கூடி உலாவ எங்கும் சிறுவர்கள் உற்சாகமாய் ஓடியாடி விளையாடுவாரா யினர். கள்வர் தலைவனுடன் எப்பொழுதும் சேர்ந்திருந்த முருகனோ, தன் எசமானைக் காணும்பொழுதெல்லாம், அலவந்தி கிராமத்துப் பழைய குடியானவனாகவே கைகட்டி, மிக்க வணக்கத்துடன் நிற்பான்.

இலைகளடர்ந்த கிளையின் நடுவில் விளங்கும் குருவிக் கூடுபோல் அப்புதிய கிராமம் அடக்கமாய்க் காணப்பட, நடுவிலுள்ள ஏரியோ, தொட்டிலி லுறங்கும் சிறு குழந்தை போல் அசைவற்றிருந்தது. அதிகாலையில், கிழக்குத் திக்கில் சூரியன் பாதி கிளம்பிக்கொண்டிருக்கும்பொழுது, காற்று மிருதுவாய்க்கிளம்பி மரங்களின் இலைகளை யசைத்துக் கூட்டி லிருக்கும் பறவைகளையும் எழுப்புமல்லவா? அப்பொழுது தான் அவ்வேரியின் காட்சி மிகவும் ரமணீயமாயிருக்கும். அவ்வாழ்ந்த தெள்ளிய நீரில், இளஞ்சூரியனது ஒளிவிளங்க, காற்று தீண்டுவதினால் தோன்றிய நீர்ச்சுழிகள் களிப்புடை யார் நகைபோல் அகன்று பரவி கரையை அணுகின. சுற்றி லும் கரையோ, பச்சைக் கம்பளம் விரித்தாற்போலும், பசும்

புற்களடர்ந்து தோன்றிற்று. காலைச்சூரியன் மேலே பிரகாசிக்கும்பொழுது, அக்குளிர்ந்த ஜலத்தில் முழுகியெழச்சித்தமாயிருப்பவை போலும் விளங்கிய மரங்களும், சமீபத்தில் ஓங்கியுயர்ந்திருக்கும் பாறைகளும் நீரில் பிரதிபலித்துக் கொண்டிருந்தன. மலைகள் என்றும்போல் பசுமையாய் விருட்சங்களடர்ந்து தோன்றின. தூரத்தில் விழும் அருவியினோசை, தாயின் குரல் போல் அழைத்தது. அம்மலைகள், சமப்பிரதேசங்கள், அவ்வேரி, ஆரணி நதி, அக்கால்வாய்கள், வயல்கள், அக்கோவில், கிராமம், அங்கு வசித்து வந்த அம்முன்னூறு குடும்பங்கள் யாவையும் ராமு பரிவுடன் நோக்கலானான். தீர்க்க திருஷ்டியோடு கூடிய அவன், தான் கண்ட கனவு தன் காலத்திலேயே பலித்திருப்பதை நீர் பெருகிய கண்களால் கண்டான்.

சாந்தம் குடிகொண்ட மாலை நேரங்களில், பச்சை மகமல் போன்ற புல்லடர்ந்த அவ்வழகிய ஏரிக்கரையில் சீதை, கோகிலம், ஜானகி மூவரும் அன்புடன் தன்னைச் சுற்றிலும் உட்கார்ந்திருக்க, மெய்யறிவு சிறந்த அவனது உள்ளம் அறியவொண்ணாத சாந்தமும், அழிவற்ற ஆநந்தமு மடைந்திருந்தது. அப்பொழுது ராமு, மலையருவி முதலிய பிரகிருதியைக் கடந்த வெளியினின்றும் வாராநின்ற அசரீரிபோல் பேசலானான்.

முற்றிற்று.



மதராஸ் லா ஜர்னல் பிரஸ், மயிலாப்பூர்.

